ஸ்ரீ:

# ஸ்ரீபாகவதம்.

த்ருதீய ஸ்கந்தம்

## தமிழ் வசனம்




இவை

ஸ்ரீ. அ. வீ. நரஸிம்ஹாசார்யரால்

இயற்றப்பெற்று

சென்னை:

ஆர். வெங்கடேஶ்வர் அண்டு கம்பெனியாரவர்களால்

ஆநந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு,

வெளியிடப்பட்டது.

1915

ஸ்ரீ

# ஸ்ரீ பாகவதம்

## த்ருதீய ஸ்கந்தத்தின்

# பொருளடக்கம்.

---

விஷயங்கள்.

# படங்களின் விவரம்.

---



# ஸ்ரீபாகவதம்.

த்ருதீய ஸ்கந்தம்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :— வாராய் பரீக்ஷித்து மஹாராஜனே! உனது பிதாமஹர்களாகிய பாண்டவர்களுக்கு மந்த்ரியும் ஸகல ஜகந்நாதனுமாகிய ஸ்ரீக்ருஷ்ண பகவான், பாண்டவர் தூதனாகி ஹஸ்தினபுரத்தில் ப்ரவேசிக்கும்பொழுது மஹேந்த்ரபவனம்போன்ற துர்யோதன க்ருஹத்தையுங் கடந்து எந்த க்ருஹத்தில் தன்னுடைய க்ருஹமென்னும் நினைவுடன் ஸ்வாதீனமாக ப்ரவேசித்தானோ, அத்தகையதும், ஸமஸ்த ஸம்பத்துக்களும் அமைந்ததும் தூரத்தினின்றே தேவாலயம்போல் ஆராதிக்கத் தகுந்ததும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் பராகங்கள் பட்டுப் பரிசுத்தமாயிருப்பதுமாகிய தனது க்ருஹத்தையும் துறந்து ஸம்ஸாரத்தில் நிராசையால் வனமேறச் சென்ற விதுரன் மைத்ரேய முனிவரைப் பார்த்து, நீ என்னை எங்ஙனம் வினவினையோ, இங்ஙனமே இந்த அர்த்தத்தையே முன்பு வினவினன்.

பரீக்ஷித்து மன்னவன் சொல்லுகிறான் :—மிகுதியும் ஜ்ஞானாதிகராகிய விதுரருக்கு மைத்ரேய முனிவரோடு எவ்விடத்தில் ஸமாகமம் உண்டாயிற்று? இவர்க்கு அவ

ரோடு எக்காலத்தில் ஸம்வாதம் நடந்தது? வாரீர் சுக முனிவரே! இதை எங்களுக்குச் சொல்லவேண்டும். அவ் விதுரர், பகவானிடத்தில் மிகுதியும் ஆழ்ந்த மனமுடைய வர்; மஹானுபாவர். மைத்ரேய முனிவரும் பராவர தத் வங்களை உள்ளபடி உணர்தலாலும் மற்றும் பலவகை நற் குணங்களாலும் மிகுதியும் சிறப்புற்றவர். அத்தகைய ரான மைத்ரேயரிடத்தில் ஜ்ஞானாதிகரான விதுரர் வின வின கேள்வி அற்பவிஷயத்தைப் பற்றினதாயிராது. அவர் அற்ப ப்ரயோஜனத்திற்காக அம்மஹானுபாவரை வினவ மாட்டார். மற்றும், அவர் வினவும்போது ஸத்புருஷர் களின் சரித்ரங்கள் பலவற்றையுஞ் சொல்லிக்கொண்டே வினவுவராகையால் ஸாதுவாதங்கள் அமைந்திருக்கும். ஆகையால் அதை நான் அவஸ்யம் கேட்கவேண்டும்.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பரீக்ஷித்து மன்னவனால் நன்றாக வினவப்பெற்றவரும் எல்லாவற்றை யும் உள்ளபடி நன்றாக அறிந்தவரும் முனிவர்களில் சிறந்தவருமாகிய அந்தச் சுகபகவான் அம்மன்னவன் கேட்டகேள்வி நன்றாயிருந்தமை பற்றி மனக்களிப்புற்று 'கேளப்பா' என்றுரைத்து, அம்மன்னவனைக் குறித்து மொழியத்தொடங்கினார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மன்னவனே! ஸ்ரீவிதுரன் ஹஸ்தினாபுரத்தை விட்டு வனமேறச் சென்றதற்குள்ள காரணங்களைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ராஜா வான த்ருதராஷ்ட்ரன் தர்மத்தைப்பற்றின அறிவு சிறி தும் இல்லாதவனாகி அஸாதுக்களான (துஷ்டர்களான) தன் பிள்ளைகளை அதர்மத்தினால் போஷிக்க முயன்று, தந்தையை இழந்தவர்களும் தன் தம்பியான பாண்டுவின் புதல்வர்களுமான யுதிஷ்டிராதிகளை அரக்கு மாளிகை யில் ப்ரவேசிக்கச் செய்து கொளுத்தினான். மற்றும்,

அந்த ராஜனாகிய த்ருதராஷ்ட்ரன், குருதேவனான யுதிஷ்டிரனுடைய பார்யையும் தனக்கு மருமகளும் தன் கொங்கைமேல் அலங்காரமாகப் பூசின குங்குமக்குழம்புகளைத் தனது கண்ணீர்களால் அழிக்கின்றவளுமாகிய த்ரௌபதியின் தலைமயிர்களைப் பிடித்து ஸபைக்கு இழுத்துக் கொண்டு வருகையாகிற பாபிஷ்ட கார்யத்தைத் தன் பிள்ளையான துர்யோதனன் செய்யக் கண்டும் அவனைத் தடுக்காதிருந்தான். ஸத்யஸந்தனும் ஸத்புருஷர்களில் சிறந்தவனுமாகிய யுதிஷ்டிரன் ஜ்ஞாதிகளான துர்யோதனாதிகளால் சூதாட்டத்தில் அதர்மத்தை முன்னிட்டு ஜயிக்கப்பட்டுப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் வனவாஸஞ்செய்கிறேனென்ற ப்ரதிஜ்ஞையை அங்ஙனமே நிறைவேற்றி அரண்யத்தினின்று திரும்பி வந்து, முன்பு ஏற்படுத்தின ஸமயத்தின்படி ராஜ்யத்தில் தனக்குள்ள பாகத்தைக் கொடுக்க வேண்டுகையில், த்ருதராஷ்ட்ரன் தமோகுணம் (அறிவின்மை) தலையெடுக்கப்பெற்றுக் கொடுக்கமாட்டேனென்றான். ஸகலலோக நாயகனும் ஜகத்திற்கெல்லாம் தர்மோபதேசஞ் செய்பவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன், த்ருதராஷ்ட்ரனிடஞ் சென்று ஸந்தி செய்விக்கும்படி யுதிஷ்டிரனால் அனுப்பப் பெற்று ஹஸ்தினாபுரஞ்சென்று ஸபையில் பீஷ்மாதியான மஹாபுருஷர்களுக்குச் செவியில் அம்ருதங்களைப் பெய்கின்ற அழகான வசனங்களைப் பேசுகையில், புண்யலேசமும் இல்லாத ராஜனாகிய த்ருதராஷ்ட்ரன் அவற்றை வெகுமதிக்காதிருந்தான். ஆலோசனைகளை அறிந்தவர்களில் சிறந்த விதுரன் தமையனாகிய த்ருதராஷ்ட்ரனால் அழைக்கப் பெற்று அவன் வீட்டிற்குச் சென்று, அப்பால் ஆலோசனையைப்பற்றி அவன் வினவுகையில், அனந்தரம் மந்த்ரிகளில் ஶ்ரேஷ்டனாகிய அவன் பலவாறு ஆலோசனைகளை

மொழிந்தான். அவற்றின் சீர்மையை என்னென்று சொல்லுவேன்? அவன் மொழிந்த ஆலோசனைகளில் சிலவற்றைத் தமது நெஞ்சில் தரித்துக்கொண்டு ஸமஸ்த மந்த்ரிகளும் ஆங்காங்கு ஆலோசனை சொல்லுகிறார்கள். விதுரனுடைய ஆலோசனையின் திறமையை நம்மாற் சொல்லமுடியாது. அவன் சொன்ன வார்த்தைகளில் சிறிது எடுத்துக் கூறுகிறேன், கேட்பாயாக.

ஸ்ரீவிதுரன் சொல்லுகிறான்:—யுதிஷ்டிரன் அஜாத சத்ருவென்று பேர்பெற்றவன். அவனுக்குச் சத்ருக்களே கிடையாது. அவனுடைய நன்மையைக் கண்டு அவனுக்கு நண்பராவார்களேயன்றி எவரும் சத்ருக்களாகமாட்டார்கள். அவன் தனது அபிப்ராயத்தினால் எவரையும் சத்ருவாக நினைப்பவனல்லன். தன்னிடத்தில் த்வேஷமுடையவனையும் அவன் சத்ருவாக நினைக்குந் தன்மையனல்லன். அவனைப்பற்றி நான் சொல்லவேண்டியதில்லை. அவனுக்கு நேர்ந்த அஜாத சத்ருவென்னும் பேரே அவனுடைய நல்லியற்கையைவெளியிடுகின்றது. மற்றும், அவனுடைய ஸ்வபாவம் உனக்கும் நன்றாகத் தெரிந்திருக்கலாமே. நீ அவன் விஷயத்தில் செய்த அபகாரங்களை மற்றெவனும் பொறுக்கமாட்டான். பொறுக்கமுடியாத உனது அபராதத்தையெல்லாம் அவன் பொறுத்துக்கொண்டிருக்கின்றான். அவன்இப்பொழுது ராஜ்யத்தில் தனக்குள்ளபாகத்தைக் கொடுக்கும்படி வேண்டுகிறானாகையால் அவன் பாகத்தை அவனுக்குக் கொடுத்துவிடுவாயாக. 'வல்லமையற்றவன் பொறுத்திருப்பதைப் பற்றிப்புகழவேண்டுமோ? கையிலாகாதவன் பொறுக்காமல் என் செய்யமுடியும்? இதுவும் ஓர் புகழோ? ஐயோ பாபமென்னத் தகுந்த பூச்சிப் புழுக்களுக்கும் ஓர் சத்ரு உண்டோ. அஜாத சத்ருவென்னும் பேர் அவற்றிற்கும் பொருந்துமே. இது ஒருதிறமையோ?

இதுவும் ஓர் பெருமையோ?' என்று நீ இகழவேண்டாம். அவனுக்கு யுதிஷ்டிரனென்னும் பேர் விளைந்திருப்பதை நீ அறியாயோ? யுதிஷ்டிரனென்னும் பேர் யுத்தத்தில் பின்வாங்காத சூரனாயிருப்பது பற்றியல்லவோ அவனுக்கு விளைந்தது? மற்றும், அந்த அஜாத சத்ருவின் ஸமீபத்தில் அர்ஜுனன் முதலிய தம்பிகளோடுகூடின பீமஸேனனென்னும் ஸர்ப்பம் கோபத்தினால் பெருமூச்செறிந்துகொண்டிருக்கிறதல்லவா? எந்த பீமஸேனனிடத்தில் நீ மிகுதியும் பயப்படுகின்றாயோ, அவன் அந்த அஜாத சத்ருவின் மனம்போனபடி நடப்பவனாகி அவனருகில் சினந்த ஸர்ப்பம்போல் கோபத்தினால் பெருமூச்செறிந்துகொண்டிருக்கின்றானல்லவா? இது உனக்குத் தெரியாத ஸங்கதி அன்றே. இதுவும் தவிர மற்றொரு காரணமும் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்களெல்லாம் நிரம்பப்பெற்றவனும் போக மோக்ஷங்களைக் கொடுக்கவல்லவனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் பாண்டவர்களை 'என் ப்ராணனைப் போன்றவர்கள்' என்று மிகுந்த அபிமானத்துடன் அங்கீகரித்திருக்கின்றான். 'பகவான் அங்கீகரித்ததனால் என்ன விசேஷம்?' என்கிறாயோ. அந்த பகவான் ப்ராஹ்மணர்களுக்கு தேவன்; ப்ராஹ்மணர்களுக்கு நன்மை செய்யுந்தன்மையன். அத்தகையனான ஸ்ரீக்ருஷ்ணன் எந்த இடத்தில் அபிமானங்கொண்டிருப்பானோ, அவ்விடத்தில்தான் ஜயம் உண்டாகுமென்பது நிச்சயம். 'வெகுதூரத்தில் இருக்கிற பகவான் என் செய்ய வல்லனாவான்' என்று சொல்லாதே. அவன் தனது பட்டணத்திலேயே இருக்கின்றான். 'தன் பட்டணத்திலேயே இருக்கட்டும். ஆயினும் அவனொருவன் என் செய்யவல்லனாவான் ?' என்கிறாயோ. அவன் யாதவ ஸ்ரேஷ்டர்களான ஸாத்யகி ப்ரத்யும்னன் அநிருத்தன்

முதலிய அனைவர்க்கும் ப்ரபுவாயிருப்பவன். ப்ரபலர்களான யாதவர்களெல்லோரும் அவன் ஸந்நிதியில் சொன்னபடி நடக்குந் தன்மையராயிருக்கின்றார்கள். 'யாதவர்களைப் போன்ற யுத்த வீரர்கள் எவ்விடத்திலும் இருக்கின்றார்கள்' என்கிறாயோ, யாதவர்கள் மாத்ரமேயன்று. எல்லாத் திசைகளிலுமுள்ள ஸமஸ்த ராஜாக்களையும் ஜயித்து அவர்களுக்கும் அவன் ப்ரபுவாயிருப்பவன். அவர்களெல்லோரும் அவனுக்கு ப்ருத்யர்களாயிருக்கின்றார்கள், இத்தகையனான பகவானை ஸஹாயமாகப் பற்றின பாண்டவர்கள் பிறர்க்கு வெல்லமுடியாதவர். நீ எவனைப் புதல்வனென்னும் புத்தியுடன் போஷித்துக்கொண்டு வருகிறாயோ, அப்படிப்பட்ட இந்த துர்யோதனன் தோஷங்களுக்கெல்லாம் இருப்பிடம்; உன்னுடைய ஜன்மாந்தர பாபராசியே இங்ஙனம் புதல்வனாக ஓர் வடிவங்கொண்டு உன் வீட்டில் நுழைந்திருக்கின்றது. ஏனென்னில், இவன் பகவானை த்வேஷிக்கின்றான். அதே தன்மையாயிருக்கின்றான். மற்றும், ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் விமுகனாயிருக்கின்றான். ஆனதுபற்றியே இவனுடைய செல்வமெல்லாம் தொலைந்து போகக் காத்துக்கொண்டிருக்கின்றது. இந்த துர்யோதனனைக் குலத்தின் க்ஷேமத்திற்காக நீ துறப்பாயாக. குலத்தின் க்ஷேமத்திற்காக ஒருவனைத் துறக்கலாமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். பார்ப்போமென்று காலதாமதஞ் செய்யாதே. சீக்ரத்தில் இந்த துர்யோதனனைத் துறந்து வம்சத்தை வளர்த்துக் கொள்வாயாக. இந்த மூர்க்கனைத் துறப்பாயாக.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—விதுரன் இங்ஙனம் த்ருதராஷ்ட்ரனுக்குச் சொன்னான். இப்படி அவன் சொல்லிக்கொண்டிருக்கையில், அதைத் துர்யோதனன் கேட்டுக் கோபம் மிகுதியும் வளர்ந்து உதடு துடிக்கப்பெற்றுக் கர்

ணன் துஶ்ஶாஸனன் ஶகுனி ஆகிய இவர்களுடன் கூடி, ஸத்புருஷர்களால் ஆசைப்படத் தகுந்த அழகான சீலமுடைய ஸ்ரீவிதுரனைத் திரஸ்கரித்தான். அவன் திரஸ்கரித்த விதம்சொல்லுகிறேன், கேட்பாயாக.

துர்யோதனன் சொல்லுகிறான் :— தாஸீபுத்ரனும் கோணற்புத்தியுடையவனுமாகிய இவ்விதுரனை இந்த ஆலோசனைக்கு எவன் அழைத்தான்? என்னுடைய அன்னத்தைப் புசித்து எனக்கு ப்ரதிகூலமாயிருக்கின்ற இவனைக் காட்டிலும் எவன் குடிலபுத்தியாவான்? சத்ருக்களுடைய கார்யத்தில் ஊக்கமுடையவனாயிருக்கின்றான். ஆகையால் இவன் ஶ்மஶானம்போல் கண்ணெடுத்துப் பார்க்கவுங்கூடத் தகாதவன். இந்தச் சூத்ரனைப் பட்டணத்தினின்று சீக்ரம் துரத்திவிடவேண்டும். ஒருவனுடைய அன்னத்தைப் புசித்து அவனுக்குக் கெடுதி நினைப்பதுவும் ஓர் தர்மமோ? இவன் தர்மஞ்சொல்ல வந்தானே. இந்தப்பாபிஷ்டனை எவன் இங்கு மந்த்ராலோசனைக்கு அழைத்தான்? இப்படி நமக்கு ப்ரதிகூலனான இவனை வைத்துக் கொண்டு மந்த்ராலோசனை செய்வதும் தருமோ? இவன் எனது சத்ருக்களிடத்தில் பக்ஷம்கொண்டிருக்கின்றானே. இவனை இந்தப் பட்டணத்தில் வைத்துக்கொண்டிருக்கலாமோ? இப்பொழுதே இவ்விடத்தினின்று துரத்துவது யுக்தம். இவனை இனி இங்கு வைத்துக்கொண்டிருக்கலாகாது. இந்தப் பாபிஷ்ட சூத்ரனைச் சீக்ரத்தில் துரத்திவிடவேண்டும்' என்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—அவ்விதுரன், எதிரில் நின்று கேட்பவர்களின் காதுகளில் பாணம்போல் பாய்கின்ற தீக்ஷ்ணமான வாக்யங்களால் மர்மங்களில் பொறப்பட்டவனாயினும், மிகுந்த மதியுடையவனாகையால் சிறிதும் வருத்தம் அடையாமல் புன்னகை செய்து

கொண்டே தன் தனுஸ்ஸை வாசலில் வைத்து 'பகவானுடைய மாயையின் மஹிமையே மஹிமை' என்று பகவானுடைய மாயையை வெகுமதிப்பவனாகி க்ருஹத்தினின்று புறப்பட்டுப்போனான். 'இனி இங்கிருக்கலாகாது. நாம் தீர்த்தயாத்ரைசெய்யவேண்டும். நமக்கு தனுஸ்ஸினால் ப்ரயோஜனம் என்?'' என்று சிந்தித்து தனுஸ்ஸை அங்கு வாசற்படியிலேயே வைத்துவிட்டு, துர்யோதனாதிகளான துஷ்டர்களின் ஸஹவாஸம் பொறுக்கமுடியாமையால், ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களின் பராகங்கள் பட்டுப் பரிசுத்தமாகி தேவாலயம்போல் ஆராதிக்கத்தகுந்ததும் எவ்விதத்திலும் துறக்கத்தகாததுமாகிய தனது க்ருஹத்தையும் துறந்து புறப்பட்டுப் போனான். அந்த மஹானுபாவனுடைய ஸஹவாஸம் இந்த துர்யோதனாதிகளுக்குக் கிடைக்கூடியதோ? அன்று. ஆயினும் பூர்வர்களான கௌவர்களின் புண்யத்தினால் அந்த ஸ்ரீவிதுரனுடைய ஸஹவாஸம் இவர்களுக்குக் கிடைத்தது. அவன் இந்தப் பாபிஷ்டர்களின் ஸம்ஹத்தில் பிறக்கத்தகுந்தவனல்லன். ஆயினும் பூர்வர்களான பெரியோர்களின் புண்ய மஹிமையால் அவன் இவர்களின் இடையில் வந்து பிறந்தான். இது இவர்களுக்குக் கிடைக்கக்கூடியதன்று. அந்தப் பாபிஷ்டர்கள் அது தெரியாமல் அவனை திக்கரித்தார்கள். அத்தகையனான அவ்விதுரன் ஹஸ்தினபுரத்தினின்று, புறப்பட்டுப் போனான். கௌரவர்களின் புண்ய வைபவத்தினால் பிறந்த அவ்விதுரன் புறப்பட்டுப்போனது கண்டால், அவர்களுடைய புண்யமே அங்ஙனம் ஓர் வடிவங்கொண்டு புறப்பட்டுப் போயிற்றோ என்னும்படியிருந்தது. அவ்விதுரன் பரிசுத்தமான பாதங்களையுடையவன், அவனுடைய ஸ்ரீபாதங்களின் தீர்த்தம் பட்டமாத்ரத்தில் எப்படிப்பட்ட பாபிஷ்டனும் பரிசுத்தனாகி வானவர் தலைவ

ஹுவான். அப்படிப்பட்ட மஹானுபாவன். புண்யதீர்த்த மான கங்கைக்கு உற்பத்தி ஸ்தானமாகிய ஸ்ரீபாதத்தை யுடைய பகவான் பலவகை திவ்யமங்கள விக்ரஹங்களைக் கொண்டு அர்ச்சாவதாரரூபியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்தானங்களாகிய ஸ்ரீரங்கம் ஸ்ரீவேங்கடாசலம் ஸ்ரீஹஸ்தி கிரி முதலிய திவ்ய தேசங்கள் எவ்வெவை உண்டோ, அவ்வவ்விடங்களைப் பாவனஞ் செய்யவேண்டுமென்னும் விருப்பத்தினால் அந்தந்த இடங்களுக்குச் சென்றான். பகவானிடத்தில் மாறாத பக்தியோகமுடைய அவ்விது ரன், பரிசுத்தமான உத்யானவனங்களும் பர்வதங்களும் புதர்களும் அமைந்த பட்டணங்களிலும் அழுக்கில்லாமல் தெளிந்த ஜலங்களை யுடைய புண்யநதிகளிலும் தாம ரைத்தடாகங்களிலும் பகவானுடைய திவ்யமங்கள விக்ர ஹங்களால் அலங்கரிக்கப்பட்ட திவ்ய தேசங்களிலும் திரிந்தான். அவ்விதுரன் பூமி முழுவதும் திரிபவனாகி ஜாதி ஆஸ்ரய நிமித்தங்களால் விளையும் தோஷங்கள் எவையுமின்றிப் பரிசுத்தமான அன்னாதிகளால் ஜீவித் துக்கொண்டு எப்பொழுதும் ஸ்னானஞ் செய்கை தவறா மல், வெறுந் தரையிலேயே படுப்பவனும் எண்ணெய் தேய்த்துக்கொள்ளுதல் அரைப்புமுதலியவற்றால் உடம் பைத் தேய்த்தல் முதலிய தேஹஸம்ஸ்காரங்களை யெல் லாம் துறந்தவனும் தன் தேஹஸம்பந்திகள் எவர்க்கும் புலப்படாதவனும் அவதூதர்கள் தரிக்கிற மரவுரி மான் தோல்முதலிய வேஷந்தரித்தவனுமாகி ஸ்ரீமஹாவிஷ்ணு வுக்கு ஸந்தோஷத்தை விளைக்கும்படியான வ்ரதங்களை ஆசரித்துக்கொண்டிருந்தான். இங்ஙனம் பாரத வர்ஷம் முழுவதும் ப்ரதக்ஷிணமாகத் திரிந்துகொண்டு விதுரன் எவ்வளவு காலத்தில் ப்ரபாஸதீர்த்தம் போய்ச் சேர்ந்தா னோ, அவ்வளவு காலத்தில் ஸ்ரீக்ருஷ்ணனும் அர்ஜுன

னும் ஸஹாயமாகப்பெற்று யுதிஷ்டிரன் சத்ருக்களை ஜயித்து ஓரே வெண்கொற்றக் குடை விளங்கப்பெற்றதும் ஒருவனுடைய ஸைன்யமே நிரம்பியதுமாகிய பூமண்டலத்தைப் பெற்றுப் பாதுகாத்து வந்தான். அந்த யுதிஷ்டிரன், தன்னெதிரில் மற்றொருவன் வெண்கொற்றக் குடை பிடித்துக்கொண்டு வருமவன் எவனும் இல்லாமலும் தன் ஸைன்யத்தை எதிர்க்கும்படியான ப்ரதிஸைன்யம் எதுவுமில்லாமலும் ஸார்வபௌமனாகி ராஜ்யபரிபாலனம் பண்ணிக்கொண்டு வந்தான். அவ்விதுரன் அந்த ப்ரபாஸ தீர்த்தத்திற்கருகாமையில், மூங்கில்புதரினின்றுண்டான அக்னியால் அரண்யம் எரிந்து பாழடைவதுபோல் தனது நண்பர்களான கௌரவாதிகள் ஒருவர்மேல் ஒருவர் த்வேஷங்கொண்டு மாண்டார்களென்று கேள்விப்பட்டு, அப்பால் மனவருத்தம் அடைந்து மேற்குமுகமாகத் திரும்பி ஸரஸ்வதீ நதியைக் குறித்துப் பேசாமல் போனான். அந்த ஸரஸ்வதி நதிக்குப் போய்ச் சேர்ந்து அங்கு த்ரிததீர்த்தமென்றும் உஶனஸ் தீர்த்தமென்றும் மனு தீர்த்தமென்றும் ப்ருது தீர்த்தமென்றும் அக்னி தீர்த்தமென்றும் அஸிததீர்த்தமென்றும் வாயுதீர்த்தமென்றும் ஸுதாஸதீர்த்தமென்றும் கோதீர்த்தமென்றும் குஹதீர்த்தமென்றும் யமதீர்த்தமென்றும் ப்ரஸித்தமான புண்யதீர்த்தங்களில் ஸ்னானஞ்செய்தான். அவன் அவ்வவ்விடங்களில் ரிஷிகளாலும் தேவதைகளாலும் நிர்மிக்கப்பட்டவைகளும் பார்த்தமாத்ரத்தில் ஸ்ரீக்ருஷ்ணனை நினைவுமூட்டத் தக்கவைகளும் பற்பல விஷ்ணுவின் ஆயுதங்களாலும் அவற்றில் ப்ரதானமான சக்ராயுதத்தினாலும் ஆங்காங்கு அடையாளஞ் செய்யப்பெற்றவைகளுமாகிய மற்றும் பல விஷ்ணு ஸ்தலங்களையும் ஸேவித்துக்கொண்டே நடந்து சென்றான். அனந்தரம்

ஸரஸ்வதீ நதியினின்று புறப்பட்டு தன தான்ய ஸம்ருத்தி கள் அமைந்த ஸெளராஷ்ட்ரம் ஸெளவீரம் மத்ஸ்யம் குரு ஜாங்கலம் முதலிய தேசங்களைக் கடந்து, உத்தவர் வந்து சேருவதற்குள்ளாகத் தானும் யமுனைக்குப் போய்ச் சேர்ந்து, அந்த யமுனையின் கரையில் பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடைய உத்தவரைக் கண்டான. அவ்விதுரன், 'வாஸுதேவனைத் தொடர்ந்து அவனிடத்தில் மிகுந்த பக்தி அமைந்து அவனையே த்யானித்துக்கொண்டிருக்குந் தன்மையரும் சம தமாதி குணங்கள் நிறைந்தவரும் ப்ருஹஸ்பதியிடத்தில் நீதி சாஸ்த்ரம் பெற்றவரும் ப்ரஸித்தருமாகிய அந்த உத்தவரை மிகுந்த ப்ரேமத்துடன் ஆலிங்கனஞ் செய்து தனக்கு பந்துக்களாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய பிள்ளை பேரன் முதலானவர்களின் க்ஷேமத்தை வினவினன். தன்னுடைய நாபீகமலத்தினுண்டான ப்ரஹ்மாவின் ப்ரார்த்தனையால் இந்த பூலோகத்தில் அவதரித்த புராண புருஷர்களும் பூமிக்கு க்ஷேமத்தை விளைவித்து ஓய்ந்திருப்பவர்களுமாகிய [1] ஸ்ரீராமக்ருஷ்ணர்களிருவரும் வஸுதேவனது க்ருஹத்தில் ஸுகமாயிருக்கின்றார்களா? குருவம்சத்தில் பிறந்தவனும் நமக்கு மிகுந்த நண்பனும் மங்களஸ்வபாவனும் பூஜைக்கிடமும் புகழ் பெற்றவனுமாகிய வஸுதேவன், ஓ உத்தவரே! ஸெளக்யமாயிருக்கின்றனா? அவ்வஸுதேவன் சிறிதும் பொருள் செய்யாமல் தானஞ் செய்யும் ஸ்வபாவமுடையவன்; தன் ஸஹோதரிகளுக்கு இஷ்டமான வஸ்துக்களைத் தந்தைபோல் கொடுப்பதுடன், அவரது பர்த்தாக்களான மணவாளர்களுக்கும் வேண்டியவஸ்துக்களைக் கொடுத்தானல்லவா? யாதவர்களுக்கு ஸேனாதிபதியும் வீரனுமாகிய ப்ரத்யும்னன் ஸுகமாயிருக்கிறனா?

1. இங்கு - ராமனென்று பலராமனைச் சொல்லுகிறது.

ருக்மிணி ப்ராஹ்மணர்களை ஆராதித்து அவரது அனுக் ரஹத்தினால், முன் ஜன்மத்தில் மன்மதனாயிருந்த இந்த ப்ரத்யும்னனை ஸ்ரீக்ருஷ்ணனிடத்தினின்று புதல்வனாகப் பெற்றாள். தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீக்ருஷ்ணன் கம்ஸனைக் கொன்று அந்த ஸிம்ஹாஸனத்தில் தான் வீற்றிருக்கவேண்டியவனாயினும் அந்த அபிலாஷம் சிறிதும் உண்டாகப் பெறாமல் அதை வெகுதூரத்தில் துறந்து அந்த ஸிம்ஹாஸனத்தில் எவனை உட்காரவைத்துப்பட்டாபிஷேகஞ் செய்தாரோ, அப்படிப்பட்ட உக்ரஸேனன் ஸாத்வதர் வ்ருஷ்ணிகள் போஜர் தசார்ஹர் ஆகிய இவர்களுக்கு அதிபதி ஸுகமாயிருக்கிறானா? நல்லியற்கையுடையவனே! ரதிகர்களில் தலைவனும் ஸ்ரீக்ருஷ்ணனுடைய புதல்வனும் ஸ்ரீக்ருஷ்ணனோடொத்தவனுமாகிய ஸாம்பன் நன்றாயிருக்கிறானா? ஜாம்பவதி வ்ரதங்களை ஆசரிப்பதில் நிரம்பவும் ஊக்கமுடையவளாகி முன் ஜன்மத்தில் ஸுப்ரஹ்மண்யனாயிருந்த இந்த ஸாம்பனைப் புதல்வனாகப் பெற்றாள். இவன் பூர்வஜன்மத்தில் பார்வதியால் தன் கர்ப்பத்தில் தரிக்கப்பெற்றவன். ஸாத்யகி ஸுகமாயிருக்கிறானா? அவன் அர்ஜுனனிடத்தினின்று தனுர்வித்யை அப்யஸித்தான். அவன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஶுஶ்ரூஷை மாத்ரத்தினாலேயே, யோகிகளுக்கும் கிடைக்கமுடியாத நற்கதியை அனாயாஸமாகப் பெற்றான். அறிஞனும் பாபமற்றவனும் பகவானைச் சரணம் அடைந்தவனும் ஶ்வபல்கருடைய குமாரனுமாகிய அக்ரூரன் க்ஷேமமாயிருக்கிறானா? இந்த அக்ரூரன் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களால் அடையாளமுற்ற மார்க்கத்தைக் கண்டு (வழியில் ஸ்ரீக்ருஷ்ணனுடைய அடிவைப்புகளைக் கண்டு) அவற்றைக் காணப் பெற்றமையால் மிகுதியும் ப்ரேமம் தலையெடுக்கப் பெற்றுச் சிறிதும் தைர்ய

யின்றி மனம் தளரப்பெற்று அந்த மார்க்கத்தின் தூட்களில் புரண்டான். தேவகனென்னும் பேருடைய போஜனது புதல்வியும் ஸ்ரீக்ருஷ்ணனைப் புதல்வனாகப் பெற்றவளுமாகிய தேவகி தேவதைகளின் தாயான அதிதிபோல் க்ஷேமமாயிருக்கின்றாளா? யஜ்ஞங்களின் விரிவாகிற பொருளை வேதம் உட்கொண்டிருப்பதுபோல், இந்த தேவகி பகவானைத் தன் கர்ப்பத்தில் தரித்திருந்தாள். பக்தர்களாகிய உங்கள் விருப்பங்களை நிறைவேற்றுந் தன்மையுடைய அநிருத்தன் ஸுகமாயிருக்கிறானா? இந்த அநிருத்தனைப் பெரியோர்கள் கேவலம் சாஸ்த்ரங்களால் அறியத் தகுந்தவனும் பகவானுடைய நான்காவது அம்சமும் யோகத்தினால் பரிசுத்தமான மனத்தினால் அறியத்தகுந்தவனன்றி மற்ற லௌகிக ப்ரமாணங்களால் அறியத்தகாதவனுமாயிருப்பவனென்று மொழிகின்றார்கள். நல்லியற்கையனே! தமது ஆத்ம ஸ்வரூபத்திற்கிணங்கின தெய்வமாகிய ஸ்ரீக்ருஷ்ணனை என்றும் மாறாத பக்தியுடன் அனுஸரித்திருக்குந் தன்மையரான ஹ்ருதீகன் ஸத்யபாமையின் புதல்வன் சாருதேஷ்ணன் கதன் முதலியவர் அனைவரும் ஸுகமாகவளைய வருகின்றார்களா? தனது புஜங்கள்போன்ற அர்ஜுனன் க்ருஷ்ணன் ஆகிய இவர்களுடன் கூடி யுதிஷ்டிரன் வேத சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட தர்மங்களுக்கு விரோதமில்லாமல் வர்ணாஸ்ரமாதி மர்யாதையைப் பாதுகாத்து வருகின்றானா? இந்த யுதிஷ்டிரனுடைய ஸபையில் அர்ஜுனனுடைய தொடர்ச்சியால் மாறாது விளங்குகின்ற ஸாம்ராஜ்ய லக்ஷ்மியைக் கண்டு துர்யோதனன் முன்பு பரிதபித்தானல்லவா? அப்படிப்பட்ட யுதிஷ்டிரன் அர்ஜுனாதிகளுடன் ஸுகமாயிருக்கிறானா? தனக்கு அபராதஞ் செய்தவர்களுடைய

அபராதத்தை வெகுநாள் கடந்தும் மறவாமல் நெஞ்சில் நிறுத்திக்கொண்டு ஸர்ப்பம்போல் பொறுத்திருக்குந் தன்மை அமைந்த பீமஸேனன் அத்தகையரான சத்ருக்களிடத்தில் தன் கோபத்தை விடுத்தானா? பீமஸேனன் தனக்கு அபகாரஞ் செய்தவர்களைப் பொறுக்க மாட்டான். எத்தனை காலமாயினும் அவர்கள் செய்த அபகாரத்தை மறவாமல் நெஞ்சில் கொண்டிருந்து அவர்க்கு ப்ரதி செய்தே தீருவான். அவன் தனக்கு அபகாரஞ் செய்தவர்களான துர்யோதனாதிகளிடத்தில் தனக்குள்ள கோபத்திற்குத் தகுந்தபடி அவர்களை வென்று முடித்து ஸுகமாயிருக்கிறானா? அந்த பீமஸேனன் யுத்தங்களில் கதையைப் பிடித்துப் பலவாறு விசித்ர கதிகளைச் செய்துகொண்டு சுழற்றும்பொழுது அவனுடைய அடிவைப்பின் வேகத்தை யுத்த பூமி சிறிதும் பொறுக்கமுடியாமல் நடுக்கமுறுமல்லவா? அப்படிப்பட்ட பீமஸேனன் ஸுகமாயிருக்கிறானா? ரதிகர்களில் தலைமையுள்ள அனைவரிலும் மிகுதியும் புகழ் பெற்றவனும் காண்டீவமென்றுபேர்பெற்ற தனுஸ்ஸையுடையவனுமாகிய அர்ஜுனன் சத்ருக்களனைவரும் அழியப்பெற்று ஸுகமாயிருக்கிறானா? வேடவேஷம் பூண்ட ருத்ரன், இந்த அர்ஜுனனோடு சண்டை செய்யும்பொழுது இவனுடைய காண்டீவதனுஸ்ஸினின்று விடுபட்ட பாணஸமூஹங்களால் மறைக்கப்பட்டுப் பிறர்க்குச் சிறிதும் புலப்படாதவனாகி இவனுடைய பராக்ரமத்திற்கு மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தானல்லவா? இமைகளால் கண்கள் பாதுகாக்கப் பெற்றிருப்பதுபோல், யுதிஷ்டிரன் பீமன் அர்ஜுனன் ஆகிய இவர்களால் பாதுகாக்கப்பெற்றவர்களும் குந்தியின் ஸ்தனங்களைப் பானஞ்செய்தவர்களும் இரட்டையாகப் பிறந்தவர்களுமாகிய நகுலஸஹதேவர்கள், இங்

த்ரனிடத்தினின்று இரண்டு கருடப்பறவைகள் அம்ருதங் கொண்டு வருவதுபோல், சத்ருக்களிடத்தினின்று தமது ராஜ்யத்தைப் பெற்று ஸுகமா யிருக்கின்றார்களா? குந்தியைப் பற்றி நான் என்னென்று க்ஷேமம் விசாரிக்கப் போகிறேன். அப்படி புகழ்பெற்றவனும் சிறந்த ராஜர்ஷியுமாகிய பாண்டுவைப் பிரிந்தும் குழந்தைகளைப் போஷிக்கும் பொருட்டு அவள் பிழைத்திருக்கிறாளல்லவா? ஆ! அவள் பிழைத்திருப்பதே ஆச்சர்யம்? பாண்டு அஸஹாயவீரன்; ரதிகர்களில் சிறந்தவன். அவன் தனுஸ்ஸு ஒன்றையே ஸஹாயமாகக் கொண்டு நான்கு திசைகளையும் வென்றான். அப்படிப்பட்ட பாண்டுவைப் பிரிந்தும் குந்தி பிழைத்திருக்கிறாளென்பது மிகவும் அற்புதம். நல்லியற்கையனே! அதோகதியில் விழுகின்ற அந்த த்ருதராஷ்ட்ரனைப் பற்றிச் சோகிக்கிறேன். ஏனென்னில், அவன் பரலோகஞ்சென்ற தன் ப்ராதாவான பாண்டுவுக்கு த்ரோஹஞ் செய்தானல்லவா? 'பாண்டுவுக்கு த்ரோஹம் செய்யவில்லையே' என்கிறாயோ? அவன் பிள்ளைகளான யுதிஷ்டிராதிகளுக்கு இவன் த்ரோஹஞ் செய்தானென்பதில் ஸந்தேஹம் உண்டோ? அது பாண்டுவுக்கு த்ரோஹஞ் செய்ததன்றோ? இவன் பாண்டுவுக்கே த்ரோஹஞ் செய்தானென்னலாம். ஆகையால் அவனுக்கு அதோகதியேயன்றி வேறில்லை. ஆனதுபற்றி அவனைக் குறித்து நான் வருந்துகிறேன். மற்றும், அந்த த்ருதராஷ்ட்ரன் பாபிஷ்டர்களான தன் புத்ரர்களைநெடுந் தூரம் பின்சென்று நண்பனாகிய என்னைத் தன் பட்டணத்தினின்று துரத்தினானல்லவா? அங்ஙனம் துரத்தப்பெற்ற நான், தனது ஐஶ்வர்யங்களை மறைக்கவல்ல மானிட உருவம் பூண்டு அதனால் மானிடவர்களின் மனத்தை மயக்குகின்றவனும் ஜகத்தை முழுவதும் அடக்கி ஆள்பவனுமா

கிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய அனுக்ரஹத்தினால் அவனது விபூதியாகிய ஜகத்தைப் பார்த்துக்கொண்டே வியப்பின்றி இந்த பூமண்டலத்தில் பிறர்க்கு 'இவன் இன்னவன்' என்று தெரியாமல் மறைந்து திரிகின்றேன். 'ஸ்ரீக்ருஷ்ணன் ஜகந்நியந்தாவென்றும் பக்தர்களை அனுக்ரஹிப்பவனென்றும் சொல்லுகிறாயே. ஆனால் அவன் தனது பக்தர்களான பாண்டவர்களை ஏன் அனுக்ரஹிக்கவில்லை? தனக்கு த்வேஷிகளான கௌரவர்களை ஏன் நிக்ரஹிக்கவில்லை?' என்கிறீரோ? சொல்லுகிறேன் கேட்பீராக. குலம் தனம் வித்யை ஆகிய இவற்றால் விளையும் கொழுப்பினால் (அல்லது—தனம் ஐஶ்வர்யம் ஸைன்யம் ஆகிய இவற்றால் விளையுங் கொழுப்பினால்) வழி தப்பிச் செல்கின்றவரும் தமது ஸைன்யங்களால் பூமியை அடிக்கடி நடுங்கச் செய்பவருமாகிய ராஜாக்களை வதிப்பதற்காகவே தன்னைச் சரணம் அடைந்த பாண்டவர்களின் துக்கத்தைப் போக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் அபராதஞ் செய்தவர்களை அந்த ஸமயத்திலேயே முடிக்கவல்லனாயினும் ஸ்ரீக்ருஷ்ணன் கௌரவர்களின் அபராதத்தை உதாஸித்திருந்தான். 'இப்பொழுதே இந்தக் கௌரவர்களை வதிப்போமாயின், மற்றுமுள்ள துஷ்டராஜாக்களின் வதம் ஸம்பவிக்காமற் போய்விடும். ஆகையால் ராஜாக்களெல்லோரையும் கூட்டங்கூட்டி வதிக்கவேண்டும்' என்னும் விருப்பத்தினால் பாண்டவர்களின் துக்கத்தையும் கௌரவர்களின் அபராதத்தையும் பொறுத்து வெறுமனேயிருந்தானன்றி வல்லமையில்லாமையாலன்று. 'ஜகந்நியந்தாவான (உலகங்களை அடக்கி ஆள்பவனாகிய) பகவான் மானிட உருவம் பூண்டு அவர்களைப்போல் நடனஞ்செய்வது ஏதுக்காக' என்னில் சொல்லுகிறேன். அவன் கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாதவன். அவனுடைய

உற்பத்தியாவது—கர்மத்தைப் பற்றி விளையாததும் ப்ராக்ருதமல்லாததும் தன்னுடைய ஸங்கல்பமாத்ரத்தினால் ஏற்படுவதுமான திவ்யமங்கள விக்ரஹத்தை அங்கீகரிக்கையே. கர்மாதீனமாய் விளையுங் காரணங்களைப் பற்றின வ்யாபாரங்கள் எவையுமில்லாத அந்த பகவானுடைய செயல்களெல்லாம் ப்ராணிகளுக்கு இவ்விவ்விதஞ் செய்யவேண்டுமென்று தெரிவிக்கைக்காகவே (லோகஸங்க்ரஹத்திற்காகவே). கர்மத்திற்குட்படாத ஈச்வரன் கர்மங்களை ஆசரிப்பதற்குக் காரணம் என்னென்னில் நாம் செய்யுங் கர்மங்களைக்கண்டு உலகத்திலுள்ள ப்ராணிகள் தன்னுடைய ஆசாரத்தைக்கண்டு 'நாமும் இங்ஙனம் ஆசரிக்கவேண்டும்' என்று விரும்பம் உண்டாகி ஆசரிக்கைக்காகவே. ஓ உத்தவரே! கர்மத்திற்குட்படாத ஈச்வரனுடைய ஜன்மம் துஷ்டர்களை அழிக்கைக்காகவும், அவனுடைய செயல்கள் உலகத்தைத் திருத்துகைக்காகவுமென்றுகொள்ளாத பக்ஷத்தில், ஸத்வாதி குணங்களுக்கு உட்படாமல் அவற்றிற்கு நியாமகனான ஸர்வேச்வரனுக்குக் கர்மத்தினால் விளையும் ஜன்மமும் கர்மாதீனமான செயலும் எப்படி பொருந்தும்? ஆகையால் அவனுக்குக் கர்மத்தினால் விளையும் ஜன்மமும் கர்மமும் கிடையாது. ஆனால் ஏதுக்காகவென்னில், துஷ்டர்களை அழிப்பதற்காகவும் சிஷ்டர்களைப் பாதுகாப்பதற்காகவும் ஜன்மமும், லோகங்களைத் திருத்துவதற்காகக் கர்மமுமன்றி அவற்றிற்கு வேறு நிமித்தமில்லை: நண்பரே! உத்தவரே! தனது ஆஜ்ஞையில் தவறாது நிற்பவர்களும் தன்னைச் சரணம் அடைந்தவர்களுமாகிய இந்த்ரன் முதலிய ஸமஸ்த லோகபாலர்களின் ப்ரயோஜனத்திற்காக யதுக்களில் வந்து அவதரித்தவனும் கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாதவனும் பரிசுத்தமான கீர்த்தி யுடைய

வனும் ஜ்ஞானாதி குணங்களெல்லாம் அமைந்தவனுமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய வ்ருத்தாந்தத்தை மொழிவீராக. ஒன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

உத்தவர் ஸ்ரீகிருஷ்ணனுடைய விஸ்லேஷத்தினால் சோகித்துக்கொண்டே விதுரனுக்கு அவனுடைய பால்ய சரித்ரங்களைக் கூறுதல்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—பகவானிடத்தில் மிகுந்த பக்தியுடைய அவ்வுத்தவர் ஸ்ரீவிதுரனால் அன்பிற்கிடமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய வ்ருத்தாந்தத்தைப் பற்றி இங்ஙனம் வினவப்பெற்று அந்த பகவானிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவராகையால் ஸர்வேஸ்வரனை அந்த ஸ்ரீக்ருஷ்ணனை நினைத்துக்கொண்டு அவனுடைய குணங்களில் மெய்ம்மறந்து மறுமொழி கூற வல்லமையற்றிருந்தார். இவர் ஐந்து வயதுள்ள பாலனாயிருக்கும்பொழுது ஸ்ரீக்ருஷ்ணனுடைய ப்ரதிமை ஒன்றை வைத்துக்கொண்டு அதற்குப் பூஜை செய்கையே விளையாட்டாகப் பெற்றிருப்பர். ஒருக்கால் அங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு அவர் பூஜை செய்துகொண்டிருக்கையில், காலையில் ஆஹாரம் பண்ணுவது புசிப்பதற்காக இவரைத் தாய் வந்தழைத்து, 'சாப்பிடவருவாய் பிள்ளாய்' என்று வேண்டுகையில், அந்த ஆஹாரத்தை விரும்பாமல் ஸ்ரீக்ருஷ்ணனுக்குப் பூஜை செய்வதிலேயே மனவிருப்பமுற்றிருந்தார். இங்ஙனம் பால்யமே தொடங்கி பகவானுடைய ஸேவையே தாரகமாகப் பெற்றுப் பொழுது போக்கிக்கொண்டிருந்து மூப்பை அடைந்த அவ்வுத்தவர் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வ்ருத்தாந்தத்தைக் குறித்து வினவப் பெற்று அவனுடைய பாதாரவிந்தங்களை நினைத்துக்கொண்டு மெய்ம்மறந்து நிற்பரேயொழிய எங்ஙனம் மறுமொழி கூறவல்லராவார்?

அவர் ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களை அனுப விக்கையாகிற அம்ருதத்தினால் மிகுந்த ஸந்தோஷம் அடைந்து தீவ்ரமான பக்தியோகத்தினால் மெய்ம்மறந்து ஒரு முஹூர்த்தகாலம் ஒன்றும் பேசாமல் வெறுமனே இருந்தார். உடம்பு முழுவதும் மயிர்க்கூச்சல் உண்டாகப் பெற்றவரும் கண்களை மூடிக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனைப் பிரிந்த சோகத்தினால் நீரைப் பெருக்கிக்கொண்டு பக வானிடத்திலுள்ள ப்ரீதியின் மிகுதியால் மன உருக்கம் உண்டாகப் பெற்றவருமாகிய அந்த உத்தவரைப் பார்த்து 'இவர் ப்ரயோஜனங்களெல்லாம் நிறைவேறப்பெற்றவர்' என்று நினைத்தார். இங்ஙனம் பகவானை அனுபவித் துக்கொண்டு லோகாந்தரஞ்சென்றாற் போலிருந்த (வேறு லோகத்திற்குச் சென்றாற் போலிருந்த) அவ்வுத்தவர் மெதுவாக மனுஷ்யலோகத்தை அடைந்து மெய்ம்மறப்பு நீங்கித் தன் ப்ரஜ்ஞை உண்டாகப் பெற்றுக் கண்களைத் துடைத்துக்கொண்டு பகவானுடைய மஹிமையைப்பற்றி வியப்புற்றவராகி ஸ்ரீவிதுரனைக் குறித்து மறுமொழி கூறத் தொடங்கினார்.

உத்தவர் சொல்லுகிறார்:—ஸ்ரீக்ருஷ்ணனாகிற ஸூர் யன் அஸ்தமிக்கையில், நமது க்ருஹங்கள் காலமாகிற மஹாஸர்ப்பத்தினால் விழுங்கப்பெற்றுச் சோபையற்றிருக் கின்றன. ஆகையில், நீ வினவின நமது பந்துக்களுக்கு எங் ஙனம் க்ஷேமம் சொல்லுவேன்? ஆ! என்ன கஷ்டம்? இந்த லோகம் பாக்யமற்றது. யாதவர்களோவென்றால் மிகுதியும் பாக்யமற்றவர்கள். ஏனென்னில், ஸ்ரீக்ருஷ்ணனோடுகூட வே வஸித்துக்கொண்டிருப்பினும், தன்னைப் பற்றினா ருடைய பாபங்களைப் போக்குந் தன்மையுடைய அந்த பக வானை அறியப்பெற்றிலரே. 'நம்மைப்போல் இவனும் ஒருவனே' என்று நினைத்திருந்தார்களன்றி, 'இவன்

ஸர்வேஶ்வரன். இவன் நம்மைப் போன்ற ஒரு மனுஷ்யனாக அவதரித்தது நம்மை அனுக்ரஹிக்கைக் காகவேயன்றி வேறில்லை' என்று அவனுடைய உண்மையை அறிந்திலரே. மத்ஸ்யங்கள் ஓடத்தை 'இது கரையேற்றுவிக்கக் கூடியது' என்று அறியாமல் 'இதுவும் ஓர் மத்ஸ்யமே என்று நினைப்பதுபோல், யாதவர்களும் ஸ்ரீக்ருஷ்ணனை 'இவன் நம்மை ஸம்ஸாரத்தினின்று கரையேற்றும் பரமபுருஷன்' என்று தெரிந்துகொள்ளாமல் 'இவனும் நம்மைப்போல் ஓர் மானிடவனே' என்று நினைத்திருந்தார்களே. இது என்ன தௌர்ப்பாக்யமோ? பிறருடைய மனக்கருத்தை அறியுந்திறமைஅமைந்தவர்களும் வெகுநிபுணர்களும் ஒரே இடத்தில் இருப்பவர்களுமாகிய யாதவர்கள் அனைவரும் யாதவஶ்ரேஷ்டனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைத் தம்மைப்போல் ஓர் க்ஷேத்ரஜ்ஞனாகவே(ஜீவாத்மாவாகவே) நினைத்திருந்தார்கள். இவன் 'பரமாத்மா, பரமபுருஷன்' என்று அறியப்பெற்றிலர். இங்ஙனம் ஸ்ரீக்ருஷ்ணனை யாதவர்கள் மாத்ரமே க்ஷேத்ரஜ்ஞனாக நினைத்திருந்தார்களென்பதில்லை. மற்றும் பலரும் இப்படியே நினைத்திருந்தார்கள். பகவானுடைய மாயையால் மதிமயங்கப் பெற்றவரும் அசேதனமான சப்தாதி விஷயங்களை போக்யமாக நினைத்தவருமாகிய மற்றுமுள்ள சிசுபாலாதிகளும் இங்ஙனமே ஸ்ரீக்ருஷ்ணனை ஓர் க்ஷேத்ரஜ்ஞனாக நினைத்திருந்தார்கள். 'ஆனால் அவனை உள்ளபடி அறிந்தவர் எவரும் இல்லையோ?' என்னில், சொல்லுகிறேன் கேட்பாயாக. பரமாத்மாவான அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் மனத்தை நிலைநிறுத்தினமஹானுபாவர்கள், அந்த பகவானுடைய மாயையால் மதிமயக்கமுற்ற அறிவிலாமூடர்கள் மொழியும் வார்த்தைகளால் ப்ரமிக்கமாட்டார்கள். "'இவனும் ஓர் க்ஷேத்ரஜ்ஞனே' என்று

அறிவிலாமூடர்கள் பலவாறு மொழியினும், அறிஞரான பெரியோர்கள் மதி மயங்கப்பெறமாட்டார்கள். 'இது இருக்கட்டும். நான் ஸ்ரீக்ருஷ்ணனுடைய வ்ருத்தாந்தத்தைச் சொல்லும்படி வினவினதற்கு என்ன மறுமொழி' என்கிறாயோ? சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸ்ரீக்ருஷ்ணன், உலகமெல்லாம்கூடி, வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருக்கும்படி மிகுதியும் அழகான தன் வடிவை, தவஞ்செய்தவர்களும் எவ்வளவு நேரம் கண்டு களிப்பினும் த்ருப்தி அடையாத கண்களையுடையவருமான மானிடவர்க்குக் காண்பித்து அவ்வடிவோடு அந்தர்த்தானம் அடைந்தான். 'மனுஷ்ய லீலைகளில் உபயோகப்படுவதாகிய தனது ஆஸ்சர்ய சக்தியின் மஹிமையை உலகத்தவர்க்குக் காண்பிக்கவிரும்பித் தான் அங்கீகரித்ததும் தனக்கும் ஆஸ்சர்யத்தை விளைவிப்பதும் தன்னுடைய ஸௌபாக்ய ஸம்ருத்திக்கு எல்லைநிலமாயிருப்பதும் கௌஸ்துபம் முதலிய ஆபரணங்களுக்கும் அழகு கொடுக்கும்படியான மார்பு முதலிய அவயவங்கள் அமையப்பெற்றதுமாகிய தன் திவ்யமங்கள விக்ரஹத்தோடு கூடவே ஸ்ரீக்ருஷ்ணன் அந்தர்த்தானம்அடைந்தான். யுதிஷ்டிரன் செய்த ராஜஸூய மென்கிற யாகத்தில் சேர்ந்த மூன்று லோகத்து ஜனங்களும் தமது கண்களுக்கு ஆநந்தம் விளைப்பதாகிய எந்த வடிவைப் பார்த்து 'தாழ்மைக்கிடமான மனுஷ்யர்களைப் படைப்பதில் ப்ரஹ்மாவுக்கு எவ்வளவு ஸாமர்த்யம் உளதோ, அதெல்லாம் இப்பொழுது இந்தச் சரீரத்தில் முடிந்து போய்விட்டது. தனக்குள்ள ஸாமர்த்யம் முழுவதையும் இச்சரீரத்தில் காட்டிவிட்டான். மனுஷ்யர்களைப் படைப்பதில் இதற்கு மேற்பட்ட ஸாமர்த்யம் அவனுக்கு இராது' என்று நினைத்தார்களோ, அப்படிப்பட்ட தன் வடிவத்தைக்கொண்டு

ஸ்ரீக்ருஷ்ணன் அந்தர்த்தானம் அடைந்தான். அந்த பகவானுடைய அநுராகம் நிறைந்த புன்னகையினாலும் விளையாடல்களாலும் விலாஸங்கள் அமைந்த கண்ணோக்கங்களாலும் வெகுமதிக்கப்பெற்ற இடைப்பெண்கள் அந்தக் கண்ணோக்கத்தைப் பின்றொடர்ந்த மதியுடையவராகி அரைகுறையான கார்யங்களையும் அவ்வப்படியே துறந்து [1] க்ருத்யாக்ருத்ய விவேகமின்றி மெய்ம்மறந்திருந்தார்களோ அப்படிப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணன் தன் வடிவத்துடன் அந்தர்த்தானம் அடைந்தான். பகவான் ஜீவாத்மாக்களுக்கு தேவமனுஷ்யாதி சரீரங்களைக் கொடுத்து அவற்றில் ஜீவாத்மாக்களின் மூலமாய்ப் புகுந்து நாமரூபங்களை நிர்வஹிக்கிறானாகையால், ஸத்வகுணம் நிறைந்தவைகளும் ரஜோகுணம் நிறைந்தவைகளும் தமோகுணம் நிறைந்தவைகளுமான உருவங்களெல்லாம் அந்த பகவானுடைய சரீரங்களே. அவற்றில் ஸத்வகுணம் தலையெடுக்கப்பெற்றுச் சாந்தி அமைந்த உருவங்கள் மற்ற ரஜஸ் தமோகுணங்கள் நிறைந்த உருவங்களால் பாதிக்கப்பெற்று வருந்துவதைக் கண்டு [2] பராவரேஶ்வரனாகிய பகவான் கருணை கூர்ந்த மனமுடையவனாகித் தனக்கு முன்றோன்றலாகிய பலராமனென்கிற அம்சத்துடன் கூடி, கர்மத்திற்குட்படாததும் தன் ஸங்கல்பத்தினால் ஏற்படுவதும் அப்ராக்ருதமுமாகிய திவ்யமங்கள விக்ரஹத்துடன் கட்டைகளில் அக்னி தோற்றுவதுபோல் தன் ஸ்வபாவத்திற்கு எவ்வித மாறுதலுமின்றிக் கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாதவனாயினும் அவற்றின் க்ஷேமத்திற்காக ஸ்ரீக்ருஷ்ணனாக அவதாரஞ் செய்தான். கர்ம நிமித்தமான ஜன்ம

1. 'இதைச்செய்யலாம். இதைச் செய்யலாகாது' என்கிற விவேகமின்றி

2. மேன்மையுள்ள ப்ரஹ்மாதிகளுக்கும் அவர்களுக்குக் கீழ்ப்பட்ட மற்றவர்க்கும் ப்ரபுவாகிய.

மில்லாத பகவான் வஸுதேவனுடைய [1] பந்தன க்ருஹத்தில் கர்மத்திற்குட்பட்ட ஜீவராசிகள் பிறப்பதுபோல் பிறந்ததும், தான் எல்லையில்லாத வீர்யமுடையவனுயினும் கம்ஸனிடத்தினின்று பயந்தாற்போல் இடைச்சேரியில் வந்திருந்ததும், காலயவனுதிகளிடத்தில் பயந்தவன்போல் மதுராபுரியினின்று புறப்பட்டுப் போனதும் ஆகிய இவை என்னை வருத்துகின்றன (என் மனத்தை மயக்குகின்றன). இவையெல்லாம் தன்மஹிமையை மறைப்பதற்காகச்செய்த கார்யங்களே. மற்றும், அவன் தேவகீ வஸுதேவர்களின் பாதங்களில் நமஸ்காரஞ் செய்து 'அண்ணு! அம்மே! கம்ஸனிடத்தினின்று மிகுதியும் பயந்து நெடுநாள் உங்களருகில் இல்லாமல் அப்புறம் போயிருந்தமையால் உங்களுக்கு வேண்டிய சுச்ருஷைகளைச் செய்யாத எங்கள் விஷயத்தில் நீங்கள் அருள்புரியவேண்டும்' என்று மொழிந்தானே, இதை நினைக்கையில், என் மனது உருகுகின்றது. 'ஆனுல் இவனை அநீச்வரனென்று (ஈச்வரனல்லனென்று) சொல்லலாகாதோ' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. மானிடலீலையை அனுகரிப்பவனுகி அடிக்கடி தனது ஐச்வர்யத்தையும் வெளியிட்டிருக்கிறுனுகையால் இவனை அநீச்வரனென்னலாகாது. மஹிமைகளை மறைக்கும்படியான மானிட உருவத்துடன் அவதரித்தும் தன்னுடைய மேன்மையை அறிவிக்கும்படியான பலவகை அற்புத சரித்ரங்களையுஞ் செய்தானல்லவா? ஈச்வரனல்லனுயின், அதெப்படி ஸம்பவிக்கும்? இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களைப் பணிந்து அவற்றின் பராகத்தை மோந்து ருசி கண்ட எந்த ப்ராணிதான் இவனை மறக்கவல்லதாகும்? இவன் கொடிபோல் அசைகின்ற புருவ நெரிப்பின்படி நடக்குந்

1 சிறைச் சாலையில்.

தன்மையுடைய ம்ருத்யுவைக் கொண்டு பூமியின் பாரத்தைப் போக்கினான். இங்ஙனம் தன் புருவநெரிப்புமாத்ரத்தினாலேயே பூபாரத்தையெல்லாம் போக்கினமை ஈஶ்வர கார்யமன்றோ? இதனாலேயே ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஐஶ்வர்யம் வெளியாகவில்லையா? தர்மபுத்ரனது ராஜஸூய யாகத்தில், ஸ்ரீக்ருஷ்ணனை த்வேஷிப்பதே பணியாகப் பெற்றிருந்த ஶிஶுபாலனுக்கு பகவத் ப்ராப்தியாகிற ஸித்தி உண்டானதை நீங்களெல்லோரும் நேரே கண்டவர்களல்லவா? பக்தியோக நிஷ்டர்களான மஹானுபாவர்கள் சிறிதும் தோஷமில்லாமல் மேலான பக்தியோகத்தில் நிலைநின்று எந்த கதியைப்பெற விரும்புகிறார்களோ, அப்படிப்பட்ட நற்கதியை, ஸ்ரீக்ருஷ்ணன் தனக்கு த்வேஷியாகிய ஶிஶுபாலனுக்கும் கொடுத்தானல்லவா? வாத்ஸல்ய நிதியாகிய (எவ்விதத்திலாவது தன்னிடத்தில் ஸம்பந்தமுடையவரிடத்தில் சிறிதும் தோஷத்தைப் பாராட்டாமல் அந்த தோஷங்களையே போக்யமாகக் கொள்ளுந்தன்மை அமைந்த) ஸ்ரீக்ருஷ்ணனுடைய விரஹத்தை எவன் பொறுக்க வல்லனாவான்? காண்போர் கண்களுக்கு மிகவும் ஆநந்தம் விளைப்பதும் தாமரை மலர் போன்றதுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனது முகத்தை யுத்தம் நடக்கும்பொழுது தமது கண்களால் பானஞ்செய்பவரும் அர்ஜுனனுடைய அஸ்த்ரங்களால் அடியுண்டு புனிதஞ்செய்யப் பெற்றவருமாகிய மற்றுமுள்ள ராஜாக்களும் இந்த ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஸ்தானத்தை அடைந்தார்கள். இவன் தன்னோடொத்தவனும் தனக்குமேற்பட்டவனும்இல்லாதவனாகி ப்ரக்ருதிபுருஷன் காலம் ஆகிய இம்மூன்றுக்கும் நியாமகன்; ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களுக்கும் அதிபதி (தன்மேல் நீண்டவொட்டாதபடி அவற்றை அடக்கி ஆள்பவன்); ஸ்வாராஜ்ய

லக்ஷ்மீ விலாஸத்தினால் (பிறர்க்கு உட்படாமல் ஸ்வதந்த்ர னாயிருக்குந் தன்மையால் விளைகின்ற ஐஶ்வர்யம் வீர்யம் யஶஸ்ஸு முதலியவற்றின் ஸம்ருத்தியால்) விருப்பங் களெல்லாம் நிறைவேறப் பெற்றவன்; போக்யவஸ்துக் கள் போகத்திற்கு வேண்டிய கருவிகள் போகத்திற்குரிய இடங்கள் ஆகிய இவையெல்லாம் கைகூடப்பெற்றவன்; ஸமஸ்த லோகங்களிலும் பூஜையைப் பெறுகின்றவரும் நெடுநாளாக லோகங்களைப் பாதுகாத்து வருகின்றவரு மாகிய லோகபாலர்களுடைய கிரீடங்களின் நுனிகளால் ஸேவிக்கப்பெற்ற பாதபீடத்தை யுடையவன். ஆயினும், அவன் ஸார்வபௌம ஸிம்ஹாஸனத்தில் உட்கார்ந்தி ருக்கின்ற உக்ரஸேனனைக் குறித்துத் தான் நின்றுகொ ண்டு 'ஓ தேவனே! ஆஜ்ஞையிடுவாயாக' என்று விஜ்ஞா பனஞ் செய்துகொண்டிருந்தானே, அங்ஙனம் விண்ணப் பஞ்செய்கின்ற அந்த பகவானுடைய வார்த்தையானது, அவனுக்குக் கிங்கரர்களான (ஆட்பட்டிருப்பவராகிய) நம்மை வியப்புறச் செய்கின்றது. ஆ! என்ன ஆச்சர்யம். இந்தப் பூதனை தன் ஸ்தனங்களில் நிரப்பிவைத்த கால கூடவிஷத்தினால் இவனைக் கொல்லவேண்டுமென்னும் விருப்பங்கொண்டு குழந்தையாயிருந்த இவனை எடுத்துக் கொண்டு அவ்விஷத்தைப் பானஞ்செய்வித்தாள். இங்ங னம் துஷ்டஸ்வபாவையாகிய பூதனையும் தாயான யஶோ தை பெறக்கூடிய நற்கதியைப் பெற்றாள். இப்படி அபரா தஞ்செய்தவளுக்கும் எவன் மோக்ஷங்கொடுத்தானோ, அப்படிப்பட்ட பகவானைக் காட்டிலும் தயாளுவாகிய மற்ற எந்தப் புருஷனை நாம் சரணம் அடையலாம்? 'பக வானை அடைவதற்கு உரிய உபாயம் அவனிடத்தில் பக்தி செய்கை தவிர மற்றொன்றும் இல்லை யென்கிறார்கள் பெரி யோர்கள். நீரோவென்றால், ஸ்ரீக்ருஷ்ணன் உதாஸீனர்

களுக்கும் த்வேஷிகளுக்கும் மோக்ஷங் கொடுத்தானென்கிறீர். இது எப்படி?'' என்கிருயோ, சொல்லுகிறேன்கேட்பாயாக. மூன்றுலோகங்களுக்கும் நாதனுகிய பகவானிடத்தில் கோபாபிநிவேசஞ்செய்யும் மார்க்கத்தினுல் மனப்பற்றுடையவராகிய எவரெவர் யுத்தத்தில் ப்ராணன்களை விடமுயன்றவராகி, கருத்மானுடைய தோளில் உட்கார்ந்திருப்பவனும் சக்ரத்தை ஆயுதமாக உடையவனுமாகிய பகவானைக் கண்டார்களோ, அவர்களெல்லோரும், தேவஸ்வபாவத்துடன் பிறந்த பாகவதர்களென்றே எனக்குத் தோற்றுகின்றது. ஆகையால் த்வேஷிகளும் உதாஸீனர்களும் பக்தியோகஞ் செய்தவர்களைப் போலவேயென்று தெரிகின்றது. அந்த ஸ்ரீக்ருஷ்ணன் அவதாரஞ்செய்தது முதல் நடத்தின திவ்ய சேஷ்டிதங்களைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஜ்ஞானம் பலம் ஐஶ்வர்யம் வீர்யம் சக்தி தேஜஸ்ஸு என்கிற குணங்களெல்லாம் நிரம்பப்பெற்ற பகவான் ப்ரஹ்மதேவனுல் ப்ரார்த்திக்கப் பெற்று இந்த பூமிக்கு ஸுகத்தை விளைவிக்க விரும்பி, கம்ஸனுடைய [1] காராக்ருஹத்தில் வஸுதேவர்க்கு அவருடைய பார்யையாகிய தேவகியிடத்தில் பிள்ளையாக அவதாரஞ் செய்தான். கம்ஸனிடத்தில் மிகுதியும் பயந்த தந்தையாகிய வஸுதேவர்க்காக நந்தகோகுலஞ்சென்று அங்குப் பதினொரு ஸம்வத்ஸரங்கள் தனது ஐஶ்வர்யங்களை வெளிக்காட்டாமல் பலராமனோடு வாஸஞ்செய்தான். கன்றுகளை மேய்க்கும் பாலர்களோடு கூடித் தானும் கன்றுகளை மேய்த்துக்கொண்டு இனிதாகக் கூவுகின்ற பக்ஷிகள் நிரம்பப்பெற்ற வ்ருக்ஷங்கள் அமைந்த யமுனைக் கரையோரத்திலுள்ள வனத்தில் அனைத்துக்கும் அந்தர்யாமியாய் விளையாடிக்கொண்

1 சிறைச்சாலையில்.

டிருந்தான். அனைவர்க்கும் அந்தர்யாமியாகிய அந்த பக வான் வனவாஸிகள் வியப்புடன் பார்த்துக்கொண்டிருக் கும்படி அழகான பால சேஷ்டைகளைக் காண்பிப்பவனு கித் தான் சிரித்துக்கொண்டே அழுபவன்போல் தோற்றி, அழகிய பாலஸிம்ஹத்தின் கண்ணோக்கம்போன்ற கம்பீர மான கண்ணோக்கமுடையவனுகி யமுனைக் கரையிலுள்ள உபவனங்களில் விளையாடிக் கொண்டிருந்தான். அப் பொழுது கம்ஸனால் அனுப்பப் பெற்றவர்களும் மாயையி னால் வஞ்சிப்பவர்களும் காமரூபிகளும் (நினைத்தபடி வடி வங்கொள்ள வல்லவர்களும் ஆகிய சகடன் தேனுகன் அரி ஷ்டன் முதலிய அந்தந்த அஸுரர்களை, பாலகன் பொம் மைகளைப்போல், விளையாட்டாகவே வதித்துக்கொண் டிருந்தான். அவன், காலியமடுவில் விஷஜலத்தைப் பருகிப் பசுக்கள் மூர்ச்சித்துப் பெரிய ஆபத்தில் அகப் பட்டிருப்பதைக் கண்டு ஸர்ப்பங்களில் சிறந்த காலிய ஸர்ப்பத்தை நிக்ரஹித்து மூர்ச்சித்த பசுக்களை எழுப்பி, விஷம் நீங்கப்பெற்ற அந்தக் காலிய மடுவின்ஜலத்தையே பருகச்செய்தான். அவன், பெருப்பெரிய ராசி ராசிகளாய் ஸம்பாதித்துக் குவித்து வைக்கப்பெற்ற பணத்தையெல் லாம் நல்வழியில் உபயோகப்படுத்த விரும்பி ப்ராஹ்மண ம்ரேஷ்டர்களை முன்னிட்டு நந்தகோபரைக்கொண்டு கோ யாக மென்னும் யாகஞ் செய்வித்தான். (அதற்கு முன்பு இடையர்கள் இந்த்ரயாகமென்று பேர்வைத்து இந்த்ர பூஜையாக ஓர் யாகஞ் செய்துகொண்டிருந்தார்கள். அதை நிறுத்தி ஸ்ரீக்ருஷ்ணன் கோயாகஞ்செய்விக்கை யில், இந்த்ரன் தன் யாகம் தடைபட்டமைகண்டு மிகுதியும் கோபமுற்றான்.) அங்ஙனம் பூஜை தடைபடப்பெற்ற அவ் விந்த்ரன், கோபத்தினால் மழை பெய்கையில், நல்லியற்கை யுடைய விதுரனே! இடைச்சேரியெல்லாம் தழதழப்புற்று

வருந்துவதைக் கண்டு, அனுக்ரஹஞ் செய்யுந் தன்மையுள்ள ஸ்ரீக்ருஷ்ணன் பர்வதத்தையே குடையாகப் பிடித்து அதைப் பாதுகாத்தான். சரத்காலத்தில் விளங்கும் சந்த்ரனுடைய கிரணங்களால் திகழ்கின்ற ப்ரதோஷ ஸமயத்தை வெகுமதிப்பவனாகி (ப்ரதோஷ ஸமயத்திற்குத் தனது விளையாடல்களால் சிறப்பை விளைவிப்பவனாகி) கோபஸ்த்ரீகளின் கூட்டத்தை அலங்கரித்துக்கொண்டு, இன்னது இனியதென்று தெரியாமல் மதுரமான அக்ஷரங்கள் அமைந்திருக்கும்படி வேணுகானஞ்செய்து விளையாடலுற்றிருந்தான். இரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ஸ்ரீக்ருஷ்ணன் மதுரைக்குப் போய் கம்ஸனைக் கொன்றதையும், அவன் த்வாரகைக்குச் சென்று அங்கு நடத்தின செயல்களையும் கூறுதல். }

உத்தவர் சொல்லுகிறார்:—அனந்தரம் ஸ்ரீக்ருஷ்ணன் தனது தாய்தந்தைகளான தேவகீ வஸுதேவர்களுக்கு ஸுகத்தை விளைவிக்க விரும்பி பலராமனுடன் நந்தகோகுலத்தினின்று மதுரைக்கு வந்து சத்ருக்கூட்டங்களுக்குத் தலைவனாகிய கம்ஸனைத் தன் தேஜஸ்ஸினால் அடித்து ப்ராணன்களைத் தொலைத்து உயர்ந்த ராஜமஞ்சத்தினின்று அவனைப் பூமியில் விழத்தள்ளி இழுத்தான். அவன் ஸாந்தீபனியென்னும் உபாத்யாயரிடத்தில் ஆறங்கங்களோடுகூடின வேதம் முழுவதையும் ஒருருவில் ஓதியுணர்ந்து, ஸமுத்ரத்தில் பஞ்சஜனனென்னும் அஸுரனால் விழுங்கப்பெற்று மாண்ட அந்த ஸாந்தீபனியின் புதல்வனை அவ்வஸுரனது வயிற்றைப் பிளந்து அழைத்துக்கொண்டு வந்து அவ்வந்தணருக்கு குருதக்ஷிணையாகக் கொடுத்தான். அன்றியும் அவன் ஸ்ரீமஹாலக்ஷ்மியை நிகர்த்த ஸௌந்தர்யத்துடன் திகழ்கின்ற ருக்மிணி

யின் விவாஹத்திற்காக ருக்மி முதலியவர்களால் அழைக்கப்பெற்று வந்த ஶிஶுபாலன் முதலிய ராஜாக்கள் பலர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அவர்கள் தலையில் காலை வைத்தாற்போல் அவர்களைப் பொருள் செய்யாமல் காந்தர்வமென்கிற விதியின்படி மணம் புரிய விரும்பி, திகழ்கின்ற ரதத்தில் ஏறிக்கொண்டு வந்து தன்பாகமாகிய ருக்மிணியைப் பறித்துக்கொண்டுபோனான். மூக்குக் குத்தப் பெறாமல் கொழுத்திருக்கின்ற வ்ருஷபங்களை மூக்காங்கயிறு போட்டு அடக்கி நக்னஜித்தின் புதல்வியாகிய ஸத்யபாமையை ஸ்வயம்வரத்தில் மணம் புரிந்தான். அந்த வ்ருஷபங்களை அடக்கி அவளை மணம்புரிய விரும்பிப் பல ராஜாக்களும் முயன்று அவற்றை அணுகமுடியாமல் 'நம்மைப்போல் பலிஷ்டர் எவருமே இல்லை' என்ற அபிமானம் தொலையப்பெற்றவர்களும் அப்பெண்மணியை ஆசைப்படுகின்றவர்களும் அறிவிலா மூடர்களும் ஆயுதம் ஏந்தியிருப்பவர்களுமாகிய பல ராஜாக்களையும், தான் அவரது ஆயுதங்களால் சிறிதும் அடிபடாமலே வதித்துவிட்டான். தான் ஒருவர்க்கும் உட்படாத ஸ்வதந்த்ரனாயினும், ஸ்த்ரீகளுக்குப் பரதந்த்ரனை (காமுகனை) அற்பன் போல், தனது அன்பிற்கிடமான ஸத்யபாமையின் இஷ்டத்தை நிறைவேற்ற விரும்பி ஸ்வர்க்கலோகத்தினின்று பாரிஜாத வ்ருக்ஷத்தைப் பறித்துக்கொண்டு வந்தான். அந்தப் பாரிஜாத வ்ருக்ஷத்திற்காக வஜ்ராயுதமுடைய தேவேந்த்ரன் ஸ்த்ரீகளால் தூண்டப்பட்டு தேவகணங்களோடு கூடிக் கோபத்தினால் கண் தெரியாமல் அந்த வ்ருக்ஷத்தைப் பறித்துக்கொண்டு போகின்ற பகவானை எதிர்த்து யுத்தஞ் செய்ய வந்தான். இந்த தேவேந்த்ரன் ஸ்த்ரீகளுக்கு விளையாட்டு ம்ருகம் போன்றவன். ஆனது பற்றியே அவர்களுடைய வசனத்தின்படி ஸ்ரீக்ருஷ்ணனை

ளதிர்த்து யுத்தஞ் செய்ய வந்தான். உலகங்களெல்லாம் ஸ்ரீக்ருஷ்ணனுக்குச் சேஷப்பட்டதென்று (உட்பட்டதென்று) தேவேந்த்ரன் அறிந்திலன். ஐஶ்வர்ய மதத்தினால் எல்லாம் தன்னுடையதென்று ப்ரமித்திருந்தான். ஸ்ரீக்ருஷ்ணனேயென்றால் ஸகலஜகந்நாதன். ஆகையால் அவன் தன்னுடைய தான பாரிஜாதத்தைக்கொண்டுபோவது யுக்தமே. இதனால் அவன் ஸ்த்ரீகளுக்குட்பட்டவனாகமாட்டான். இந்த்ரன் தன்னுடையதல்லாத பாரிஜாதத்தைத் தன்னுடையதென்று நினைத்தமை அஜ்ஞானத்தின் கார்யமே. அங்ஙனம் யுத்தத்திற்கு எதிர்த்து வந்த தேவேந்த்ரனை வென்று பாரிஜாத வ்ருக்ஷத்தைப் பறித்துக் கொண்டுவந்தான். தன் ஶரீரத்தினால் ஆகாயத்தை விழுங்குமவன்போல் வளர்ந்திருக்கின்ற நரகாஸுரனை ஸ்ரீக்ருஷ்ணன் யுத்தத்தில் தனது சக்ராயுதத்தினால் சேதிக்கையில், பூமிதேவி தன் புதல்வன் அங்ஙனம் பட்டமை கண்டு ஸ்ரீக்ருஷ்ணனை ப்ரார்த்திக்கையில், அவனும் தான் எடுத்துக்கொண்டதுபோக மிகுந்துள்ள கருகூலம் ராஜ்யம் முதலியவற்றை யெல்லாம் அந்த நரகாஸுரனுடைய பிள்ளைக்குக் கொடுத்து அந்த நரகாஸுரனுடைய அந்தப்புரத்திற்குள் ப்ரவேசித்தான். அவ்வந்தப்புரத்தில், நரகாஸுரனால் நாற்புறங்களினின்று பறித்துக் கொண்டு வரப்பெற்ற ராஜ கன்யகைகள் ஆர்த்தபந்துவாகிய (வருந்தினவர்க்கு பந்துவாகிய) ஸ்ரீக்ருஷ்ணனைக் கண்டு உடனே எழுந்திருந்து ஸந்தோஷம் லஜ்ஜை அனுராகம் ஆகிய இவற்றால் தூண்டப்பெற்ற கண்ணோக்கங்களால் அவனை எதிர்கொண்டு அங்கீகரித்தார்கள். இங்ஙனம் தன்னை ப்ரீதியுடன் அங்கீகரித்த அம்மாதரார் மணிகளனைவரையும் ஒவ்வொருத்திக்கும் தனித்தனியே ஏற்பட்ட க்ருஹங்களில் ஒரே முஹூர்த்தத்தில் தன்னு

டைய ஸங்கல்பத்தினால் தானும் பல உருவங்களை யுடைய வனாகி முறையின்படி பாணிக்ரஹணஞ் செய்துகொண் டான் (மணம்புரிந்தான்). அவர்களெல்லோரையும் மணம் புரிந்தபின்பு தனக்குட்பட்ட ப்ரக்ருதியின் வளர்த்தி இத் தகையதென்று வெளிப்படுத்த விரும்பி ஒவ்வொரு பார் யையிடத்திலும் எல்லாவிதத்திலும் தனக்கு ஸரியாயிருக் கின்ற பப்பத்துப் பிள்ளைகளைப் பெற்றான். காலயவனன் மாகதன் ஸால்வன் முதலியவர் தந்தமது ஸைன்யங்களு டன் எதிர்த்து வந்து தன் பட்டணத்தைத் தகையுந்தரு ணத்தில் அவர்களில் சிலரை ஸ்ரீக்ருஷ்ணன்தானே வதித் தான். தன்னைச்சேர்ந்த புருஷ ஸ்ரேஷ்டர்களான பீமார் ஜுநாதிகளுக்குத் தன்னுடைய திவ்ய தேஜஸ்ஸைக் கொ டுத்து அவர்களைக் கொண்டு சிலரைக் கொல்வித்தான். சம்பரன் த்விவிதன் பல்வலன் முதலியவர்களையும் மற்றும் சிலரையும் ப்ரத்யும்ன பலராமாதிகளைக் கொண்டு கொல் வித்தான். பாணன் முரன் தந்தவக்ரன் முதலியவர் களைத் தானே கொன்றான். அன்றியும், அந்த ஸ்ரீக்ருஷ் ணன், உனது உடன்தோன்றல்களாகிய பாண்டு த்ருத ராஷ்ட்ரன் இவர்களின் புதல்வர்களான யுதிஷ்டிராதிகள் பக்ஷத்திலும் துர்யோதனாதிகள் பக்ஷத்திலும் ஸஹா யஞ் செய்யமுயன்று, தந்தமது ஸைன்யங்களால் பூமியை நடுங்கச் செய்துகொண்டு குருக்ஷேத்ரத்திற்கு வருகின்ற பற்பல ராஜாக்களையும் வதித்தான். கர்ணன் துஸ்ஸாஸ னன் ஸௌபலன் ஆகிய இவர்களுடன் கலந்தாலோசித்து, அவர்கள் புத்திஹீனர்களாகையால் உண்மை அறியாமல் தனக்கு அநிஷ்டம் விளையுமாறு மொழிந்த ஆலோசனை யின்படி நடந்து ஸம்பத்தும் ஆயுளும் அழிந்து துடைக ளிரண்டும் முறியப்பெற்றுத் தன்னைப் பின்றொடர்ந்தவர் அனைவரோடுங்கூடி யுத்தபூமியில் படுத்திருக்கின்ற துர்

யோதனனைக் கண்டும் 'இன்னம் பூமியின் பாரம் நீங்க வில்லையே' என்று ஸந்தோஷம் அடையவில்லை. 'எனது அம்சங்களாகிய த்ரோணன் பீஷ்மன் அர்ஜுனன் பீமஸேனன் முதலியவர்களைக் கொண்டு பதினெட்டு அக்ஷௌஹிணிக் கணக்குள்ள ஸைன்யங்களை அழித்தேன். ஆயினும், இது ஒரு பொருளல்ல. நான் அழித்தது சிறுச்சிறுதே. நான் பீமார்ஜுனாதிகளைக் கொண்டு பூமியின் பாரத்தை நீக்க முயன்றும் அதை நிஶ்ஶேஷமாய்ப்போக்க வில்லை. ஏனென்னில், பொறுக்கமுடியாததான யாதவ ஸைன்யம் முழுவதும் அப்படியே குறிமாறுதிருக்கின்றதே' என்று மனக்குறையுடன் தனது வம்சத்தை அழிப்பதற்கு உபாயத்தை ஆலோசித்துக் கொண்டிருந்தான். 'யாதவர்கள் ப்ராஹ்மண சாபத்தினால் விளையும் அரிஷ்டத்தைப் போக்க விரும்பி ப்ரபாஸதீர்த்தத்திற்குப் போய்த் திரும்பினபின்பு மத்யபானஞ் செய்து, அதனாலுண்டாகும் மதத்தினால் கண்கள் சிவக்கப்பெற்று ஒருவர்க்கொருவர் விவாதம் உண்டாகப் பெறுவார்கள். அப்பொழுது இவ்வளவே இவர்களை வதிப்பதற்குப் போதுமான உபாயம். அதெப்படியென்னில்—ஸர்வர்க்கும் அந்தராத்மாவும் ஸர்வ ஸம்ஹாரகனுமாகிய நான் எனது லோகத்திற்குப் போக முயன்றமையில், இவர்கள் தாமே தமக்குள் விவாதத்தினால் அழிந்து போவார்கள்' என்று ஆலோசித்தான். ஸ்ரீக்ருஷ்ணன் இங்ஙனம் ஆலோசித்து, யுதிஷ்டிரனை அவனுடைய ராஜ்யத்தில் நிலைநிறுத்தி ஸத்புருஷர்கள் ஆசரிக்கும் மார்க்கமாகிய வர்ணாஶ்ரம மர்யாதையைத் தனது அனுஷ்டானத்தினால் விளங்கச்செய்பவனாகித் தனது நண்பர்களை ஸந்தோஷப்படுத்திக்கொண்டிருந்தான். அபிமன்யு தன் பார்யையாகிய உத்தரையிடத்தில், பூருவின் வம்சம் மேன்மேலும் நன்றாக வளர்ந்து

வரும்படி பரீக்ஷித்தென்னும் புதல்வனைப் பிறப்பித்தான். அவன் உத்தரையின் கர்ப்பத்தில் இருக்கும்பொழுது த்ரோணகுமாரனாகிய அஸ்வத்தாமா ப்ரஹ்ம சிரஸ்ஸென்னும் அஸ்த்ரத்தினால் அந்த கர்ப்பத்தை மறைத்து கர்ப்ப சிசுவை அழிக்கப் பார்க்கையில், ஸ்ரீக்ருஷ்ணன் கர்ப்பத்தில் புகுந்து அந்த அஸ்த்ரத்தை ஸுதர்சன சக்ரத்தினால் தடுத்து கர்ப்பத்தை அழியாதபடி பாதுகாத்தான். ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணன் தம்புத்ரனைக் கொண்டு மூன்று அஸ்வமேதயாகங்கள் செய்வித்தான். அவனும் ஸ்ரீக்ருஷ்ணனைத் தொடர்ந்து பணிந்து தம்பிகளான பீமஸேனாதிகளுடன் பூமியைப் பாதுகாப்பவனாகி மனக்களிப்புற்றிருந்தான். அனைத்திற்கும் அந்தராத்மாவாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் ஸ்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் விதிக்கப்பட்ட தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டிப்பவனாகி த்வாரகாபுரிக்குச் சென்று, மோக்ஷத்தில் விருப்பமுடைய ஸத்புருஷர்களால் உபாஸிக்கப்படுமவனும் ஆனந்த ஸ்வரூபனுமாகிய தன்னைத் தான் அனுபவித்துக்கொண்டு சப்தாதி விஷயங்களில் மனப்பற்றின்றித் தனது கல்யாண குணங்களை ஆராய்ந்துகொண்டிருந்தானாயினும் காண்போர்களுக்குச் சப்தாதி விஷயங்களை அனுபவிப்பவன்போல் புலப்பட்டுக்கொண்டிருந்தான். அந்த ஸ்ரீக்ருஷ்ணன் ஸ்னேஹம் நிறைந்த புன்னகையுடன் கூடின கண்ணோக்கத்தினாலும் அம்ருதம்போன்ற வாக்கினாலும் சிறிதும் ஏதமில்லாத நடத்தையினாலும் ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகிய தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தினாலும் இந்த பூலோகத்தையும் மேலுள்ள ஸ்வர்க்காதி லோகங்களையும் ஸந்தோஷப்படுத்திக்கொண்டிருந்தானாயினும், இவ்வுலகத்தில் யாதவர்களை விசேஷமாகமனக்களிப்புறச் செய்துகொண்டு ராத்ரியில் க்ஷணகாலம் மாத்ரமே ஸ்த்ரீ

26

களுக்குக் காட்சி கொடுக்கையாகிற ஸ்னேஹநிலைமையை மாறாமல் நடத்திக்கொண்டு வந்தான். இங்ஙனம் அவன் அனைவரையும் ஸந்தோஷப்படுத்திக்கொண்டு தானும் மனக்களிப்புற்றிருந்தான். இப்படி எதிலும் பற்றில்லாமல் அநேகமாயிரம் ஸம்வத்ஸரங்களாக விளையாடிக் கொண்டிருக்கின்ற அந்த ஸ்ரீக்ருஷ்ண பகவானுக்கு இல்லறங்களில் அனாதரம் உண்டாயிற்று. (அவதார கார்யத்தை முடித்துக்கொண்டு வந்தவழியே புறப்பட்டுப்போக வேண்டுமென்னும் விருப்பத்தினால் க்ருஹஸ்த தர்மங்களில் அவனுக்கு அனாதரம் உண்டாயிற்று.) யோகத்தின் பலனைக் கொடுக்க வல்ல பகவானை பக்தியோகத்தினால் பணிந்துகொண் டிருப்பவனும் தெய்வத்திற்கு (ஜன்மாந்தரத்திற்செய்த புண்யபாபகர்மங்களுக்கு) உட்பட்டிருப்பவனு மாகிய எந்த மனிதன் தான் தெய்வாதீனமாய் விளையக்கூடிய காமங்களில் விஶ்வாஸம் வைப்பான்? ஒருவனும் வைக்கமாட்டானல்லவா? கர்மாதீனனான ஜீவனுக்கே இப்படியானால், பகவானைப்பற்றிச் சொல்ல வேண்டுமோ? ஆகையால் அவன் இல்லறங்களில் அனாதரம் உண்டாகப் பெற்றிருந்தான். இங்ஙனம் பகவான் தன் குலத்தை ஸம்ஹரிக்க நினைத்திருந்ததற்குச் சேரும்படி யாதவர்களுக்கு ப்ராஹ்மணசாபம் உண்டாயிற்று. அதனால் யதுகுலம் முழுவதும் முடிந்துவிட்டது. பகவானுக்குத் தன் குலத்தைப் பாழ்செய்ய வேண்டுமென்னும் விருப்பம் உண்டானதற்குப் பின்பு த்வாரகாபுரியில் ஒருக்கால் யாதவகுமாரர்களும் போஜகுமாரர்களும் விளையாடிக்கொண்டிருக்கும்பொழுது முனிவர்களுக்குக் கோபம் வரும்படி செய்தார்கள். அங்ஙனம் கோபம் உண்டாகப் பெற்ற அம்முனிவர்கள் பகவானுடைய அபிப்ராயத்தை அறிந்தவராகையால் சாபங் கொடுத்தார்கள். அப்பால்

சில மாதங்கள் கழிந்தபின் பலவகை அனிஷ்டங்கள் தோற்றக்கண்டு வ்ருஷ்ணிகள் போஜர் அந்தகர் முதலியவர் எல்லாரும் தெய்வத்தினால் மதி மயங்கப்பெற்று மிகுந்த ஸந்தோஷமுற்றவராகி ரதங்களில் ஏறிக்கொண்டு ப்ரபாஸதீர்த்தத்துக்குப் போனார்கள். அந்த ப்ரபாஸதீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அதன் ஜலங்களால் பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் ரிஷிகளுக்கும் தர்ப்பணஞ் செய்து வயது இயற்கை முதலிய பலவகைக் குணங்கள் அமைந்த பசுக்களை ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்தார்கள். பசுக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் அற்றுத்தீர்ந்த ப்ராணன்களையுடையவரும் (ப்ராணன்களை இழந்தாயினும் கோக்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் விருப்பங்களை நிறைவேற்றுந் தன்மையுடையவரும்) சூரர்களுமாகிய அந்த யாதவர்கள் அவ்வந்தணர்களுக்குப் பொன் வெள்ளி படுக்கை வஸ்த்ரங்கள் க்ருஷ்ணாஜினங்கள் கம்பளங்கள் குதிரைகள் தேர்கள் யானைகள் பெண்கள் ஜீவனத்தை விளைக்கும்படியான பூமி ஆகிய இவற்றையும், அழகிய அறுசுவைகளும் அமைந்த மேலான அன்னத்தையும் பகவானுக்கு அர்ப்பணமாகும்படி தானஞ்செய்து, தலைகளால் பூமியில் விழுந்து அவர்களுக்கு நமஸ்காரஞ் செய்தார்கள். மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீவிதுரர் பந்துக்களுடைய மரணத்தைக் கேட்டு ஆத்மஜ்ஞானம் பெறுவதற்காக உத்தவரால் ஸ்ரீமைத்ரேயரிடம் போகும்படி தூண்டப்பெற்று அவரிடம் போதல்.

**உத்தவர் சொல்லுகிறார்:**—அனந்தரம அந்த யாதவர்கள் அவ்வந்தணர்களால் அனுமதி கொடுக்கப்பெற்று போஜனம் பண்ணி மத்யபானஞ்செய்து அதன்மயக்கத்தினால் விவேகமற்றவராகி ஒருவர்க்கொருவர் மர்மபேதி

களான (மர்மங்களை வெளியிடும்படியான) துர்வசனங்களால் அடித்துக்கொண்டார்கள். அவர்கள் மத்ய பானத்தினால் விளையுந் தோஷமாகிய மதிமயக்கத்தினால் மனத்தெளிவற்றவராகி, ஸூர்யன் அஸ்தமிக்கும் ஸமயத்தில், மூங்கில்கள் ஒன்றோடொன்றிழைந்து நெருப்பு உண்டாகப்பெற்று எரிந்து பாழடைவதுபோல்; ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு மாண்டார்கள். அனந்தரம், பகவான் தான் முன்னமே ஸங்கல்பித்ததற்குப் பலனாக அங்ஙனம் நேர்ந்த தன் குலத்தின் விநாசத்தைக் கண்டு ஸரஸ்வதி நதியில் ஸ்னானஞ் செய்து அச்வத்த வ்ருக்ஷத்தின் (அரசமரத்தின்) அடியில் ப்ரவேசித்தான். தன்னைச் சரணம் அடைந்தவர்களின் மனவருத்தங்களைப் போக்குந்தன்மையனும் தன் குலத்தை ஸம்ஹாரஞ் செய்ய விருப்புற்றவனுமாகிய பகவான் என்னைப் பார்த்து 'நீ பதரிகாச்ரமத்திற்குப் போவாயாக' என்று மொழிந்தான். அவன் இப்படி போகச் சொல்லினும், அவன் தன் வம்சத்தை ஸம்ஹரிக்க நினைத்திருந்தமை முதலிய அபிப்ராயங்களை நான் அறிந்தவனாயினும், சத்ருக்களையழிக்குந்தன்மையுள்ள விதுரனே! நமது பர்த்தாவான (ப்ரபுவான) பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பிரிந்திருக்கப் பொறாமல் அவனையே பின்றொடர்ந்து சென்றேன். (அநுவர்த்தித்திருந்தேன்.) இங்ஙனம் தொடர்ந்த நான் அவனையே மனத்தினால் சிந்தித்துக்கொண்டிருக்கையில், ஒருவரும் ஸஹாயமின்றித் தனியனும் மிகுந்த அன்பிற்கிடமும் நிருபாதிக சேஷியும் (ஒரு காரணத்தைப் பற்றி யல்லாமல் இயற்கையாகவே ஸர்வஸ்வாமியாயிருப்பவனும்) ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமும் ஸரஸ்வதி நதிக்கரையில் வஸிக்கின்றவனும் தான் எல்லாருக்கும் ஆச்ரயமாகித் தனக்கு ஓர் ஆச்ரயமில்லாதவனுமாகிய

பகவானைக் கண்ணுல் காணப்பெற்றேன். மற்றும் அவன் கருமையும் வெளுமையும் கலந்த நிறமுடையவனும் நிர்மலமாய் ப்ரகாசிப்பவனும் தெளிந்து சிவந்தகண்களையுடையவனும் நான்கு புஜங்களாலும் பொன்நிறமுள்ள பட்டு வஸ்த்ரத்தினுலும் ஸ்பஷ்டமாய்த் தெரிகின்றவனும் தாமரை மலர்போன்ற வலதுபாதத்தை இடது துடையின்மேல் வைத்துக்கொண்டு பின்புறத்தினுல் இளையதான அரசமரத்தின்மேல் சாய்ந்திருப்பவனும் கர்மத்தினுல் விளையும் பலன்கள் தீண்டப்பெருதவனும் ஆனதுபற்றியே கர்மத்தினுல் விளையக்கூடிய இளமை பெருமை குருமை நெடுமை ஆதி வ்யாதி முதலிய விகாரங்கள் எவையு மில்லாதவனுமாகிய பகவானைக் கண்டேன். வேதவ்யாஸமஹரிஷிக்கு நண்பரும் பாகவதர்களில் தலைமையுடையவரும் செயல்தீர்ந்தவருமாகிய மைத்ரேய மஹர்ஷி அந்த பகவானிருக்கு மிடத்திற்குத் திடீலென்று வந்து சேர்ந்தார். அவர் பகவானைக் கண்ட ஸந்தோஷத்தினுலும் பக்தியாலும் தலைவணங்கி பெற்று பகவானிடத்தில் மிகுந்த ப்ரேமமுடையவராகிக் கேட்டுக்கொண் டிருக்கையில், பகவான் ப்ரீதியும் புன்னகையும் அமைந்த கண்ணேக்கத்தினுல் அம்மஹர்ஷியின் ஶ்ரமமெல்லாம் தீரச் செய்துகொண்டு என்னைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறுன்:—பூர்வ ஜன்மத்தில் வஸுவாயிருந்த உத்தவரே! உமது மனத்திலுள்ள அபீஷ்டத்தை நான் அறிவேன். முன் ஜன்மத்தில் வஸுவாயிருந்த நீரும் உம்மைச்சேர்ந்த மற்றை வஸுக்களும் விஶ்வகர்த்தாக்களான ப்ரஜாபதிகளும் சேர்ந்து யாகஞ் செய்தீர்கள். என்னைப் பெறுகையாகிற ஸித்தியை அடைய விரும்பி அப்பொழுது அந்த யாகத்தில்

வுஷ்டவஸுக்களில் ஒருவராகிய நீர் என்னை நன்றாக ஆராதித்தீர். என் பாதங்களை ஆராதிக்காத மற்றவர்க்குக் கிடைக்க அரியதாகிய உமது விருப்பத்தை நான் அப்படியே நிறைவேற்றிக் கொடுக்கிறேன். நல்லியற்கையுடைய உத்தவரே! உமது ஜன்மங்களில் இந்த ஜன்மம் கடைசியானது. இதற்கு மேல் உமக்கு ஜன்மம் கிடையாது. ஏனென்னில்; உமக்கு இந்த ஜன்மத்தில் எனது அனுக்ரஹம் கிடைத்ததல்லவா? நான் மனுஷ்யலோகத்தைத் துறந்து எனது லோகமாகிய வைகுண்டத்திற்குப் போக விரும்பி ஏகாந்தத்தில் இருக்கையில், மிகுந்த பக்தியுடன் அத்தகையனான என்னைக் கண்டீரே. இது உமக்கு தெய்வாதீனமாய்க் கிடைத்தது. ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் எனது நாபியிலுண்டான தாமரை மலரில் உட்கார்ந்த ப்ரஹ்மாவுக்கு என் மஹிமையை வெளியிடுவதும் மேன்மை யுடையதுமாகிய ஜ்ஞானத்தை முன் காலத்தில் உபதேசித்தேன். பண்டிதர்கள் இதையே பாகவதமென்பர்கள். அப்படிப்பட்ட ஜ்ஞானத்தை உமக்கு உபதேசிக்கிறேன்' என்றான். இங்ஙனம் ப்ரீதியுடன் சொல்லப்பெற்ற நான் அந்தப் பரம புருஷனுடைய க்ருபாகடாக்ஷத்திற்கும் அனுக்ரஹத்திற்கும் பாத்ரமாகி அவனிடத்திலுள்ள ஸ்நேஹத்தினால் மயிர்க்கூச்சல் அடைந்து எழுத்துக்கள் தழதழக்கப்பெற்று ஆநந்த நீர்களைப் பெருக்கிக்கொண்டு அஞ்சலிஹஸ்தனாய் அந்த பகவானைக் குறித்து இங்ஙனம் விண்ணப்பம் செய்தேன். 'ஜகதீசா! உனது பாதாரவிந்தங்களைப் பணியும் புருஷர்களுக்கு இவ்வுலகத்தில் தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற நான்கு புருஷார்த்தங்களில் எதுதான் கிடைக்க அரியது? எல்லாம் ஸுகமாகக் கிடைக்கக்கூடியதே. அளவிறந்த கல்யாண குணங்களையுடையவனே! விபூ! இப்படி நான்கு

புருஷார்த்தங்களும் ஸுலபமாகக் கிடைக்கக் கூடியவை யாயினும், அவற்றில் எதையும் நான் அபேக்ஷிக்கவில்லை நான் உன்னுடைய பாதாரவிந்தங்களைப் பணிவதிலேயே மிகுந்த விருப்பமுடையவன். எனக்குமற்றொன்றும் வேண்டியதில்லை. உன்பாதாரவிந்தங்களைப் பணிந்திருக்கப்பெறு வேனாயின் இதுவே எனக்குப் போதுமானது. உன்னோடு என்றும் பிரியாதிருப்பதற்கு விரோதியான தர்மம் முதலியவை எனக்கு வேண்டியதில்லை. சேராதவற்றையும் சேர்க்குந் திறமையுடையவனான உனது சக்தியை நினைத்துப் பெரியோர்கள் நெஞ்சு உருகப் பெறுகின்றார்களே. எனக்கும் அந்த நிலைமையையே விளைவிப்பாயாயின் அதுவே எனக்குப் போதுமானது. இயற்கையில் வ்யாபாரமற்றவனாகிய உனது கர்மங்களும், ஜன்மமில்லாத (கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாத) உன்னுடைய உற்பத்தியும் காலத்தைச் சரீரமாகக் கொண்டு அதை இஷ்டப்படி நடத்துந் திறமையுடைய நீ த்வாரகை யென்னும் ஜலதுர்க்கத்தைப் பற்றினமையும், காலயவனன் முதலிய சத்ருக்களிடம் பயந்து ஓடினதும், தன்னைத் தானே அனுபவிக்கையால் விளையும் பேரானந்தத்தில் ஆழ்ந்திருப்பவனாகிய நீ பல பெண்டிர்களோடு இல்லறத்தில் இருந்ததும் ஆகிய இவற்றை நினைத்துப் பண்டிதர்களும் மதி மயங்கப் பெறுகின்றார்கள். தடைபடாததும் அளவில்லாததுமான ஆத்மஜ்ஞானத்தை யுடையவனும் அனவதானமென்பது (மனவூக்கமில்லாமையென்பது) சிறிதுமில்லாதவனுமாகிய நீ, ஆலோசிக்கவேண்டிய விஷயங்கள் நேர்படும்பொழுது ஒன்று மறியாதவன்போல், என்னை அழைத்து வினவிக்கொண்டிருந்தனையே. என்னை வைத்துக்கொள்ளாமல் எவ்வித ஆலோசனையும் செய்யமாட்டாதிருந்தனையே. அது என் மனத்தை மயக்குகின்றது

தேவனே! கீழ்ச் சொன்னதெல்லாம் வாஸ்தவத்தில் பொருந்தும். இதுவொன்று மாத்ரமே அவ்வளவு பொருந்தாது. கர்மத்தினால் விளையும் செயலற்ற நீ செய்யும் செயல்களெல்லாம் விளையாடலைப் பற்றினவை யாகையால் பொருந்தும். கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாத நீ உனது ஸங்கல்பத்தினால் அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹங்களைக் கொள்வதும் அதைப்பற்றியே பொருந்தும். மனுஷ்ய லீலைகளை அனுஸரிக்க முயன்ற நீ உனக்கு ஜலதுர்க்கமான த்வாரகைக்குப் போனமையும் பொருந்தும். ஆலோசனை ஸமயங்களில் ஒன்றுமறியாதவன்போல் என்னைக் கேட்டதுமாத்ரம் எனக்கு மிகவும் ஆச்சர்யமாயிருக்கின்றது. உன்னுடைய உண்மையை அறிவிப்பதும் அறியவேண்டிய விஷயங்களில் முக்யமாயிருப்பதும் அங்கங்களோடு கூடியதும் ப்ரஹ்மதேவனுக்கு நீ உபதேசித்ததுமாகிய ஜ்ஞானத்தை, நாங்கள் பெறக்கூடுமாயின், ஸ்வாமீ! அதை எங்களுக்கு உபதேசிப்பாயாக. ஸ்வாமீ! எந்த ஜ்ஞானத்தினால் நாங்கள் துக்கத்திற்கிடமான ஸம்ஸாரத்தைக் கடப்போமோ, அப்படிப்பட்ட ஜ்ஞானத்தை எங்களுக்கு அருள்வாயாக' என்றேன். இங்ஙனம் நான் எனது அபிப்ராயத்தை அறிவிக்கையில், தாமரைக் கண்ணனாகிய அந்த பகவான் 'இதைக்காட்டிலும் அறியவேண்டியது மற்றொன்றும் இல்லை' என்னும்படி சிறப்புற்றதும் தன்னுடைய உண்மையை வெளியிடுவதுமாகிய தத்வஜ்ஞானத்தை எனக்கு உபதேசித்தான். அனைவரும் ஆராதிக்கத் தகுந்த பரிசுத்தமான பாதாரவிந்தங்களையுடையவனும் வேதங்களால் ஆராதிக்கப்படுமவனும் பரிசுத்தமான கங்கா நதிக்கு உற்பத்தி ஸ்தானமாகிய ஸ்ரீபாதத்தை யுடையவனுமாகிய பகவானிடத்தினின்று ஆத்மாவின் உண்மையை அறிவிக்கின்ற பாகவத

சாஸ்த்ரத்தை உணர்ந்த நான் அவனுடைய பாதாரவிந்தங்களை நமஸ்கரித்து அந்த தேவதேவனை ப்ரதக்ஷிணஞ் செய்து அவனைப் பிரிந்தமையால் வருத்தமுற்ற மனமுடையவனாகி இவ்விடம் வந்தேன். அங்ஙனம் 'பதரிகாச்ரமத்திற்குப் போவாயாக' என்று அந்த பகவானால் மொழியப்பெற்ற நான் அவனைக் கண்டதனாலுண்டான ஸந்தோஷமும் அவனைப் பிரிந்தமையாலுண்டான மன வருத்தமும் உடையவனாகி அந்த பகவானுக்கு ப்ரியமான பதரிகாச்ரமத்திற்குப் போகின்றேன். இந்த பதரிகாச்ரமத்தில் ஸர்வஜ்ஞனும் (எல்லாம் அறிந்தவனும்) ஷாட்குண்யம் (ஜ்ஞான பல ஐச்வர்ய வீர்ய சக்தி தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்கள்) அமைந்தவனும் தேவாதி தேவனுமாகிய நாராயணனும் நரனும் உலகங்களை அனுக்ரஹிப்பவராகி அவற்றிற்கு யோகக்ஷேமங்களை விளைவிப்பதும் பிறர்க்குச் செய்ய முடியாததுமான தவத்தை நெடுங்காலம் (கல்பாவஸானம் வரையிலும்) ஆசரித்தார்கள். இத்தகையதான அந்த பதரிகாச்ரமத்திற்கு நான் போகின்றேன்' என்றார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—அறிஞனாகிய விதுரன் இங்ஙனம் உத்தவரிடத்தினின்று நண்பர்களின் விநாசத்தைக் கேட்டு, அது பொறுக்கமுடியாதிருக்கையால் மனத்தில் சோகம் உண்டாகப்பெற்று, உடனே ஆத்மஜ்ஞானத்தினால் அதை அடக்கிக்கொண்டான். கௌரவர்களில் சிறப்புற்ற அவ்விதுரன் பதரிகாச்ரமத்தைக் குறித்துப் போக முயன்றவரும் பகவானிடத்தில் பக்தியுடைய பாகவதர்களில் சிறந்தவருமாகிய அந்த உத்தவரை விச்வாஸத்துடன் ஸ்ரீக்ருஷ்ணனைப் பெறுதற்கு முக்ய உபாயமாக நிச்சயித்தார். 'ஸ்ரீக்ருஷ்ணனுடைய அனுக்ரஹம் பெற வேண்டுமானால், அதற்கு இவரே முக்யமான உபாயம்'

என்றும், 'ஸ்ரீக்ருஷ்ணனுடைய அனுக்ரஹம் பெற்றவர்களில் இவரே முக்யர்' என்றும் விஸ்வாஸத்துடன் நிச்சயித்துக்கொண்டான். இங்ஙனம் பகவானுடைய வ்ருத்தாந்தத்தைக்கேட்ட விதுரன் அவன் உபதேசித்த தத்வ ஜ்ஞானத்தை அறிய விரும்பி அவ்வுத்தவரைப் பார்த்து மேல்வருமாறு வினவினன்.

ஸ்ரீவிதுரர் சொல்லுகிறார்:—யோகத்தின் பலனைக் கொடுப்பவனான ஈஸ்வரன் தனது உண்மையை வெளியிடும்படியான எந்த ஜ்ஞானத்தை உபதேசித்தானோ, அதை நீர் எங்களுக்கு உபதேசிக்கத்தகும். ஏனென்னில், ஸ்ரீமஹா விஷ்ணுவின் பக்தர்கள் தம்மைப்பணிந்த ப்ருத்யர்களின் ப்ரயோஜனத்தை நிறைவேற்றுமவராகித் திரிந்து கொண்டிருப்பார்கள். ஆகையால் ஸ்ரீவிஷ்ணு பக்தராகிய நீர் உமது ப்ருத்யர்களான எங்களுக்கு அந்த பகவான் அருளின தத்வஜ்ஞானத்தை உபதேசிப்பது யுக்தமே' என்றான்.

உத்தவர் சொல்லுகிறார் :—ஓ விதுரனே! தத்வத்தை உணர்ந்தவரான மைத்ரேய மஹர்ஷியை நீ தத்வோபதேசத்திற்காக ஆராதிக்கவேண்டும். என்னை அடுத்து உபயோகம் இல்லை. மனுஷ்யலோகத்தை விட்டுப் போகமுயன்ற பகவான் மைத்ரேயரைப் பார்த்து நான் ஸமீபத்திலிருக்கும்பொழுது 'மைத்ரேயரே! விதுரன், தீர்த்த யாத்ரை செய்து உம்மிடம் வருவான். அவனுக்கு நீர் இந்த ஜ்ஞானத்தை உபதேசஞ் செய்வீராக' என்று நேரே ஆஜ்ஞாபித்தான்' என்றார். இவ்வாறு விதுரனுடன் விஸ்வமூர்த்தியான (ஜகத்தெல்லாம் சரீரமாகப் பெற்ற) பகவானுடைய குணங்களைச் சொல்லி யனுபவிக்கையாகிற அம்ருதத்தினால் மேலான தாபமெல்லாம் தீரப்பெற்று உத்தவர் யமுனையின் மணற்குன்றில்

வஸித்திருந்து அந்த ராத்ரியை ஒரு க்ஷணத்தைப்போல் கழித்து மற்றை நாள் காலையில் அந்த யமுனையினின்று புறப்பட்டு பதரிகாஶ்ரமத்திற்குப் போனார்.

மன்னவன் சொல்லுகிறான் :—வ்ருஷ்ணிகளும் போஜர்களும் ப்ராஹ்மண சாபத்தினால் நாசம் அடைகையில் உத்தவர் ஒருவர் மாத்ரம் எப்படி மிருந்தார? ப்ராஹ்மண சாபம் இவர்க்கும் உண்டல்லவா? அதிரதர்களின் கூட்டங்களைப் பாதுகாக்குந் திறமையுள்ள வீரர்கள் எவரெவர் உண்டோ, அத்தகையர் பலர் சேர்ந்த கூட்டங்களையும் பாதுகாக்கவல்ல மஹாவீர வீரர்களில் முக்யனும் மூன்று லோகங்களுக்கு நாதனுமாகிய ஸ்ரீக்ருஷ்ணனும் மானிட உருவம்போன்ற தன்னுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை ப்ராஹ்மணர்களின் சாபம் மெய்யாகைக்காக மறைத்துக் கொண்டான். இப்படியிருக்க வ்ருஷ்ணிகளும் போஜர்களும் பாழானார்களென்பது ஓராச்சர்யமன்று. உத்தவர் மிருந்தது மாத்ரமே ஆச்சர்யமாயிருக்கின்றது' என்றான்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார் :—என்றும் மாறாத ஸங்கல்பத்தையுடைய பகவான் ப்ராஹ்மண சாபமென்னும் வ்யாஜத்தினால் தான் ஸங்கல்பித்த காலத்தில் ஸம்ருத்தமாயிருந்த தன் வம்சத்தை யெல்லாம் ஸம்ஹாரஞ் செய்து தன் சரீரத்தை விடமுயன்று (மறைக்க முயன்று) இங்ஙனம் ஆலோசித்தான்: 'நான் இந்த மனுஷ்ய லோகத்தினின்று என்னுடைய லோகத்திற்குப் போனபின்பு எனது உண்மையை அறிவிக்கும்படியான தத்வ ஜ்ஞானத்தை உபதேசிப்பதற்கு இப்பொழுது ஆத்ம பரமாத்மாக்களை உண்மையாக உணர்ந்தவர்களில் முக்யரான உத்தவர் ஒருவரே உரியராயிருக்கின்றார். எனது உண்மையைவெளியிடுவதான தத்வ ஜ்ஞானத்தை அறிவதற்கும் பிறர்க்கு

அறிவிப்பதற்கும் உரியவர் உத்தவர் ஒருவரே. இவர் ஆத்மாவையும் பரமாத்மாவையும் உண்மையாக உணர்ந் தவர்களில் முக்யராயிருக்கின்றார். உத்தவர் என்னைக் காட்டிலும் அணுமாத்ரமாயினும் (சிறிதாயினும்) குறைந்தவரல்லர். ஏனென்னில், ஸத்வ ரஜஸ் தமஸ் ஸுக்களென்கிற குணங்களின் கார்யமான ஶப்தாதி விஷயங்களால் இவர் சிறிதும் வருந்துகிறவரல்லர்; இந்த் ரியங்களெல்லாம் ஸ்வாதீனமாகப் பெற்று ப்ரபுவாயிருக் கின்றவர். ஆகையால் என் விஷயமான ஜ்ஞானத்தை உலகத்தார்க்கு உபதேசித்துக்கொண்டு இந்த மனுஷ்ய லோகத்தில் இருக்கட்டும்' என்று சிந்தித்தான். மூன்று லோகங்களுக்கும் ப்ரபுவும் சாஸ்த்ர ப்ரமாணத்தினால் அறியத்தகுந்தவனுமாகிய பகவானால் ஆஜ்ஞை செய்யப் பெற்று உத்தவர் பதரிகாஶ்ரமத்திற்குச் சென்று ஜ்ஞான யோகத்தினால் பகவானை ஆராதித்துக் கொண்டிருந்தார். விதுரன், லீலையின் பொருட்டு அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹத்தை ஏற்றுக்கொண்ட பரமாத்மாவாகிய ஸ்ரீக்ருஷ்ணனுடைய ஶ்லாக்யமான சரித்ரங்களையும் அந்த பகவான் தன் சரீரத்தை விட்ட ப்ரகாரத்தையும் உத்தவர் சொல்லக்கேட்டான்; ஸ்ரீக்ருஷ்ணன் தன் சரீ ரத்தைத் துறந்த விதம் யோகிகளுக்கு யோகாப்யாஸத் தில் மேன்மேலும் தைர்யத்தை விளைவிப்பதாயிற்று. மற் றும், தேஹத்தையே ஆத்மாவாக நினைத்து அதைப் பற்றி வரும் ஸுக துக்கங்களால் தழுதழுத்த மனமுடைய வரும் பசுக்களைப்போல் அஜ்ஞானிகளுமான மற்றவர்க்குச் செய்யமுடியாத கார்யமுமாயிருந்தது. அந்த ஸ்ரீக்ருஷ் ணன் போகும்பொழுது தன்னை மனத்தில் நினைத்துத் தனக்கு ஜ்ஞானோபதேசம் செய்யும்படி மைத்ரேயருக்கு நியமித்ததையும் அவ்விதுரன் உத்தவர் மூலமாய்க்கேட்

டான். இங்ஙனம் அந்த வ்ருத்தாந்தங்களை யெல்லாம் கேட்ட ஸ்ரீவிதுரன், பகவத் பக்தரான உத்தவர்போன பின்பு அந்த ஸ்ரீக்ருஷ்ணனையே நினைத்துக்கொண்டு, குருஶ்ரேஷ்டனே! பகவானிடத்தில் ப்ரீதி கரை புரளப் பெற்றுத் தழதழத்து ரோதனஞ் செய்தான். பாகவத ஶ்ரேஷ்டனாகிய விதுரன், தான் ஜ்ஞானயோகம் நிறை வேறப் பெற்றவனாயிருந்தும், சிலநாள் கழித்து யமுனையினின்று புறப்பட்டு மைத்ரேய முனிவர் இருக்குமிடமான கங்கைக்கு (ஹரித்வாரத்திற்கு)ப் போனான். நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

(ஸ்ரீவிதுரரால் பகவானுடைய லீலைகளைச் சொல்லும்படி வினவப்பெற்ற மைத்ரேய முனிவர் மஹத்து முதலிய தத்வங்களின் ஸ்ருஷ்டியையும், அந்தத் தத்வங்கள் பகவானை ஸ்தோத்ரம் செய்ததையும் கூறுதல்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—கௌரவஶ்ரேஷ்டனாகிய விதுரன், கங்கையின் த்வாரத்தில் (ஹரித்வாரத்தில்) உட்கார்ந்திருப்பவரும் எல்லையில்லாத அறிவுடையவரும் (ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை நன்றாக அறிந்தவரும்) ஆன மைத்ரேயரைக் கிட்டி, தன்னைப்பற்றினவர்களைக் கைவிடாமல் பாதுகாக்குந் தன்மையனான பரமாத்மாவினிடத்தில் பக்தியால் பரிசுத்தமான மனமுடையவனும் அம்மைத்ரேய முனிவருடைய ஸௌசீல்யகுணத்தினால் மிகவும் த்ருப்தி உண்டாகப் பெற்றவனுமாகி இங்ஙனம் வினவினான்.

ஸ்ரீவிதுரர் சொல்லுகிறார்:—உலகத்திலுள்ள ஜனங்கள் ஸுகம் பெறுதற்காகப் பயிரிடுகை முதலிய லௌகிக வ்யாபாரங்களையும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட

யாக தானாதி கர்மங்களையும் செய்கின்றார்கள். அந்தக் கர்மங்களால் மேலான ஸுகத்தையாவது மற்ற துக்கத்தின்[1] நிவ்ருத்தியையாவது பெறுகிறதில்லை. ஆனால் அவர்கள் பெறும் பயன் என்? என்னில், அந்தக் கர்மங்களால் அடிக்கடி துக்கத்தையே பெறுகின்றார்கள். ஆகையால் மேலான ஸுகத்தைப் பெறுதற்கும் துக்கத்தை அடியோடு நிவ்ருத்தி செய்வதற்கும் செய்யவேண்டிய ஸாதனம் எதுவோ, அதை எல்லாமறிந்த தேவரீர் எங்களுக்குச் சொல்லவேண்டும். 'நான் இந்த்ரியங்களை யெல்லாம் அடக்கி பகவானிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி அவனையே அனுபவித்துக்கொண்டிருக்கின்றேன். இத்தகைய நான் உன் கேள்விகளுக்கு மறுமொழிகூறுவதால் எனக்கு என்ன ப்ரயோஜனம்' என்னில், சொல்லுகிறேன். ஜன்மாந்தர கர்மத்தின் வலிமையால் அதர்மத்தில் மனப்பற்றுடையதும் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் முகம்மாறப்பெற்றதும் அதனால் மிகுதியும் துக்கத்தையே அனுபவிப்பதுமாகிய ஜந்துவை அனுக்ரஹிப்பதற்காகவே மங்கள ஸ்வபாவராகிய ஸ்ரீவிஷ்ணுவின் பக்தர்கள் (உம்மைப் போன்றவர்) இம்மனுஷ்ய லோகத்தில் திரிகின்றார்கள். (காருண்யமுடைய உம்மைப்போன்ற மஹானுபாவர்கள் மனுஷ்ய லோகத்தில் ஸஞ்சரிப்பது லோகானுக்ரஹத்திற்காகவேயன்றி மற்ற எந்த ப்ரயோஜனத்தைப் பற்றியுமன்று). ஆகையால் அத்தகைய தேவரீர் எமக்கு அருள்புரிவீராக. ஸத்புருஷர்களில் சிறந்தவரே! பகவான் எந்த உபாயத்தினால் ஆராதிக்கப்பட்டு பக்தியோகத்தினால் பரிசுத்தமான புருஷர்களின் ஹ்ருதயத்தில் நிலையுற்றுத் தனது உண்மையை அறிவிப்பதும் அனாதியான வேதத்தினால் ஏற்படுவதுமாகிய ஜ்ஞானத்தைக் கொடுப்பானோ, அப்படிப்

1. நீங்குதலையாவது.

பட்டதும் ஸுகத்தை விளைவிப்பதுமாகிய உபாயத்தை எங்களுக்குச் சொல்வீராக. மூன்று லோகங்களுக்கும் ஈஶ்வரனும் தனக்குத் தானே ப்ரபுவும் (ஸ்வதந்த்ரனும்) ஆகிய பகவான் கர்மத்திற்கு உட்படாதவனுகவே அநுப்ரவேசாவதாரங்களும் ஸாக்ஷாதவதாரங்களுமாகிய பற்பல அவதாரங்களைக் கொண்டு செய்யும் கார்யங்களையும், ஸ்ருஷ்டிக்கு முன்பு வ்யாபாரம் ஏதுவும் இல்லாதவனுகவே யிருந்து தானே இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்த விதத்தையும், இதை ஸ்தாபித்து இதற்கு ரக்ஷை செய்து ஜீவனம் கற்பித்த விதத்தையும் எங்களுக்குச் சொல்வீராக. அந்த பகவான் தனக்குச் சரீரமும் ஸூக்ஷ்மமான ஆகாசாதிகளுக்குக் காரணமும் தமஸ்ஸென்று கூறப்படுவதுமாகிய ப்ரக்ருதி யென்னும் த்ரவ்யத்தில் இந்த ப்ரபஞ்சத்தை யெல்லாம் ஸம்ஹரித்து ஜகத்தின் வ்யாபாரமெல்லாம் தீரப்பெற்றுப் பரமாகாச மென்கிற வைகுண்ட லோகத்தில் வஸித்திருப்பதையும், யோகீஶ்வரர்களில் தலைமையுடையவரே! அவன் தானொருவனேயாகி, சேதன அசேதன ரூபமான இந்த ஜகத்தில் உட்புகுந்து எல்லாவற்றையும் தனது ஆட்சிக்கு உட்படுத்தி அதற்கு தாரகனுகி தேவமனுஷ்யாதியான பல நாமரூபங்களைப் பெற்றிருக்கும் ப்ரகாரத்தையும் சொல்வீராக. மற்றும், ப்ராஹ்மணர்களுக்கும் பசுக்களுக்கும் தேவதைகளுக்கும் க்ஷேமத்தைச் செய்ய விரும்பி ராமக்ருஷ்ணுதியான பலவகை அவதாரங்களால் தான் விளையாடலுறுமவனுகி துஷ்டர்களை அழிப்பது சிஷ்டர்களைப் பாதுகாப்பது முதலிய செயல்களைச் செய்யும் விதத்தையும் சொல்வீராக. பரிசுத்தமான புகழுடையவர்களுக்குச் சிரோபூஷணம்போல் முக்யனுன அந்த பகவானுடைய அம்ருதம்போன்ற திவ்யசரித்ரங்களைக் கேட்டுக்கொண்டிருப்பி

னும் எங்கள் மனத்திற்கு த்ருப்தி உண்டாகிறதில்லை. ஸகலஜகந்நாதனுகிய பகவான் மஹத்தத்வம் முதலிய பல வகையான தத்வங்களைக்கொண்டு லோகபாலர்களோடு கூடின லோகங்களையும் லோகாலோக பர்வதத்திற்கு வெளிப்பட்ட தேசங்களையும் நரகங்களையும் ஸ்ருஷ்டித்த ப்ரகாரத்தைச் சொல்வீராக. அன்றியும் எந்த லோகங்களிலுள்ள ஸமஸ்தப்ராணிகளின் கூட்டங்களும் பற்பலவான பிரிவுகளைப் பெற்றுத் தந்தமது கர்மங்களுக்குத் தகுந்த அதிகாரங்களை யுடையனவாயிருக்கின்றனவோ, அப்படிப்பட்ட லோகங்களை யெல்லாம் அவன் ஸ்ருஷ்டித்த விதத்தை எங்களுக்குச் சொல்வீராக. தனக்குத் தானே காரணமும் உலகங்களைப் படைப்பவனுமாகிய ஸ்ரீ நாராயணன் ப்ரஜைகளுக்கு (வ்யஷ்டி பூதங்களுக்கு) ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் தேவமனுஷ்யாதி ரூபங்கள் தேவமனுஷ்யாதி நாமங்கள் ஆகிய இவற்றின் பிரிவுகளை எங்ஙனம் படைத்தானே அதையும், அந்தணர் தலைவரே! மற்றும் நான் கேளாத விஷயத்தையும் எங்களுக்கு மொழிவீராக. 'நீ பலரிடத்தில் பலவாறு பலவற்றையுங் கேட்டவன். உனக்கு என்னிடத்தில் இங்ஙனம்கேட்கவேண்டுமென்னும் விருப்பம் ஏதுக்காக?' என்கிறீரோ. அப்படியன்று. ப்ராணிகளின் உற்பத்தி முதலியவற்றையெல்லாம் அறிந்த மைத்ரேய மஹர்ஷியே! வேதத்தில் அதிகாரமுடைய ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களும் அதில்லாத ஸ்த்ரீகளும் சூத்ரர்களும் ஆகிய இவர்கள் ஆசரிக்கவேண்டிய வ்ரதங்களையெல்லாம் வ்யாஸரிடத்தில் அடிக்கடி நான் கேட்டிருக்கின்றேன். பகவானுடைய கதைகளாகிற அம்ருதத்தின் ப்ரவாஹத்தை யொழிய அற்பஸுகங்களை விளைக்கும்படியான அந்த வ்ரதங்களைக் கேட்பதில் நாங்கள் திருப்தி அடைந்திலோம்.

அம்ருத ப்ரவாஹம்போன்ற பகவானுடைய கதைகளைக் கேட்பதில் மாத்ரம் எங்களுக்கு த்ருப்தி உண்டாகவில்லை. நீங்கள்செய்யும் யாகங்களில் பண்டிதர்களால்ப்ரஸ்தாவஞ் செய்யப்பெற்றவனும் பரிசுத்தமான பாதாரவிந்தங்களை யுடையவனுமாகிய பகவானுடைய சரித்ரங்களைக் கேட்பதில் எவன்தான் த்ருப்தி உண்டாகப் பெறுவான்? எவன் தன் சரித்ரங்களைக் கேட்பவனுடைய காதின் வழியாய் ஹ்ருதயத்தில் புகுந்து, மேன்மேலும் ஸம்ஸாரத்தை விளைப்பதாகிய சரீரம் பிள்ளை பெண்டிர் முதலியவற்றில் விளையும் விருப்பத்தை வேரோடறுத்துவிடுவானோ, அப்படிப்பட்ட பகவானுடைய கதைகளைக் கேட்பதில் விருப்பமுடைய புருஷன் எவன்தான் த்ருப்தி உண்டாகப் பெறுவான்? பகவானுடைய கதைகளைக் கேட்பதனால் ஸம்ஸார தாபங்கள் நீங்குமேயன்றி மற்ற வ்ரதங்களெல்லாம் ஸம்ஸார தாபங்களைப் போக்குந்திறமை யுடையவையல்ல. ஆனால் இப்படி பகவானுடைய கதைகளே ஸம்ஸார தாபங்களைப் போக்கவல்லவையாயின், வ்யாஸமுனிவர் தாம் செய்த மஹா பாரதமென்னும் இதிஹாஸத்தில் அந்த பகவத்கதைகளை ஏன் முக்யமாக வர்ணிக்கவில்லை? ஏன் பெரும்பாலும் வ்ரதங்களையே வர்ணித்தார்?'' என்னில், அப்படியில்லை. மஹாபாரதத்திற்கும் பகவானுடைய சரித்ரங்களைக்கூறுவதில்தான் முக்யமான அபிப்ராயம். உமது ஸகாவாகிய (நண்பராகிய) க்ருஷ்ணத்வைபாயன முனிவர் (வ்யாஸர்) பகவானுடைய குணங்களைச் சொல்ல விரும்பியே பாரதமென்னும் இதிஹாஸத்தை இயற்றினார். இந்த பாரதமென்னும் ப்ரபந்தத்தில் அற்ப ஸுகங்களை மொழிந்து அவற்றின் மூலமாய் பகவானுடைய கதைகளில் ப்ராணிகளின் மனம் செல்லும்படி செய்திருக்கின்றார். பகவானுடைய கதைகளில் புத்தி செல்லும் பெர

ருட்டே பாரதத்தில் அற்ப ஸூகங்களை எடுத்துக் கூறி ஞர். ஆகையால் அவர்க்கு அவ்வளவிலேயே கருத்தென்று கொள்ளலாகாது. அந்த பகவானுடைய கதையைத் தினந்தோறும் கேட்பானுயின், அது வ்ருத்தி யடைந்து கதை கேட்பதில் ஶ்ரத்தையுடைய புருஷனுக்கு மற்ற சப்தாதி விஷயங்களில் வைராக்யத்தை (ப்ரீதியில்லாமையை) விளைவிக்கும். அங்ஙனம் பகவானுடைய பாதங்களை மாருமல் த்யானஞ்செய்ய நேரப்பெற்று ஸுகித்திருக்கின்ற அந்தப் புருஷனுக்கு அந்த ஹரிகதை ஸமஸ்த துக்கங்களையும் போக்கும். பகவானுடைய கதையொன்றே தன்னிடத்தில் ஶ்ரத்தையுடைய புருஷனுக்கு ஶப்தாதி விஷயங்களில் வைராக்யத்தையும், பகவானுடைய பாதாரவிந்தங்களில் பக்தியையும், ஸம்ஸார தாபங்களின் விநாசத்தையும் விளைவிக்கும். எவர் இப்படிப்பட்ட மஹிமையுடைய ஹரிகதையில் பாபத்தினுல் மனஞ் செல்லப் பெருதிருக்கின்றுர்களோ, பேச்சு நடை நினைவு ஆகிய இவற்றை (வாக்கு தேஹம் மனம் ஆகிய இவற்றின் வ்யாபாரங்களை) வீணுக உபயோகப்படுத்துகின்ற எவருடைய வாழ்நாளை ஸூர்யன் வீணுகவே பாழ்செய்கின்றுனே, மிகுதியும் சோகிக்கத் தகுந்தவர்களும் அறிவிலா மூடர்களுமாகிய அத்தகையர்களைப்பற்றி நான் வருந்துகின்றேன். பகவானுடைய கதைகளைக் கேட்பவனுடைய மனது வாக்கு சரீரம் ஆகிய இவை மூன்றும் பயன் பெற்றவைகளே. ஆயுள் க்ஷீணமாவது இருவர்க்கும் ஸமானமேயாயினும், பகவத் கதையில் மனஞ் செல்லப்பெருத பாபிஷ்டர்களின் ஆயுள் வீணுகவே க்ஷீணித்துப்போகின்றது. பகவானுடைய கதைகளைக் கேட்டுப் பொழுதுபோக்குந் தன்மையுள்ள மஹானுபாவர்களின் வாழ்நாள் பயன் பெற்று க்ஷீணிக்கின்றது. ஆகையால் வாழ்நாளை வீணுகப்

பாழ்செய்கின்ற அம்மூடர்களைப்பற்றி மிகுதியும் சோகிக்கிறேன். பகவானுடைய கதை ஸமஸ்த துக்கங்களையும் போக்குமாகையால், மைத்ரேயமுனிவரே! ஸுகத்தைக் கொடுப்பவனும் பரிசுத்தமான புகழுடையவனுமாகிய இந்த ஸ்ரீஹரியின் கதையையே, வண்டானது புஷ்பங்களினின்று தேனை எடுப்பதுபோல், எல்லாக்கதைகளிலும் ஸாரமாக எடுத்து, ஆர்த்த பந்துவே! மூன்று வகைப்பட்ட ஸம்ஸார தாபங்களால் வருந்தினவர்களை வாழ்விக்குந் திறமையுடையவரே! எங்களுடைய க்ஷேமத்தின் பொருட்டுக் கீர்த்தனஞ்செய்வீராக. ஜகத்தைப்படைப்பது வளர்ப்பது அழிப்பது ஆகிய இந்த வ்யாபாரங்களை நடத்தும்பொருட்டு ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களென்கிற மூன்று வகைப்பட்ட உருவங்களைக் கொள்கின்ற ஈச்வரன் இவ்வுலகத்தில் அவதாரஞ்செய்து மனுஷ்யர்களால் செய்யமுடியாத எந்தெந்த திவ்ய சேஷ்டிதங்களைச் செய்தானோ, அவற்றை யெல்லாம் எனக்குச் சொல்வீராக. அவதார சரித்ரங்களில் ஸ்ரீக்ருஷ்ணவதார சரித்ரங்களையே எனக்கு முக்யமாகச் சொல்லவேண்டும்' என்றார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—ப்ராணிகளின் உற்பத்தி முதலியவற்றை உண்மையாக உணர்ந்த அந்த மைத்ரேய மாமுனிவர் இங்ஙனம் ஸ்ரீவிதுரனால் ப்ராணிகளின் மோக்ஷமார்க்கத்தைப்பற்றி வினவப் பெற்றவராகி, அவ்விதுரனை வெகுமானித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தார்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—நல்லியற்கை யுடைய விதுரனே! உலகங்களை அனுக்ரஹிக்க முயன்றவனும் பகவானையே தாரகமாகப்பெற்று அவனிடத்தில் மனஆக்கமுற்றவனுமாகிய நீ உன்னுடைய கீர்த்தியை உலகத்தில் பரவச்செய்பவனாகி நன்றாகவினவினை. நீபகவானையே

என்றும் மாறாமல் த்யானித்துக்கொண்டு அவனையே தாரகமாகப் பெற்றிருப்பவன். இத்தகையனான உனக்கு இந்தக் கேள்விகளால் எவ்வித உபயோகமும் இல்லை. ஆயினும் நீ வினவுவது உலகங்களை அனுக்ரஹிக்கைக்காகவே. இதனால் உனது புகழ் உலகமெங்கும் பரவப்போகின்றது. நீ வினவினது மிகவும் அழகாயிருக்கின்றது. வாராய் விதுரனே! வ்யாஸ மஹர்ஷியின் வீர்யத்திற்குப்பிறந்த நீ இங்ஙனம் ஸ்ரீஹரியின் கதையைப்பற்றி வினவுவது ஓராச்சர்யமன்று. மஹானுபாவரான ஸ்ரீவேத வ்யாஸ மஹர்ஷியின் வீர்யத்தினால் பிறந்த உனக்கு இது யுக்தமே. மற்றும், நீ மிகுந்த பக்தியோகத்தினால் பரமபுருஷனை உண்மையாக அறிந்தவன். நீ 'பகவானிடத்தில் பக்தியில்லாத ப்ரஜைகளை தண்டிக்குந் தன்மையுள்ள யமனே. மாண்டவ்ய முனிவரது சாபத்தினால் ஸத்யவதியின் புதல்வராகிய வ்யாஸ மஹர்ஷியின் ப்ராதாவான விசித்ர வீர்யன் தன் க்ஷேத்ரமாகப் பரிக்ரஹித்திருந்த தாஸியிடத்தில் அந்தவ்யாஸமஹர்ஷியின்வீர்யத்தினால்பிறந்தாய். மற்றும் தன்னைப்பின்றொடர்ந்த பாகவதர்களோடுகூடின ஸ்ரீக்ருஷ்ண பகவானுக்கு நீ மிகுதியும் ப்ரீதிக்கிடமாயிருப்பவன். ஏனென்னில், அந்த ஸ்ரீக்ருஷ்ணன் இந்த பூலோகத்தைத் துறந்து வைகுண்ட லோகத்திற்குப் போகும்பொழுது, நீ ஸமீபத்தில் இல்லாமற் போயினும் உன்னை நினைத்துக்கொண்டு உனக்கு ஜ்ஞானோபதேசஞ் செய்யும்படி எனக்கு ஆஜ்ஞாபித்தான். ஆகையால் பகவானுக்கு மிகுதியும் அன்பிற்கிடமான உனக்கு நீ வினவினபடியே எல்லாவற்றையுஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக. பகவானுடைய ஆச்சர்யசக்தியால் ஏற்பட்டவைகளும் உலகங்களைப் படைத்தல் வளர்த்தல் அழித்தல் மோக்ஷங் கொடுத்தல் ஆகிய இவற்றை ஸ்வரூபமாகக்

கொண்டவைகளுமாகிய பகவானுடைய லீலைகள் க்ரமமாகச் சொல்லுகின்றேன். முதலில் உலகங்களைப் படைக்கையாகிற பகவானுடைய லீலையைக் கூறுகின்றேன். இந்த உலகங்களை யெல்லாம் படைப்பதற்கு முன்பு ஜகத்காரணவஸ்துவாகிய அந்த பகவானிருந்த விதத்தை மொழிகின்றேன். நாமங்களும் ரூபங்களும் பிரித்துச்சொல்லும்படியான ஸ்திதியிலிருக்கும் சேதனாசேதன ஸ்வரூபமாகிய இந்த ப்ரபஞ்சமெல்லாம் ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவும் (உள்ளே புகுந்து தரிப்பவனும்)ஸ்வாமியும் பிரித்துச்சொல்ல முடியாத நாமரூபங்களையுடைய ஸூக்ஷ்ம சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடையவனுமாகிய பகவானாகவே இருந்தது. இப்பொழுது பிரித்துச் சொல்லும்படியான பேர்களும் உருவங்களும் அமைந்த சேதனாசேதன ஸ்வரூபமான இந்த ப்ரபஞ்சமெல்லாம் பேர்களும் உருவங்களும் பிரித்துச் சொல்லவும் அறியவும் முடியாமல் ஸூக்ஷ்ம சேதனாசேதன ஸ்வரூபமாகி பகவானிடத்தில் மறைந்திருந்தது. ஆனதுபற்றி பகவானொருவனே ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் இருந்தான். அந்த பகவானே இந்த ப்ரபஞ்சத்தை மீளவும் ஸ்ருஷ்டிக்கவேண்டுமென்னும் ஸங்கல்பம் உண்டாகப் பெற்று தேவ மனுஷ்யாதியான பலவகை நாமங்களுக்கு இணங்கின பலவகை உருவங்களையும் படைத்து, அவற்றிற்குள் புகுந்து, அவ்வுருவங்களெல்லாம் தானேயாகி அந்த தேவ மனுஷ்யாதியான நாமரூபங்களைப் பற்றின அறிவுகளுக் கெல்லாம் தானே விஷயமானான். பரமபுருஷனுக்குக் காரணதசை யென்றும் கார்யதசை யென்றும் இரண்டு நிலைமைகள் உண்டு. தனித்தனியே பிரித்துச் சொல்லும்படியான நாம ரூபங்களையுடைய சேதனாசேதனங்களைச்சரீரமாகக்கொண்டிருக்கும் நிலைமையே

கார்ய தசை யெனப்படும். நாம ரூபங்களின் பிரிவு களுக் கிடமாகாத சேதநாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருக்குந் தசை காரணதசை யெனப்படும். காரண தசையில் பரமபுருஷன் ஒருவனே யாயிருப்பான். கார்ய தசையில் அவன் பலவாறு பிரிந்திருப்பான். அவன் ஸ்ரு ஷ்டிக்கவேண்டுமென்னும் ஸங்கல்பம் உண்டாகப்பெற்று தேவ மனுஷ்யாதியான பலவகைப்பட்ட நாம ரூபங்களைப் பற்றின அறிவுகளுக்கு விஷயமாயிருப்பான. அவனே இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் ஸம்ஹாரஞ்செய்யவேண்டு மென்கிற ஸங்கல்பம் உண்டாகப்பெற்றுதேவ மனுஷ்யாதி யான பலவகைப்பட்ட நாம ரூபங்களைப்பற்றின அறிவு களுக்கு விஷயமாகாமல் தனியனாயிருப்பான். இயற்கையில் நாம ரூபங்களில்லாத ஆத்மாவுக்கு தேவமனுஷ்யாதி சரீர ஸம்பந்தத்தினால் நாம ரூப ஸம்பந்தம் உண்டாகிறாப்போ லே, ப்ரபஞ்சத்தைப் படைத்து அதில் ஒவ்வொரு வஸ்து விலும் உட்புகுந் திருக்கிறானகையால் ஈச்வரனுக்கே அந்த நாம ரூப ஸம்பந்தம் முக்யமானது. ஆத்மாக்கள் தந்தமது புண்யபாபரூப கர்மங்களுக்குத் தகுந்தபடி ஈச் வரனால் தேவ மனுஷ்யாதி நாம ரூப ஸம்பந்தம் விளைக்கப் பெறுகின்றார்கள். ஈச்வரன் தானே தனது ஸங்கல்பத்தி னால் தேவமனுஷ்யாதி நாம ரூபங்களைப் பெறுகின்றான். அப்படிப்பட்ட இந்தப் பரமபுருஷன் அப்பொழுது (ப்ரளய காலத்தில்) எல்லாமறிந்தவனும் சிறிதும் மழுக்கமில்லாத ஜ்ஞான முடையவனும் ஜீவனைப்போல் கர்மத்தினால் ஜ்ஞான ஸங்கோச விகாஸங்கள் உண்டாகப் பெறாமல் எப்பொழுதும் ஒரேவிதமான ஜ்ஞான ப்ரகாசமுடையவ னும் ஸூக்ஷ்மமாகி உறங்குவது போன்ற சேதநாசேத னங்களென்கிற தன்னுடைய சக்திகளையுடையவனுமாகித் தன்னைத் தவிர மற்றைக் கார்யவஸ்து எதையும் காணப்

பெருதிருந்தான். அவன் தன்னை இல்லாதவனுகவே (வ்ய வஹாரத்திற்குரிய நாமரூபங்களில்லாதவன் போல்) நினைத்திருந்தான். அவன் ஸூக்ஷ்மங்களையும் அறியுந்திறமையுடையவனுகையால் தனக்குச் சரீரமாகி ஸூக்ஷ்ம தசையை அடைந்த சேதனுசேதனங்களைப் பற்றின அறிவு என்றும் மாறப்பெருதவனே. ஆகையால் அவன் ப்ரளய காலத்தில் ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்தவனுயிருக்கை) முதலிய குணங்களின் பூர்த்தியுடையவனும் தேவமனுஷ்யாதி நாமரூபங்களின் பிரிவில்லாதவனுமாயிருந்தான். உள்ள வஸ்துக்க ளெல்லாவற்றையுங் காணுந் திறமையுடைய பரமாத்மாவின் சக்தியாகிய (அவனை விட்டுப் பிரியாமல் அவனேடவனுயிருக்குந் தன்மையுள்ள) மாயையென்னும் ப்ரக்ருதியானது சேதனுசேதனஸ்வரூபமாயிருக்கும். ஈஶ்வரனுடைய சக்தி சேதனமென்றும் அசேதனமென்றும் இருவகைப்பட்டிருக்கும். இவையிரண்டும் ப்ரக்ருதியென்று கூறப்படுவதுண்டு. சேதன சக்தியை ஸத்தென்றும் அசேதன ப்ரக்ருதியை அஸத்தென்றும் சொல்வார்கள். சேதனுசேதனங்களென்று இருவகைப்பட்ட இந்த ப்ரக்ருதியைக் கொண்டே பரமபுருஷன் இதோ புலப்படுகின்ற சேதனு சேதன ஸ்வரூபமான ஜகத்தையெல்லாம் படைக்கின்றுன். ஈஶ்வரன் இந்த ப்ரபஞ்சத்தில் உட்புகுந்தும் அவற்றின் தோஷங்களால் தீண்டப்பெருதவன். இப்படி நாம ரூபங்களின் பிரிவுகள் அமைந்திருக்கையே ஜகத்திற்குக் கார்யதசையாம். நாம ரூபங்களின் பிரிவுகளில்லாமல் ஈஶ்வரனிடத்தில் மறைந்து ஸூக்ஷ்மமாயிருக்குந் தன்மையே காரணதசை யெனப்படும். கார்யதசையை ஸ்தூலதசை யென்றும் காரணதசையை ஸூக்ஷ்ம தசை யென்றும் சொல்வார்கள். சேதனுசேதன ஸ்வரூபமாகிய அந்த மாயையென்னும் ப்ரக்ருதியானது விபு

வாகிய பரமபுருஷனுக்குக் சரீரமாகி ஸூக்ஷ்மதசையை அடைந்திருந்தது. ஒவ்வொரு வஸ்துவும் உண்டாவதற்கு நிமித்த காரணம் உபாதான காரணம் ஸஹகாரி காரணமென்று மூன்று காரணங்கள் உண்டு. குடம் உண்டாக வேண்டுமென்றால், அதற்கு நிமித்தகாரணம் குயவன்; உபாதானகாரணம் மண்; ஸஹகாரி காரணம் சக்கரம் தடி முதலியவை. இங்ஙனம் இந்த ப்ரபஞ்சத்தைப் படைக்கும் பொழுது இம்மூன்று காரணங்களும் எவ்வெவை யென்னில், இம்மூன்று காரணங்களும் ஈஶ்வரனொருவனே. ஸூக்ஷ்ம தசையை அடைந்த சேதனுசேதனங்களைச் சரீரமாகவுடைய ஈஶ்வரன் உபாதான காரணம். ஈஶ்வரன் நிமித்த காரணம். அவனுடைய ஸங்கல்பமே அவனுக்கு ஸஹகாரி காரணம். பரமபுருஷன் தான் எவ்வித விகாரமுமில்லாதவனுகவே, காலத்திற்குத் தகுந்த மாறுதலையுடையதும் ஏற்றக்குறைவுகளையடைந்த ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் நிறைந்ததுமாகிய மாயை யென்னும் ப்ரக்ருதியில் தனக்குச் சரீரமாகிய ஜீவனை ப்ரவேசிக்கச் செய்து அந்த ப்ரக்ருதிக்கு ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தை விளைவித்தான். பரமபுருஷன் தனது சரீரமாகிய ஜீவனைத் தன் சரீரமாகிய ப்ரக்ருதியில் ப்ரவேசிக்கச் செய்து அதற்கு ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தை விளைவிக்கையில், பிறகு அந்த ப்ரக்ருதி மஹத்துமுதலிய தத்வங்களாகப் பரிணமிக்கிறதன்றிக் கேவலமான அந்த ப்ரக்ருதிக்கு ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் கிடையாது. ஆகையால் பரமபுருஷன் ஜீவன் மூலமாய் ப்ரக்ருதிக்கு ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தை விளைவித்தான். அங்ஙனம் ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் உண்டாகப் பெற்றதும் காலத்தினுல் தூண்டப்பட்டதும் தனக்குச் சரீரமுமாகியு ஸூக்ஷ்ம ப்ரக்ருதியினின்று ஜீவனுக்கு அந்தராத்மாவும் தமஸ்ஸென்று கூறப்படுகிற ஸூக்ஷ்ம

ப்ரக்ருதியை ஸ்ருஷ்டித்துத் தூண்டுகின்றவனுமாகிய பகவான் மஹத்தத்வமாகத் தோற்றி நின்றான். (ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகவுடைய பகவானே ஸூக்ஷ்ம ப்ரக்ருதியினின்று மஹத்தத்வத்தை உண்டாக்கி அதற்குள் புகுந்து அதைச் சரீரமாகக் கொண்டு நின்றான்) காலத்திற்குட்பட்டு ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் நிறைந்து ஜீவனை உட்கொண்டு பகவானுடைய ஸங்கல்பத்திற்கு விஷயமாகிப் பரமாத்மாவை அந்தராத்மாவாகவுடையதுமாகிய அந்த மஹத்தத்வமும் இந்த ப்ரபஞ்சத்தைப் படைப்பதற்காக அஹங்காராதி தத்வங்களை ஸ்ருஷ்டிக்க விரும்பித் தன்னை ஸ்ருஷ்டிக்குரிய பரிணமமுடையதாகச் செய்தது. அங்ஙனம் விகாரத்தை அடைந்த மஹத் தத்வத்தினின்று அஹங்கார தத்வம் உண்டாயிற்று. அந்த அஹங்காரதத்வம் சரீரம் இந்த்ரியம் ஆகிய இவற்றிற்குக் காரணமாயிருக்கும். ஏனென்னில், இந்த அஹங்கார தத்வமே ஐந்து பூதங்களும் இந்த்ரியங்களும் மனதுமாகப் பரிணமிக்குந் தன்மையது (மாறுந் தன்மையது). அந்த அஹங்காரம் வைகாரிக மென்றும் தைஜஸ மென்றும் தாமஸமென்று மூன்றுவிதமாகப் பிரிந்தது. வைகாரிகம் ஸாத்விகாஹங்காரமென்றும் தைஜஸம் ராஜஸாஹங்காரமென்றும் தாமஸாஹங்காரம் பூதாதியென்றும் கூறப்படுகின்றன. அவற்றில் பரமபுருஷனால் தூண்டப்பெற்று ஸ்ருஷ்டிக்கமுயன்ற வைகாரிகமென்கிற ஸாத்விகாஹங்காரத்தினின்று மனஸ்தத்வம் உண்டாயிற்று. திக்கு முதலிய தேவதைகளால் அபிமானிக்கப்பெற்ற இந்த்ரியங்கள் எவ்வெவை உளவோ, அவையும் ஸாத்விகாஹங்காரத்தினின்று உண்டானவைகளே. இந்த்ரியங்களினின்றே சப்தம் ஸ்பர்சம் ரூபம் [illegible]ம் முதலிய விஷயங்கள் தோற்றுகின்றன. இப்படி சப்தாதி விஷயங்

களை விளைவிக்கும்படி இந்த்ரியங்களெல்லாம் வைகாரிக மென்னும் பேருடைய ஸாத்விகாஹங்காரத்தினின்று உண்டானவை யாகையால் வைகாரிகங்களெனப்படும். இவ்விந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்களென்றும் கர்மேந்த்ரியங்களென்றும் இருவகைப்பட்டிருக்கும். இவ்விருவகை இந்த்ரியங்களும் ராஜஸாஹங்காரத்தினால் உதவி செய்யப்பெற்ற ஸாத்விகாஹங்காரத்தினின்று உண்டாகின்றனவாகையால் தைஜஸங்களென்றுகூறப்படும். தைஜஸமெனப்படுகிற ராஜஸாஹங்காரம் ஸாத்விகாஹங்காரத்திற்கும் தாமஸாஹங்காரத்திற்கும் உதவிசெய்யுந் தன்மையதேயன்றி அதற்குத் தனியே ஒரு கார்யமும் கிடையாது.(ஸாத்விக தாமஸாஹங்காரங்களுக்கு உதவி செய்கையே ராஜஸாஹங்காரத்திற்குக் கார்யம்). தாமஸாஹங்காரம் ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களுக்கும் பூதஸூக்ஷ்மங்களென்கிற சப்தாதிகளுக்கும் காரணமாயிருக்கும். பூதாதியென்னும் பேருடைய அந்தத் தாமஸாஹங்காரத்தினின்று ஆத்ம ஸ்வரூபத்தைஅறிவிக்கும் ப்ரமாணமாகிய சப்தமும், அதினின்று ஆகாயமும் உண்டாயின. காலத்தினால் தூண்டப்பெற்றதும் ஸத்வாதி குணங்கள் நிறைந்ததும் ஜீவனோடு கூடியதுமாகிய அந்த ஆகாயம் பகவானுடைய ஸங்கல்ப ரூபஜ்ஞானத்திற்கு விஷயமாயிற்று. அங்ஙனம் பகவானால் ஸங்கல்பிக்கப்பெற்ற அந்த ஆகாயத்தினின்று ஸ்பர்சதன்மாத்ரம் உண்டாயிற்று. அந்த ஸ்பர்சதன்மாத்ரம் பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்றுக் காலமும் ஸத்வாதி குணங்களும் ஜீவனும் கூடப்பெற்று வாயுவை ஸ்ருஷ்டித்தது. அந்த ஸ்பர்சத்தினின்று உண்டான வாயுவும் பகவானுடைய ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிக்க முயன்று ஆகாயத்தின் குணமான சப்தத்தோடு கூடித் தானும் ப்ராணன்

ஓஜஸ்ஸு ஸஹஸ்ஸு என்கிற மூன்று ஸாமர்த்யங்களுடையதாகி ரூபதன்மாத்ரத்தை உண்டாக்கிற்று. அந்த ரூபதன்மாத்ரமும் லோகத்திற்கு ப்ரகாசங் கொடுப்பதாகிய தேஜஸ்ஸைப் படைத்தது. அந்தத்தேஜஸ்ஸு ஆகாச வாயுக்களின் குணங்களான ஶப்த ஸ்பர்சங்களோடும் தன்குணமான ரூபத்தோடுங்கூடி பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்றுக் காலம் ஸத்வாதி குணங்கள் ஜீவன் ஆகிய இவைகளும் கூடப்பெற்று ரஸத்தை குணமாக வுடைய ஜலத்தைப் படைத்தது. பகவத் ஸங்கல்பமும் காலம் ஸத்வாதி குணங்கள் ஜீவன் ஆகிய இவற்றின் சேர்த்தியும் இல்லாமல் ஒவ்வொன்றும் தன் கார்யத்தை விளைக்கவல்லதன்று. ஆகையால் இவற்றைச் சொல்லாத இடங்களிலும் சொன்னதாகவே கூட்டிக் கொள்ளவேண்டும். தேஜஸ்ஸு ரஸதன்மாத்ரத்தை உண்டாக்கி அதன் மூலமாய் ஜலத்தை உண்டாக்கிற்று. அந்த ஜலம் ரூப ஸ்பர்ஶ ஶப்தங்களோடும் தன்குணமான ரஸத்தோடுங்கூடி பகவத் ஸங்கல்பத்தினால் தூண்டப் பெற்றுக் காலம் ஸத்வாதிகுணங்கள் ஜீவன் ஆகிய இவற்றுடன் சேர்ந்து கந்தத்தை குணமாகவுடைய பூமியை உண்டாக்கிற்று. (முதலில் கந்ததன்மாத்ரத்தை உண்டாக்கி அதன் மூலமாய் பூமியை உண்டாக்கிற்று.) நல்லியற்கையுடைய விதுரனே! ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களின் இடையில் மேல்மேலுள்ள பூதமெல்லாம் தனக்குக் காரணமான முன் முன்னுள்ள பூதத்தின் குணங்கள் தொடரப்பெற்றே உண்டாகிறதாகையால் பூதங்களின் கணக்குக்குத் தகுந்தபடி அவற்றின் குணங்களின் கணக்கையும் அறிந்துகொள்ளவேண்டும். (அதாவது—முதல் பூதமாகிய ஆகாயத்திற்கு சப்தம் ஒன்றே குணம். அதினின்றுண்டான இரண்டாவது பூதமாகிய

வாயுவுக்கு சப்த ஸ்பர்சங்களாகிய இரண்டு குணங்கள் உண்டு. மூன்றும் பூதமாகிய தேஜஸ்ஸுக்கு சப்த ஸ்பர்ச ரூபங்களாகிய மூன்று குணங்கள் உண்டு. நான்காம் பூதமாகிய ஜலத்திற்கு சப்த ஸ்பர்ச ரூப ரஸங்களாகிய நான்கு குணங்கள் உண்டு. ஐந்தாம்பூதமாகிய பூமிக்கு சப்தஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களாகிய ஐந்து குணங்கள் உண்டு. இங்ஙனம் முதலுக்கு ஒரு குணமும் இரண்டாவதற்கு இரண்டு குணங்களும் மூன்றாவதுக்கு மூன்று குணங்களும் நான்காவதுக்கு நான்கு குணங்களும் ஐந்தாவதுக்கு ஐந்து குணங்களும் உண்டென்றறியவேண்டும்.) காலமும் ஸத்வாதி குணங்களும் சரீரமாகப் பெற்ற பகவானுக்குச் சரீரங்களாகிய தத்வங்களின் அபிமானி தேவதைகள் தத்வங்களெல்லாம் ஒன்றோடொன்று ஸம்பந்தமில்லாமல் தனித்தனியே யிருக்கின்றமையால் அண்டத்தைப் படைக்கையாகிற கார்யத்தை நிறைவேற்றுவதில் வல்லமையற்றுக் கைகுவித்துக்கொண்டு ப்ரபுவாகிய பரமபுருஷனை ஸ்தோத்ரஞ் செய்தன.

[1]அபிமானிதேவதைகள் சொல்லுகின்றன :—பகவானே! விளையாடுந் தன்மையனே! சரணம் அடைந்தவர்களின் ஸம்ஸாரதாபங்களைப் போக்குவதில் குடைபோன்ற உன் பாதாரவிந்தத்தை நாங்கள் நமஸ்கரிக்கின்றோம்.

---

1 மஹத்துமுதலிய தத்வங்களின் அபிமானிதேவதைகளென்று பொருள். தத்வங்களைப் படைத்தது ஜகத் ஸ்ருஷ்டிக்காகவே. அந்த ஜகத் ஸ்ருஷ்டி அண்ட ஸ்ருஷ்டி மூலமாகவே நடக்கவேண்டும். அந்த மஹத்து முதலிய தத்வங்கள் பஞ்சீகரணமென்னும் க்ரமத்தில் ஒன்றோடொன்று கலக்காமல் அவ்வண்டத்தைப் படைக்க வல்லமையற்றிருந்தன. ஆகையால் அந்தத் தத்வாபிமானி தேவதைகள் தாம் செய்யவேண்டிய கார்யமாகிய அண்ட ஸ்ருஷ்டிக்கு உரிய திறமையைப் பெறவிரும்பி ஈஸ்வரனைத் துதிக்கின்றனவென்று கருத்து.

உன் பாதாரவிந்தங்களின் அடியைப் பற்றின யோகிகள் மனத்தை அடக்குவதில் முயன்று ஸுகமாகவே ஸம்ஸார துக்கத்தை வெகுதூரத்தில் உதறுகின்றார்கள். ஈசனே! இந்த ஸம்ஸாரத்தில் உனது பாதாரவிந்தங்களைப் பணிய நேரப்பெறாத ஜீவர்கள் ஸம்ஸாரத்தில் விளையக்கூடிய மூன்று வகைப்பட்ட தாபங்களால் அடியுண்டு வருந்தித் தாங்கள் ஸுகம் பெறுகிறதில்லை. இப்படி உன் பாதாரவிந்தங்களைப் பணிந்தவர்கள் ஸுகம் பெறுகையாலும் பணியாதவர்கள் ஸுகம் பெறாமல் வருந்துகையாலும், பகவானே! நாங்கள் உனது பாதாரவிந்தங்களின் நிழலைப் பணிந்து மோக்ஷம் பெறுவோமாக. தன்னைப் பற்றினாருடைய பாபங்களைப் போக்குந்தன்மை அமைந்து பரிசுத்தமான பாதங்களையுடைய உனது பாதாரவிந்தங்களை நாங்கள் சரணம் அடைந்தோம். பாபங்களைப் போக்குந்திறமையுள்ள ஜலங்களையுடையதும் நதிகளில் சிறந்ததுமாகிய கங்காநதிக்கு உற்பத்தி ஸ்தானமாயிருப்பதும், தாமரை மலர்போன்ற உனது முகத்தையே கூடாகக்கொண்ட வேதங்களாகிற பக்ஷிகளின் ஸஞ்சாரத்தினால் பரிசுத்தமான தமது மனத்தில் மஹர்ஷிகளால் த்யானஞ்செய்வதற்காகத் தேடப்பெற்றதுமாகிய உனது பாதாரவிந்தங்களை நாங்கள் பணிந்தோம். எங்களை அனுக்ரஹிப்பாயாக. (இறகுகள் முளைக்கப்பெற்ற பறவைகள் கூடுகளினின்று பறந்து சென்று இங்குமங்கும் திரிந்து மீளவும் கூடுகளில் வந்து சேருவதுபோல், வேதங்களும் உன் முகத்தினின்று உண்டாகி ப்ரஹ்ம ருத்ர இந்த்ராதியான மற்ற தேவதைகளையும் பற்பல கர்மங்களையும் பலவாறு கூறுகின்றனவேயாயினும் உன்னிடத்திலேயே வந்து முடிகின்றன. அத்தகைய வேதங்களை ஓதி உணர்ந்த மஹர்ஷிகள் பரிசுத்தமான தமது மனத்தில் த்யானஞ்செய்ய உன் பாதாரவிந்

தங்களைத் தேடுகின்றார்கள். உன் பாதாரவிந்தத்தினின்று உண்டான கங்காநதி தன் ஜலத்தில் ஸ்நானஞ்செய்பவர்களின் பாபத்தையெல்லாம் போக்குகின்றது. அப்படிப்பட்ட உன் பாதாரவிந்தங்களின் மஹிமையைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? நதிகளில் சிறந்ததும் பரிசுத்தமுமாகிய கங்காநதிக்கு உற்பத்தி ஸ்தானமாயிருப்பதும் வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மயோகம் ஜ்ஞானயோகம் முதலிய வழிகளில் இழிந்து தூயமனத்தரான மஹர்ஷிகளால் சிந்திக்கப்பெற்றதுமாகிய உனது பாதாரவிந்தங்களை நாங்கள்பணிந்தோம்.எங்களை அநுக்ரஹிப்பாயாக). ஶ்ரத்தையோடு கூடினதும் வேதங்களில் விதிக்கப்பட்ட பஞ்சமஹா யஜ்ஞாதி கர்மயோகம் அமைந்தது மாகிய பக்தியோகத்தினாலும் சப்தாதி விஷயங்களில் மனப்பற்றில்லாமையாகிற வைராக்ய பலத்தோடுகூடின ஜ்ஞானத்தினாலும் (ப்ரக்ருதியைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டதென்கிற ஜ்ஞானத்தினாலும்)மனம் தெளியப்பெற்று இதுவே நமக்கு இஷ்டஸாதன மென்று நிச்சயித்து, இந்த்ரியங்களை வென்ற பண்டிதர்கள் எதைச் சிந்திக்கின்றார்களோ, அப்படிப்பட்ட உன் பாதாரவிந்தங்களின் பீடத்தைப் பணிகின்றோம். ஸகல ஜகந்நாதனே! உனது பாதாரவிந்தங்கள் தம்மைப் பணியும் பக்தர்களுக்கு சப்தாதி விஷயங்களால் தடைபடாததும் ஸம்ஸாரத்தை வேரோடழிப்பதுமாகிய த்யானத்தை விளைவிக்கின்றன. அப்படிப்பட்ட உன் பாதாரவிந்தங்களை நாங்கள் எல்லோரும் சரணம் அடைகின்றோம். உலகங்களைப் படைப்பதற்காகவும் அவற்றை வளர்ப்பதற்காகவும் ஸம்ஹரிப்பதற்காகவும் ப்ரஹ்ம ருத்ராதிகளில் அநுப்ரவேசிக்கையாகிற அவதாரத்தை நடத்துகின்றனை. அப்படிப்பட்ட உன் பாதாரவிந்தங்களைப் பணிகின்றோம். ஸம்ஸார தாபம்

களால் விளையும் வருத்தங்களைப் போக்கவல்ல மஹாநந்தத்தைக் கொடுக்கும்படியான த்யானத்தை நிறைவேற்றிக்கொடுக்கையே பக்தர்களுக்குச் செய்யும் அனுக்ரஹம். இப்படிப்பட்ட அனுக்ரஹத்தை உனது பாதாரவிந்தங்கள் செய்கின்றன வாகையால் அவையே எங்களுக்குச் சரணம். ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களால் விளையாடுந்தன்மையனே! புத்ர மித்ர களத்ராதிகளால் தொடரப்பெற்ற தேஹத்திலும் பாத்ரம் வஸ்த்ரம் முதலியவை தொடரப்பெற்ற க்ருஹத்திலும் 'நான், என்னுடையது' என்கிற துரபிமானம் வேரூன்றப்பெற்ற புருஷர்களின் ஹ்ருதயத்தில் (ஹ்ருதயமாகிற குஹையில்) வாத்ஸல்யத்தினால் நீ நித்யவாஸஞ் செய்யினும், அவர்களுக்கு உன் பாதாரவிந்தங்கள் வெகுதூரமாயிருக்கின்றன. ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனே! பரமபுருஷா! அத்தகைய உன் பாதாரவிந்தங்களை நாங்கள் சரணம் அடைகின்றோம். தம்மிடத்தில் பக்தியில்லாமல் அஹங்கார மமகாரங்களால் மதிமயக்கமுற்ற மூடர்களுக்கு உன் பாதாரவிந்தங்கள் ஸமீபத்திலிருப்பினுபம் புலப்படுகின்றதில்லை. உலகத்தில் மேன்மையுற்ற ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் நியாமகனே! மிகுதியும் பாடத் தகுந்த பெரும் புகழுடையவனே! உன்னுடைய பாதாரவிந்தங்களில் ஆத்மஸமர்ப்பணஞ்செய்து அதனால் சம தமாதி குணங்களின் ஸம்ருத்தி வளரப்பெற்ற மஹானுபாவர்கள், ப்ரக்ருதியின் வேற்றுருவங்களாகிய சப்தாதி விஷயங்களில் பாய்கின்ற இந்த்ரியங்களால் வெகுதூரம் இழுக்கப்பட்ட அந்தரிந்த்ரியமான மனஸ்ஸை யுடையவராகி எவர்கள் தடுமாற்றமுறுகின்றார்களோ, அத்தகையரான துர்ப்பாக்யர்களைக் கண்கொண்டு காணவும் மாட்டார்கள். அதற்குக் காரணமென்னென்னில், சொல்லவேண்டுமோ? அவர்கள் 'சப்தாதி விஷ

யங்களில் மனம் பாயப்பெற்று மூடராயிருக்கையே. அவர்கள் நல்லமார்க்கத்தினின்று நழுவினவராகையால் அவர்களை உன் பக்தர்கள் கண்ணாலும் காணப் பொறுக்க மாட்டார்கள். அவர்களோடு ஸஹவாஸஞ் செய்யமாட்டார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? தேவர்க்குந் தேவனே! உனது கதையாகிற அம்ருதத்தைப் பானஞ் செய்கையால் வளர்ந்த ப்ரீதியின்மஹிமையால் தூயமனத்தராகி விவேகம் முதலிய கருவிகளெல்லாம் அமையப்பெற்று ப்ரீதியுடன் இடைவெளியின்றி உன்னையே நினைக்கும் ஜ்ஞானமாகிற பக்தியோகத்தைப்பெற்றுக் காலத்தினாலும் ஸத்வாதி குணங்களாலும் எவ்விதத்திலும் தடைபடாத வைகுண்டலோகத்தை அநாயாஸமாகவே அடைகின்றார்கள். மற்றும், சிலர் சப்தாதி விஷயங்களில் மனஞ் செல்லவொட்டாமல் அடக்கி அதை உன்னிடத்தில் நிலைநிறுத்தி உன்னை த்யானிக்கையாகிற உபாயத்தின்மஹிமையால் எவ்விதத்திலும் தாண்டமுடியாத ப்ரக்ருதியைத் தாண்டி இந்த்ரியங்களை அடக்கிக்கொண்டு தீரர்களாகிப் பரமபுருஷனாகிற உன்னைப் பெறுகின்றார்கள். ஆயினும் அவர்களுக்கு வருத்தமே. அஷ்டாங்கயோக மார்க்கத்தினால் பக்தியோகத்தில் இழிகிறவர்க்கு யம நியமாதி அங்கங்களில் ஒவ்வொன்றும் ஸாதிக்க அரிதாகையால் ஒன்று தவறிப்போயினும் அவர்கள் ஸித்தி அடையமாட்டார்கள். கஷ்டப்பட்டு பக்தியோகத்தை ஸாதிக்கினும் அவர்களுக்கு வருத்தம் அதிகமே. உன் கதையைக்கேட்டு உன்னிடத்தில் பக்தி உண்டாகப்பெற்றவர்க்கு இந்த வருத்தங்கள் எவையுமே இல்லை. இவர்களுக்கு அஷ்டாங்கயோகத்தை ஸாதிக்கவேண்டிய ப்ரயாஸமில்லை. உன் கதையாகிற அம்ருதத்தைப் பானஞ்செய்து உன்னிடத்தில் பக்தி உண்டாகப்பெற்றவர்களுக்கு விவேகாதிகள் தானே

விளைகின்றன. தாமே யத்னஞ்செய்து அஷ்டாங்க யோகத்தினால் பக்தி யோகத்தை ஸாதித்து உன்னைப்பெற விரும்புமவர்க்கு வருத்தம் அதிகமென்பது மாத்ரமேயன்றி, அந்த பக்தியோகம் உனக்கு அதீனமாயிருக்கையே வடிவாகப்பெற்ற ஆத்மஸ்வரூபத்திற்குப் பொருந்தியதுமன்று. உன்னையே உபாயமாகப்பற்றி உன்கதைகளைக் கேட்டுப் பொழுதுபோக்கும் மஹானுபாவர்களுக்கு பக்தி யோகம் தானே விளைகின்றது. இவர்க்கு ஸ்வரூப விரோதமும் இல்லை. ஆகையால் அஷ்டாங்க யோகத்தினால் பக்தியோகத்தை ஸாதித்து அதனால் உன்னைப் பெறுகிறவர், உன்னையே உபாயமாகப்பற்றி உன் கதைகளைக்கேட்கையே பொழுது போக்காயிருக்கும் மஹானுபாவர்க்கு ஈடாகமாட்டார்கள். நாங்கள் உன்னைச் சரணம் அடைந்தோம். நாங்கள் உனது அனுக்ரஹம் பெறுதற்கு எவ்விதமான உபாயமும் செய்யப்பெற்றிலோம். உனது திருவடிகளையே சரணமாகப் பற்றினோம். நீ எங்களை அனுக்ரஹிப்பாயாக. ஜகத்காரண வஸ்துவே! நாங்கள் இங்ஙனம் சரணம்அடைந்தமையால்எங்கள்விருப்பத்தை நிறைவேற்றவேண்டும். நாங்கள் உன்னைச் சேர்ந்தவர்கள். நீ உலகங்களைப் படைக்கவேண்டு மென்னும் விருப்பத்தினால் ஸத்வாதி குணங்களைக்கொண்டு உன்னிடத்தில் எங்களை மஹத்தத்வம் அஹங்கார தத்வம் என்கிற க்ரமத்தில் ஸ்ருஷ்டித்தனை. நாங்கள் ஒன்றோடொன்று சேரப் பெறாமல் தனித்தனியே இருக்கின்றோம். ஆகையால் நாங்கள் எங்களுடைய அதிகாரத்தை நிர்வஹித்து உனது லீலையின் கருவியாகிய ப்ரஹ்மாண்டத்தை உண்டாக்குகையாகிற ப்ரத்யுபகாரத்தைச் செய்ய வல்லமையற்றிருக்கின்றோம். அஜனே! (கர்மத்தினால் விளையும் உற்பத்தியில்லாதவனே!) உனது லீலோபகரணங்களாகிய

(உனது விளையாட்டிற்குக் கருவிகளாகிய) நாங்கள் உனது ஆராதனத்தை நிறைவேற்றவும், சப்தாதி போக்ய வஸ்துக்களை அனுபவிக்கவும், மேல் ஸ்ருஷ்டிக்கப்படப் போகிற தேவாதி லோகங்கள் தந்தமது ஜ்ஞானேந்த்ரியங்களுக்கும் கர்மேந்த்ரியங்களுக்கும் வேண்டிய சப்தாதி விஷயங்களையும் கந்தவ்யாதி விஷயங்களையும் (போகத்தகுந்த தேசம் முதலிய விஷயங்களையும்) கொடுத்து நிஸ்ஸம்ஸயமாக ஸுகத்தை அனுபவிக்கும்படி செய்யவும் நாங்கள் வல்லமையற்றிருக்கின்றோம். தேவதைகளாகிய எங்களுக்கும், எங்களால் விளையக்கூடிய கார்யங்களுக்கும் நீ காரணமாயிருப்பவன்; விகாரமற்றவன்; அனைத்திற்கும் அந்தராத்மாவாயிருப்பவன்; எல்லாவற்றிற்கும் முற்பட்டவன். உனக்கு முற்பட்டது ஒன்றுமே இல்லை. நீ உற்பத்தியில்லாதவன். ப்ரபூ! ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களால் விளையாடுந்தன்மையனே! இப்படிப்பட்ட நீ, ஜ்ஞானேந்த்ரியங்களுக்கும் கர்மேந்த்ரியங்களுக்கும் காரணமாயிருப்பதும் உனது சக்தியுமாகிய ப்ரக்ருதியினிடத்தில் ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தையும் ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மாவையும் உண்டாக்கினாய். ஆகையால் (நீயே ஆதிகாரணமாகையால்) உனக்குச் சரீரமாகிய ஸமஷ்டி புருஷன் முதலிய எங்களை எதற்காக உண்டாக்கினையோ, அந்தக் கார்யம் யாது? உனக்கு நாங்கள் செய்யவேண்டிய கார்யம் யாது? 'உலகங்களைப் படைக்கையே கார்யம்' என்கிறாயோ? ஆனால், ப்ரபூ! எங்களை அனுக்ரஹித்து ஸ்ருஷ்டிக்கிறதற்கு வேண்டிய ஸாமர்த்யத்தையும் அதிகாரத்திற்குத் தகுந்த அறிவையும் எங்களுக்குக் கொடுப்பாயாக. ஐந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

அண்ட ஸ்ருஷ்டியும், ப்ரஹ்மோத்பத்தியும், அவனிடத்தினின்று தேவாதிகளின் இந்த்ரியோத்பத்தியும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஈஶ்வரன், இங்ஙனம் ஒன்றோடொன்று சேராமல் தனித்தனியேயிருப்பவைகளும் உலகங்களைப் படைக்கும் ஸாமர்த்யம் உண்டாகப் பெறாதவைகளுமாகிய மஹத்து முதலிய தத்வங்களின் ஸ்திதியைக் கண்டு, த்ரிவிக்ரமனுகிய அந்த பகவான், உடனே காலமென்னும் பேருடைய தன் சக்தியில் ப்ரவேசித்து மஹத்து அஹங்காரம் பஞ்ச பூதங்கள் பஞ்ச தன்மாத்ரங்கள் பதினொரு இந்த்ரியங்கள் ஆகிய இருபத்து மூன்று தத்வங்களின் ஸமூஹத்தில் ஒரே தடவையில் ப்ரவேசித்தான். அந்த பகவான் தூண்டுகையாகிற சேஷ்டை யுடையவனுகிக் கார்யத்திற்கு உபயோகப்படாமல் உறங்குகின்ற அவற்றின் சக்தியை எழுப்பிக் கார்யத்திற்கு உபயோகப்படுத்த முயன்று, ஒன்றோடொன்று சேராமல் தனித்தனியே யிருக்கின்ற அவ்விருபத்து மூன்று தத்வங்களின் கூட்டத்தை ஒன்றோடொன்று கலக்கச் செய்தான். பகவானுடைய ஸங்கல்பத்தினுல் உலகங்களைப் படைக்குந்திறமை உண்டாகப் பெற்ற அவ்விருபத்து மூன்று தத்வங்களின் கூட்டமானது பகவானுல் தூண்டப் பெற்றுத் தமது அம்சங்களால் ஸமஷ்டி புருஷனை உள்ளே உடையதாகிய ப்ரஹ்மாண்டத்தை உண்டாக்கிற்று. எப்படி உண்டாக்கிற்றென்னில், அதன் விவரத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஸங்கல்பத்தினுல் தம்மில் அனுப்ரவேசிக்கின்ற (நுழைகின்ற) பகவானோடு கூடினவைகளும் உலகங்களைப் படைப்பவைகளும் ஜங்கம ஸ்தாவரரூபமான ஜகத்தெல்லாம் தம்மில் அடங்கப் பெற்றவையுமாகிய அந்தத் தத்வங்களின் கூட்டம் ஒன்

ருடொன்று சேரப் பெற்று ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மாவை உட்கொண்ட ப்ரஹ்மாண்டமாகப் பரிணமித்தது. (மாறிற்று). ஸ்வர்ணத்தினால் இயற்றப்பட்டதுபோல் அழகியதும் ஸமஷ்டி புருஷனோடு கூடியதுமாகிய அந்த ப்ரஹ்மாண்டம் தேவ மனுஷ்யாதியான ஸமஸ்த ப்ராணிகளோடுங்கூடி அனேக மாயிர மாண்டுகள் ஜலத்தில் இருந்தது. ஸ்வர்ணமயமான அவ்வண்டத்தினால் மூடப்பெற்றிருக்கையால் ஸ்வர்ணமயன்போன்ற ஸமஷ்டி புருஷனாகிய அந்த நான்முகன் தேவமனுஷ்யாதி ஸகல ப்ராணிகளொடுங் கூடி அவ்வண்டம் பரிபாக தசையை அடையும் வரையில் அனேக வர்ஷங்கள் ஜலத்தில் மிதக்கின்ற ப்ரஹ்மாண்டத்தில், வஸித்திருந்தான். உலகங்களைப் படைப்பவையான மஹத்து முதலிய தத்வங்களின் மகனும் பகவானுடைய ஸங்கல்பம் ஜீவாத்மாக்களின் கர்மம் ஜீவாத்மாக்கள் ஜீவராசிகளின் சரீரங்களை விளைக்கும்படியான ப்ரக்ருதி ஆகிய இவற்றையுடையவனுமாகிய அந்தஸமஷ்டி புருஷன் தானே தன்னைக் காரணமென்றும் போக்தாவென்றும் விஷயங்களென்றும் மூன்று விதமாகப் பிரித்து அவற்றில் கரணத்தை ஒன்றும் பத்துமாக (பதினொன்ருகப்) பிரித்தான். தன் சரீரத்தில் ஸம்பந்தித்திருக்கிற ஜீவஸமூஹத்தை போக்தாவாகவும் தன்னுடைய இந்த்ரியங்களின் சில பாகங்களை அதற்கு போக்யமான கரணமாகவும் செய்தான். இந்த ப்ரஹ்மா ஸமஸ்தமான வ்யஷ்டி பதார்த்தங்களுக்கும் (தனித்தனியே ஸ்ருஷ்டிக்கப்போகிற தேவமனுஷ்யாதி பதார்த்தங்களுக்கெல்லாம்) ஆதாரமும், பரமாத்மாவுக்குச் சரீரமுமாயிருப்பவன். பரமாத்மாவுக்குச் சரீரமாயிருக்கும் தன்மை ஸமஸ்த பதார்த்தங்களுக்கும் ஸமமேயாயினும், இந்த ப்ரஹ்மதேவன் அதில் முதன்மையுடையவன். இவனிடத்தில் பரமபுருஷன்

அனுப்ரவேசித்து ஸ்ருஷ்டியைச் செய்கின்றானாகையால் இவன் பரமபுருஷனுடைய அனுப்ரவேசாவதாரம். பரமாத்மாவின் அவதாரமாகிய இந்த ஸமஷ்டி புருஷனிடத்தினின்று தேவ மனுஷ்யாதியான பதார்த்தங்களெல்லாம் உண்டாகின்றன. ஆகையால் பரமாத்மாவின் அனுப்ரவேசாவதாரமாகையால், இவன் தன்னைத் தானே போக்தாவாகவும் காரணமாகவும் விஷயங்களாகவும் பிரிக்கவல்லனானான். தேவ மனுஷ்யாதி ரூபமாய்த் தனித்தனியே படைக்கப் போகிற பற்பல வகைப்பட்ட ஜீவஸ்வரூபனாய்ப் பலவாறாக விளங்குகின்ற அந்த ப்ரஹ்மதேவன் ஸமஸ்டிரூபமாய்த் தன் சரீரத்தில் அடங்கியிருக்கின்ற ஜீவராசிகளையுடையவனும் பூதங்களில் அடங்கியிருக்கின்ற சப்தாதி விஷயங்கள் இந்த்ரிய ஸமஷ்டி ஆகிய இவற்றோடு கூடினவனுமாயிருந்தான். (போக்தாக்களான ஜீவாத்மாக்களும் போக்யங்களான சப்தாதி விஷயங்களும் போக ஸாதனமான இந்த்ரியங்களும் தன் சரீரத்தில் அடங்கப் பெற்றிருந்தான்): அவற்றில் இந்த்ரியங்கள் செவி வாய் கண் மூக்கு உடல் என்றும், வாக் பாணி பாத பாயு உபஸ்தங்களென்றும் மனதென்றும் பதினொரு விதமாயிருந்தன. நியாமகனான பகவான், ஜகத் ஸ்ருஷ்டியின் பொருட்டுத் தான் படைத்த மஹத்து முதலிய தத்வங்கள், 'ஸ்வாமி! நாங்கள் உனக்கு ஆராதனஞ் செய்யும்படி எங்களுக்கு அருள்புரிய வேண்டும்' என்று விண்ணப்பம் செய்ததை நினைத்து, இந்த இந்த்ரியம் முதலியவற்றின் அபிவ்ருத்திக்காக (வ்யஷ்டிரூபமாய் விஸ்தாரம் அடைவதற்காக)த் தன்னுடைய தேஜஸ்ஸினால் ப்ரஹ்மதேவனுக்கு வ்யஷ்டி ஸ்ருஷ்டியில் ஸாமர்த்யம் உண்டாகும்படி ஸங்கல்பித்தான். (தனித்தனியே சரீரங்களைக் கொடுத்து தேவமனுஷ்யாதி ரூபமாய் ஸ்ருஷ்டிக்கப்போ

கிற ஜீவராசிகளின் இந்த்ரியங்களைத் தன்சரீரத்தினின்று தனியே பிரித்து ஸ்ருஷ்டிக்கும்படியான ஸாமர்த்யத்தை அந்த ப்ரஹ்மதேவனுக்கு ஈச்வரன்ஸங்கல்பித்தான்). பின்பு பரமபுருஷனால் ஸங்கல்பிக்கப்பெற்ற அந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று தேவமனுஷ்யாதி சரீரங்களைச் சேர்ந்த இந்த்ரியங்களின் ஸ்தானங்கள் பற்பலவும் உண்டாயின. அவற்றைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்ற பகவத்ஸ்வரூபனாகிய ப்ரஹ்மதேவனிடத்தினின்று தேவமனுஷ்யாதியான ப்ராணிஸமூஹத்தின் முகமென்கிற ஸ்தானம் உண்டாயிற்று. அந்த ஸ்தானத்தில் தனது அம்சமாகிய வாக்கென்கிற இந்த்ரியத்துடன் லோகபாலனாகிய அக்னி ப்ரவேசித்தான். தேவ மனுஷ்யாதி ப்ராணிகள் எந்த வாகிந்த்ரியத்தினால் சொல்லவேண்டியசப்தத்தை உச்சரிக்கின்றார்களோ, அத்தகைய வாகிந்த்ரியத்துடன் அக்னி அந்த முகத்தில் ப்ரவேசித்தான். ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மதேவனிடத்தினின்று உண்டான அக்னியானவன் அவனிடத்தினின்றே வெளிப்பட்ட தேவமனுஷ்யாதி ஜீவராசியின் முகத்தில் அவனிடத்தினின்று உண்டான வாகிந்த்ரியத்துடன் ப்ரவேசித்தான். ஒவ்வொரு இந்த்ரியத்திற்கும் ஸ்தானம் அதிஷ்டான தேவதை கார்யம் ஆகிய இம்மூன்றும் உண்டு. வாகிந்த்ரியத்திற்கு அதிஷ்டான தேவதை அக்னி. முகம் ஸ்தானம். அதன் கார்யம் சப்தங்களை உச்சரிக்கை. ஸமஷ்டி புருஷனிடத்தினின்று முதலில் வாகிந்த்ரியத்திற்கு அதிஷ்டான தேவதையான அக்னியும், பிறகு தேவமனுஷ்யாதி சரீரங்களுக்குரிய ஜீவாத்மாக்களும், பிறகு முகமென்கிற ஸ்தானமும், பிறகு வாகிந்த்ரியமும் உண்டாயின. ஜீவாத்மாக்கள் உண்டாகையாவது—தேவ மனுஷ்யாதியான சரீரங்களைப்

பெற்று வெளிப்படுகையே. பிறகு ப்ரஹ்மாவினிடத்தி னின்று லோகபாலனாகிய வருணனும் தாலுவென்கிற ஸ்தானமும் ஜிஹ்வேந்த்ரியமும் உண்டாயின. அந்த வருணன் தனது அம்சமாகிய ஜிஹ்வேந்த்ரியத்துடன் அந்தத் தாலு ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். தேவ மனுஷ்யாதி ஜீவராசிகளனைத்தும் இந்த ஜிஹ்வேந்த்ரியத்தினால் புளிப்பு தித்திப்பு முதலிய ரஸங்களை அறிகின்றன. இதற்கு ரஸனேந்த்ரியமென்றும் பேர் உண்டு. பரமபுருஷ ஸ்வரூபனாகிய அந்த ஸமஷ்டி புருஷனிடத்தினின்று அஸ்வி தேவதைகளும் நாஸிகையென்னும் ஸ்தானமும் க்ராணமென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அந்த அஸ்வி தேவதைகள் தமது அம்சமாகிய க்ராணேந்த்ரியத்துடன் நாஸிகையென்னும் ஸ்தானத்தில் ப்ரவேசித்தார்கள். இந்த க்ராணேந்த்ரியத்தினால் ப்ராணிகள் நல்ல மணம் தீய மணமென்று இருவகைப்பட்ட கந்தத்தை அறிகின்றன. ஸ்ருஷ்டி ஸாமர்த்யமுடைய அந்த ப்ரஹ்மாவிடத்தினின்று லோகபாலனாகிய ஸூர்யனும் கண்களென்கிற ஸ்தானங்களும் சக்ஷுஸ்ஸென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அந்த ஸூர்யன் தனது அம்சமாகிய சக்ஷுரிந்த்ரியத்துடன் கண்களென்கிற ஸ்தானங்களில் ப்ரவேசித்தான். இந்தச் சக்ஷுரிந்த்ரியத்தினால் ப்ராணிகள் கறுப்பு வெளுப்பு முதலிய நிறங்களை அறிகின்றார்கள். பிறகு இந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று லோகபாலனாகிய வாயுவும் சர்மங்களென்கிற ஸ்தானமும் த்வக்கென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அந்த வாயுதேவன் ப்ராணன்போல் தேஹம் முழுவதும் வ்யாபித்திருப்பதும் தனது அம்சமுமாகிய த்வகிந்த்ரியத்துடன் சர்மமென்னும் ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். இந்த த்வகிந்த்ரியத்தினால் தேவ மனுஷ்யாதிஜீவராசிகள் ம்ருது கடினம் சீதம் உஷ்ணம் முதலிய

ஸ்பர்சங்களை அறிகின்றன. பிறகு இந்த ப்ரஹ்மாவினிடத்தினின்று திசைகளென்கிற தேவதைகளும் கர்ணங்களென்கிற ஸ்தானங்களும் ஸ்ரோத்ரமென்கிறஇந்த்ரியமும் உண்டாயின. இந்த திக்குக்களென்னும் தேவதைகள் தமது அம்சமாகிய ஸ்ரோத்ரேந்த்ரியத்துடன் அந்தக் கர்ணங்களென்கிற ஸ்தானங்களில் ப்ரவேசித்தன. இந்த ஸ்ரோத்ரேந்த்ரியத்தினால் ஜீவராசிகள் சப்தத்தை அறிகின்றன. பிறகு இந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று ஓஷதிகளின் அபிமானி தேவதைகளும் த்வக்கென்கிற ஸ்தானமும் ரோமங்களென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அந்த ஓஷதிதேவதைகள் தமது அம்சமாகிய ரோமங்களென்கிற இந்த்ரியங்களுடன் த்வக்கென்கிற ஸ்தானத்தில் ப்ரவேசித்தன. இந்த ரோமேந்த்ரியத்தினால் ப்ராணிகள் தினவை அறிகின்றன. முன் சொன்ன த்வகிந்த்ரியமே ஸ்தானபேதத்தினால் இரண்டுவகைப்பட்டிருக்கும். ஸ்தானங்கள் உள் சர்மமென்றும் வெளிச்சர்மமென்றும் இருவகைப்பட்டிருக்கும். அவற்றில் ஒன்று ஸூக்ஷ்மமாயிருக்கும். மற்றொன்று கனமாயிருக்கும். ஓரிந்த்ரியம் தினவையும் மற்றொன்று ஸ்பர்சத்தையும் தெரிவிக்கின்றன. இப்படி ஸ்தானபேதத்தினாலும் விஷயபேதத்தினாலும் த்வகிந்த்ரியம் ஒன்றே இருவகைப்பட்டிருக்கும். இதைப்பற்றியே ஒன்று த்வகிந்த்ரியமென்றும் மற்றொன்றுக்கு ரோமேந்த்ரியமென்றும் நாமபேதமும், ஒன்றுக்கு வாயுவென்றும் மற்றொன்றுக்கு ஓஷதிகளென்றும் தேவதாபேதமும் உண்டாயின. பிறகு அந்த ப்ரஹ்மாவிடத்தினின்று மேட்ரம் (ஆண் பெண் குறி) ஆகிற ஸ்தானமும் ரேதஸ்ஸென்கிற இந்த்ரியமும் உண்டாயின. தனது அம்சமாகிய அந்த ரேதஸ்ஸென்கிற இந்த்ரியத்தோடுகூடித் தன் ஸ்தானமாகிய மேட்ரத்தில் (ஆண்

பெண் குறிகளில்) ப்ரஹ்மதேவன் தானே ப்ரவேசித்தான். இந்த ரேதஸ்ஸென்னும் இந்த்ரியத்தினால் ப்ராணிகள் ஸம்போக ஸுகத்தை அறிகின்றன. இந்த இந்த்ரியத்திற்கு உபஸ்தேந்த்ரியமென்றும் பேர் உண்டு. இந்த ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மதேவனிடத்தினின்று லோக பாலனாகிய மித்ரனென்னும் தேவதையும் குதமென்னும் ஸ்தானமும் பாயுவென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அம்மித்ரன் தனது அம்சமாகிய அந்தப் பாயுவென்கிற இந்த்ரியத்துடன் குதமென்கிற ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். இந்தப் பாயுவென்கிற இந்த்ரியத்தினால் ப்ராணிகள் மலமூத்ரங்களை விடுகின்றன. பிறகு இந்த ப்ரஹ்மாவினிடத்தினின்று ஸ்வர்க்காதிபதியான இந்த்ரனும் ஹஸ்தங்களென்கிற ஸ்தானமும் பாணியென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அவ்விந்த்ரன் பயிர் செய்கை முதலிய வ்யாபார ரூபமான ஜீவனத்தை நிறைவேற்றுவதும் தனது அம்சமுமாகிய பாணியென்கிற இந்த்ரியத்துடன் ஹஸ்தங்களென்கிற ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். இந்தப் பாணியென்கிற இந்த்ரியத்தினால் தேவ மனுஷ்யாதியான ப்ராணி ஸமூஹமெல்லாம் ஜீவனத்தை ஸம்பாதித்துக் கொள்கின்றது. பின்பு இவனிடத்தினின்று பாதங்களென்கிற ஸ்தானமும் பாதமென்கிற இந்த்ரியமும் உண்டாயின. ஜகதீசனாகிய ஸ்ரீவிஷ்ணு நடப்பதற்கு ஸ்தானமாயிருப்பதும் தனது அம்சமுமாகிய பாதேந்த்ரியத்துடன் பாதங்களாகிற ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். இந்தப் பாதேந்த்ரியத்தினால் ப்ராணிகள் போகக்கூடிய இடங்களுக்குப் போகின்றன. பிறகு இவனிடத்தினின்று சந்த்ரனும் ஹ்ருதயமென்கிற ஸ்தானமும் மனஸ்ஸென்கிற இந்த்ரியமும் உண்டாயின. அந்தச் சந்த்ரன் தனது அம்சமாகிய மனஸ்ஸென்கிற இந்த்ரியத்துடன் ஹ்ருத

யத்தில் ப்ரவேசித்தான். இந்த மனஸ்ஸினால் தேவ மனுஷ்யாதி ப்ராணிகள் அனைத்தும் ஸங்கல்ப விகல்ப ரூபமான விகாரத்தைப் பெறுகின்றன. அதன் பிறகு இந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று புத்தியென்கிற ஸ்தானமும் நிஶ்சயஜ்ஞானத்தை விளக்கும்படியான புத்தியென்கிற இந்த்ரியமும் உண்டாயின. இந்த புத்தியென்கிற இந்த்ரியத்திற்கு வாகீசனாகிய (ஸரஸ்வதி வல்லபனாகிய) ப்ரஹ்ம தேவன் அபிமானி தேவதை. நிஶ்சயஜ்ஞானத்தை விளைப்பதாகிய இந்த புத்தீந்த்ரியத்துடன் புத்தி ஸ்தானத்தில் வாகீசன் ப்ரவேசித்தான். இந்த புத்தியென்கிற இந்த்ரியத்தினால் ப்ராணிகள் அறியவேண்டிய விஷயங்களை நிஶ்சயமாக அறிகின்றன. பிறகு அஹங்காரமென்கிற ஸ்தானமும் ருத்ரனென்கிற தேவதையும் அபிமானமென்கிற இந்த்ரியமும் இந்த ப்ரஹ்ம தேவனிடத்தினின்று உண்டாயின. இந்த ருத்ரதேவன் அபிமானமென்கிற இந்த்ரியத்துடன் அஹங்காரமென்கிற ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். இந்த அபிமானமென்கிற இந்த்ரியத்தினால் ப்ராணிகள் ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவென்று ப்ரமிக்கின்றன. பின்பு இந்த ப்ரஹ்மாவினிடத்தினின்று ஸத்வமென்கிற ஸ்தானமும் சித்தமென்கிற இந்த்ரியமும் உண்டாயின. இதற்கு ப்ரஜாபதியே அபிமானி தேவதை. இந்த ப்ரஜாபதி சித்தமென்கிற இந்த்ரியத்துடன் ஸத்வமென்கிற ஸ்தானத்தில் ப்ரவேசித்தான். இந்தச் சித்தமென்கிற இந்த்ரியத்தினால் ப்ராணிகள் தேஹம் வேறு ஆத்மா வேறென்று நன்கு சிந்திக்க வேண்டிய பொருளைப் பற்றின அறிவைப் பெறுகின்றன. ஹ்ருதயமென்கிற ஒரு ஸ்தானமே உள்ளது. அதிலுள்ள இந்த்ரியமும் ஒன்றே. அவ்வொரு இந்த்ரியத்திற்கே வ்யாபார பேதத்தினால் பெயர்களும் தேவதைகளும் மாறு

கின்றன. ஸங்கல்ப விகல்ப ரூப வ்யாபாரத்தினால் மன தென்று பேர், ஸ்தானத்திற்கு ஹ்ருதயமென்றும் பேர்; நிஸ்சயஜ்ஞானமாகிற போதமென்னும் வ்யாபாரத்தினால் அவ்விந்த்ரியத்திற்கு புத்தியென்றும், பேர். ஸ்தானத் திற்கும் புத்தியென்றே பேர். தேஹாத்மாபிமானத்தை விளைக்கையாகிற அபிமானமென்னும் வ்யாபாரத்தினால் இந்த்ரியத்திற்கு அபிமானமென்று பேர். ஸ்தானத்திற்கு அஹங்காரமென்றுபேர். தேஹாத்ம விவேகத்தை விளைக் கையாகிற சித்தமென்னும் வ்யாபாரத்தினால் இந்த்ரியத் திற்குச் சித்தமென்றுபேர். ஸ்தானத்திற்கு ஸத்வமென்று பேர். இவற்றிற்கு தேவதைகள் வெவ்வேறு. மனஸ் ஸுக்கு அபிமானி தேவதை சந்த்ரன். புத்திக்கு வாகீச னும், அபிமானத்திற்கு ருத்ரனும், சித்தத்திற்கு ப்ரஜா பதியும் அபிமானி தேவதைகள். இங்ஙனம் தேவ மனுஷ் யாதி பூதங்களுடைய இந்த்ரியங்களின் உற்பத்தியையும் அவற்றின் ஸ்தானங்களின் உற்பத்தியையும் சொன் னேன். இனி இந்த பூதங்கள் நிலையாக வஸித்திருந்து போகங்களை அனுபவிக்கும் ஸ்தானங்களாகிய ஸ்வர்க் காதி லோகங்களின் உற்பத்தியைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. இந்த ப்ரஹ்மாவினுடைய சிரஸ்ஸினின்று ஸ்வர்க்கலோகமும் பாதங்களினின்று பூலோகமும் நாபியி னின்று அந்தரிக்ஷலோகமும் உண்டாயின. எந்த லோகங் களில் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் வ்யாபாரங்களை யுடைய தேவ மனுஷ்யாதி பூதங்கள் புலப்படுகின்றன வோ, அப்படிப்பட்ட ஸ்வர்க்காதி லோகங்கள் உண் டாயின. ஸ்வபாவ ஸித்தமாகிய ஸத்வ குணத்தோடு கூடின தேவதைகள் ஸத்வ குணத்தினால் விளையும் கர்மங்களின் பலனாகிய போகங்களை அனுபவிக்குமிட மாகிய ஸ்வர்க்கலோகத்தை அடைந்தார்கள். சரீரா

யாஸம் முதலியவற்றால் பிழைக்குந்தன்மையரான மனி
களும் அவர்களுக்கு உபகரணங்களாகிய பசுமுதலியன
எவ்வெவை உண்டோ அவைகளும் ஆகிய ரஜஸ் ஸ்வபா
முடைய ப்ராணிகளனைத்தும் ரஜோகுணத்தினால் வி
யும் கர்மங்களின் பலனான போகங்களை அனுபவிக்கும்
மாகிய பூலோகத்தை அடைந்தன. மூன்றாவதாகிய தமே
குணத்தை ஸ்வபாவமாக வுடையவரும் ருத்ரனுடை
பாரிஷத கணங்களுமாகிய பூத ப்ரேத பிசாசாதிகள் ப
வத் ஸ்வரூபனாகிய ப்ரஹ்மாவின் நாபியினின்றுண்டா
அந்தரிக்ஷலோகத்தை அடைந்தன. ஸமஷ்டி புருஷனாகி
ப்ரஹ்மாவின் முகத்தினின்று ப்ராஹ்மணர்களின்[1]வ்ருத்
யாகிய அத்யயனம் முதலிய கர்மம் உண்டாயிற்று. இதை
பற்றியே ப்ராஹ்மணர்களுக்கு ப்ரஹ்மாவின் முகத்தினின்
றுண்டானதாக ப்ரஸித்தி. ப்ரஹ்மாவின் வ்யாபாரமாகி
அத்யாபனம் முதலிய வ்யாபாரங்களை வ்ருத்தியாகக்
கொண்டிருக்கையே ப்ராஹ்மணர்களுக்கு ப்ரஹ்மாவின்
முகத்தினின்றுண்டாகையாம். குருகுலத்தின் சிறப்பை
வளரச்செய்யும் மஹானுபாவனே! ப்ரஹ்மாவின் முகத்தி
னின்றுண்டான அத்யாபனம் (வேதமோதுவிக்கை)
முதலிய முகவ்யாபார முடையவராகையால், அங்கங்களில்
முகம் ப்ரதானமாயிருப்பதுபோல், வர்ணங்களெல்லா
வற்றிலும் ப்ராஹ்மணன் ப்ரதானனாகவும் மற்றை வர்ணங்
களுக்கு குருவாகவும் ஆனான். ப்ரஜைகளைப் பரிபாலனஞ்
செய்யும் வ்ருத்தியாகிய க்ஷத்ரதர்மமானது அந்த ப்ரஹ்
மாவின் புஜத்தினின்று உண்டாயிற்று. அதை அனுஸ
ரித்த க்ஷத்ரியன் புஜத்தினின்றுண்டானதாக ப்ரஸித்தி
பெற்றான். தன்னுடைய தர்மமாகிய ப்ரஜாபாலனத்தின்
மூலமாய் ப்ரஹ்மாவின் புஜத்தினின்றுண்டான க்ஷத்ரி

1. ஜீவனமாக.

யன், ஸமஷ்டி புருஷனுகிய அந்த ப்ரஹ்மாவிடத்தினின்று உண்டான மற்ற வர்ணங்களையெல்லாம் திருடர் முதலிய துஷ்டர்களால்விளையும் உபத்ரவத்தினின்று பாதுகாத்து வருகின்றான். ஸ்ருஷ்டி ஸாமர்த்யமுடைய அந்த ப்ரஹ்மாவின் துடைகளினின்று க்ரயம் விக்ரயம் க்ருஷி முதலிய வ்யாபாரங்களை நடத்துமவராகிய வைஶ்யர்கள் உண்டானார்கள். அவனிடத்தினின்று உண்டான அவ்வைஶ்யர் ப்ராணிகளுக்கு க்ரயம் விக்ரயம் க்ருஷி முதலிய வ்யாபாரங்களை நடத்திக்கொண் டிருக்கின்றார்கள். பகவத் ஸ்வரூபனுகிய அந்த ப்ரஹ்மாவின் பாதங்களினின்று, முன் சொன்ன மூன்று வர்ணங்களுக்கும் சுஶ்ரூஷை செய்கையாகிற தர்மம் நடப்பதற்காகச் சூத்ரன் உண்டானுன். இந்தச் சூத்ரன் தனக்கு முன்னே உண்டான மூன்று வர்ணங்களுக்குச் செய்யும் சுஶ்ரூஷையால் இவனிடத்தில் பகவான் ஸந்தோஷம் அடைகின்றான். பகவானுக்கு ஸந்தோஷத்தை விளைவிப்பதாகிய சுஶ்ரூஷையென்னும் தர்மத்திற்காகவே ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் சூத்ரன் உண்டானுன்; ப்ராஹ்மணன் முதலிய இந்த நான்கு வர்ணங்களும் தந்தமக்கு ஏற்பட்ட தர்மத்தினுல் ப்ரீதியுடன், அனுதி பாபவாஸனையால் தோஷமுற்ற மனத்தின் சுத்திக்காகத் தமது தந்தையும் தன்னைப் பற்றினுருடைய ஸம்ஸாரபந்தத்தைப் போக்குமவனும், எவனிடத்தினின்று ப்ரஹ்மாவின் மூலமாய்த் தாங்கள் உண்டானுர்களோ அத்தகையனுமாகிய ஸ்ரீஹரியை ஆராதிக்கின்றார்கள். ஸ்ரீவிதுரனே! காலமும் ஜீவாத்மாக்களின் புண்ய பாப ரூபமான கர்மமும் அவ்விரண்டிற்கும் உட்பட்ட ஜீவாத்மாக்களும் தேவ மனுஷ்யாதி சரீரங்களும் ஆகிய இவையெல்லாம் தன் வசத்திலிருக்கப் பெற்றவனும் ஷாட்குண்ய பரிபூர்ணனும் (ஜ்ஞான

பல ஐஶ்வர்ய வீர்ய சக்தி தேஜஸ்ஸுக்களென்கிற ஆறு குணங்கள் நிறைந்தவனும்) ஆகிய பகவானுடைய யோகமாயையின் ஸ்ருஷ்டி ஸாமர்த்யத்தினால் உண்டாவதான இந்த ஜகத்தை யெல்லாம் குறையறச் சொல்ல எவன்தான் விருப்பமுறுவான்?, பகவானுடைய ஆச்சர்ய சக்தியின் மஹிமையை அறிந்தவன் எவனும் ஜகத்தை யெல்லாம் சொல்லி முடிக்கிறேனென்று முயற்சி கொள்ளமாட்டான். 'ஒருவனுக்கும் முடியாததை நீர் எப்படி சொல்லப் போகிறீர்' என்கிறாயோ? வாஸ்தவமே. என்னாலும் சொல்லமுடியாது. ஆயினும், எனது குருவினிடத்தில் நான் கேட்டவரையிலும் சொல்லுகிறேன். அதிலும் என் புத்தியிற் பட்டவரையிலும் சொல்லுகிறேன். ஸ்ரீவிதுரனே! இந்த ஜகத்ஸ்ருஷ்டியெல்லாம் ஸ்ரீவிஷ்ணுவின் புகழே. அந்த விஷ்ணுவின் புகழை நான் எனது ஆசார்யனிடத்தில் எவ்வளவு கேட்டேனோ, என் புத்திக்கு எவ்வளவு விஷயமாயிருக்கிறதோ, அவ்வளவும் சொல்லுகிறேன். முழுவதும் சொல்ல என்னால் முடியாது. நான் முழுவதும் சொல்லுகிறேனென்று ப்ரதிஜ்ஞை செய்யவில்லை. 'ஆனால் சிறிது சொல்லி என்ன ப்ரயோஜனம்' என்னில், சொல்லுகிறேன் கேட்பாயாக. நமது வாக்கு ஸ்ரீவிஷ்ணுவைத் தவிர மற்ற வ்ருத்தாந்தங்களைச் சொல்லுகையால் தோஷமுற்றிருக்கின்றது (கெடுதியடைந்திருக்கிறது). அத்தகைய வாக்கைப் பரிசுத்தஞ் செய்கைக்காக ஸ்ரீவிஷ்ணுவின் புகழைச் சிறிது சொல்லினும் போதும். புண்யஶ்லோக சிகாமணியாகிய (புகழத்தகுந்தவர்களில் சிறந்தவனாகிய) பகவானுடைய குணங்களைப்பேசுகையே ப்ராணிகளின் வாக்குக்கு முக்யமான பலனென்று வேதங்களும் அதைத் தொடர்ந்த ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களும் அவற்றின்

கருத்தறிந்த மஹானுபாவர்களும் கூறுகின்றனர். பகவானுடைய குணங்களை அறிந்த பெரியோர்கள் பேசுகிற அம்ருதம் போன்ற அந்த பகவானுடைய கதையைக் கேட்கையே ப்ராணிகளின் ஶ்ரோத்ரேந்த்ரியத்திற்கு முக்யமான பலன். ஸ்ரீவிதுரனே! ஆதி கவியாகிய (பண்டிதர்களில் முதன்மையுள்ள) நான்முகனும் வெகு ஸம்வத்ஸரங்கள் கழிந்தபின்பு புத்தி பரிபக்வமாகப் பெற்றும் பகவானுடைய மஹிமையை இவ்வளவென்றறிந்தானோ? அறியவில்லை. நெடுநாள் கழிந்து ஜ்ஞானம் பரிபக்வமாகப் பெற்ற பின்னும் அறிஞர்களில் தலைவனாகிய நான்முகனும் பகவானுடைய மஹிமையை 'இதற்குக் கரை இல்லை' என்றறிந்தானேயன்றி 'இது இவ்வளவு' என்று அதை முழுவதும் அறிந்தவனன்று. ஆகையால் நமக்கு பகவானுடைய மஹிமை முழுவதும் தெரியாதென்பது தோஷமன்று. ஆதி கவியாகிய ப்ரஹ்மதேவனுக்கு மாத்ரமே தெரியாதென்பதில்லை. பகவானுடைய மஹிமை அவனுக்குங்கூட இவ்வளவென்று தெரியாது. பகவானுடைய சக்தி, ஆச்சர்ய சக்தியுடையவர்க்கும் ஆச்சர்யத்தை விளைக்கும்படியாயிருக்கும். இது என்ன ஆச்சர்யம். ப்ராணிகளுக்குத் தன் ஸ்வரூபத்தை அறிவித்து அவர்களுக்குத் தன் வழியைக் காட்டி மஹோபகாரஞ் செய்வதாகிய வேதத்திற்கும் ஆத்மாவாகிய (வேதஸ்வரூபனாகிய) பகவானும் தன் மஹிமையை இவ்வளவென்று அறியவல்லனல்லன். மற்ற ப்ரஹ்மாதிகள் அறியமாட்டார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? வேதவசனங்களும் யோகத்தினால் பரிசுத்தமான மனதும் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாத வஸ்துக்களை அறியுந்திறமையுடைய என்னைப் போன்ற மஹர்ஷிகளும் ப்ரஹ்ம ருத்ராதியான தேவதைகளும் எவனுடைய மஹிமையை அறியத்துடங்கி

அதை முழுவதும் அறிய முடியாமல் அவனிடத்தினின்று மீள்கின்றார்களோ ? அப்படிப்பட்ட பகவானுக்கு நமஸ்காரம். எவர்க்கும் அவனுடைய மஹிமை முழுவதும் அறியமுடியாது. அறிஞர்களும் அவன் மஹிமையை அளவிறந்ததென்றே அறிவார்கள். ஸர்வஜ்ஞனாகிய பகவானுக்குத் தெரியாதாயின், அவனுக்கு ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்தவனாயிருக்கை) எப்படி ஸித்திக்குமென்னில், சொல்லுகிறேன். இதனால் அவனுடைய ஸர்வஜ்ஞதைக்குக் குறை வாராது. ஸர்வஜ்ஞதையாவது உள்ளதையெல்லாம் உள்ளபடி அறிகையே. பகவானுடைய மஹிமை அளவிறந்ததாகையால் அதை அங்ஙனம் அறிகையே ஸர்வஜ்ஞதைக்கு அடையாளம். அளவிடமுடியாத வஸ்துவை அளவிடக்கூடியதென்றறிகை ப்ராந்தியேயாகும். அளவிடக்கூடியதை அளவிடமுடியாததாக அறிகையும் அத்தகையதே (ப்ரமமே). ஆகாயத்தில் இல்லாத தாமரைப் பூவை இதோ இருக்கிறதென்று ஒருவன் சொல்லுவானாயின், அவனை ப்ராந்தனென்றே சொல்லுவார்கள். இங்ஙனமே அளவில்லாததாகிய பகவானுடைய மஹிமையை அளவிடக்கூடியதாக அறிகை ப்ரமமேயாம். ஆகையால் அவனுடைய மஹிமை முழுவதும் அறிந்தவர் ஒருவருமே இல்லை. அதை அளவிறந்ததாக அறிகையே அறிகையாம். அப்படிப்பட்ட மஹாமஹிமையுடைய பகவானுக்கு நமஸ்காரம். ஆறுவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—மஹானுபாவராகிய வ்யாஸமஹர்ஷியின் புதல்வனும் தத்வதர்சியும் (உண்மையை உணர்ந்தவனும்) ஆகிய விதுரன் தனது வாக்யத்தினால் ஸந்தோஷப் படுத்தும்வண்போல், இங்ஙனம் மொழிகின்ற மைத்ரேய மஹர்ஷியைப் பார்த்து வினவினன்.

ஸ்ரீவிதுரர் சொல்லுகிறார்:—அந்தணர் தலைவரே! (மைத்ரேய மஹர்ஷீ! ஜ்ஞானம் முதலிய ஷட்குணங்கள் (ஆறு குணங்கள்) நிறைந்தவனும், ஜ்ஞானைக ஸ்வரூபனும் (ஜ்ஞானமே வடிவமாகப் பெற்றவனும்) நிர்விகாரனும் (மாறுந்தன்மையில்லாதவனும்) ஸத்வாதி குணங்கள் தீண்டப் பெறாதவனுமாகிய பரமாத்மாவுக்கு ஸத்வாதி குணங்களால் விளையும் க்லேசாதிகளும் (வருத்தம் முதலியவைகளும்) பரிணமம் (மாறுதல்) முதலிய க்ரியைகளும் (செயல்களும்) விளையாட்டிற்காகவாயினும் நேர்பட வழியில்லையே. பகவான் ஜகத்தைப் படைக்கை முதலியதும் ஜகத்தாகப் பரிணமிக்கையும் விளையாட்டிற்காகவே யென்று சொல்லவேண்டும். கர்மத்தினால் அவனுக்கு அவை உண்டாகின்றனவன்று. அவனைப் பாபமற்றவனென்று ஸ்ருதி சொல்லுகிறதாகையால் அவனுக்குப் புண்ய பாப ரூப கர்மஸம்பந்தமே கிடையாது. ஆகையால் அவன் உலகங்களைப் படைப்பது முதலியன லீலைக்காகவேயென்று சொல்லவேண்டும். இப்படி ஈச்வரனை ஜகத்ஸ்ருஷ்டி கர்த்தாவென்றும் ஜகத்திற்கு உபாதானகாரணமென்றும் சொல்லுகையில், நிர்விகாரனும் நிர்க்குணனுமாகிய பகவானுக்குப் பரிணமாதி விகாரங்களும் ஸத்வாதிகுணங்களின் கார்யமான கர்ப்பவாஸம் ஜன்மம் ஜரை (கிழத்தனம்) மரணம் முதலிய வருத்தங்களும் தடுக்க முடியாமல் வந்து சேரும். ஆகையால் நிர்விகாரனும் நிர்க்குணனுமாகிய பரமாத்மாவை ஜகத்காரணமென்று சொல்லுவது எங்ஙு

னம் பொருந்தும்? மற்றும், ஈஶ்வரன் ஜகத்தைப் படைப்பது முதலியன செய்வதற்கு ப்ரயோஜனம் இல்லை. ப்ரயோஜனமில்லாத கார்யத்தை மூடனும் செய்யமாட்டான். ஆகையால் ஸர்வஜ்ஞனுகிய ஸர்வேஶ்வரனுக்கு ஜகத்தைப் படைக்கை முதலிய வ்யாபாரமே உண்டாவதற்கு இடமில்லை. விளையாடலே ப்ரயோஜனமென்று சொன்னுமே யென்னில், அவாப்த ஸமஸ்த காமனுகிய (விருப்பங்களெல்லாம் கைகூடப்பெற்ற) பரமபுருஷனுக்கு விளையாடுவதில் விருப்பத்திற்கு அவகாசமே இல்லை. இதற்கு 'அவாப்த காமனுக்கே விளையாடுவதில் விருப்பம் உண்டாகக்கூடும். ஏழு தீவுகளும் உட்பட்ட பூமண்டலத்தை யெல்லாம் பரிபாலனஞ் செய்பவனும் விருப்பங்களெல்லாம் நிறைவேறப் பெற்றவனுமாகிய மஹாராஜனுக்கே பந்தாட்டம் முதலிய விளையாடல்களில் விருப்பம் உண்டாகக் காண்கிறோம். ஷாட்குண்யபூர்ணனும் அவாப்த ஸமஸ்த காமனுமாகிய பரமாத்மா தனக்காகவாவது பிறர்க்காகவாவது ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களைச் செய்ய அவகாசமே யில்லையாயினும், அவன் மஹாராஜனைப்போல் விளையாடலையே ப்ரயோஜனமாகக் கொண்டு உலகங்களைப் படைக்கை முதலிய கார்யங்களைச் செய்யக்கூடும்' என்று பரிஹாரம் சொல்லப் பார்க்கில், இதுவும் பொருந்தாது. ஏனென்னில், மஹாராஜன் ஜ்ஞானுதி ஷாட்குண்ய பூர்ணனன்றுகையாலும் அவாப்த ஸமஸ்த காமனன்றுகையாலும் ஸத்வாதி குணங்களுக்கு உட்பட்டவனுகையாலும் பரிணுமாதி விகாரமுடையவனுகையாலும், ஷாட்குண்ய பூர்ணனும் அவாப்த ஸமஸ்த காமனும் நிர்க்குணனும் நிர்விகாரனுமாகிய பரமபுருஷன் அவனுக்கு நேரே எதிர்த்தட்டாகையாலும், மஹாராஜன் பந்தாட்டம் முதலிய வ்யாபா

ரங்களை விளையாட்டிற்காகச் செய்வதுபோல், பரமபுருஷ னும் விளையாட்டிற்காகவே உலகங்களைப் படைக்கை முதலிய கார்யங்களைச் செய்வது அமையு மென்பது அமையாது. மற்றும், பாலகன் பொம்மைகளைக் கொண்டு விளையாடுவதுபோல், ஈஶ்வரனும் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களால் விளையாடுகிறனென்று வேறு த்ருஷ் டாந்தம் சொல்லின், அதுவும் பொருந்தாது. பாலனுக்கு விளையாடுவதில் அதிக முயற்சியும், அதற்குக் காரண மான விருப்பமும், விளையாட வேண்டுமென்கிற எண்ண மும், விளையாட்டிற்கு வேண்டிய பொம்மை முதலிய கருவிகளாலும் மற்ற பாலகர்களின் தூண்டுதலாலும் உண்டாகக்கூடும். ஈஶ்வரனோ வென்றால் ஜ்ஞானாநந்த ஸ்வரூபனாகிய தன்னைத் தானே அனுபவிப்பவனாகி அத னால் த்ருப்தி அடைந்திருப்பவன். அவனுக்கு எப்படி விளை யாட்டில் விருப்பம் உண்டாகும்? தன்னை யொழிந்த ஸ்வ தந்த்ரமான க்ரீடோபகரணங்கள் (விளையாட்டிற்கு வே ண்டிய கருவிகள்) எவையு மில்லாதவன். விளையாட்டில் தூண்டும்படியான ஸ்வதந்த்ர புருஷர்களும் தன்னை யொ ழிந்தவர் எவருமில்லாதவன். ஆதலால் விளையாட்டில் தூண்டுவோர்கள் எவரும் இல்லை. அத்தகையனுக்கு விளை யாட வேண்டுமென்கிற எண்ணம் எப்படி உண்டாகக் கூடும்? ஸ்ருஷ்டிக்கு முன்பு ஈஶ்வரன் ஒருவனே இருக் கிறனென்றும், மற்ற சேதனசேதனங்களெல்லாம் நாம ரூபங்களின்றி அவனிடத்தில் மறைந்திருக்கின்றன வென்றும் மொழிந்தீர். இங்ஙனம் தன்னையொழிந்த வஸ் துக்கள் இல்லாத ஈஶ்வரனுக்கு விளையாட்டிற்கு வேண் டிய கருவிகளும் விளையாட்டில் தூண்டும் புருஷர்களு மில்லாமையால் விளையாட வேண்டுமென்கிற எண்ணம் உண்டாவதற்கும் அவகாசமில்லை. ஆகையால் பாலனை

த்ருஷ்டாந்தமாகச் சொன்னது பொருந்தாது. [1] 'இப்படி ஈஶ்வரன் உபாதான காரணமாயிருப்பின் அவனுக்குப் பரிணாமம் க்லேசம் முதலிய தோஷம் நேருமென்பது சேராது. ஏனென்னில், ப்ரக்ருதி புருஷர்களை (சேதநாசேதனங்களை)ச் சரீரமாகவுடைய பகவான் ஜகத்காரணமென்று சொல்லுகிறோமாகையால் க்லேசம் முதலியவைகளும் பரிணாமம் முதலியவைகளும் தன் சரீரமாகிய ப்ரக்ருதி புருஷர்களைச் சேர்ந்தவைகளேயன்றி அவை ஈஶ்வரனுக்கு ஸம்பந்திக்காது. ஆகையால், ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் நிறைந்ததும் தனக்கு உட்பட்டதுமாகிய மாயையென்னும் ப்ரக்ருதியைக் கொண்டு பகவான் உலகங்களைப் படைப்பது, அவற்றைப் பாதுகாத்து நிலைநிறுத்துவது, மீளவும் அவற்றைத் தன்னிடத்தில் மறைத்துக் கொள்வது ஆகிய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கின்றான். தன் சரீரமாகிய மாயையை மஹத்து முதலிய தத்வங்களாகப் பரிணமிக்கச் செய்து தானும் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குணம் முக்யமாகப் பெற்ற ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களென்கிற மூன்று சரீரங்களைக் கொண்டு ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களைச் செய்கின்றான்' என்று பரிஹாரஞ் சொல்லப் பார்க்கினும், அது பரிஹாரமாகாது. ஏனென்னில், பரமாத்மாவானவன், தேச கால அவஸ்தைகளாலும் தன்னாலும் பிறராலும் அழிக்கப்பெறாத ஜ்ஞானமே வடிவாகப்பெற்றவன். அவன் எங்கும் நிறைந்தவஸ்துவாகையால் தேசபரிச்சேதமில்லை. விளக்கொளி ஓரிடத்திலிருக்கும்பொழுது மற்றோரிடத்தில் இருக்கமாட்டாது. ஆகையால் அதற்கு தேசபரிச்சேதம்

---

1. மீளவும் தான் சொன்ன ஸந்தேஹத்திற்கு ஒருவிதமாக ஸமாதானம் செல்லக்கூடுமோ என்னவோவென்று நினைத்து அதைச் சொல்லிக் காட்டி அதுவும் பொருந்தாதென்று நிரூபிக்கிறான்.

உண்டு. ஈஶ்வரன் விபுவாகையால் அவனுக்கு தேசபரிச்சேதம் இல்லை. நித்யனாகையால் காலபரிச்சேதமில்லை. மின்னல் ஒரு க்ஷணமாத்ரமே ப்ரகாசிக்குமாகையால் அதற்குக் காலபரிச்சேதம் உண்டு. ஈஶ்வரன் எப்போதும் உள்ளவனாகையால் அவனுக்குக் காலபரிச்சேதமில்லை. தேசபரிச்சேதமாவது 'இங்கிருக்கிறது; அங்கில்லை அங்கிருக்கிறது. இங்கில்லை' என்னுஞ் சொல்லுக்கிடமாயிருக்கை. காலபரிச்சேதமாவது — இப்போதிருக்கிறது; அப்போதில்லை. அப்போதிருந்தது இப்போதில்லை' என்னும் சொல்லுக்கிடமாயிருக்கை. ஈஶ்வரன் நிர்விகாரனாகையால் அவனுக்கு எவ்வித அவஸ்தைகளாலும் ஜ்ஞானலோபம் வர ப்ரஸக்தி இல்லை. ஸ்ம்ருதி நினைவு சில அவஸ்தைகளில் மாறும். ஈஶ்வரனுடைய ஜ்ஞானம் அப்படியன்று. ஒருவன் ஸ்வப்னங்கண்டால் அது பிறர்க்கு அனுபவிக்கக்கூடாததும் அந்தக் காலத்தோடு முடிவதுமாயிருக்கும். அது தானே அழியும்படியானது. ஈஶ்வரனுடைய ஜ்ஞானம் அங்ஙனம் தனக்குத் தானே அழியுந்தன்மையதன்று. இயற்கையில் அழியாதிருப்பதே. ஈஶ்வரன் கர்மத்திற்குட்பட்டவனல்லன். ஜீவாத்மாக்கள் கர்மத்திற்குட்பட்டவராகையால் அவருடைய ஜ்ஞானம் புண்ய பாபரூபமான கர்மத்தின் தாரதம்யத்தினால் மலர்தலும் குவிதலுமாயிருக்கும். ஈஶ்வரன் கர்மவஶ்யனன்றாகையால் அவனுடைய ஜ்ஞானம் என்றும் மாறாமல் மலர்ந்துகொண்டேயிருக்கும். ஆகையால் இப்படிப்பட்ட அந்தப் பரமாத்மா மாயையென்கிற ப்ரக்ருதியோடு எங்ஙனம் சேரப்பெறுவான். கீழ்ச்சொன்ன தேசகாலாதிகளில் ஏதேனுமொன்றால் ஜ்ஞானம் அழியப்பெறுவானாயின், அப்பொழுது அவனுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தம் உண்டாகக்கூடும். அதில்லாமையால் அவனுக்கு

ப்ரக்ருதி ஸம்பந்தம் எங்ஙனம் ஸம்பவிக்கக்கூடும்? இந்த பகவான் ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாகி ஸமஸ்த சரீரங்களிலும் உள் புகுந்திருக்கின்றான். ஆகையால், ஸத்வாதி குணங்களின் கார்யமாகிய கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதிகளும் பரிணாமாதிகளும் ஜீவாத்மாக்களுக்கும் தேவாதிஸரீரங்களுக்குமேயன்றி பகவானுக்கு அவை ஸம்பந்திக்கிறதில்லையென்னில், அதுவும் பொருந்தாது. ஏனென்னில், ஜாகரம் ஸ்வப்னம் ஸுஷுப்தி மூர்ச்சை உத்க்ராந்தி(கண்விழித்துக்கொண்டிருத்தல்,கனுக்காணுதல்,ஒன்றுந்தெரியாமல் உறங்குதல்,ப்ரஜ்ஞை தெரியாமல் மூர்ச்சித்திருத்தல்,ப்ராணோத்க்ரமணம்) ஆகிய இவ்வவஸ்தைகளில் ஜீவனுக்கு அந்தந்த இடங்களைப்பற்றி வருந் தோஷங்களெல்லாம் அவனுக்கு அந்தராத்மாவாயிருக்கின்ற பரப்ரஹ்மத்திற்கும் ஸம்பவிக்கும். பரமாத்மா கர்மத்திற்குட்பட்டவனன்றாகையால் அந்த தோஷங்கள் அவனுக்கு ஸம்பவிக்காதென்னலாகாது. பரமாத்மாவுக்குக் கர்ம ஸம்பந்தம் இல்லையாயினும் இருக்கட்டும். கர்மம் ஜீவனுக்கு தேஹஸம்பந்தத்தை உண்டாக்கி அதன்மூலமாய் க்லேசம் முதலிய தோஷங்களை விளைக்கின்றது. ஈஸ்வரனுக்குக் கர்ம ஸம்பந்தமில்லையேயாயினும், அவன் தேவ மனுஷ்யாதி தேஹங்களில் ஜீவன் மூலமாய் உட்புகுந்திருக்கின்றானாகையால் அவனுக்கு தேஹஸம்பந்தம் உண்டென்பது ஸித்தமே. ஆகையால் அவனுக்கும் ஜீவனுக்குள்ள கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதி தோஷங்களெல்லாம் ஸம்பவிக்குமென்பதில் ஸந்தேஹமில்லை. கர்மம் தேஹஸம்பந்தத்தின் மூலமாயல்லவோ ஜீவனுக்கு தோஷங்களை விளைக்கின்றது. ஈஸ்வரனுக்கு தேஹஸம்பந்தம் உண்டாகையால் ஜீவனுக்கு உண்டாகிற தோஷங்கள் ஏன் உண்டாகாமற்போம்? கர்மமே ஸுகதுக்கங்களை

விளைக்குமாயின் தேஹஸம்பந்தம் பயனற்றதேயாம். ஆகையால் தேஹஸம்பந்தமே ஸுகதுக்கங்களை விளைக்கிற தென்னவேண்டும். ஈஶ்வரனுக்கும் தேஹஸம்பந்தத்தை ஒப்புக்கொள்கையால் அசுத்தமான பலவகை தேஹஸம்பந்தம் தோஷங்களுக்கிடமேயாம். அந்த தேஹங்களை நியமிப்பதற்காகத் தனதிச்சையால் அவற்றில் ப்ரவேசிக்கிறானாயினும் அது தோஷத்தையே விளைவிப்பதாம். ஒருவன் தன்னிச்சையால் சீயும் ரக்தமும் நிறைந்த ஓர் குழியில் மூழ்குவானாயின், அவனுக்கு அது அபுருஷார்த்தமே ஆமன்றிப் புருஷார்த்தமாகாது. ஆகையால் ஜகத்காரணமான பரமபுருஷன் ஸர்வஜ்ஞத்வம் (எல்லாமறிந்தமை) முதலிய கல்யாணகுணங்களுக்கிடமாயினும் கர்மத்திற்குட்படாதவனாயினும், ஸமஸ்த சரீரங்களிலும் உட்புகுந்திருக்கிறானென்று அவனுக்குச் சரீர ஸம்பந்தத்தை ஒப்புக்கொள்கையால் அதன்மூலமாய் விளையும் தோஷங்களெல்லாம் அவனுக்கு ஸம்பவிக்கக்கூடும். எல்லாமறிந்த மைத்ரேயரே! இந்த அஜ்ஞானமாகிற ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு என் மனம் வருந்துகின்றது. ஆகையால், வல்லமையமைந்த மைத்ரேயரே! இங்ஙனம் எமது மனத்தில் அஜ்ஞானத்தினால் விளைந்த மஹத்தான வருத்தத்தைப் போக்குவீராக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—உண்மையை அறியவேண்டுமென்று விரும்புகிற விதுரனால் இங்ஙனம் வினவப்பெற்ற மைத்ரேயமுனிவர் பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடையவரும் தத்வதர்சியும் (உண்மையை உணர்ந்தவரும்) ஆகையால் சிறிதும் வியப்பின்றி அவர் கேட்ட கேள்விகளெல்லாம் ஸுகமாகப் பரிஹரிக்கக் கூடியவைகளாயிருக்கையால் புன்னகை செய்பவர்போன்று அவரைப் பார்த்து இங்ஙனம் மறுமொழி கூறினார்.

மைத்ரேயர் சொல்லுகிறார் :—ஸ்ரீவிதுரனே! சேதநா சேதனங்களை நியமிப்பதற்காக ஈஶ்வரன் அவற்றில் ஸ்வேச்சையால் (பிறர் தூண்டுதலின்றிக் கர்மத்திற்கும் உட்படாமல் தன்னிச்சையால்) உட்புகுந்திருப்பானாயினும், அவற்றின் ஸம்பந்தத்தினால் விளையக்கூடிய பரிணாமம் துக்கம் முதலிய அபுருஷார்த்தங்கள் (புருஷனால் விரும்பப்படாதவைகளான தோஷங்கள்) தடுக்கமுடியாமல் ஸம்பவித்தே தீருமென்று மொழிந்தாயே, அது யுக்தமன்று. அசேதன வஸ்துவும் இயற்கையில் அபுருஷார்த்த ஸ்வரூபமாயிருப்பதன்று (தோஷஸ்வரூபமாயிருப்பதன்று), புண்ய பாப ரூபமான கர்மங்களுக்கு உட்பட்ட ஜீவாத்மாக்களுக்கு அந்தந்தக் கர்ம ஸ்வபாவங்களுக்குத் தகுந்தபடி பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தினால் ஒரு வஸ்துவே காலபேதத்தினாலும் புருஷ பேதத்தினாலும் ஸுகத்தின்பொருட்டும் துக்கத்தின்பொருட்டும் ஆகின்றது. அப்படியில்லாமல் வஸ்துவின் ஸ்வபாவமே அத்தகையதாயிருக்குமாயின், எல்லாவஸ்துக்களும் எல்லாக் காலங்களிலும் எல்லோர்க்கும் ஸுகத்தையாவது துக்கத்தையாவது விளைவிப்பவைகளாகவேண்டும். இங்ஙனம் அனுபவத்தில் புலப்படவில்லை. ஒரே வஸ்து ஒருவனுக்கு ஒரு ஸமயத்தில் ஸுகத்தையும் மற்றொரு ஸமயத்தில் துக்கத்தையும் விளைக்கின்றது. அதற்குக் காரணம் அவ்வஸ்துவை அனுபவிக்கிற ஜீவனுடைய புண்ய பாபரூபமான கர்மமேயன்றி அவ்வஸ்துவின் ஸ்வபாவமன்று. வஸ்துவின் ஸ்வபாவமே அதற்கு நிமித்தமாயின், அவ்வஸ்து அவனுக்கு எப்பொழுதும் ஸுகத்தையேயாவது துக்கத்தையேயாவது விளைவிக்குமன்றி ஒரு ஸமயத்தில் ஸுகத்தையும் ஒருஸமயத்தில் துக்கத்தையும் விளைவிக்க நேராது. ஒரு வஸ்துவுக்கு இரண்டும் ஸ்வபாவமென்று

சொல்லலாகாது. எந்த வஸ்துவுக்கு எது மாறுதிருக்கும் தர்மமோ அதையே அதற்கு ஸ்வபாவமென்பது வழக்கமாகையால், ஒன்றோடொன்று சேராத இரண்டு தர்மங்களை ஒன்றுக்கு ஸ்வபாவமென்னலாகாது. துக்கத்தை விளைக்குந் தன்மையும் ஸுகத்தை விளைக்குந் தன்மையும் ஒரே காலத்தில் ஒரு வஸ்துவுக்கு இணங்காதவையாகையால் அவ்விரண்டையும் அதற்கு ஸ்வபாவமென்பது யுக்தமன்று. ஆகையால் எந்த வஸ்துவும் துக்கத்தையாவது ஸுகத்தையாவது விளைவிக்குந் தன்மையதன்று. ஸுக துக்கங்களெல்லாம் ஜீவனுடைய புண்ய பாபரூப கர்மங்களால் விளையுமவைகளே. ஆகையால் ஜீவன் கர்மத்திற்கு உட்பட்டவனாகையால் அந்தந்தக் கர்மங்களுக்குத் தகுந்தபடி அந்தந்த வஸ்துவின் ஸம்பந்தம் அபுருஷார்த்தமாகின்றது. பரப்ரஹ்மம் ஸகல தோஷங்களும் தீண்டப்பெறாததும் ஸமஸ்த கல்யாணகுணங்களும் அமையப்பெற்றதும் ஸ்வாதீனமாயிருப்பதும் ஸ்வாபாவிகங்களும் அற்புதங்களுமான பலவகைப்பட்ட சக்திகள் நிறைந்ததுமாகையால், அதற்கு அபுருஷார்த்தங்களுக்கிடமான சேதனாசேதனங்களின் ஸம்பந்தம் அவற்றை விசித்ரமாக நியமிக்கையாகிற லீலையின் பொருட்டாகுமேயன்றி தோஷத்தின் பொருட்டாகாது. ஜீவனுக்கு ப்ராக்ருதி ஸம்பந்தம் அபுருஷார்த்தத்தையே விளைவிப்பதாம். ஈஶ்வரன் கர்மவஶ்யனன்றாகையால் அவனுக்கு ஸ்வேச்சையால் ஏற்பட்டுக்கொள்கிற ப்ராக்ருதி ஸம்பந்தம் தோஷத்தை விளைவிக்கமாட்டாது. கர்மமாவது சேதனர்களின் புண்யபாபங்களை ஈஶ்வரன் கணக்கிட்டு 'இவன் இங்ஙனம் செய்தான்; இவனுக்கு இந்த பலன் கொடுக்கவேண்டும்' என்று அந்தப் புண்ய பாபங்களுக்குரிய பலன்களைக் கொடுப்பதாக ஸங்கல்பிக்கையே. ஆகையால் அவனு

டைய நிக்ரஹாநுக்ரஹ ஸங்கல்ப ரூபமான கர்ம ஸம்பந்தம் அவனுக்கே உண்டாமென்பதற்கு அவகாசமில்லை. இப்படி கர்மத்திற்குட்படாதவனாகையால் கர்ம ஸம்பந்தத்தைப் பற்றி ஸுகதுக்கங்களை விளைக்கக்கூடிய ப்ரக்ருதி ஸம்பந்தம் அவனுக்கு உண்டாயினும் தோஷத்தை விளைப்பதாகாது. ப்ரக்ருதி ஸம்பந்த மற்றவனும் ஒருவர்க்கும் உட்படாமல் ஸ்வதந்த்ரனுமாகிய ஈஶ்வரனுக்கு ஸத்வாதி குணங்களால் விளையும் க்லேசாதிகளும் ப்ரக்ருதி ஸம்பந்தமும் எந்தக் காரணத்தினால் பொருந்துமோ, அது ஈஶ்வரனுடைய ஆச்சர்ய சக்தியே. ஜீவாத்மாக்களில் உட்புகுந்து நிறைந்திருக்கின்ற பகவானுக்கு ப்ரக்ருதியால் கட்டுண்டு ஜன்ம ஜரா மரணாதியான க்லேசங்களுக்கிடமான அந்த ஜீவாத்மாக்களின் தோஷங்கள் ஸம்பந்திக்காமைக்குக் காரணம் அவனுடைய ஆச்சர்ய சக்தியே. ஆகையால் அவனிடத்தில் ஜீவனுடைய தோஷங்கள் ஸம்பந்திக்கிறதில்லை யென்பதில் விரோதமில்லை. வேதங்கள் பரமபுருஷனைப் பலவகை ஆச்சர்ய சக்திகளமைந்தவனென்று கூறுகின்றன. ஈஶ்வரனை நாம் கண்ணால் கண்டறிய முடியாது. வேதவசனங்களைக் கொண்டே அவன் ஸ்வரூபத்தை அறியவேண்டும். அந்த வேதம் 'அவன் தேவாதி ஸகல சரீரங்களிலும் உட்புகுந்திருப்பினும் ஆச்சர்ய சக்தியால் அவனுக்கு அவற்றின் தோஷங்கள் ஸம்பந்திக்கிறதில்லை' என்று சொல்லுகின்றது. கண் முதலிய இந்த்ரியங்களால் அறியமுடியாதவஸ்துவில் நாம் யுக்தியால் சொல்லுகிறதோஷங்களாவது குணங்களாவது ஏறா. சப்தத்தினால் எந்தவஸ்து எப்படி ஏற்படுகின்றதோ அதை அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டும். 'அவன் சேதனாசேதனங்களில் வ்யாபித்து நிற்பவன்' என்றும், 'ஆயினும் அவனுடைய ஆச்சர்ய சக்தியால் அவற்

றின் தோஷங்கள் அவனுக்கு ஸம்பந்திக்கிறதில்லை' என்றும் ஶ்ருதிகள் சொல்லுகிறனவாகையால் அதன்மேல் ஸந்தேஹிக்க இடமில்லை. ஆகையால் 'நிர்விகாரனும் நிர்க்குணனுமாகிய பகவானுக்கு ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்கள் எப்படி பொருந்தும்' என்கிற ஆக்ஷேபமும் தடுக்கப்பெற்றது. 'ஜகத்திற்கு ஈஶ்வரனே உபாதான காரணமாயின், ஜகத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் அவனேயாகவேண்டும். அப்பொழுது அவற்றின் தோஷங்களெல்லாம்அவனுக்கு ஸம்பந்திக்கும்'என்று சங்கித்தனை. ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகவுடைய பரமபுருஷனே ஜகத்திற்கு உபாதான காரணமாகையால் ப்ரக்ருதி புருஷர்களுக்குள்ள தோஷமெல்லாம் அந்த ப்ரக்ருதி புருஷர்களைச் சேர்ந்தவையேயன்றிப் பரமபுருஷனைச் சேரா. பலவகை நிறங்களை யுடைய நூல்களால் நெய்யப்பெற்ற வஸ்த்ரத்தில் வெளுப்பு கறுப்பு முதலிய நிறங்களெல்லாம் அந்தந்த நூல்களிலேயே இருக்குமன்றி ஒன்றின் நிறம் மற்றொன்றுக்கு எப்படி ஸம்பந்திக்காதோ, அப்படியே, ப்ரக்ருதி புருஷர்களோடுகூடின ஈஶ்வரன் ஜகத்திற்கு உபாதான காரணமானால் அந்த ப்ரக்ருதி புருஷர்களின் தோஷங்கள் ஈஶ்வரனிடத்தில் ஸம்பந்திக்கிறதில்லை. பால்யம் யௌவனம் முதலிய சரீரத்தின் அவஸ்தைகள் ஆத்மாவுக்கு எப்படி ஸம்பந்திக்ககிறதில்லையோ, அப்படியே சேதனாசேதனங்களின் தோஷங்கள் ஈஶ்வரனுக்கு உண்டாகாது. ஆகையால் ஈஶ்வரன் தேவாதி சரீரங்களில் உட்புகுந்திருக்கையால், அவற்றின் தோஷங்கள் ஈஶ்வரனிடத்தில் ஸம்பந்திக்குமென்கிற ஆக்ஷேபத்திற்கு அவகாசமில்லை. ஆயினும், ஈஶ்வரனுக்கு தேவ மனுஷ்யாதி சரீர ஸம்பந்தமே அபுருஷார்த்தமாம். சீயும் ரக்தமும் நிறைந்த குழியில்' ஒருவன் பிறரு

டைய தூண்டுதலின்றித் தானே விழுவானாயினும் அவ னுக்கு அது தோஷமேயாம். அங்ஙனமே, ஈஶ்வரன் பிறர்க்கு உட்படாமல் தானே சேதநாசேதனங்களை நிய மிக்கும் பொருட்டு அவற்றில் ப்ரவேசிப்பானாயின், அந்தச் சேதநாசேதன ஸம்பந்தம் அவனுக்கு தோஷத்தையே விளைப்பதாம்' என்று ஸந்தேஹித்ததும் சேராது. ஈஶ்வரன் ஆச்சர்ய சக்தியுடையவனாகையால் அவன் அவற்றில் புகுந்திருப்பினும் அவற்றின் தோஷங்களால் தீண்டப்படமாட்டானென்று முன்னமே சொன்னேன். ஆனால் ஜீவாத்மாக்களும் பாபம் தீண்டப் பெறுதலை முதலிய குணங்களுடையவராயினும், அவர்கள் அநாதியான அவித்யா கர்ம,வாஸனா ருசி ப்ரக்ருதி ஸம்பந்தங்களையுடையவராகையால் தேவ மனுஷ்யாதி சரீரங்களையே ஆத்மாவென்று ப்ரமித்து கர்ப்ப ஜன்ம ஜரா மரணாதியான க்லேசங்களுக்கு இடமாகின்றார்கள். கர்மவஶ்யனாகிய (கர்மத்திற்குட்பட்ட) ஜீவனுக்கு ஜ்ஞானாநந்த ரூபமாகையால் ப்ரார்த்திக்கக் கூடியதாகிய ஆத்மஸ்வரூபம் அநாதியான மாயாஸம்பந்தத்தினால் மறைக்கப் பட்டிருப்பது பற்றி ஆத்மஸ்வரூபத்திற் கிணங்காத தேவ மனுஷ்யாதி பாவனையும், தன் சரீரமாகிய தேவ மனுஷ்யாதி ஆகாரத்தின் ஓர் பாகமாகிய சிரஸ்ஸு முதலியவை அறுப்புண்டிருப்பின், 'என் தலை அறுப்புண்டது, என் கால் அறுப்புண்டது, என் கை அறுப்புண்டது' என்று சோகித்தலும் உண்டாகின்றன. இதற்குக் காரணம் தேவமனுஷ்யாதிசரீரங்களையே ஆத்மாவென்று ப்ரமிக்கை. இதுவும் பகவானுடைய ஆச்சர்ய சக்தியின் கார்யமே. சந்த்ரன் ஜலத்தில் ப்ரதிபலிக்கும்பொழுது, வாஸ்தவத்தில் சந்த்ரனுக்கில்லாத நடுக்கம் முதலிய விகாரங்கள் அந்த ஜலத்தின் ஸம்பந்தத்தினால் அவனுக்கு உள்ளவைபோல் எங்ஙனம்

தோற்றுகின்றனவோ, அங்ஙனமே தேஹத்தை ஆத்மாவாக ப்ரமிக்கின்ற ஜீவனுக்கும் இயற்கையில் இல்லாத சோக மோஹாதி குணங்களும் தோற்றுகின்றன. கர்மவஶ்யனாகிய ஜீவன் அநாதியான அவித்யையின் ஸம்பந்தத்தினால் தன் ஸ்வரூபம் தனக்குத் தோற்றப்பெறாதவனாகி தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமிக்கின்றான். அந்த தேஹாத்ம ப்ரமத்தினால் சோக மோஹாதிகள் உண்டாகப் பெறுகின்றான். வாஸ்தவத்தில் தேஹ தர்மங்களாகிய தலையறுப்புண்கை முதலியவைகளால் ஜீவன் தீண்டப்பெறாதவனே. பரமபுருஷனோ வென்றால் அவித்யையால் மறைக்கப்படாத ஸ்வரூபமுடையவனாகையால் ப்ரக்ருதியையும் புருஷனையும் நியமிப்பதற்காக அவற்றில் ப்ரவேசித்திருப்பினும், அவித்யையும் அதன் கார்யங்களான தேஹாத்ம ப்ரமாதிகளும் அவனுக்கு உண்டாகிறதில்லை. ஜீவாத்மா பரமாத்மா ஆகிய இருவர்க்கும் ப்ரக்ருதி ஸம்பந்தம் உள்ளதுதான். ஆனால் அதில் விசேஷம் உண்டு. ப்ரக்ருதி ஒருவனைத் தன் வசப்படுத்திக்கொண்டு அவனுக்கு அசுபத்தைவிளைக்கின்றது. மற்றவனால்தான் நியமிக்கப்பெற்று அவனுக்கு லீலோபகரண மாகின்றது (விளையாட்டிற்கு வேண்டிய கருவியாயிருக்கின்றது). ஜீவன் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஆத்ம ஸ்வரூபம் தோற்றப்பெறாத ஸமயத்தில், ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் வேறுபட்ட தேஹாகாரம் அவனுக்குத் தோற்றுகிறது. தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமிக்கிற இவன் சிரச்சேதம் (தலையறுப்பு) முதலிய அபுருஷார்த்தங்களும் தனக்குண்டானதாக ப்ரமிக்கின்றான். புருஷார்த்தமாகிய ஆத்ம ஸ்வரூபம் தோற்றப் பெறுகையில், தேஹாத்ம ப்ரமமும் அதன் கார்யமான சிரச்சேதாதி ப்ரமமும் (என் தலை அறுப்புண்டது, என் கை அறுப்புண்டது, என்கால் அறுப்புண்ட

தென்கிற ப்ரமமும்) உண்டாகிறதில்லை. இயற்கையில் ஆத்மா தேஹத்திற் காட்டிலும் விலக்ஷணனாகையாலும், தேஹமே ஆத்மாவென்னும் புத்திப்ராந்தியாகையாலும், ஆத்மா தேஹத்திற்காட்டில்வேறுபட்டவனென்றுஎப்படி ஸித்திக்கின்றதோ, இப்படியே ஜீவாத்மாவும் பரமாத்மாவுக்குச் சரீரமாகைகால் அவனுக்கு அதன் தோஷங்கள் ஸம்பந்திக்கிறதில்லை. ஜீவாத்மாவுக்கு அனாதியான அவித்யாஸம் பந்தத்தினால் தேஹமே ஆத்மாவென்கிற ப்ரமம் உண்டாகின்றது. ஈச்வரன் சேதனாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருப்பினும் அவனுக்கு அந்த ப்ரமம் உண்டாகிறதில்லை. அவனுக்கு அந்த மாயாஸம்பந்தம் உண்டேயாயினும், அம்மாயை அவனால் நியமிக்கப்படும் வஸ்துவாகையால் அவனுக்கு அது தேஹாத்மப்ரமத்தை விளைவிக்க வல்லதன்று. இதையே அவனுடைய ஆச்சர்ய சக்தியென்று முன்னமே சொன்னேன். சந்த்ரன் ஜலம் முதலிய இடங்களில் ப்ரதிபலிக்கும்பொழுது, அவனுக்கு இயற்கையில் இல்லாத நடுக்கம் முதலிய விகாரங்கள் எப்படி ஜலாதி ஸம்பந்தத்தினால்தோற்றுகின்றனவோ, அங்ஙனமே ஸர்வஜ்ஞனான பரமாத்மாவுக்குத் தன்னைக்காட்டிலும் வேறுபட்ட சேதனாசேதனங்களின் குணம் இயற்கையில் இல்லாமற்போயினும் ப்ரமத்தினால் இருப்பது போல் தோற்றுகின்றது. பரமாத்மா சேதனாசேதனங்களில் புகுந்திருக்கின்றானாகையால் அவற்றின் தோஷங்கள் அவனுக்கு ஸம்பந்திக்குமேயென்று ஸந்தேஹிப்பதற்கிடமான புத்தி ப்ரமமேயன்றி வேறன்று. கண்ணின் காந்திகள் ஜலத்தில் பட்டு அந்த ஜலம் நிர்மலமாயிருக்கின்றமையால் அதினின்று மேற்கிளம்பிச் சந்த்ரனைக் காண்கின்றன. ஜலம் அசைகின்றமையால் அதில் பாய்ந்த கண்ணொளிகளும் அசைந்துகொண்டுசந்த்ரனைக்ரஹிக்கின்றன

அப்பொழுது சந்த்ரனை அசைவதாக நினைப்பதும் சந்த்ரன் ஜலத்திலிருப்பதாக நினைப்பதும் ப்ரமமே. ஈஸ்வரன் சேதனுசேதனங்களில் வாஸ்தவமாகவே உட்புகுந்திருப்பினும் அவனுக்கு அவற்றின் தோஷங்கள். ஸம்பந்திக்கிறதில்லை. அங்ஙனம் ஸம்பந்திக்குமென்று நினைக்கில் சந்த்ரன் அசைவதாக நினைப்பதுபோல், அது ப்ரமமாகுமேயன்றி வேறில்லை. சேதனுசேதனங்களில் அவன் உட்புகுந்திருப்பினும் அவற்றின் தோஷங்களால் தீண்டப்பெருதிருக்கைக்குக் காரணம் அவனுடைய ஆச்சர்ய சக்தியே. ப்ரக்ருதி ஸம்பந்தத்தினுல் கர்ப்ப ஜன்ம ஜரா மரணுதியான க்லேசங்களுக் கிடமாகிய ஜீவனுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவுக்கு அவனுடைய தோஷங்கள் தீண்டாமை மாத்ரமேயன்று; அந்த ஜீவன் ஸர்வதர்மங்களையும் துறந்து அவற்றினின்று புத்தியை ஸவாஸனமாக மாற்றிக்கொண்டு பரமதயாளுவாகிய அவ்வாஸுதேவனைச் சரணம் அடைவானுயின், அவன் இவனிடத்தில் கருணை கூர்ந்து ஜ்ஞாநாதி குணங்களெல்லாம் அமைந்த தன்னிடத்தில் அவனுக்கு பக்தியோகத்தை விளைவித்து அவனுடைய ஹேயகுணங்களை யெல்லாம் (சோகமோஹாதியான துர்க்குணங்களை யெல்லாம்) மறையச்செய்கின்றுன். ஜீவனுக்கு அந்தராத்மாவாயிருக்கின்ற ஈஸ்வரனுக்கு அவனுடைய தோஷங்கள் ஸம்பந்திக்கிறதில்லை யென்பது மாத்ரமேயல்லாமல், பகவானுடைய கருணையால் இந்த ஜீவனுடைய தோஷங்களும் மறைகின்றன. எவனிடத்தில் பக்தி செய்தால் ஜீவாத்மாக்களின் தோஷமெல்லாம் தொலையுமோ, அப்படிப்பட்ட பகவானுக்கு தோஷங்கள் தீண்டாவென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? இந்த ஜீவனுடைய இந்த்ரியங்கள் சப்தாதி விஷயங்களில் செல்லாமல் எப்பொழுது நிவ்

ருத்தியாகுமோ, அப்பொழுது, சேதனசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணனும் தன்னைப் பற்றினருடைய ஸம்ஸார பந்தத்தைப் போக்குந்தன்மையனுமாகிய பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்கப்பெற்ற அந்த ஜீவனுடைய க்லேசங்களெல்லாம் தொலைகின்றன. தூங்குகிறவனுக்கு எப்படி க்லேசங்களெல்லாம் தொலைகின்றனவோ, அங்ஙனமே பரமபுருஷனுடைய ஸாக்ஷாத்காரத்தினால் ஜீவனுடைய க்லேசங்களெல்லாம் தொலைகின்றன. பகவானுடைய குணங்களைச் சொல்லுவதும், பிறர் சொல்லும்பொழுது அவற்றைக் கேட்பதும் ஆகிய இவ்விரண்டுமே ஸமஸ்த க்லேசங்களையும் தொலையச்செய்யும். அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களில் படிந்த பராகத்தைப் பணிவதில் ப்ரீதி உண்டாகி மனத்தில் நிலைபெற்றிருக்குமாயின், க்லேசங்களெல்லாம் தொலையுமென்பதில் ஸந்தேஹம் உண்டோ?

ஸ்ரீவிதுரர் சொல்லுகிறார்:—திறமை யமைந்த மைத்ரேயரே! ஈஸ்வரன் ஜகத்காரண மென்பதில் எனக்குண்டாயிருந்த ஸந்தேஹமெல்லாம், உம்முடைய அழகிய வசனங்களாகிற கட்கத்தினால் வேரோடு அறுப்புண்டது. அறிஞரே! என் மனது பகவானுடைய குணங்களைக் கேட்பதிலும் அவனுடைய பாதாரவிந்தங்களைப் பணிவதிலும் விரைந்து செல்கின்றது. எல்லாமறிந்த மைத்ரேய மஹர்ஷீ! ஜீவனும் ப்ரக்ருதியும் ஆகிய இரண்டும் பரமாத்மாவுக்கு இருப்பிடமென்று நீர் மொழிந்தது மிகுதியும் அமைந்திருக்கின்றது. முன்பு சரீரத்திலுள்ள விகாரங்கள் ஆத்மாவுக்கு ஸம்பந்திக்கிறதில்லையென்பதை நிதர்சனமாகக்காட்டிச் சரீரங்களாகிய சேதனசேதனங்களின் தோஷங்கள் பரமாத்மாவுக்கு ஸம்பந்திக்கிறதில்லையென்று மொழிந்தீர். அதனால் பரமாத்[illegible]

சேதனங்களைச் சரீரமாகக்கொண்டு அவற்றில் வ்யாபித்திருக்கின்றானென்று ஏற்படுகின்றது. அது பரமாத்மாவுக்கு மிகவும் பொருந்துகின்றது. ஆனால் இந்த ஜகத்தெல்லாம் பரமாத்ம ஸ்வரூபமாகத் தோற்றவில்லையாகையால் இதில் அவன் இருக்கின்றானென்று எப்படி சொல்லமுடியுமென்று ஸந்தேஹம் உண்டாகக்கூடும். ஆயினும் ஆலோசித்துப் பார்க்கையில், அதற்கு இடம் இல்லை. ஜகத்காரண வஸ்துவாகிய பரமபுருஷன் எந்த ஜகத்திற்குள் ப்ரவேசித்திருக்கின்றானோ, அத்தகைய தான ஜகத்தைப்பரமபுருஷனுடைய ஸம்பந்த மற்றதாகத் தோற்றுகிற தென்பது ப்ராந்தியேயாம். தேவ மனுஷ்யாதி சரீரங்களில் ஜீவன் இருப்பது நங்கண்ணுக்குப் புலப்படவில்லை யென்பதைக் கொண்டு அவற்றில் ஜீவனே இல்லையென்று எப்படி சொல்லலாகாதோ, அப்படியே சேதனாசேதனங்களில் ஈஶ்வரன் இருப்பது நங்கண்ணுக்குத் தெரியாமையால் அவன் அவற்றில் அந்தராத்மாவாயில்லை யென்னலாகாது. ஜகத்தெல்லாம் பரப்ரஹ்ம ஸ்வரூபமாகாமல் ஸ்வதந்த்ரமா யிருக்கிறதென்னும் நினைவு ப்ராந்தியேயன்றி உண்மையான அறிவன்று. இங்ஙனமே தேஹத்தை ஆத்மாவாக நினைப்பது ப்ராந்தியேயாம். உலகத்தில் எவன் மிகுதியும் மூடனாயிருக்கின்றானோ, எவன்புத்தியைக்காட்டிலும் விலக்ஷணமான பரமாத்ம ஸ்வரூபனாகவே தன்னை அறிகின்றானோ, அவ்விருவரும் ஸுகமாயிருக்கின்றார்கள். ஒன்றுந்தெரியாத மூடனுக்கு என்ன ஸுகமென்னில் ஒன்றும் தெரியாமையே சிறிது ஸுகத்திற் கிடமாயிருக்கும். எவன் மிகுதியும் மூடனாகாமலும் நன்றாக ஆத்மஸ்வரூபத்தை அறியாமலும்கேவலம்ஸந்தேஹித்த மனமுடையவனாயிருக்கின்றானோ, அவனே வருத்தப்படுகின்றான். அவ[illegible]கமில்லை. ஆத்மாவாகத் தோற்றுகிற தேஹத்

தை ஆத்மாவென்றென்பதாக நிச்சயித்து, அந்த தேஹாத்மப்ரமத்தையும் உம்மைப்போன்ற பெரியோர்களின் ஸேவையால் நான் போக்கப் பார்க்கின்றேன். எந்தஸத்புருஷர்களைப் பணிதலால், நிர்விகாரனும் மதுகைடபர்களை ஸம்ஹரித்த மஹானுபாவனுமாகிய பகவானுடைய பாதாரவிந்தங்களில், விக்னங்களால் தடைபடாமல் கொழுந்துவிட்டுப் படர்வதும் ஸம்ஸார தாபங்களைப் போக்குவதுமாகிய அனுராக வெள்ளம் வளர்ந்து வருமோ, அப்படிப்பட்ட ஸத்புருஷர்களைப் பணிகையாகிற உபாயத்தினால் தேஹாத்மப்ரமத்தைப் போக்கிக் கொள்ள விரும்புகின்றேன். அந்தப்புருஷர்களைப் பணிதல் ஸுலபமாகக் கிடைக்கக் கூடியதோ வென்னில், அப்படியன்று; நெடுநாள்செய்த தவமஹிமையால் கிடைக்கக் கூடியதே யன்றி அற்பத்தில் கிடைக்காது. தவம் அற்பமாயிருக்கப் பெற்றவனுக்கு(தவமற்றவனுக்கு)பகவானை அடைவதற்குஉபாயமாகிய பாகவதர்களைப் பணிதல் துர்பலமே (எளிதில் கிடைக்கக் கூடியதன்று.)இந்த பகவத் பக்தர்களின் ஸந்நிதானத்தில், ப்ரஹ்மாதியான தேவர்களுக்கும் தேவனாகிய ஜனார்த்தனன் (பரமபுருஷன்) எப்பொழுதும் பாடப்பெற்றிருப்பான். பகவானிடத்தில் எப்பொழுதும் மெய்ம்மறந்து அவர்கள் அவனையே பாடிக்கொண்டிருப்பார்கள். அவர்களைப் பணிந்துகொண்டிருப்போமாயின், பகவானுடைய குணங்களைக் கேட்க நேரும். அங்ஙனம் அவனுடைய குணங்களைக் கேட்டுக்கொண்டிருப்போமாயின் அந்த பகவானிடத்தில் பக்தி அனாயாஸமாக உண்டாகும். முனிவர்களில்தலைவரான மைத்ரேயரே! பகவான் வ்யஷ்டிஸ்ருஷ்டிக்கு முன்பு, இந்த்ரியம் முதலிய கார்யங்களோடு கூட மஹத்து முதலிய தத்வங்களையும், அவற்றைக் கொண்டு ப்ரஹ்மாண்டத்தையும், அதில் ஸமஷ்டி புருஷனாகிய

ப்ரஹ்மாவையும் படைத்து ப்ரபுவாகிய பகவான் அந்த ப்ரஹ்மாவினிடத்தில் ப்ரவேசித்தானென்று மொழிந்தீர். எந்தப் பரமபுருஷன் காரணமான வஸ்துக்களுக்கெல்லாம் காரணமா யிருப்பவனோ, ஆயிரம் கால்களும் துடைகளும் புஜங்களும் உடையவனோ, எவனிடத்தில் இந்த உலகங்களெல்லாம் நெருக்க மில்லாமல் விசாலமாக வீற்றிருக்குகின்றனவோ, அப்படிப்பட்ட பரமபுருஷன் அந்த ப்ரஹ்மாவினிடத்தில் ப்ரவேசித்தானென்றீர். மற்றும், ப்ராணன் அபானம் வ்யானம் உதானம் ஸமானம் என்பவை ஐந்தும் நாகம் கூர்மம் க்ருகரம் தேவதத்தம் தனஞ்ஜயம் என்பவை ஐந்தும் ஆகப்பத்து வகைப்பட்டதும் ஸத்வரஜஸ்தமோகுணங்கள் நிறைந்ததுமாகிய ப்ராணனும் சப்தாதி விஷயங்களும் ஜ்ஞானேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் எந்த வைராஜ புருஷனென்கிற பரமாத்மாவிடத்தில் இருக்கின்றனவோ; மற்றும், எவனிடத்தினின்று நீர் சொன்ன ப்ராஹ்மணாதி வர்ணங்களெல்லாம் உண்டாயினவோ; அப்படிப்பட்ட வைராஜ புருஷனுடைய விபூதிகளை எங்களுக்குச் சொல்வீராக. எந்த ப்ரஹ்மாண்டத்தில் பிள்ளை பேரன் கொள்பேரன்களோடும் மற்றும் தந்தமது வம்சத்தில் பிறந்த பந்துக்களோடும் பலவகைப்பட்ட தேஹங்களையுடைய ஜனங்கள் வஸித்திருந்தனவோ; மற்றும் இந்த ப்ரஹ்மாண்டம் எந்த ப்ரஜைகளால் வ்யாப்தமாயிருக்கின்றதோ, அப்படிப்பட்ட ப்ரஜைகளின் பிரிவுகளை எமக்கு மொழிந்தருள்வீராக. மரீசி முதலிய ப்ரஜாபதிகளுக்கு ப்ரபுவாகிய அந்த ப்ரஹ்மதேவன் ப்ரஜாபதிகளைப் படைத்தவிதம் சொல்வீராக. ஸமஷ்டி புருஷனாகிய அந்த ப்ரஹ்மதேவன் ப்ரஜாபதிகளொன்பதின்மரைப்படைத்து அவருடைய புத்ர பௌத்ராதி பரம்பரைகளால் இந்த ப்ரஹ்மாண்டம் முழுவதும் எப்படி நிரம்பச்

செய்தானோ, அந்த விதத்தை மொழிவீராக. மற்றும், ஒன்பது வகைப்பட்ட ப்ராக்ருத ஸர்க்கங்களையும், சதுர்முக ஸ்ருஷ்டிக்குப் பிற்பட்ட ஸர்க்கங்களையும் ஸ்வாயம்புவர்முதலிய பதினான்கு மனுக்களையும், மன்வந்தரங்களில் எவரெவர் தலைவர்களோ அவர்களையும், அந்த மனுக்களுடைய வம்சத்தில் பிறந்தவர்களையும் மன்வந்தர அதிபதிகளின் வம்சத்தில் பிறந்தவர்களையும், அவ்வம்சங்களைத் தொடர்ந்த சரித்ரங்களையும், மைத்ரேயமஹர்ஷீ! பூமிக்கு மேல் பாகத்திலும் கீழ்பாகத்திலும் எங்கெந்த லோகங்கள் உண்டோ, அவற்றின் ஸ்வரூபத்தையும் பரிமாணத்தையும், பூலோகத்தின் பரிமாணத்தையும்மொழியவேண்டும். திர்யக்ஜாதிகள் மனுஷ்யர்கள் தேவதைகள் ஸர்ப்பங்கள் பக்ஷிகள் ஜராயுஜங்கள் ஸ்வேதஜங்கள் அண்டஜங்கள் உத்பிஜ்ஜங்கள் ஆகிய இவ்வகை ப்ராணிகளின் ஸ்ருஷ்டி பேதத்தையும் எங்களுக்குச் சொல்வீராக. ரஜஸ்ஸு முதலிய குணங்களை முக்யமாகவுடைய ஆவேசாவதாரங்களாகிய ப்ரஹ்மாதிகளால் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கின்ற ஸ்ரீநிவாஸனாகிய பரமபுருஷனுடைய கம்பீரச் செயல்களைச் சொல்வீராக. எந்தச் செயல்களால் உலகங்களின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்கள் நடக்கின்றனவோ, அப்படிப்பட்ட செயல்களைக்கேட்க விரும்புகின்றேன். வர்ணாஸ்ரமங்களின் பிரிவுகளையும், அவற்றின் அடையாளங்களையும் ஆசாரங்களையும் ஸ்வபாவங்களையும் வேதங்களின் விபாகத்தையும் (பிரிவையும்) சொல்லவேண்டும். மற்றும், யாகங்களின் விஸ்தாரங்களையும் பலன்களை விரும்பாமல் செய்யும் கர்மயோகத்தின் மார்க்கங்களையும் ப்ரவ்ருத்தி தர்மங்களைத் துறந்து பகவானையேஉபாயமாகப் பற்றுகையாகிற ப்ரபத்தி மார்க்கத்தையும், ஜ்ஞானயோக மார்க்கத்தையும், நேரே பகவான் மொழிந்த பாஞ்சராத்ர

சாஸ்த்ரத்தையும், வைதிகமார்க்கத்தினின்று வெளிப் பட்ட பாஷண்டிகளின் மார்க்கத்தினுடைய வைஷம்யத் தையும், ப்ரதிலோம ஜாதிகள் ஏற்பட்ட விதத்தையும், ஜீவாத்மாக்களுக்கு ஸத்வாதி குண தர்மங்களால் விளை யும் பலன்கள் எவ்வெவை உண்டோ அவற்றையும் சொல்ல வேண்டும். அன்றியும், தர்ம அர்த்த காம மோக்ஷங்களை ஒன்றோடொன்று விரோதமில்லாமல் ஸாதித்துக்கொ டுக்கும் உபாயங்களையும், க்ருஷி முதலிய வ்யாபாரங்களின் ஏற்பாட்டையும், அபராதஞ் செய்தவர்களைச் சிக்ஷிக்கை யாகிற தண்ட நீதியின் ப்ரகாரத்தையும், வேதங்களில் விதிக்கப்பட்ட ஸந்த்யா வந்தனம் முதலிய நித்யகர்மங் களின் அனுஷ்டான விதியையும் எங்களுக்குத் தனித் தனியே மொழிவீராக. அந்தணர் தலைவரான மைத்ரே யரே! ச்ராத்த விதிகளையும், அர்யமன் முதலிய பித்ருக் களின் ஸ்ருஷ்டியையும், ஸூர்யன் முதலிய க்ரஹங்களை யும், அச்வினி முதலிய நக்ஷத்ரங்களையும், மற்றுமுள்ள ஸாதாரண நக்ஷத்ரங்களையும், அவை காலநுட்பங்களை அறிவிக்கும் ப்ரகாரத்தையும் சொல்லவேண்டும். தான தர்மத்தையும், க்ருச்ச்ரம் சாந்த்ராயணம் முதலிய தவத் தின் வழிகளையும், யாகம்முதலிய ச்ரௌத கர்மங்களுக் கும் குளம் கிணறு வெட்டுவித்தல் முதலிய ஸ்மார்த்தகர் மங்களுக்கும் உள்ள பலன்களையும், தேசாந்தரம் சென்ற வன் அனுஷ்டிக்கவேண்டிய தர்மத்தையும், புருஷனுக்கு ஆபத்து நேரிடில் அப்பொழுது அவன் ஆசரிக்கவேண் டும் தர்மம் எதுவோ அதையும் சொல்லவேண்டும். தர் மங்களை நடத்துமவனும் ப்ராணிகளுக்கு அந்தராத்மா வாயிருப்பவனுமாகிய பகவான் எந்த மார்க்கத்தினால் ஸந் தோஷம் அடைவானோ, எத்தகையர்க்கு அவன் அருள் புரிவானோ, அனகரே! அதையெல்லாம் எனக்குச்சொல்ல

வேண்டும். அந்தணர் தலைவரான மைத்ரேய மஹர்ஷீ! வேறு கதியற்றுத் தம்மையே சரணம் அடைந்தவரிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவரான குருக்கள், தம்மைப் பணிந்து வரும் சிஷ்யர்களுக்கும் புத்ரர்களுக்கும், அவர்கள் கேளாத விஷயங்களையும் சொல்லுவார்கள். (எங்ஙனம் புதல்வர்கள் கேளாத விஷயங்களையும் அவர்களிடத்தில் ப்ரீதியாகிச் சொல்லுவார்களோ, அங்ஙனமே சிஷ்யர்களும் விதிப்படி அநுஸரித்திருப்பார்களாயின், அவர்கள் கேளாத விஷயங்களையும் சொல்லுவார்கள்). அவர்கள் தீன வத்ஸலராகையால் எதையும் ஒளிக்கமாட்டார்கள். ஆகையால் நான் கேளாத ரஹஸ்யார்த்தம் ஏதேனும் உண்டாயின், அதையும் எனக்குச் சொல்ல வேண்டும். அறிஞரான மைத்ரேயரே! ப்ருதிவி (பூமி) முதலிய தத்வங்களின் ப்ரளயம் எத்தனைவகைப்பட்டது? ப்ருதிவி முதலிய தத்வங்களெல்லாம் ஒன்று சேர்ந்து பரமகாரணமான பரமபுருஷனிடத்தில் மறைகின்றனவா? அல்லது, முன் முன்புள்ள தத்வங்கள் மேன்மேலுள்ள தத்வங்களில் மறைகின்றனவா? அல்லது இரண்டு ப்ரகாரங்களும் உண்டா? அந்த ப்ரளயகாலத்தில் ஸம்ஹாரத்திற்கு விஷயமாகாமல் இந்த பகவானைப் பணிந்திருப்பவர் எவர்? எவரெவர் ஸம்ஹாரத்திற்கு உட்படுவார்கள்? ஜீவாத்மாவின் அஸாதாரண ப்ரகாரத்தையும், அவனுடைய தர்மி ஸ்வரூபத்தையும், அங்ஙனமே பரமாத்மாவின் அஸாதாரண ப்ரகாரத்தையும், அவனுடைய தர்மிஸ்வரூபத்தையும், ஆசார்ய சிஷ்யர்களுக்கு ப்ரயோஜனமாயிருப்பதும் சாஸ்த்ரங்களில் ஏற்படுவதுமாகிய ஜ்ஞானத்தையும், அந்த ஜ்ஞானத்திற்கு வேண்டிய ஸாதனங்கள் எவ்வெவை பண்டிதர்களால் கூறப்படுகின்றனவோ அவற்றையும் சொல்லவேண்டும். ஆசார்யோபதேசமில்லாமல் ப்ரா

ணிகளுக்கு சாஸ்த்ரஜ்ஞானமும் அதன் மூலமாய் விளையக்கூடிய பக்தியும் வைராக்யமும் எப்படி உண்டாகும்? ஆகையால் பகவானுடைய செயலை அறியவிரும்பி இங்ஙனம் கேள்விகளைக் கேட்கின்றவனும் ப்ரக்ருதியின் மஹிமையால் அறிவு அழியப்பெற்றவனும் [1] அந்தன் போன்றவனுமாகிய எனக்கு இவற்றையெல்லாம் குறைவற மொழியவேண்டும். நீர் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவராகையால் எனக்கு இவற்றையெல்லாம் சொல்லவேண்டும். வேதங்களை ஓதுவதும் ஓதுவிப்பதும் அவற்றின் பொருள்களைமுறையே உணர்தலும், வேதங்களில் விதிக்கப்பட்ட யஜ்ஞாதிகளை அனுஷ்டித்தலும், உபவாஸம் முதலிய தவங்களும் பகவானை உள்ளபடி அறிந்து உபாஸித்தலும் ஆகிய இவையெல்லாம், அனகரே! ஸம்ஸாரத்தில் அழுந்தி வருந்தும் ஜீவனுக்கு அதினின்று மீண்டு பகவானைப் பெறுதற்குவேண்டிய உபாயத்தை உபதேசித்து அபயங்கொடுக்கையாகிற தர்மத்தின் பதினாறில் ஒரு பாகத்திற்கும் ஈடாகமாட்டா; அது செய்யுங்கார்யத்தையுஞ் செய்ய வல்லமையற்றவைகளே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—குருஶ்ரேஷ்டனாகிய விதுரனால் இங்ஙனம் புராண விஷயங்களைப்பற்றி வினவப்பெற்ற முனிஶ்ரேஷ்டரான மைத்ரேயர் பகவானுடைய கதைகளைச் சொல்லும்படி தூண்டப்பெற்றவராகி மிகுதியும் ஸந்தோஷம் வளரப்பெற்றுக் கேள்விகள் அழகாயிருக்கின்றமையாலும் மறுமொழி கூறத்தகுந்தவைகளாகையாலும் புன்னகை செய்துகொண்டே அவரைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார். ஏழாவது அத்யாயம் முற்றிற்று.

1. குருடன்.

## மைத்ரேயர் விதுரருடைய கேள்விகளுக்கு மறுமொழி கூறுதல்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஆ! பூருவின்வம்சம்ஸத்புருஷர்களால் கொண்டாடத் தகுந்தது. ஏனென்னில், பகவானையே முக்யமாகவுடையவனும் (அடையத்தகுந்த வஸ்துவும் அதை அடைவதற்குவேண்டிய உபாயமுமாகப் பற்றினவனும்) லோகபாலனான யமனுடைய அம்சமுமாகிய நீ இந்தப் பூருவம்சத்தில் பிறந்தாயல்லவா? ஆகையால் பூருவின் வம்சம் ஸத்புருஷர்களால் வெகுமதிக்கத்தகுந்த தென்பதில் ஸந்தேஹமில்லை. நீ பரமபுருஷனுடைய கீர்த்திகளின் பரம்பரையைஅடிக்கடி மிகுதியும் புதிது புதிதாகச் செய்கின்றனை. பகவானுடைய புகழ்களை அடிக்கடி கேட்டிருப்பினும், அவற்றில் த்ருப்தி உண்டாகப்பெறாமல் என்றும் கேட்டறியாதவன்போல் புதிது புதிதாகக் கேட்கின்றனை. இது உனக்கு பகவானிடத்திலுள்ள பக்தியைக் காட்டுகின்றது. இப்படிப்பட்ட உன்னுடைய ஸம்பந்தத்தினால் பூருவம்சம் பெருமை பெறுகின்றது. அங்ஙனம் உன்னால் வினவப்பெற்றவனும் ஸதாசார்யராகிய ஸ்ரீபராசர பகவானுடைய க்ருபையால் பராவர தத்வங்களை உணர்ந்தவனுமாகிய நான் நீ வினவின கேள்விகளுக்கு உத்தரம் சொல்ல விரும்பி ஸ்ரீபாகவதமென்னும் புராணத்தைச்சொல்லத்தொடங்குகின்றேன். அல்ப ஸுகங்களைப் பெறுதற்காக மஹத்தான துக்கத்தை அடைகின்ற லோகங்கள் படுகிற அம்மஹா துக்கத்தைப் போக்கும்பொருட்டு ஸங்கர்ஷண பகவான் ஸநகாதி மஹர்ஷிகளுக்கு எந்த பாகவத புராணத்தைத் தானே நேரில் உபதேசித்தானோ, அப்படிப்பட்ட பாகவத புராணத்தை நான் உனக்குச் சொல்லுகிறேன். ஸனத்குமாரர் முதலிய நான்கு முனிவர்கள் சேதனாசேதன ரூப

மான இந்த ஜகத்திற்காட்டிலும் விலக்ஷணமான பரமாத்மாவின் உண்மையை அறிய விரும்பி, பாதாளத்தில் உட்கார்ந்திருப்பவரும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவரும் நித்ய ஸூரிகளில் முதன்மையுடையவரும் ரஜஸ் தமஸ் ஸுக்களால் தடைபடாத ஸத்வமுடையவரும் (சுத்த ஸத்வ மயமான திவ்ய மங்கள விக்ரஹமுடையவரும்) ஆகிய ஸங்கர்ஷண தேவனைக் கிட்டி முறைப்படி வினவத் தொடங்கினார்கள். எவனை வாஸுதேவனென்று மொழிகின்றார்களோ, அத்தகையனும் தனக்குக் காரணமுமாகிய பகவானை எல்லாவிதத்திலும் வெகுமதிக்கின்றவரும் ப்ரத்யகாத்மாவிடத்தில் திருப்பப்பட்ட தாமரை மொட்டுகள் போன்ற கண்களைப் பண்டிதர்களின் க்ஷேமத்திற்காகச் சிறிது திறக்கின்றவருமாகிய அந்த ஸங்கர்ஷண தேவனை அடைந்து அம்முனிவர்கள் வினவத் தொடங்கினார்கள். அம்முனிவர்கள் கங்காநதியின் ஜலங்களால் நனைந்த தமது ஜடாபாரங்களால் அவரது ஸ்ரீபாதங்களை இடும்படியான பீடமாகிற தாமரை மலரை ஸ்பர்சித்துக்கொண்டு நமஸ்காரஞ்செய்து நின்றார்கள். எவருடைய[1] பாதபீடபத்மத்தை நாகராஜ கன்னிகைகள் தமக்கு மேலான வரன் கிடைக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் ப்ரேமத்துடன் பலவகை உபஹாரங்களைக்கொண்டு பூஜிக்கின்றார்களோ, அப்படிப்பட்ட அந்த ஸங்கர்ஷணதேவனுடைய பாதபீடபத்மத்தைத் தமது சிரங்களால் ஸ்பர்சித்துக்கொண்டு நமஸ்கரித்து நின்றார்கள். இந்த பகவானுடைய செயல்களை அறிந்தவர்களும் ப்ரீதியின் மிகுதியால் வாய் தழுதழுத்துப் பதங்கள் தடுக்கப்பெற்ற வசனத்துடன் அவற்றை அடிக்கடி பாடுகின்றவருமாகிய அம்முனிவர்

1. பாதங்களை இடுவதற்காகப் பத்மாகாரமாய் ஏற்படுத்தின ஓர் ஆஸனம்; அல்லது பாதபீடமாகிற பத்மம்—தாமரை மலர்.

கள் திவ்யரத்னங்கள் இழைக்கப்பெற்ற ஆயிரம் க்ரீடங்களால் விளங்குகின்ற ஆயிரம் படங்களையுடைய அந்த ஸங்கர்ஷண தேவனைப் பார்த்து [1] இங்ஙனம் வினவினார்கள். நிவ்ருத்தி தர்மத்தில் (ப்ரபத்தி மார்க்கத்தில்) மிகுதியும் மனவிருப்பமுடைய ஸனத்குமாரர் முதலிய அம்முனிவர்களுக்கு மிகுதியும் ஜ்ஞானாதிகரான ஸங்கர்ஷண பகவான் அந்த பாகவதத்தை உபதேசித்தார். அந்த ஸனத்குமாரரும் ஸாமக்யாயனரால் முறைப்படி அனுஸரித்து வினவப் பெற்றுச் சிஷ்ய தர்மங்களாகிற வ்ரதங்களில் சிறிதும் தவறாது நிலைநின்ற அவருக்கு உபதேசித்தார். நிவ்ருத்தி தர்மத்தில் முயன்ற மஹாயோகிகள் ஆசரிக்கும் தர்மமார்க்கத்தினின்று தவறாமல் அனுஷ்டிப்பவர்களில் முக்யராகிய அந்த ஸாமக்யாயனர் பகவானுடைய விபூதிகளைச் சொல்ல விரும்பித் தம்மை அனுஸரிக்கின்றவரும் எமது குருவுமாகிய பராசரருக்கும் ப்ருஹஸ்பதிக்கும் உபதேசித்தார். தயாளுவாகிய அந்தப் பராசரமுனிவர் 'உனக்குப் பரதேவதையின் உண்மையெல்லாம் நன்றாகத் தெரியும்' என்று வரங்கொடுக்கப்பெற்றுப் பேரறிஞராயிருந்தார். அவர் எனக்கு அந்தப் புராணத்தை உபதேசித்தார். அங்ஙனம் பராசர முனிவரால் பாகவத புராணம் உபதேசிக்கப்பெற்ற நான், குழந்தாய்! விதுரனே! ச்ரத்தை யுடையவனும் அனுஸரிக்கின்றவனுமாகிய உனக்கு இந்த பாகவதத்தை உபதேசிக்கிறேன். தன்னைத் தான் அனுபவிக்கையாலுண்டாகும் மஹானந்தத்தில் ஆழ்ந்திருக்கின்ற பகவான் ஜகத்தைச் சேர்ந்த வ்யாபாரங்கள் எவையும் இல்லாமையால் யோக நித்ரைக்குரிய அவகாசம் நேரப்பெற்றுத் தானொருவனே ஆதிசேஷனாகிற படுக்கையில் படுத்து தன்னைத்

1 இங்ஙனம்—நீ எங்ஙனம் வினவினையோ, இங்ஙனமே

தான் அனுபவிக்கையாகிற யோக நித்ரையால் எப்பொழுது கண்களை மூடிக்கொண்டானே, அப்பொழுது இந்த ஜகத்தெல்லாம் ஆவரண ஜலத்தினல் சூழப்பெற்றிருந்தது. (இந்த ஜகத்திற்குக் காரணமான பூதங்களின் கூட்டம் ஆவரண ஜலத்தில் ஆழ்ந்திருந்தது. ஆவரண ஜலம் வரையில் ஸ்ருஷ்டித்து அந்த ஆவரண ஜலத்தில் சயனித்துக் கொண்டிருந்தான்). அவன் தன் சரீரத்திற்குள் அடங்கின பூத ஸூக்ஷ்மங்களை யுடையவனுகிக் காலசக்தியைத் தூண்டவிரும்பித் தன்னுடைய ஸ்தானமாகிய ஜலத்தில், அக்னி, காஷ்டத்தில் தன் வீர்யத்தை மறைத்துக் கொண்டிருப்பதுபோல் வஸித்திருந்தான். க்ருதயுகம் முதலிய நான்கு யுகங்கள் அடங்கிய காலம் போன்ற எத்தனையோ காலம்வரையிலும் அந்த பகவான் ஜலத்தில் வாஸஞ்செய்பவனுகி லோக ஸ்ருஷ்டியாகிற கார்யத்தை நிறைவேற்ருமலே இருந்து தன் ஸங்கல்பத்தினல் தூண்டப்பெற்ற காலசக்தியுடன், ஜகத்தைப் படைப்பதற்குக் காரணங்களான பூத ஸூக்ஷ்மங்களெல்லாம் தனது சரீரமாகிய ப்ரக்ருதியில் அமைந்திருக்கக் கண்டான். அந்தப் பரமபுருஷன் தன் சரீரத்தில் அடங்கியிருக்கின்ற பூத ஸக்ஷ்மங்களின் கூட்டத்தைத் தன் ஸங்கல்ப ஜ்ஞானத்தினல் தூண்டினன். அங்ஙனம் தூண்டப்பெற்ற அந்த பூத ஸூக்ஷ்மங்களின் கூட்டம் காலவசத்தினல் ரஜோகுணம் தலையெடுக்கப் பெற்று ஜகத்தை ஸ்ருஷ்டிப்பதற்காக அவனுடைய நாபி ப்ரதேசத்தினின்று ஓர் தாமரை மலராய் வெளித்தோற்றிற்று. பரமபுருஷனையே காரணமாகப் பெற்ற அந்த பூத ஸூக்ஷ்மமாகிற தாமரை மலரானது, ஜீவாத்மாக்களின் அத்ருஷ்டத்தை அறிவிப்பதாகிய காலத்தினல் தூண்டப்பெற்று அகன்றிருக்கிற அந்த ஆவரணஜலம் முழுவதையும் ஸூர்யன்

போல் தன் காந்தியால் விளங்கச்செய்துகொண்டு சீக்ர
தில் மேல்தோற்றியது. விதுரனே! ஜீவாத்மாக்கள் அனு
விக்கத்தகுந்த ஸமஸ்த வஸ்துக்களையும் விளங்கச் செய்
தான அந்த ப்ரஹ்மாண்டமாகிற பத்மத்தைப் படைத்த
னாகிய அந்த ஸ்ரீவிஷ்ணுவானவன் அவ்வண்டத்திற்குள்
அந்தர்யாமியாய் ப்ரவேசித்தான். ஸ்வயம்புவும் வேத
ஸ்வரூபனும் உலகங்களைப் படைக்கின்றவனுமாகிய,
ப்ரஹ்மதேவன், அந்த ப்ரஹ்மாண்டமாகிற தாமரை மலரி
னின்று உண்டானான். அந்த ப்ரஹ்மதேவன் அந்த ப்ரஹ்
மாண்டமாகிற தாமரை மலரின் காயின்மேல் உட்கார்ந்து
ப்ரபஞ்சத்தைக் காணப்பெறாதவனாகி அதைக் கண்டுபிடிக்
கும் பொருட்டு ஆகாயத்தில் கண்களை மலரவிழித்துக்
தாமரைமலரின் மத்யத்தில் நாற்றிசைகளிலும் சுழற்றிப்
பார்த்துக்கொண்டிருக்கையில், நான்கு முகங்கள் உண்
டாகப் பெற்றான். அப்பால் ப்ரளயகாலத்தில் வீசுங் காற்
றினால் சுழல்கின்ற பெருப்பெரிய அலைகளின் வரிசைகள்
அமைந்த மஹா ஜலத்தினின்று முளைத்த ஜகத்தாகிற
தாமரை மலரின்மேல் உட்கார்ந்திருக்கின்ற ஆதிதேவனா
கிய (ஸ்ருஷ்டிக்கு முதலில் உண்டான தேவனாகிய) அந்
நான்முகன் பத்மஸ்வரூபமாகத் தோற்றின ப்ரபஞ்சத்தின்
ஸ்வரூபத்தையும் தன்னையும் உள்ளபடி அறியப்பெறாதிருந்
தான். அந்த ப்ரஹ்மதேவன் அங்ஙனம் உண்மை தெரி
யாமல் சிந்திக்கத்தொடங்கி 'இதோ தோற்றுகின்ற நான்
யாவன்? தனித்துத் தோற்றுகின்ற இந்தத் தாமரைமலர்
ஜலத்தில் எங்கிருந்து உண்டாயிற்று? எந்த ஆதாரத்தின்
மேல் இந்தத் தாமரை இருக்கின்றதோ, அத்தகையதான
ஓர்வஸ்து, இந்த ஜலத்தின் கீழ் இருக்கவேண்டுமல்லவா?
எந்தவஸ்துவும் ஓராதாரமில்லாமல் நிற்காதே. இந்தத் தா
மரை மலரோ நமக்குத் தோற்றுகிறதாகையால் இதற்கு

ஓராதாரம் அடியில் இருந்தே தீரவேண்டும்' என்று நிச்சயித்தான். அந்த ப்ரஹ்மதேவன் இங்ஙனம்ஆலோசித்துக் கொண்டு அந்தத் தாமரை மலருடைய தண்டின் த்வாரத்து வழியாய் ஜலத்திற்குள் நுழைந்தான். அவ்வயன் தண்டு உறுதியாயிருக்கப் பெற்ற அக்கமலத்தின் ஆதாரத்தைத் தேடிக்கொண்டே எவ்வளவு தூரம் அடியில் சென்றும் அப்பொழுது அதன் ஆதார வஸ்துவைக் காணப்பெற்றிலன். வாராய் விதுரனே! கங்குகரையில்லாமல் பேரிருள்போல் எந்த உருவங்களும் தெரியாதபடி மறைக்கின்ற அந்த மஹா ஜலத்தில் தன்னைப் படைத்த காரண வஸ்துவைத் தேடிக்கொண்டிருக்கையில், நெடுங்காலம் கடந்தது. காலம் மூன்று நேமிகளையுடையது. மூன்று நேமிகள் மூன்றுவகைப்பட்ட நாட்களே. அவற்றில் சில நாட்கள் ஏற்றமுடையவைகளும், சில குறைவுடையவைகளும், சில ஸமங்களுமாயிருக்கும். மூன்றுவகைப்பட்ட இந்நாட்களே அந்தக் காலமென்கிற சக்ரத்திற்கு மூன்று நேமிகள். இக்காலம் பிறப்பில்லாத பகவானுடைய ஆயுதமாகிய ஸுதர்சனமென்னும் சக்ரமே. இது ப்ராணிகளுக்கு பயத்தை விளைவித்துக்கொண்டு அவரது ஆயுளைக் கடத்துகின்றது. இத்தகையதான காலத்தில் நூறுண்டுகள் சென்றன. அந்த ப்ரஹ்மதேவன் அங்ஙனம் அத்தனை காலம் தேடியும் அக்கமலத்தின் ஆதார வஸ்துவைக் கண்டறியமுடியாமையால், அதைக் கண்டறியவேண்டுமென்னும் விருப்பம் சிறிதும் நிறைவேறப் பெருமலே அதைத் தேடும் ப்ரயத்னத்தினின்று திரும்பி மீளவும் தனது ஸ்தானமாகிய கமலத்தின் கர்ணிகையைச் சேர்ந்து மெல்ல மெல்ல ஸ்வாஸங்களை அடக்கி இந்த்ரியங்களையும் விஷயங்களினின்று மீட்டுக்கொண்டு ஸமாதியாகிற உபாயத்தைக் கைப்பற்றி உட்கார்ந்தான்.

அந்த ப்ரஹ்மதேவன் நூறு ஸம்வத்ஸரங்கள் அடங்கின காலம் வரையிலும் ஸமாதியோகத்தைக் குறைவற நடத்தி அதனால் தெளிவான அறிவு நேரப்பெற்று, எதை முன்பு ஜலத்தில் வெகுதூரம் தேடியும் காணப்பெறவில்லையோ, அவ்வஸ்துவாகிய பரமபுருஷன் தானே மனத்தில் தோற்றப்பெற்றுக் கண்டறிந்தான். தாமரைத் தண்டினுடைய நூல்போல் வெளுத்தும் நீண்டதுமாகிய ஆதிசேஷனுடைய உடலாகிறபடுக்கையில் சயனித்துக்கொண்டிருக்குந் தனியனாகிய பரமபுருஷனை அவ்வயன் கண்டான். அவ்வாதிபுருஷனுக்குப் படுக்கையாகிய ஆதிசேஷன், படங்களால் நீண்டிருக்கின்ற தன் சிரங்களில் தரித்திருக்கின்ற ரத்னகிரீடங்களில் இழைத்த ரத்னங்களின் காந்திகளால் அந்தகாரமெல்லாம் தொலையப்பெற்ற ப்ரளய ஜலத்தில் வீற்றிருந்தான். அத்தகைய ஆதிசேஷனாகிற படுக்கையில் பீதாம்பரம் உடுத்து ஸ்வர்ணமயமான கிரீடங்களைத் தரித்து ரத்னஹாரங்களும் துளஸிமாலைகளும் முத்துமாலைகளும் பூமாலைகளும் அணிந்து நீண்ட புஜதண்டங்களும் அழகிய பாதங்களும் விளங்கப் பெற்றுச் சயனித்துக்கொண்டிருந்த அப்பரமபுருஷன், ஸந்த்யாகாலத்து மேகமே வஸ்த்ரமாகச் சூழ்ந்திருக்கப்பெற்றதும் ஸ்வர்ணமயமான சிகரங்கள் பல நிறைந்ததும் ரத்னங்களும் அருவிகளும் அழகிய ஓஷதிகளும் புஷ்ப ஸமூஹங்களுமாகிற வனமாலைகளும் அமைந்து மூங்கில்களாகிற புஜங்களும் வ்ருக்ஷங்களாகிற பாதங்களும் உடையதாகி அழகாயிருக்கின்ற ஓர் மரகத பர்வதத்தின் சோபையைத் திரஸ்கரிப்பவன்போல் ப்ரஹ்மதேவனுக்குப் புலப்பட்டான். அன்றியும் அவன் நீளத்திலும் அகலத்திலும் தனக்குத் தகுந்த அளவுடையதும் மூன்று லோகங்களையும் உள்ளே அடக்கிக்கொண்டிருப்



474. மஹா ஜலத்தில் ஆதிசேஷன் மேல் சயனித்துக் கொண்டிருக்கிற பகவானை ப்ரஹ்மதேவன் ஸ்தோத்ரம் செய்தல்.

பதும் அற்புதங்களும் மனுஷ்யர்க்குத் தகாமல் திவ்யங்களுமான ஆபரணங்களின் சோபையும் அத்தகைய ஆடைகளின் சோபையும் அமைந்து விளங்குவதுமாகிய தேஹத்தினால் கம்பீரமான வேஷத்துடன் தோற்றினான். அவனுடைய மேனியின் அமைப்பே அவனுக்கு ஓர் அற்புத அலங்காரம் போலிருந்தது. மற்றும், அவன், தாந்தாம்விரும்பினவிருப்பங்களைப் பெறுதற்காக ஒன்றோடொன்று கலசாத வர்ணாஸ்ரம தர்மங்களாகிற வழிகளில் நின்று ஆராதிக்கின்ற புருஷர்களின் விருப்பங்களைக் கறப்பதும் சந்த்ரன்போன்ற நகங்களின் காந்திகளால் நிறைந்த விரல்களாகிற அழகிய இதழ்களுடையதுமாகிய தன் பாதமாகிற பத்மத்தைக் கருணையால் காண்பித்துக்கொண்டிருந்தான். அவன் தன்னைப் பணியும் ஜனங்களின் துக்கத்தைப் போக்குகின்ற புன்னகை அமைந்ததும் திகழ்கின்றகுண்டலங்களால்அலங்கரிக்கப் பெற்றதும் கோவைக்கனிபோன்றஅதரத்தின்காந்தியால் சிவந்திருப்பதும் அழகிய மூக்கும் புருவமும் அமைந்து விளங்குவதுமாகிய முகத்தினால் தன்னைப் பணிபவரை வெகுமதிக்குந் தன்மையனாயிருந்தான். குழந்தாய்! விதுரனே! அன்றியும், அவன், கடம்பக்கதிரின் தாதுபோல் பொன்னிறமுடைய வஸ்த்ரம் தரித்து நிதம்பத்தில் மேகலை அணிந்து, பெருவிலை யுடையதும் ஸ்ரீவத்ஸம் பொருந்தின மார்பில் மிகவும் அழகாய் விளங்குவதுமாகிய முத்துமாலையால் அலங்காரமுற்றிருந்தான். மற்றும், விலையுயர்ந்த தோள்வளைகளும் சிறந்த பலவகை ரத்னங்களும் அணிந்த புஜதண்டங்களை புஷ்பம் முதலியவை நிறைந்த பலவாயிரம் கிளைகளாகப் பெற்றதும் அவ்யக்தமான மூலமுடையதும் ஸர்ப்ப ராஜனான ஆதிசேஷனுடைய படங்களால் சுற்றப்பெற்ற ஸ்கந்தங்களையுடையது

மாகிய பரமபுருஷனாகிற சந்தன வ்ருக்ஷத்தைத் ப்ரஹ்ம தேவன் கண்டான். அப்பரமபுருஷன் ப்ரஹ்மதேவனுக்கு ஓர் சந்தன வ்ருக்ஷம்போல் தோற்றினான். அங்கதங்களும் மற்றும் பலவகைச் சிறந்த ரத்னங்களும் அணிந்த அவனது புஜதண்டங்கள் புஷ்பங்களும் தளிர்களும் காய்களும் பழங்களும் அமைந்த பலவாயிரங் கிளைகள்போல் விளங்கின. வ்ருக்ஷத்தின் வேர் பூமியில் மறைந்து வெளித் தோற்றாதிருக்கையால் கண்டுபிடிக்க முடியாதிருக்கும். பரமபுருஷன் தானே தனக்குக் காரணமாகையால் வேறொரு காரணமில்லாமையால் 'இவனுக்குக் காரணம் இன்னது' என்று அறியமுடியாதிருப்பன். வ்ருக்ஷம் பலன்களை விளைப்பதுபோல், பரமபுருஷன் ப்ரபஞ்சங்களைப் படைப்பான். சந்தனமரத்தில் ஸர்ப்பங்கள் சுற்றிக் கொண்டிருக்கும். இவன் ஸர்ப்பராஜனாகிய ஆதிசேஷனால் அணையப் பெற்றிருப்பான். இத்தகையனாகையால் அவன் சந்தன வ்ருக்ஷம்போல் தோற்றினான். ஜங்கம ஸ்தாவரங்களுக்கு இருப்பிடமும் ஆதிசேஷனுக்கு பந்துவும் ஜலத்தினால் சூழப்பெற்றவனும் கிரீடங்களின் வரிசையாகிற ஸ்வர்ணமயமான கொடுமுடிகளை யுடையதும் ஸ்பஷ்டமாய்த் தோற்றுகிற கௌஸ்துபமென்னும் ரத்னத்தினால் விளங்குகின்ற மத்ய ப்ரதேசத்தை யுடையதுமாகிய அந்தப் பரமபுருஷனாகிற பர்வதத்தைக் கண்டான். பர்வதம் ஜங்கமங்களான பலவகை ஜந்துக்களுக்கும் ஸ்தாவரமான வ்ருக்ஷம் முதலிய பலவற்றிற்கும் இருப்பிடமாயிருக்கும். பரமபுருஷன் ஸமஸ்த சராசரங்களுக்கும் இருப்பிடமாயிருப்பான். பர்வதம் ஸர்ப்பங்களுக்கு பந்துபோல் ஸுகத்தை விளைத்துக்கொண்டிருக்கும். இவன் ஸர்ப்பராஜனாகிய ஆதிசேஷனுக்கு ஸுகத்தை விளைத்துக் கொண்டிருப்பான். மைனாகம் முதலிய சில பர்வதங்

கள் ஜலத்திஞல்சூழப்பட்டிருக்கும். இவனும் ப்ரளயஜலத்திஞல் சூழப்பட்டிருப்பான். மேருமுதலிய பர்வதம் ஸ்வர்ணமயமான சிகரங்களை யுடையதாயிருக்கும். இவனும் ஸ்வர்ண க்ரீடங்களை அணிந்திருப்பான். பர்வதத்தின் மத்யத்தில் சில இடத்தில் ரத்னங்கள் விளையும். இவன் கௌஸ்துப ரதனத்தை மார்பினிடையில் தரித்திருப்பான். இங்ஙனம் பலகுணங்கள் ஒத்திருக்கையால் அவன் ப்ரஹ்மாவுக்குப் பர்வதமபோல் தோற்றிஞன். வேதங்களாகிற வண்டுகளால் சேவை உண்டாகப்பெற்றதும் தன் கீர்த்தியே ஓர் வடிவங்கொண்டதோ என்னும்படி விளங்குவதுமாகிய வனமாலையைக் கழுத்தில் தரிததிருப்பவனும் (தன் கீர்த்தியைப் பாடுகின்ற வேதங்களாகிற வண்டுகளால் சேவை உண்டாகப் பெற்ற வனமாலையைக் கழுத்தில் தரித்திருப்பவனும்) ஸூர்யன் சந்த்ரன் வாயு அக்னி இவர்களுக்கும் அணுகமுடியாதவனும் மூன்று லோகங்களிலும் ப்ரகாசிப்பவைகளும் ரக்ஷிக்கும் பொருட்டு ஆங்காங்குத் திரிகின்றவைகளும் சத்ருக்களோடு யுத்தஞ் செய்கையே ப்ரயோஜனமாகப் பெறறவைகளுமான ஸுதர்சனம் முதலிய திவ்யாயுதங்களால் பிறர்க்குக் கிட்டமுடியாதவனுமாகிய அந்தப் பரமபுருஷனைக் கண்டான். எப்பொழுது அந்தப் பரமபுருஷனைக் கண்டானே, அப்பொழுதே உலகங்களைப் படைப்பதற்குரிய அறிவுடையவனும் ஜகத்துக்களைப் படைப்பவனுமாகிய அந்த ப்ரஹ்மதேவன் பகவானுடைய நாபியாகிற ஸரஸ்ஸிலுண்டான பத்மத்தையும் ப்ரளயகால வாயுவையும் அப்பொழுதுண்டான ஜலத்தையும் ஆகாயத்தையும் கண்டான். அந்தத் தாமரை மலர் முதலியவை தவிர ஸ்ருஷ்டி ப்ரகாரம் முதலிய மற்ற எதையும் காணப்பெற்றிலன். அந்த ப்ரஹ்மதேவன் ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்று ப்ர

ஜைகளை ஸ்ருஷ்டிக்கவேண்டுமென்னும் விருப்பம் உண்டாகப்பெற்று நாபீகமலம் முதலிய இந்நான்கு வஸ்துக்களை மாத்ரமே கண்டு ஸ்ருஷ்டிப்பதில் முயற்சி கொண்டவனாகி, ஸ்பஷ்டமாய்த் தோற்றப்பெறாத கதியுடைய பரமபுருஷனிடத்தில் மனத்தை நிலைநிறுத்தித் துதிசெய்யத் தகுந்தவனும் ஜகத்காரண வஸ்துவுமாகிய அந்த பகவானை ஸ்தோத்ரஞ் செய்தான். எட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ப்ரஹ்மதேவன் ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் பெற வேண்டி, பரமபுருஷனை ஸ்தோத்ரம் செய்தல். }

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—ஓ பரமபுருஷா! ஜ்ஞானாதிகுணங்களெல்லாம் நிறைந்த பகவானே! வெகுநாள் கழித்து இப்பொழுது நான் உன்னை அறிந்தேன். நீ கார்யமாயும் காரணமாயுமுள்ள ஸமஸ்த சேதனாசேதனங்களுக்கும் அந்தர்யாமியென்றும், உன் ஸங்கல்பத்தினால் அப்ராக்ருதமான திவ்யமங்களவிக்ரஹத்தைக்கொள்பவனென்றும், ஸர்வஜ்ஞனென்றும், ஸர்வசக்தியென்றும், ஸத்ய ஸங்கல்பனென்றும், உன்னைப் பற்றினாரிடத்தில் என்றும் மாறாத வாத்ஸல்ய முடையவனென்றும், ஸத்யஜ்ஞானாநந்த ஸ்வரூபனென்றும் இப்பொழுது அறிந்தேன். ஜ்ஞானம் முதலிய ஷாட்குண்யம் நிறைந்த உன் ஸ்வரூபத்தை அறியாமையே, கர்மத்தினால் விளையும் ப்ராக்ருத சரீரமுடைய ஜீவாத்மாக்களுக்கு தோஷம். உன்னை அறிந்தால் எல்லாவற்றையும் அறிந்தாற்போலவே. உன்னையொழிந்த வஸ்து எதுவும் இல்லாமையால், உன்னை அறிந்தால், மற்றெல்லாம் அறியப்பெற்றதேயாம். இத்தகைய உன் ஸ்வரூபத்தை அறியாதார்க்கு

அந்த அறியாமையே தோஷம். ஷாட்குண்யஸ்வரூபனே! உன்னைக்காட்டிலும் வேறுபட்ட வஸ்து எதுவுமே இல்லை. எல்லாவற்றிலும் நீ உட்புகுந்து அவற்றின் நாமரூபங்களை நிர்வஹிக்கின்றாயாகையால், எல்லாம் நீயே; ஆகையால் உன்னை அறிந்த மாத்ரத்தில் மற்றதெல்லாம் அறியப்பெற்றதேயாம். அறியத் தகுந்த வஸ்து உன்னையொழிய மற்றொன்றுமில்லை. ஆகையால் நீயொருவனே அறியத்தகுந்தவன். 'தேவமனுஷ்யாதி வஸ்துக்களெல்லாம் ஸ்வதந்த்ரமாகத்தோற்றுகின்றனவே, ஆகையால் 'உன்னையொழிய மற்றொன்றும் இல்லை' என்பது எப்படி சேரும்?' என்னில், அப்படி அன்று. தேவாதிவஸ்து ஸ்வதந்த்ரமாகத் தோற்றினும், அந்தத் தோற்றம் உண்மையன்று. பரப்ரஹ்மத்தை யொழிந்த ஸ்வதந்த்ர வஸ்து உண்டென்கிற புத்தி ப்ராந்தியே. ஏனென்னில், மாயையென்கிற ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களின் ஏற்றக்குறைவினால் நீ யொருவனே பலவாகத் தோற்றுகின்றனை. நீ அளவிறந்த ஜ்ஞானாநந்தஸ்வரூபனாயிருந்தே உன் விளையாட்டிற்குக் கருவிகளாகிய சேதனாசேதனங்களை நாம ரூபங்களுக்குரியவை யல்லாதபடி ப்ரக்ருதியும் ஸூக்ஷ்மமாக்கி அவற்றைச் சரீரமாகக் கொண்டு ப்ரளயத்தில் அவையும் நீயும் ஒன்றே யென்னும்படி இருந்தனை. பிறகு விசித்ரமான பல விளையாட்டுக் கருவிகளைப் பெற விரும்பி ஸூக்ஷ்மமான சேதனாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டிருக்கின்ற நீயே மஹத்து அஹங்காரம் என்கிற வரிசையில் மஹா பூதம் வரையில் விரிந்து மீளவும் விசித்ரமான சேதனாசேதனங்கள் அடங்கின தேவதைகள் முதல் ஸ்தாவரம் வரையிலுமுள்ள ப்ரபஞ்சமாக விரிந்து ஒருவனே பலவாகத் தோற்றுகின்றனை; ஆகையால் தேவ மனுஷ்யாதியான ப்ரபஞ்சமெல்லாம் நீயே யாகை

யால் உன்னை யொழிய ஸ்வதந்த்ர வஸ்து எதுவுமே இல்லை. அங்ஙனம் உன்னைக் காட்டிலும் வேறுபட்ட ஸ்வதந்த்ரமான வஸ்து உண்டென்று நினைப்பது ப்ராந்தியேயாமன்றி உண்மையாகாது. நீ ஜகத்தாகப் பரிணமிக்கும்பொழுது ஸகல விகாரங்களும் உனக்குச் சரீரமான அசேதனங்களைச்சேர்ந்தவை. அபுருஷார்த்தமான ஜன்ம ஜரா மரணாதிகள் அனைத்தும் உனது சரீரமாகிய சேதனங்களைச் சேர்ந்தவை. நீ தோஷங்கள் எவையும் தீண்டப் பெறாதவனும் அளவிறந்த ஜ்ஞானாநந்த ஸ்வரூபனும் ஒரு படிப்பட்டவனுமாகவேயிருப்பவன். உனக்கு எவ்விதமான மாறுதலும் இல்லை. இங்ஙனம் ஸகல சேதனாசேதனங்களுக்கும் அந்தராத்மாவாகிய உன்னை உள்ளபடி அறிகையே மோக்ஷத்திற்கு ஸாதனம். ஆகையால் இங்ஙனம் அறியாமை ஜீவாத்மாக்களுக்கு தோஷமே. நீ ஜ்ஞானாநந்தங்கள் இயற்கையில் என்றும் மாறாமல் விளங்கப் பெற்றவன். ஓர் காரணத்தைப்பற்றி யல்லாததும் எக்காலத்திலும் மறையாமல் நித்யமாய்த் தோற்றுவதும் அளவிறந்ததுமாகிய ஆநந்தரூபமான ஜ்ஞானமுடையவன். ஆனதுபற்றியே நீ ஸர்வ காலத்திலும் அஜ்ஞானமென்பது சிறிதும் தீண்டப் பெறாதவன். ஆகையால் நீ மூன்றுவகைப்பட்ட சேதனர்களைக் காட்டிலும் அசேதனமான ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவன். ஜ்ஞான ஸ்வரூபனாகையால் ஜடமான ப்ரக்ருதியைக் காட்டில் வேறுபட்டவனென்பது வெளிச்சமே. ஜீவாத்மாக்கள் ஜ்ஞான ஸ்வரூபராகையால் ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவரேயாயினும், அவர்களில் பத்த ஜீவர்கள் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஜ்ஞான ஸங்கோசமுடையவராகையால் என்றும் ஜ்ஞானம் மறையாதிருக்கப்பெற்ற நீ அவர்களில் விலக்ஷணனே. ஸம்ஸாரத்தி

ணின்று விடுபட்ட முக்த ஜீவர்கள் ஜ்ஞான ஸங்கோசம் நீங்கப்பெற்றவரேயாயினும், சிலகாலம் ஜ்ஞானம் மறையப்பெற்றிருந்தவராகையால், அந்த முக்த ஜீவர்களைக் காட்டிலும் நீ விலக்ஷணனே. என்றும் ஸம்ஸார ஸம்பந்தமில்லாமல் சிறிதும் ஜ்ஞானம் மறையப்பெறாத அனந்தன் கருடன்முதலிய நித்யர்களோ வென்றால், அவர்களும் உன்னுடைய நித்ய ஸங்கல்பத்தினால் ஏற்பட்ட அந்தன்மையுடையவராகையால் உனக்கு உட்பட்டவர்களே. அந்த நித்யர்கள் என்றும் ஜ்ஞானம் மறையப்பெறாதிருக்கை உன்னுடைய நித்ய ஸங்கல்பத்தினால் ஏற்பட்டதாகையால்[1] உபாதியைப் பற்றிவந்ததே. நீ ஜ்ஞானம் மாறப்பெறாதிருக்கை அத்தகையதன்று. உனக்கு மேற்பட்டவன் மற்றொருவனும் இல்லாமையால் பிறனுடைய ஸங்கல்பத்தினால் விளைந்ததன்று; இயற்கையில் ஏற்பட்டதே. ஆகையால் நீ அந்த நித்யர்களைக் காட்டிலும் விலக்ஷணனே. இத்தகைய ஸ்வரூபமுடைய உனது திருமேனி பலவகை அவதாரங்களுக்கும் மூலகாரணமாயிருக்கும். இத்தகைய வடிவங்கொண்டிருக்கிற உன்னுடைய நாபீகமலமாகிற க்ருஹத்தினின்று நான் உண்டானேன். நானும் உன்னுடைய ஆவேசாவதாரமே. நீ என்னில் புகுந்து ஸ்ருஷ்டியை நடத்தப்போகின்றனை. ஆகையால் உன்னுடைய பலவகை அவதாரங்களில் இதுவும் ஓரவதாரமேயாம். நீ ஸ்ருஷ்டிக்கு முன்பு இப்பொழுது கொண்டிருக்கிற இவ்வடிவம் ஸத்புருஷர்களை அனுக்ரஹிப்பதற்காகவே. நீ ஜீவராசிகளைப்போல் கர்மத்தினால் விளையும் ஸுகதுக்கங்களை அனுபவிக்கும் பொருட்டுச் சரீரங்களைக் கொள்பவனல்லை. நீ பிறவியற்றவனாயினும் பலவாறு பிறப்பவனென்று ஶ்ருதிகளும் ஸ்ம்ருதிகளும் கூறுகின்றன.

[1] உபாதி—காரணம்.

ஆகையால் உன் பிறவிகளெல்லாம் பக்தர்களை அனுக்ர ஹிப்பதற்காகவே. அனைத்திலும் சிறப்புற்றவனே! ஆநந் தமே வடிவாயிருக்கப்பெற்றதும் ஜாதி குணம் முதலிய விகற்பங்களற்றதும் என்றும் தடைபடாத ஸங்கல்பரூப ஜ்ஞானத்தையுடையதுமாகிய உன் ஸ்வரூபமும், ப்ரபஞ் சத்திற் காட்டில் விலக்ஷணமாயிருப்பதும் ப்ரபஞ்சத்திற் குக் காரணமாயிருப்பதும்அப்ராக்ருதமான பூதங்களும் இந்த்ரியங்களும் அமைந்ததுமாகிய உனது உருவமும் ஆகிய இவ்விரண்டைக் காட்டிலும் மேன்மையுற்ற வேறு ஸ்வரூபத்தையும் உருவத்தையும் நான் கண்டிலேன். ஓ பர மாத்மனே! ஆகையால் இத்தகையதான உன் ஸ்வரூபத் தையும் உனது உருவத்தையும் நான்சரணம்அடைந்தேன். ஜகத்திற்கெல்லாம் மங்களமான உருவமுடையவனே! உன்னை த்யானத்தினால் பணிந்திருக்கின்ற எங்களுடைய க்ஷேமத்தின் பொருட்டு வேதாந்தங்களில் ப்ரஸித்தமான இந்த உருவத்தைக் காட்டினை. அத்தகையதான ஸ்வரூப ரூபகுண விபூதிகளையுடையவனும் பூர்ணஷாட்குண்யமூர் த்தியுமாகிய உனக்கு நமஸ்காரம் செய்கின்றோம். ப்ரயோ ஜனமற்ற சப்தாதி விஷயங்களில் வீணாக மனப்பற்றுடை யவரும் அவ்வழியால் நரகம் பெறவேண்டியவர்களுமாகிய ப்ராணிகளால் நீ ஆதரிக்கப்பெற்றவனல்லை. அத்தகை யர் உன்னை ஆதரிக்கமாட்டார்கள். ஆனதுபற்றியே அவர்கள் நரகம் அடையவேண்டியவர். வேதமாகிற காற் றானது உன் பாதாரவிந்தங்களில் கந்தத்தைக் கொண்டு வீசுகின்றது. அக்காற்றினால் அருகாமையில் கொண்டு வரப்பெற்ற உன் பாதாரவிந்தங்களின் கந்தத்தைத் தமது காது ரந்த்ரங்களால் எவர் மோருகிறார்களோ, எவர் என்றும் மாறாத பக்தியுடன் உன் பாதங்களைப் பற்றி மற வாதிருப்பரோ, உன் பக்தர்களான அவரது ஹ்ருதயகம

லத்தினின்று, நாதனே! நீ என்றும் பேரமாட்டாய். உன் கதைகளை ப்ரேமத்துடன் கேட்பவராகி மாறாத பக்தியுடன் உன்னையே சரணம் அடைந்தவர் எவரோ, அவர்களுடைய ஹ்ருதயத்தில் நீ என்றும் அமைந்திருப்பாய். 'நீ சொன்னபடி என் ஸந்நிதானம் அவர் மனத்தில் இருக்கட்டும். ஆயினும் அவ்வளவில் அவர்கள் எப்படி க்ருதார்த்தர் (ப்ரயோஜனம் கைகூடப்பெற்றவர்) ஆவார்?' என்னில், அப்படி அன்று. அவ்வளவில் அவர்கள் க்ருதார்த்தர்களாவாரென்பதில் ஸந்தேஹமில்லை. ப்ராணிகளுக்கு இதைவிட மற்றொன்றும் வேண்டியதில்லை. இதையல்லவோ, மஹிமையுள்ள யோகிகளும் ஆசைப்படுகின்றார்கள்? ஸம்ஸார பயத்தைப் போக்குந்திறமையுள்ள உன் பாதத்தை லோகம் எதுவரையில் 'இதுவே நமக்கு மிகவும் அன்பிற்கிடமான வஸ்து' என்று பணியாதிருக்குமோ, அது வரையிலுமே அந்த லோகத்திற்குப் பணம் க்ருஹம் நண்பர் ஆகிய இவற்றைப் பற்றின பயம் மாறாதிருக்கும். 'என் பணத்தை எவன் கொண்டுபோவானோ,' என்றும் 'அந்தப் பணத்தை எப்படி வளர்த்துவேன்' என்றும், 'என் க்ருஹத்திற்கு ஒன்றும் கெடுதி வாராதிருக்க வேண்டுமே' என்றும், 'எனது நண்பன் எப்படி ஆவானோ' என்றும் பலவாறு விளைகிற பயமெல்லாம் உன் பாதங்களைப் பணியாத வரையிலுமே. உன் பாதங்களைப் பணிந்த மாத்ரத்தில் இத்தகைய பயங்களெல்லாம் பறந்தோடும். பிள்ளை பெண்டிர் முதலியவர் மாண்டுபோதலால் உண்டாகும் சோகமும், 'பணம் வேண்டும், வீடு வேண்டும், பிள்ளை வேண்டும், பெண்டிர் வேண்டும்' என்பவை முதலிய விருப்பங்களும், பிறரால் விளையும் அவமானமும், பரவிய பேராசையும் (பிறருடைய ஸொத்துக்களெல்லாம் தனக்கே வேண்டுமென்கிற பேராசையும்)

ஆத்மாவல்லாத சரீரத்தில் 'இதுவே ஆத்மா' என்பதும் துக்கங்களுக்கெல்லாம் மூலகாரணமா யிருப்பதுமாகிய விபரீத ஜ்ஞானமும், ஆத்மாவுக்கு ஸம்பந்தப்படாத வஸ்துக்களில் 'இவை என்னுடையவை' என்கிற விபரீத ஜ்ஞானமும் ஆகிய இவையெல்லாம் உன் பாதாரவிந்தங்களைப் பணியாத வரையிலுமே தொடர்ந்து வரும். பயங்களையெல்லாம் போக்குவதான உன் பாதங்களைப் பணிந்த பின்பு இவை எவையும் அணுகமாட்டா. எவர் பயம் சோகம் முதலிய அசுபங்களைப் போக்கும்படியான உன்னைக் காண்பது கேட்பது முதலிய உன் ப்ரஸங்கத்தில் எதிலும் தமது இந்த்ரியங்கள் செல்லப்பெறாமல் சப்தாதி விஷய ஸுகங்களில் அற்பம் கிடைப்பதற்காகப் பேராசைகொண்ட மனமுடையவராகி க்ஷேமத்திற்கிடமாகாத கார்யங்களை எப்பொழுதும் செய்கின்றார்களோ அவர்கள் தெய்வத்தினால் அடியுண்ட மதியுடையவர்; மந்தபாக்யர்கள் (பாக்யம் க்ஷீணிக்கப் பெற்றவர்); அவர்களே தீனர்கள். 'ஐயோ! இப்படியும் சிலர் கெட்டுப்போவார்களா'? என்று அறிவுடையோர் கண்டு வருந்தும்படியான தசையிலிருப்பவர். தன்னைப் பற்றினவர்களைக்கைவிடாத மஹானுபாவனே! ஸம்ஸாரமாகிற பெருங்கடலின் அலைகள் போன்ற பசி தாஹம் சோகம் மோஹம் ஜரை ம்ருத்யு ஆகிய இவைகளாலும், வாதம் பித்தம் ஸ்லேஷ்மம் என்று மூன்று வகைப்பட்ட தாதுக்களாலும், குளிர் வெய்யில் காற்று மழை இவைகளாலும், எவ்விதத்திலும் த்ருப்தி செய்விக்கமுடியாத காமமாகிறஅக்னியாலும்,என்றும் மாறாத கோபத்தினாலும் அடிக்கடி பீடிக்கப்பெற்று வருந்துகின்ற ப்ரஜைகளைக் காண்கையில்,மூன்று லோகங்களையும் அளக்கும்படியான பெரியஅடிவைப்புக்களையுடையவனே! என் மனது வருந்துகின்றது. ஜ்ஞானாதி குணங்கள் நிறை

ந்த உனது மாயையின் வலிமையால் ஏற்பட்டதும் கண் காது மூக்கு முதலிய வெளி இந்த்ரியங்களுக்கு விஷயமாகக் கூடியதுமாகிய தேவமனுஷ்யாதி தேஹங்களில் தோற்றும் பேதத்தை ஆத்மாவின் தர்மமாக எதுவரையில் நினைப்பானோ, நாதனே! அதுவரையில் செயலேயே ப்ரயோஜனமாகப் பெற்றதும் பரமபுருஷார்த்தம் இல்லாததுமாகிய இந்த ஸம்ஸாரம் நீங்காதது மாத்ரமேயல்லாமல், துக்கங்களையும் வரிசை வரிசையாக விளைவித்துக்கொண்டிருக்கும். அஹங்காரத்தினால் விளையுந் தன்மையதான ஸம்ஸாரமானது மேன்மேலும் கர்மங்களைக் குவிப்பதற்குக்காரணமாகி மோக்ஷத்திற்குத் தடைசெய்வதும் மேன்மேலும் துக்கங்களை விளைப்பதுமாயிருக்கும். (ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவாக ப்ரமிக்கையே அஹங்காரமாம். தன்னுடையதல்லாத வஸ்துக்களைத் தன்னுடையதென்று ப்ரமிக்கை மமகாரமாம். இவ்விரண்டுமே ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்திற்கு வேராயிருக்கின்றன. மேலான புருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்குத் தடை செய்பவை இந்த அஹங்கார மமகாரங்களே. இப்படிப்பட்ட இவைகளால் விளையும் ஸம்ஸாரமானது பரமபுருஷார்த்தமான மோக்ஷத்திற்கு இடையூறுசெய்வது மாத்ரமேயல்லாமல் பலவகைப்பட்ட துக்கங்களையும் விளைவிக்கும்). ரிஷிகளும் உன்னிடத்தில் பக்தியற்றவராயின், பகலில் சப்தாதி விஷயங்களில் தொடர்ந்துவருந்தின இந்த்ரியங்களுடையவரும், இரவில் பெருந்துக்கம் தலைக்கொண்டு கண் காது முதலிய இந்த்ரியங்களின் வ்யாபாரங்களெல்லாம் ஓய்ந்திருக்கப் பெற்றவரும், ஸ்வப்னங்களில் பலவகை விருப்பங்கள் கைகூடக்கண்டு அடிக்கடி துக்கம் தடைபடப்பெற்றவரும் ப்ரயோஜனங்களை விரும்பிச்செய்யும் செயல்களெல்லாம் தெய்வத்தினால் வீணாகப்பெற்றவருமாகி ஸம்ஸாரத்

தையே அனுபவிப்பார்கள். நாதா! உன்னைப் பெறுதற்கு ஶாஸ்த்ராப்யாஸத்தினால் விளையும் ஜ்ஞானமும் விவேகாதிகளால் விளைகிற உபாஸனாரூபமான ஜ்ஞானமும் உபாயமென்பர்கள். (இதுவன்றி உன் சரித்ரங்களைக் கேட்பதும் உனது அர்ச்சாவதாரங்களைக் கண்ணாரக் கண்டு பணிவதும் உன்னைப் பெறுதற்கு உபாயமாமென்பர்கள்) இத்தகையனாகிய நீ, பக்தியோகத்தினால் பரிசுத்தமான உன் பக்தர்களின் ஹ்ருதயத்தில் ஸுகமாக வீற்றிருக்கின்றனை. ஓயாமல் பாடத் தகுந்த சரித்ரங்களையுடையவனே! அப்படிப்பட்ட உன் பக்தர்கள் உன்னுடைய எந்தெந்த உருவத்தை த்யானஞ் செய்வார்களோ, அந்த உருவத்தை அந்தப் பெரியோர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு வெளியிடுகின்றனை. எவ்வித உருவமுடைய உன்னை உன் பக்தர்கள் விசேஷமாக த்யானஞ் செய்கின்றார்களோ, அவ்வகை உருவமுடையவனாகவே அவர்களுக்கு நீ நேரே தர்சனம் கொடுக்கின்றனை. உன் பக்தர்கள் மனத்தில் சிலவற்றை விரும்பி அவ்விருப்பங்கள் நிறைவேறும் பொருட்டு உன்னைப் பலவகை உபசாரங்களால் நிரம்ப ஆராதிக்கினும், நீ அவர்களுக்கு அவ்வளவாக அருள்புரிகிறதில்லை. (அவர்களுக்கு நீ மிகுந்த மேன்மையுடைய மோக்ஷ ஸுகத்தைக் கொடுக்கிறதில்லை.) ஸமஸ்த ஜனங்களிலும் உள் புகுந்து அவற்றின் தோஷங்களால் தீண்டப்பெறாமல் அந்தராத்மாவாயிருக்கின்ற நீ, கேவலம் தயையினால் அருள் புரிவாயன்றி மற்ற கர்மங்களால் அருள் புரியமாட்டாய். உன் தயை தேஹத்தையே ஆத்மாவாக நினைக்கிற அஸத் புருஷர்களுக்குக் கிடைக்கக்கூடியதன்று. பிறனுடைய துக்கத்தைக்கண்டு பொறுக்கமுடியாமல் வருந்தி அவனுடைய துக்கத்தைப் போக்குவதற்குரிய முயற்சியே தயையாம். நீ ஸமஸ்த

ப்ராணிகளிடத்திலும் அந்தராத்மாவாயிருப்பதை அறிந்து எந்த ப்ராணிக்கு அபகாரம் செய்யினும் அந்த அபகாரம் உன்னையே சேருமென்பதை நன்றாகத் தெரிந்துகொண்டு ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் அபகாரம் செய்யாமல் தயை செய்வார்களாயின், அவர்களுக்கே நீ அருள் புரிவாய். மனவிருப்பத்துடன் செய்கிற யஜ்ஞாதி கர்மங்களைக் காட்டிலும் ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் தயை செய்தலே உனது அனுக்ரஹத்திற்குக் காரணமாம். இங்ஙனம் பலன்களை விரும்பிச் செய்யும் கார்யங்களெல்லாம் உனது அருளுக்கு இடமன்றாகையாலும் ஸர்வ ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாயிருக்கின்ற உன்னைப் பணிதலே உனது அருளுக்குக் காரணமாகையாலும், உன்னை ஆராதிக்கும் புருஷர்கள் செய்கிற யஜ்ஞம் முதலிய பலவகைக் கர்மங்களும் தான தர்மங்களும் உக்ரமான தவமும் வ்ரதானுஷ்டானமும் ஆகிய உனது ஆராதனம் எதுவெது உண்டோ, அதையெல்லாம் ஸ்வயம் ப்ரயோஜனமாகச் செய்யவேண்டுமேயன்றி மற்றொரு ப்ரயோஜனத்தை விரும்பிச் செய்யலாகாது; உன்னை ஆராதிக்கையே ப்ரயோஜனமென்று நினைத்து யஜ்ஞாதி கர்மங்களைச் செய்யவேண்டுமேயன்றி மற்றொரு ப்ரயோஜனத்தை விரும்பிச் செய்யலாகாது. அப்படிச் செய்யில், அவை உனது அருளுக்கிடமாகமாட்டா. யஜ்ஞதானுதி கர்மங்களை, உன்னுடைய ஆராதனமே ப்ரயோஜனமன்றி ஸ்வர்க்காதிகள் ப்ரயோஜனமன்றென்று நினைத்து உனக்கு அர்ப்பணஞ் செய்யின், அவை எப்பொழுதும் வீணுகமல் மேலான புருஷார்த்தத்தை விளைப்பவையாம். எப்பொழுதும் ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை அறிவதனுல், தேவமனுஷ்யாதி பேதபுத்தி, தேஹமே ஆத்மாவென்னும்

ப்ரமம், ஆத்மாக்கள் அனைவரும் ஸ்வதந்த்ரர்களே யென்கிற ப்ரமம் முதலியவற்றிற்கு நிமித்தமான அஜ்ஞானமும் அதனால் விளையும் சோகாதிகளும் தொலையப் பெற்ற யோகிகளே உன்னைப் பெறுவார்கள். தமது ஸ்வரூபத்தை உள்ளபடி அறியும் ஜ்ஞானமும் உன்னை உள்ளபடி அறிந்து பணியும் ஜ்ஞானமும் ஆகிய இவையே உன்னைப் பெறுதற்கு உபாயமாம். ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து அவ்வறிவினால் தேவ மனுஷ்யாதி பேதம் தேஹாத்மப்ரமம் முதலிய ஸம்ஸார தர்மங்களெல்லாம் தொலையப் பெற்ற யோகிகள் ஜ்ஞானயோக கர்ம யோகங்களை உதவியாகக் கொண்டு நடத்துகிற உபாஸனு ரூப ஜ்ஞானத்திற்கு நீ விஷயமாவாய். நீ தேவ மனுஷ்யாதிகளில் உட்புகுந்து அந்தராத்மாவாயிருப்பினும் அவற்றின் தோஷங்களால் தீண்டப் பெறாதவன். ஆனதுபற்றியே நீ ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன். நீ உலகங்களைப் படைப்பது வளர்ப்பது முடிப்பது ஆகிய இச்செயல்களை ஆசரிப்பதற்குக் காரணம் லீலையே. உனக்கு விளையாடுவதில் மிகுதியும் விருப்பம் உண்டு. ஜகத்தைப் படைக்கை முதலிய செயல்களெல்லாம் ப்ரக்ருதி புருஷர்களுக்கு (சேதனுசேதனங்களுக்கு) எவ்விதத்திலும் பொருந்தாதவை. அவற்றை நீ லீலைக்காகவே நடத்துகின்றனை. நீ ப்ரக்ருதி புருஷர்களை நியமிக்குந் தன்மையன். ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனும் அந்த ப்ரக்ருதி புருஷர்களுக்கு நியாமகனும் ஜகத்காரண வஸ்துவுமாகிய உன்னைப் பணிதலே உன்னைப் பெறுதற்கு ஸாதனம். இத்தகையனான உனக்கு நமஸ்காரம் செய்கின்றோம்.' விருப்பங்களெல்லாம் நிறைவேறப் பெற்றவனுக்கு லீலைக்காக

வாயினும் ஜகத்தைப் படைக்கைமுதலியசெயல்கள் எப்படி பொருந்தும்' என்னில், ஸம்ஸார பயத்தினால் பரிதபிக்கின்ற ஜீவாத்மாக்களை அனுக்ரஹிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் அந்த ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களை நீ நடத்துகின்றனை. (அன்றியும், விருப்பங்கள் எல்லாம் நிறைவேறப் பெற்றவனுக்கே விளையாட்டில் விருப்பம் உண்டாகக் கூடும். நிறைவாளனுக்குச் செய்யவேண்டிய கார்யம் எதுவும் இல்லாமையால் மன விநோதத்திற்காக விளையாட்டில் விருப்பம் உண்டாகக்கூடும். நிறைவில்லாதவனுக்கு மனக்கவலை தீராதாகையால் விளையாட்டில் விருப்பம் உண்டாக இடமில்லை. உலகத்தில் நிறைவாளனான மன்னவன் முதலானார்க்கே பந்தாட்டம் முதலிய விளையாடல்களில் முயற்சி உண்டாகக் காண்கின்றோம். அங்ஙனமே எல்லாவிதத்திலும் நிறைவாளனான பரமபுருஷனாகிய உனக்கு விளையாட்டில் விருப்பம் உண்டாவதில் ஐயமில்லை. அங்ஙனம் விளையாடவேண்டுமென்னும் விருப்பத்தினாலும் ஊறை மெழுகில் பொன்போல் ப்ரக்ருதியில் மழுங்கிக்கிடக்கிறஜீவராசிகளை உஜ்ஜீவிப்பிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினாலும் நீ ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கின்றனை.) இத்தகையனான உன்னுடைய அவதாரங்களின் குணங்களையும் செயல்களையும் மொழிந்த மாத்ரத்தில் உன்னைப் பெறுவதில் ஐயமில்லை. நாதா! நீ ராம க்ருஷ்ணாதியான அவதாரங்களில் வெளிப்படுத்தின உன் குணங்களையும் அவ்வப்பொழுது நீ நடத்தின செயல்களையும் எடுத்துரைப்பனவாகிய 'தேவகீநந்தன! தசரதகுமார! ஸர்வஜ்ஞ! பக்தவத்ஸல! கோவர்த்தன கிரிதர! கம்ஸவித்வம்ஸன! ராவண விநாச காரண!' என்பவை முதலிய உனது திருநாமங்களை, ப்ராணன் கழன்று போங்காலத்திலும் மெய்ம்மறந்திருப்பார்களாயினும்,

எவர் உச்சரிப்பார்களோ, அவர்கள் அனேக ஜன்மங் களில் தாம் செய்த புண்யபாபங்களை யெல்லாம் விரைவில் உதறிப் போகட்டு மறைவின்றித் தோற்றுகின்ற பரப்ரஹ் மத்தை அடைவார்கள். அத்தகைய அற்புதமான குண கர்ம நாமங்களை யுடையவனும் கர்மத்தினால் விளையும் உற் பத்தி முதலியவை இல்லாதவனுமாகிய உன்னைச் சரணம் அடைகின்றேன். 'என்னுடைய அவதாரங்களில் வெளியா கும் குணங்களையும் அவற்றில் நான் செய்யும் செயல்களை யும் தெளிவாக எடுத்துரைக்கின்ற என்னுடைய நாமங் களை நினைப்பது கேட்பது மொழிவது முதலியவற்றால் இந்த ப்ராணிகள் கடைத்தேறட்டும்' என்று அனுக்ர ஹிக்க வேண்டுமென்கிற விருப்பத்தினால்தான் நீ உலகங் களைப் படைப்பது முதலிய செயல்களை நடத்துகின்றனை. அப்படி மிகவும் தயாளுவாகிய உனது பாதாரவிந்தங்களை யான் சரணம் அடைகின்றேன். 'பகவானுடைய குணங் களைக் கீர்த்திப்பது முதலியவையே அவனைப் பெறுதற்கு உபாயமென்பது உண்மையாகவே இருக்கட்டும். ஆயி னும், ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களெல்லாம் நான் முகன் முதலிய வேறு தேவதைகளின் செயல்களென்று கேள்விப்படுகின்றோமாகையால், பகவானே உலகங்களைப் படைப்பதும் வளர்ப்பதும் அழிப்பதும் செய்கின்றானென் பது எங்ஙனம் பொருந்தும்' என்னில், அப்படி அன்று. நீ ஸ்ருஷ்டிக்கு முதலில் தேவ மனுஷ்யாதி நாம ரூபங்களுக் கிடமல்லாத ஸூக்ஷ்ம சேதநாசேதனங்களைச் சரீரமாகக் கொண்டு தனியனாயிருந்து நான்முகனாகிய என்னைப்ப டைத்து என்னுள் புகுந்து என் மூலமாய் தேவ மனுஷ் யாதி ஸ்ருஷ்டியை நடத்தி நீயே உலகங்களைப் பாது காக்குந் திறமை அமைந்த விஷ்ணுவாக அவதரித்து ஸ்தி தியையும், ருத்ரனைப் படைத்து அவனுள் புகுந்து அவன்

மூலமாய் ஸம்ஹாரத்தையும் நடத்துகின்றனே. ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மதேவனென்கிற நானும் ஸம்ஹார கர்த்தாவான ருத்ரனும் நீயே. எங்களிருவர்க்கும் அந்த ராத்மாவாய் நின்று ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்து மவன் நீயே. நீ எங்களுக்கு அந்தர்யாமியாயிராத பக்ஷத் தில் இந்த ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்த நாங்கள் வல்லவராகமாட்டோம். உன்னுடைய ஸங்கல்பமில்லாத போது நாங்கள் சித்ரத்தில் எழுதின பொம்மைகள்போல் எதுவும் செய்யவல்லரல்லோம். இங்ஙனம் ப்ரஹ்ம ருத்ரர் களென்கிற ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிரு ந்து ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை நடத்துகிறவன் நீயே. ஸ்திதியை (ரக்ஷணத்தை) மாத்ரம் நீயே நேரில் விஷ்ணு வாய் எங்களிருவர்க்கும் இடையில் அவதரித்து நடத்து கின்றனே. தனக்குத் தானே காரணமாகி மற்றென்றுக்குக் கார்யமல்லாமல் நித்ய ஸித்தமாகிய த்ரிபாத் விபூதி யென்கிற வைகுண்ட லோகத்தைக் கடந்து ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களென்கிற மூன்று வகையாகப் பிரிந்து தனக்குச் சரீரமாகிய ப்ரக்ருதியைப் பலவாறு விரியச்செய்து தேவ திர்யங் மனுஷ்யாதி ஜங்கமங்களும் ஸ்தாவரங்களுமே சாகோபசாகைகளும் பத்ர புஷ்ப பலா திகளும் (இலை பூ காய் முதலியவைகளும்) ஆகப்பெற்று ஜகத்தாகிற வ்ருக்ஷமாய் வளர்ந்தனை. அங்ஙனம் ஜகத் தாகிற வ்ருக்ஷமாய் வளர்ந்தவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய உனக்கு நமஸ்காரம். ஸ்வாமீ! வேத மாகிற சாஸ்த்ரத்தின் மூலமாய் நீ மொழிந்ததும் உன்னு டைய ஆராதன ரூபமாயிருப்பதும் தமது வர்ணாஸ்ரமங் களுக்கு உரியதும் க்ஷேமங்களை விளைவிப்பதுமாகிய கர் மத்தில் இவ்வுலகம் மனவூக்கம் தவறுதலின்றி அஸத் கர்மத்தில் விருப்பற்றதுமா யிருக்குமாயின், அதற்கு

நீ ஸம்ஸாரத்தில் விளையும் ஆசையை விரைவில் வேருடன் அறுத்து க்ஷேமம் விளைக்கின்றனை. அதற்குக் காரணம் நீ எல்லாவற்றையும் தடையின்றி நிறைவேற்றும் திறமையுடையனுயிருக்கையே. (மற்ற ப்ரஹ்ம ருத்ராதிகள் அனைவரும் இந்தப் பிறவியென்னும் நோய்க்கு மருந்தை அறியவும் வல்லரல்லர். அவர் தமது நோயைத் தாம் போக்கிக் கொண்ட பின்பல்லவோ, பிறர் நோயைப் போக்க முயற்சி கொள்ளவேண்டும்? ஸம்ஸார பாச பத்தராகையால் அவர் பிறருடைய ஸம்ஸார பாசத்தை அறுக்க எங்ஙனம் வல்லராவார்?) ஆகையால் நீயொருவனே உன்னைப் பணிகிற உலகங்களின் ஸம்ஸார பந்தத்தைப் போக்குந் திறமையுடையவன்). இங்ஙனம்ஸர்வசக்தியும் ப்ராணிகளுக்கு ஸம்ஸாரத்தில் வைராக்யத்தை விளைக்க அவகாசம் தேடும்பொருட்டுக் கண்ணிமைகொட்டாமல் ஜாகருகனுயிருக்கின்றவனும் பகவானும் (ஜ்ஞானுதி குணங்கள் நிறைந்தவனுமாகிய) உனக்கு நமஸ்காரம். (ஈஶ்வரன் ப்ராணிகளுக்கு ஸம்ஸாரத்தில் வைராக்யம் விளைவிப்பதற்கு அவகாசம் பார்க்கவேண்டுமோ வென்னில், பார்க்கவேண்டும். ஏனென்னில், இல்லையாயின், எல்லோர்க்கும் அவன் வைராக்யத்தை விளைக்கவேண்டியதாய் வரும். ஆகையால் இவர்கள் அறியாதிருப்பினும் ஏதேனும் ஒரு நன்மையைத் தன் புத்தியால் அவர்களிடம் ஏறிட்டு ராஜ்யத்திற்கு எலுமிச்சம் பழம்போல் அதை வ்யாஜமாகக் கொண்டு அவர்களுக்கு ஸம்ஸாரத்தில் வைராக்யத்தை விளைவிக்கை முதலிய நன்மைகளின் வரிசைகளை, அவன் காருணிகனுகையால் (மிகுந்த கருணையுடையவனுகையால்) இவர்கள் இரப்பை எதிர்பாராமலே விளைவிப்பான். அந்த வ்யாஜத்தையும் ஸம்ஸாரிகளிடத்தில் ஈஶ்வரனுக்குத் தேடிப்பிடிக்க வேண்டியதாயிருக்கின்றது. ஸம்ஸாரி

களுக்கு ஸம்ஸாரத்திலுள்ள ஊற்றத்தின் கடுமை இத்தகையது. இங்ஙனம் கருணைகூர்ந்து ஸம்ஸாரிகளைக் கடைத்தேற்ற முயற்சி செய்கின்ற உனக்கு நமஸ்காரம்). பலன்களை விரும்பாமற் செய்கிற வர்ணாஶ்ரம தர்மங்களால் உன்னை ஆராதிக்கின்றவர்க்கு நீ ஸாம்ஸாரிக தர்மங்களில் விருப்பத்தைப் போக்கி வைராக்யத்தை விளைவித்து அனுக்ரஹிக்கின்றனை. அன்றியும், காலத்தைச் சரீரமாகவுடையவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய நீ, ஸ்வரூபத்திற்குத் தகாதவைகளும் அஹங்காரமமகாரங்களைஉட்கொண்டவைகளும் சப்தாதிவிஷயங்களால் விளையும் ஸுகாபாஸங்களுக்கு (ஸுகம்போல் தோற்றும் துக்கங்களுக்கு) ஸாதனமாயிருப்பவைகளுமாகிய விபரீத கர்மங்களில் கால் தாழ்ந்து உன்னுடைய ஆராதன ரூபமான ஸத்கர்மங்களில் மனவிருப்பமின்றித் திரிகின்ற உலகங்களுக்கு உள்ள பிழைக்கவேண்டுமென்னும் ஆசையை, வேருடன் அறுத்துவிடுகின்றனை. இங்ஙனம், நிமிஷம் முதலிய பற்பல பிரிவுகள் அமைந்த காலஸ்வரூபனாகிய உனக்கு நமஸ்காரம். நீ உன்னிடத்தில் பக்தியுடையோர்க்கு அருள் புரிவாயன்றி, அதில்லாமை மாத்ரமேயன்றி விபரீத மார்க்கத்திலும் ஓயாமற் செல்கின்ற மூடர்களுக்கு அருள் புரியமாட்டாய். தந்தமக்கு உரியவைகளும் உன்னுடைய ஆராதன ரூபமுமான கர்மங்களால் உன்னை ஆராதிக்கையில், நீ மிகுந்த மேன்மையுடையதான மோக்ஷமென்னும் புருஷார்த்தத்தை அவர்களுக்குக் கொடுக்கின்றனை. நான் இரண்டு பரார்த்தம் வரையில்அழியாதிருப்பதும் கீழ்ப்பட்ட ஸமஸ்த லோகங்களாலும் நமஸ்காரம்செய்யப்பெற்றதுமாகிய ஸத்யலோகத்தில் இருப்பவனாயினும் காலத்தைச் சரீரமாகவுடையவனிடத்தினின்று பயப்படுகிறேனே (நானும் எவனுக்கு

அதீனனாய் என்னுடைய அதிகாரத்தில் சிறிதும் மனவூக்கம் தவறுதலின்றி, இந்த ஸ்தானமும் இரண்டு பரார்த்தங்கள் கழிந்தவுடன் அழியப்போகின்றதே யென்று பயப்படுகிறேனே), அங்ஙனம் பயந்து, எவனை அடைய விரும்பி மிதமில்லாத பல யாகங்களைச் செய்து பெருந்தவம் புரிந்தேனே, அத்தகையனும் யாகங்களால் ஆராதிக்கப் படுமவனும் அந்த யாகமகளின் பயனைக் கொடுப்பவனுமாகிய உனக்கு நமஸ்காரம்; (நானிருக்கும் ஸத்ய லோகம் இரண்டு பரார்த்தம் வரையில் அழியாதிருப்பது. அதைக் கீழுள்ள ஸமஸ்த லோகத்து ஜனங்களும் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள். அப்படிப்பட்ட ஸத்ய லோகத்திலிருக்கிற நானும் 'இரண்டு பரார்த்தங்கள் கழிந்தவுடனே 'நமது வாஸஸ்தானமாகிய இந்த ஸத்யலோகம் அழியப்போகின்றதே' என்று பயந்து 'நாம் நமது அதிகாரத்தில் தவறாதிருந்து பகவானை ஆராதித்து அவனுடைய பாதாரவிந்தங்களைப் பெறவேண்டுமே' என்று சிந்தித்து எனது அதிகாரத்தில் சிறிதும் தவறுதலின்றி அதை நிறைவேற்றிக்கொண்டே, உனது பாதாரவிந்தங்களைப் பெறவிரும்பி, உன்னுடைய ஆராதன ரூபமான யாகங்களை நடத்தித் தவம் செய்தேன். இப்படி ஸமஸ்த லோகங்களிலும் மேன்மைபெற்ற நானும் பயந்து பக்தியுடன் ஆராதிக்கும்படி மஹானுபாவனாகிய உனக்கு நமஸ்காரம்). பசு பக்ஷி முதலிய திர்யக் ஜாதியிலும் மனுஷ்ய ஜாதியிலும் தேவஜாதியிலும் கர்மத்திற்குட்படாமல் கேவலம் தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே உருவங்களைக்கொண்டு நிரதிசய நித்யாநந்தமயமான ஆத்மானுபவத்தினால் சப்தாதி விஷய ஸுகங்களில் ஒருக்காலும் கண் வைக்காதவனாயினும் தான் ஏற்படுத்தின தர்ம மர்யாதைகளை நிலைநிறுத்தும்பொருட்டு அவ்விஷய ஸுகங்

களை அனுபவிப்பவன்போல் நடனஞ் செய்கின்றனை. திர்யக்ஜாதியில் மத்ஸ்ய கூர்ம ஹம்ஸ வராஹாதி ரூபமாகவும், மனுஷ்ய ஜாதியில் ராமக்ருஷ்ணாதி ரூபமாகவும், தேவஜாதியில் வாமன உபேந்த்ராதி ரூபமாகவும் அவதரித்தனை. இங்ஙனம் தன் ஸங்கல்பத்தினாலேயே தன் ஸ்வபாவம் மாறப்பெறாமலே அந்தந்த ஜாதியில் பிறந்து அந்தந்த ஜாதிகளுக்குரிய செயல்களைச் செய்துகொண்டு, அக்ரூரன் உத்தவன் மாலாகாரன் குஹன் சபரி முதலானவர்களை ஸ்னேஹம் அனுராகம் ப்ரீதியுடன் கடாக்ஷித்தல் அம்ருதம்போல் இனிய உரைகளைப்பேசுதல் முதலியவற்றால் ஸந்தோஷப்படுத்தி ஸமஸ்த ஜனங்களின் கண்களுக்கும் புலப்படுகின்றனை. நீ புருஷர்களில் சிறந்தவனாகையால் புருஷோத்தமனென்று பேர்பெற்றவன்; மூன்றுவகைப்பட்ட சேதனாசேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவன்; ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனாகையால் பகவானென்று ஓதப்படுமவன். இத்தகையனாகிய உனக்கு நமஸ்காரம். நித்ரைக்கு ஹேதுவாகிய ஐந்து வகைப்பட்ட அவித்யையினால் தீண்டப்பெறாதவனாயினும், லோகயாத்ரையெல்லாம் வயிற்றில் நடத்திக்கொண்டு, பயங்கரமான பெருப்பெரிய அலைகள் வரிசை வரிசையாக மேலெழப்பெற்ற மஹாஜலத்தினிடையில் ஆதிசேஷனாகிற படுக்கையில் படுத்து விவேகமற்றுப் படுத்துறங்குகின்ற ஜனங்களுக்கு நித்ராஸுகம் இத்தகையதென்று விவரித்துக் காண்பிப்பவன்போல் அந்தப் படுக்கையின் ஸ்பர்சத்தினால் மிகவும் அனுகூலமாகிய யோக நித்ரையை ஏற்றுக்கொள்கின்றனை. மூன்று லோகங்களையும்[1] உபகரணமாகவுடைய நான் எந்த பகவானுடைய நாபீகமலமாகிற பவனத்தினின்று எவனு

1 இங்கு உபகரணமாவது—ரக்ஷ்யவர்க்கம்-குழைச்சரக்கு.

டைய அனுக்ரஹத்தினால் உண்டானேனோ, அத்தகை யனும் கார்யவர்க்கத்தையெல்லாம் (உலகங்களையெல்லாம்) தன் வயிற்றில் உட்கொண்டிருப்பவனும் யோக நித்ரை யின் முடிவில் மலர்கின்ற தாமரை மலர்போன்ற கண்க ளுடையவனுமாகிய உனக்கு நமஸ்காரம். சேதனசேதன ஸ்வரூபமான ஸமஸ்த லோகங்களுக்கும் அந்தராத்மாவா யிருப்பவனும் நண்பனும் அத்தகையனும் இதோ எனக் குப் புலப்படுகின்றவனுமாகிய நீ, எந்த ஜ்ஞானத்தினாலும் ஐஸ்வர்யத்தினாலும் இந்த ஜகத்தையெல்லாம் ஸுகம் படுத்துகிறாயோ, அந்த ஜ்ஞான ஐஸ்வர்யங்களால் எனக்கு ப்ரஜ்ஞையைக் கொடுப்பாயாக. இந்த ஜகத்தை முன் கல் பத்தில்போல் ஸ்ருஷ்டிக்கப் போகிறேன். அங்ஙனம் ஸ்ரு ஷ்டிப்பதற்குரிய புத்தியைக் கொடுப்பாயாக. நீ உன்னை வணங்கினவரிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனல்லவா? ஆகையால் உன்னை வணங்கின என்னிடத்தில் அருள்புரி ந்து ஸ்ருஷ்டிப்பதற்குரிய அறிவை எனக்குக் கொடுப்பா யாக. அன்றியும், தெளிந்த முகமுடைய இந்த பகவான், தன்னுடைய சக்திபோல் எப்பொழுதும் தன்னை விட்டுப் பிரியாத ஸ்ரீமஹாலக்ஷ்மியுடன்கூடி, தனக்கு இயற்கையில் ஏற்பட்ட ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் நீங்கப் பெறாத பற்பல அவதாரங்களைக்கொண்டு அந்த தேவ மனு ஷ்யாதி ஜாதிகளுக்குரிய எந்தெந்தச் செயலை நடத்து கின்றானோ, அதில் என் மனது பற்றுடையதாகும்படி எனக்கு அருள்புரியவேண்டும். இவ்வுலகத்தை நான் உனது ஆஜ்ஞையால் ஸ்ருஷ்டித்துக்கொண்டிருப்பினும், என் மனது உன் குணங்களையும் செயல்களையும் அனுப விக்கும்படி அனுக்ரஹம் செய்வாயாக. (உன் கட்டளைப் படி நான் உலகங்களைப் படைக்கையாகிற அதிகாரத்தில் நியன்று அஹங்கரித்து மெய்ம்மறந்து அழியாதிருக்கும்

படி எனக்கு அருள்புரியவேண்டும். பாபங்களைப் போக்குந்தன்மையுடைய உன் குணங்களையும் உன் செயல்களையும் அனுபவிப்பதில் விருப்பம் உண்டாகப்பெற்று ஸம்ஸாரத்திற்கு ஹேதுவான புண்ய பாபங்களாகிற அழுக்கையெல்லாம் துறந்து நிர்மலனாகும்படி அருள்வாயாக. நீ அவதாரங்களில் செய்யும் செயல்களையும் அவ்வவதாரங்களில் வெளியிடுகிற உன் குணங்களையும் அனுபவித்துக்கொண்டே உனது விபூதியாகிய இந்த லோகத்தையெல்லாம் உன் [1] கைங்கர்யமென்றே நினைத்துப் படைக்கின்ற நான் கைங்கர்யத்தை ப்ரார்த்திப்பது யுக்தமேயல்லவா?) அன்றியும், இந்த மஹா ஜலத்தில் சயனித்துக்கொண்டிருப்பவனும் அளவிறந்த ஜ்ஞானம் பலம் க்ரியை சக்தி இவை அமைந்தவனும் ஆதிபுருஷனுமாகிய உன்னுடைய ஆழ்ந்த நாபியினின்று ஜ்ஞானமே முக்ய குணமாகப்பெற்ற நான் உண்டானேன். இப்படி என்னைப் படைத்த பகவானாகிய உன்னுடைய அற்புத உருவமும் சேதனாசேதன ஸ்வரூபமாயிருப்பதுமாகிய இந்த ஜகத்தையெல்லாம் விரித்து விளக்குவதாகிய வேதவசனங்களை உச்சரிப்பது எனக்கு எப்பொழுதும் அழியாதிருக்கும்படி அருள்புரிவாயாக. நான் ஸ்ருஷ்டிக்கும்பொழுது அந்தந்த வஸ்துக்களின் உருவங்களை அறிவதற்கு வேதமே எனக்கு முக்ய ஸாதனம். ஏனென்னில், அது ஜகத்தின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவிக்குந்தன்மையுடையது. ஆகையால் அந்த வேத வாக்குகள் எனக்கு எப்பொழுதும் மறவாதிருக்கும்படி அருள்புரியவேண்டும். மிகுந்த கருணையுடையவனும் புராண புருஷனும் அத்தகைய மஹிமைகள் அமைந்தவனுமாகிய இந்த பகவான் படுக்கையினின்று எழுந்து ப்ரீதி வளர்ந்து வழியப்பெற்ற புன்னகை

1 உனக்கு நான் செய்யக்கூடிய பணிவிடை யென்றே.

யுடன் தாமரை மலர்போன்ற தன் திருக்கண்களை மலர விழித்து ஜகத்தின் க்ஷேமத்திற்காகவும் எம்மை அனுக்ரஹிப்பதற்காகவும் தேன்போன்ற இனிய உரையினால் எமது மனவருத்தத்தைப் போக்குவானாக' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—தனக்குப் பிறப்பிடமாகிய பகவானைத் தவமெனப்படுகிற கர்மத்தினாலும் வித்யையென்கிற ஜ்ஞானத்தினாலும் ஸமாதியென்கிற பக்தியோகத்தினாலும் கண்டு (கர்ம ஜ்ஞான பக்திகளைத் தான் விதிப்படி அனுஷ்டிக்கையில், அவற்றால் அவன் அருள்புரிந்து தன்னைக் காண்பிக்கக் கண்டு) இங்ஙனம் தன் மனம் வாக்கு ஆகிய இவற்றின் சக்தியை அனுஸரித்து ஸ்தோத்ரம் செய்து அதற்குமேல் தன் மனதும் வாக்கும் செல்லப் பெறாமையால் அவ்வளவில் இளைப்புற்றவன்போல் ஓய்ந்துநின்றான். உலகங்களை இவ்வண்ணம் படைக்கவேண்டுமென்று அதன் ஸ்வரூபம் தனக்குத் தெரியப்பெறாமல் மனக்களிப்பற்றவனும் ப்ரளயகாலத்து மஹா ஜலத்தைக்கண்டு ப்ரமித்து மனவருத்தமுற்ற வ[illegible]கிய ப்ரஹ்மாவின் அபிப்ராயத்தை அறிந்து மது ஸூதனன் அந்த ப்ரஹ்மதேவனைப் பார்த்து கம்பீரமான மொழியினால் அவனுடைய மதிமயக்கத்தை அடக்குமவனாகி இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஓ ப்ரஹ்மதேவனே! மனவருத்தத்தினால் சோம்பலுற்றிருக்குந்தன்மையைக் கைக்கொள்ளாதே. ஸ்ருஷ்டிப்பதில் முயற்சியை ஏற்றுக் கொள்வாயாக. நீ என்னென்ன வேண்டுமென்று விரும்பி என்னை ப்ரார்த்திக்கின்றனையோ, அதெல்லாம் உனக்கு உண்டாகுமாறு நான் முன்னமே ஏற்படுத்தியிருக்கின்றேன். 'ஆனால் எனக்கு ஏன் ஸ்ருஷ்டிக்கும் வழி

யேதும் தெரியாதிருக்கின்றது?" என்கிறாயோ, சொல்லு கிறேன் கேட்பாயாக. நீ மீளவும் கர்ம யோகத்தையும், ஜ்ஞான யோகத்தையும் என் விஷயமான பக்தியோகத் தையும் அனுஷ்டிப்பாயாக. அவற்றைச் செய்கையில், ப்ரஹ்மதேவனே! அம்மஹிமையால் உனது ஹ்ருதய கம லத்தில் உலகங்களெல்லாம் தெளிவாகத்தோற்றக் காண் பாய். அங்ஙனம் உலகங்களையெல்லாம் உள்ளபடி கண்ட றிந்தபின்பு என்னிடத்தில் பக்தி மாறாதிருக்கப்பெற்று மனவூக்கமுடையவனாகி உன்னிடத்திலும் சேதனாசேதன ஸ்வரூபமான ஸமஸ்த லோகத்திலும் நிறைந்திருக்கின்ற என்னையும், பரமாத்மாவாகிய என்னிடத்தில் என்னால் தரிக்கப்பெற்ற லோகங்களையும் காண்பாய். ஸர்வ ஜகத் ஸ்வரூபமான பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்கரிக்கையில் மோஹமெல்லாம் தீரும். ஜகத்தெல்லாம் உள்ளபடியே உனக்குத் தோற்றும். காஷ்டங்களில் பற்றியிருக்கின்ற அக்னியைப்போல், ஸமஸ்த பூதங்களிலும் நிறைந்திருக் கின்ற என்னை எப்பொழுது உலகம் உள்ளபடி காணுமோ, அப்பொழுதே மோஹமெல்லாம் தீரப்பெறும். அக்னி காஷ்டத்தில் பற்றியிருப்பினும் அந்தக் காஷ்ட[illegible] கோணல் நீளம் முதலிய தன்மைகள் எங்ஙனம் தன்மேல் தீண்டப்பெறாதிருக்குமோ, அங்ஙனமே ஸமஸ்த சேதனா சேதனங்களில் உட்புகுந்திருப்பினும் பரமாத்மாவான பரமபுருஷன் அச்சேதனாசேதனங்களின் குணதோஷங் கள் தன்மேல் சிறிதும் தீண்டப்பெறாமலே இருப்பா னென்றும், அதைப்பற்றியே ப்ரக்ருதிபுருஷர்களைக்காட்டி லும் விலக்ஷணனென்றும், அந்த ப்ரக்ருதி புருஷர்களு க்கு அந்தராத்மாவென்றும், கர்மத்திற்கு உட்படாதவ னென்றும், ஆனதுபற்றியே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங் களுக்கு விஷயமல்லாதவனென்றும், ஒருவனுக்குக் கீழ்ப்

படிந்தவனென்றும், ஒருவனுக்குச் சரீரமாயிருப்பவனென்றும் உண்மையாக அறிவானாயின், அப்பொழுதே மதிமயக்கங்களெல்லாம் தீரப்பெறுவான். ஆகையால், நீ என்னைச் சேதனுசேதனங்களுக்கு அந்தர்யாமியென்றறியும்பொழுது அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறுமல் அவற்றில் விலக்ஷணமாயிருப்பவனென்று எனது உண்மையை அறிவாயாயின், உன் மதிமயக்கமெல்லாம் குறைவின்றி நீங்கப்பெறுவாய். ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் ஆகிய இவ்வைந்து பூதங்களும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் பூர்வ வாஸனையும் மனதும் ஆகிய இவற்றோடு பற்றுடையவனுயிருந்தும் இவற்றில் வேறுபட்டு வேதங்களில் ஸத்யம் ஜ்ஞானம் அநந்தமென்று சொல்லப்பட்ட ஸ்வரூபத்தையுடையவனும் தாரகனுமாகிய என்னுல் அணையப்பெற்று விளங்குந்தன்மையுள்ள ஜீவாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிவானுயின், கர்மத்திற்கு உட்படாமல் தனக்குத்தானே விளங்குந்தன்மையான [1] ஸ்வராஜ்யத்தைப் பெறுவான். 'ஆம். அழகியதே. ஸர்வத்திற்கும் அந்தராத்மாவாகி ஸர்வ ஸ்வரூபனுகிய பரமாத்மாவை உபாஸித்தலும், பரமாத்மாவுக்குச் சரீரமாகிய ஜீவாத்மாவை உபாஸித்தலும் மோக்ஷத்திற்கு உபாயமென்கிருய். ஆயினும், நான் உலகங்களைப் படைக்கையாகிற வேருெரு வ்யாபாரத்தில் ஆழ்ந்திருப்பேனுகையால், ஸர்வாத்மகனுன பரமாத்மாவை எங்ஙனம் உபாஸிக்க நேரும்' என்கிருயோ? அப்படியில்லை. சொல்லுகிறேன் கேட்பாயாக. புண்ய பாபரூபமான ஜீவாத்மாக்களின் பலவகையான கர்மங்களின்

1. ஸ்வராஜ்யமாவது—ப்ரக்ருதி ஸம்பந்தமற்றுக் கர்மத்திற்கு உட்படாமல் ஸ்வரூபாவிர்ப்பாவத்தைப் பெற்றுப் பரமபுருஷனேடு ஸாரூப்யம் பெற்றிருக்கை.

பிரிவின்படி விசித்ரங்களும் தேவ திர்யக் மனுஷ்யாதி ரூபங்களுமான பல ப்ரஜைகளைப் படைக்கின்ற உன் மனம் மயக்கம் உறாது; என்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை அனுஸந்திப்பதிலேயே எப்பொழுதும் ஊக்கமுடையதாயிருக்கும். இங்ஙனம் நான் உனக்கு அருள்புரிகின்றேன். ஜகத்திற்கெல்லாம் முதலில் தோற்றினவனும் எனது ஸ்வரூப ரூப குண விபூதிகளை உள்ளபடி அறிவிப்பதாகிய ஸமஸ்த வேதங்களையும் ஸாக்ஷாத்கரித்தவனுமாகிய உன்னை, ஸம்ஸாரத்தினின்று மீளவொட்டாமல் பந்திக்குந் தன்மையதாகையால் பாபிஷ்டமாகிய ரஜோ குணம் பந்திக்காது. (ஸம்ஸாரத்தினின்று மீளவொட்டாமல் தடுக்காது). ஏனென்னில், ப்ரஜைகளைப் படைத்துக் கொண்டிருப்பினும், எனது அனுக்ரஹத்தினால் உன் மனது என்னிடத்தில் மிகுதியும் ஆஸக்தியுடையதாயிருக்கும். இங்ஙனம் நான் உனக்கு அருள்புரிகின்றேன். தேஹத்தையே ஆத்மாவென்று நினைத்து அதில் விருப்பமுடைய அபக்தர்களுக்கு (என்னிடத்தில் பக்தியில்லாதவர்களுக்கு) எவ்வளவு வருந்தி ப்ரயத்னப் பட்டும் இத்தகையனென்று நான் அறியமுடியாதவனாயினும், இப்பொழுது உன்னால் அறியப்பெற்றேன். என்னை நீ ஸ்வரூப ரூப குண விபூதிகளுடன் உள்ளபடியே அறிந்தனை. 'நான் உன்னை அறிந்தேனென்பது எப்படி தெரிகிறது' என்கிறாயோ? சொல்லுகிறேன் கேள். நீ என்னை ப்ராக்ருதமான பஞ்சபூதங்களும் அத்தகைய ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களும் தீண்டப் பெறாதவனென்று நினைத்திருக்கின்றனை எல்லாச் செயல்களும் செய்யுந்திறமை யுடையவனென்றும் ஸமஸ்த காமங்களும் நிறைவேறப் பெற்றவனென்றும் ஸர்வகந்தனென்றும் ஸர்வரஸனென்றும் ஶ்ருதிகள்

சொல்லுகிறபடியே ப்ரக்ருதியின் ஸம்பந்தமில்லாமல் சுத்த ஸத்வம் கலந்த பஞ்சோபநிஷந் மயமான பஞ்ச பூதங்களும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் அமைந்தவனென்று நீ என்னை நினைத்திருக்கின்றனை. இதுவே என்னுடைய உண்மை. ஆகையால் நீ என்னை உள்ளபடி அறிந்தனையென்பதில் ஸந்தேஹம் என்? அன்றியும், சேதனு சேதனங்களெல்லாம் எனக்குச் சேஷப்பட்டு எனக்குச் சரீரமாகி என்னால் ஸ்ருஷ்டிக்கப் படுவதும் பாதுகாக்கப் படுவதும் ஸம்ஹரிக்கப் படுவதுமாயிருப்பதென்றும், என்னை ஸர்வஜ்ஞன் ஸத்ய ஸங்கல்பன் ஸத்யகாமன் ப்ரக்ருதி புருஷர்களைக்காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனென்றும் நினைத்திருக்கின்றனை. இதுவே என்னுடைய உண்மை. ஆகையால் நீ என்னை உள்ளபடி அறிந்தாயென்பதில் ஸந்தேஹம் உண்டோ? நீ முன்பு எனது நாபீகமலத்தின்மேல் இருந்து என்னைக் காணப்பெருத ஸமயத்தில் 'இந்தத் தாமரைமலருக்கு ஓர் ஆதாரம்உண்டாயிருக்கவேண்டும். ஆதாரமில்லாமல்இது நிற்கமாட்டாதல்லவா? ஆகையால் அதைத் தேடிப்பார்ப்போம்' என்று என்னைப்பற்றி விசாரிக்கமுயன்று ஜலத்தில் தாமரைமலரின் ஆதாரத்தை அதன் தண்டிலுள்ள ரந்த்ரத்தின் வழியாய்ச் சென்று தேடிக்கொண்டிருக்கையில், நான் உனக்கு என் சரீரத்தை வெளியில் காட்டினேன். அன்றியும், ஓ ப்ரஹ்மதேவனே! க்ஷேமங்களை விளைக்கும்படியான என் சரித்ரங்களை உட்கொண்டு நீ என்னை ஸ்தோத்ரம் செய்ததும், நிலையுடன் தவம் புரிந்ததும் ஆகிய இதுவெல்லாம் என்னுடைய அனுக்ரஹத்தினால் உண்டானதே. நற்குணங்கள் நிறைந்து துர்க்குணங்கள் தீண்டப்பெருதவனுமாகிய என்னை வர்ணித்து லோகங்களைப் படைக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால்

நீ ஸ்தோத்ரம் செய்ததற்கு நான் மிகுதியும் ஸந்தோஷம் அடைந்தேன். உனக்கு மங்களம் உண்டாகுக. இங்ஙனம் நீ செய்த ஸ்தோத்ரத்தைச் சொல்லி எந்த மனிதன் தினந்தோறும் என்னைத் துதித்துப் பணிவானோ, அவனுக்கும் நான் சீக்ரம் அருள் புரிவேன். இனி உன் விஷயத்தில் அனுக்ரஹம் செய்தேனென்பதில் ஸந்தேஹம் உண்டோ? நான் அவரவர் விரும்புகிற வரங்களையெல்லாம் கொடுக்கும் ப்ரபுவல்லவா? என் தன்மையைப் பார்த்தே நீ நிச்சயித்துக்கொள்ளலாம். ஆகையால் நான் உன் விஷயத்தில் அருள்புரிந்தேனென்பதில் ஸந்தேஹம் வேண்டாம். குளம் கிணறுமுதலியனவெட்டுவிக்கையாகிற ஸ்மார்த்த கர்மத்தினாலும் க்ருச்ரம் சாந்த்ராயணம் முதலிய தவத்தினாலும் ஜ்யோதிஷ்டோமம் முதலிய யாகங்களாலும் அன்னதானம் பூதானம் முதலிய தானங்களாலும் யம நியமாதி யோகமார்க்கங்களாலும் பக்தியோகத்தினாலும் விளையக்கூடிய நன்மையாவது என்னுடைய ப்ரீதியேயென்று தத்வ வித்துக்களான பெரியோர்களின் ஸித்தாந்தம். எந்தெந்த நற்கார்யம் செய்யினும், அதனால் பெறக்கூடிய பலன் எனது அனுக்ரஹமே. என்னுடைய ப்ரீதியைப் பெறுதற்காகவே தவஞ்செய்வதும் தானதர்மங்களைச் செய்வதும் யம நியமாதி யோகமார்க்கங்களை அனுஷ்டிப்பதும் பக்தியோகம் செய்வதும், என் ப்ரீதியைக் காட்டிலும் மேற்பட்ட பயன் மற்றொன்றும் இல்லை. நான் ப்ரீதி அடைவேனாயின், போக மோக்ஷங்கள் இரண்டும் கையிலங்கு நெல்லிக்கனிகளே. இங்ஙனம் தத்வம் உணர்ந்த பெரியோர்கள் நிச்சயித்திருக்கின்றார்கள். வாராய் ப்ரஹ்மதேவனே! நான் ஜீவாத்மாக்களுக்கு உள்ளே புகுந்து அவர்களை நியமித்து தரித்துக்கொண்டிருப்பவன். ஆனதுபற்றியே அவர்க்கு ப்ரீதிக்கிடமான

வஸ்துக்களெல்லாவற்றிலும் மிகுதியும் ப்ரீதிக்கிடமான வஸ்துநானொருவனே. என்னுடைய ஸம்பந்தலேசத்தைப் பற்றியே தேஹம் முதலிய மற்றவையெல்லாம் ப்ரீதிக்கிடமாகின்றன. ஆகையால் நான் மிகுந்த ப்ரீதிக்கிடமென்பதில் ஸந்தேஹமில்லையே. இங்ஙனம் அந்தராத்மாவாயிருக்கையாலும் மிகுந்த அன்பிற்கிடமாகையாலும் என்னிடத்தில் பக்தி செய்வதே முக்யம். இதுவே பிறவியின் பயன். ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாகிய என்னைக் காரணமாகவுடையதும் (என்னால் கொடுக்கப் பெற்றதும்) நான் உபதேசித்த ஸமஸ்த வேதஸ்வரூபமாயிருப்பதுமாகிய ஜ்ஞானத்தினால் இந்த ஜகத்தையும் இதிலுள்ளடங்கின தேவ மனுஷ்யாதி ப்ரஜைகளையும் முன் கற்பத்தில் இருந்தாற்போலவே ஸ்ருஷ்டிப்பாயாக. ஸம்ஹாரகாலத்தில் எந்த ப்ரஜைகளை நான் என்னிடத்தில் அடக்கிக்கொண்டேனோ, எவை என்னிடத்தில் உறங்குவதுபோல் மறைந்திருக்கின்றனவோ, அந்தந்த ப்ரஜைகளையெல்லாம் ஸ்ருஷ்டிப்பாயாக' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ப்ரக்ருதிக்கும் புருஷனெனப்படுகிற ஜீவாத்மாவுக்கும் நியாமகனும் நாபியில் ஜகத்ரூபமான தாமரைமலர் தோன்றப்பெற்றவனுமாகிய பகவான் அந்த ப்ரஹ்மதேவனுக்கு உலகங்களைப் படைக்கவேண்டியவிதம் முதலியவற்றை இங்ஙனம் ஸ்பஷ்டமாக உபதேசித்துத் தன்னுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை மறைத்துக்கொண்டான். ஒன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

(விதுரர் ஸ்ருஷ்டியைப் பற்றி வினவுதலும், மைத்ரேயர் ப்ராக்ருதம் முதலிய ஸ்ருஷ்டியின் பிரிவுகளை நிரூபித்தலும்.)

விதுரர் சொல்லுகிறார்:—பகவான் ப்ரஹ்மதேவனை அனுக்ரஹித்து, அந்தர்த்தானம் அடைந்தபின்பு, உலகங்களுக்குப் பாட்டனும் ஜிதேந்த்ரியனும் தேவமனுஷ்யாதிகளுக்கு ப்ரபுவுமாகிய அந்த ப்ரஹ்மதேவன் தேஹத்தினின்றுண்டானவைகளும் மனத்தினின்றுண்டானவைகளுமான ப்ரஜைகளை எத்தனை வகையாகப் படைத்தான்? ப்ராணிகளின் ஸ்வரூபத்தை உணர்ந்தவரே! மைத்ரேய மஹர்ஷீ! நான் மற்ற எந்தெந்த விஷயங்களைப்பற்றி வினவினேனோ, ஸம்சயத்திற்கிடமான அந்தக் கேள்விகளையெல்லாம் ஒவ்வொன்றாக உள்ளபடி உரைப்பீராக. ப்ரஹ்ம வித்துக்களில் சிறந்தவரே! எம்முடைய ஸம்சயங்களெல்லாவற்றையும் தீர்ப்பீராக.

ஸ்ரீ சுகர் சொல்லுகிறார்:—வாராய் பரதவம்சத்து மன்னவனே! இங்ஙனம் அவ்விதுரனால் தன் கேள்விகளுக்கு மறுமொழி கூறும்படி வேண்டப்பெற்ற மைத்ரேய முனிவர், அவன் கேட்ட கேள்விகள் அனைத்தும் பகவானிடத்தில் மிகுந்த பக்தியை விளைப்பனவாயிருக்கையால் மிகுந்தஸந்தோஷம்அடைந்து மனத்திலிருக்கிற அந்தக் கேள்விகளுக்கு மறுமொழி கூறத்தொடங்கினார்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—பிறவி முதலிய விகாரங்களற்றவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய பகவான் எங்ஙனம் மொழிந்தானோ, அங்ஙனமே ப்ரஹ்மதேவனும் பரமாத்மாவினிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி தேவமானத்தினால் நூறாண்டுகள் தவம் செய்தான். அத்தாமரை மலரோன், அக்காலம் மிகுந்தவலிமையுடன் வீசுகின்ற பெருங்காற்றினால் தனக்கு வாஸஸ்தான

மாகிய தாமரைமலரும் சுற்றிலும் சூழ்ந்திருக்கிற ப்ராளயஜலமும் நடுங்கக் கண்டான். அப்பால் அவன் தான் பரமாத்மாவைப்பற்றி நடத்தின உபாஸனத்தினால் தவமும் கர்மயோகமும் வளர்ந்துவரப்பெற்று அதனால் நானாவிதமான ஸ்ருஷ்டியைப் பற்றின அறிவாகிற வலிமை அமைந்திருந்தமையால் அந்த ப்ரளய ஜலத்தையும் அவ்வாயுவையும் பானஞ் செய்தான் (பருகினான்). அவ்வயன் தான் எந்த ஆதாரத்தில் வீற்றிருக்கின்றானோ, அந்த நாபீகமலம் மிகவும் உயர்ந்து ஆகாயமெங்கும் அளாவியிருந்தது. அவன் அது கண்டு, 'இக்கமலத்தினால் முன் கல்பத்தின் முடிவில் உட்கொள்ளப் பெற்ற உலகங்களை மீளவும்ஸ்ருஷ்டிக்க வேண்டும்' என்று சிந்தித்தான். அவன், தான் செய்யவேண்டிய கார்யத்தில் பகவானால் தூண்டப்பெற்றவனாகி அந்த நாபீகமலத்தின்மேல் இருந்து, அந்த ஓர் கமலத்தையே பலவாறுகப் பிரித்தான். அந்த நாபீகமலம் பதினான்கு லோகங்களாக விரியும்படியான விஸ்தாரமுடையது. அதை அந்த ப்ரஹ்மதேவன் தேவ மனுஷ்யாதியான போக்த்ருவர்க்கம் ஓர் பாகமாகவும், சப்தியான போக்யவர்க்கம் ஓர் பாகமாகவும், ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களாகிற போகஸாதனங்கள் ஓர் பாகமாகவும், ஆக மூன்று வகையாகப் பிரித்தான். ஜீவலோகத்தின் நிலைமை இவ்வளவே. போக்தாக்களென்கிற ஜீவாத்மாக்களும் போக்யங்களென்கிற சப்தாதி விஷயங்களும் கர்மேந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்களென்கிற போகோபகரணங்களும் பூலோகம் ஸ்வர்க்கலோகமென்கிற பலவகை போகஸ்தானங்களும் அடங்கப்பெற்ற ப்ரபஞ்சமெல்லாம் இந்த நாபீ கமலத்தில் அடங்கினதே. ஆகையால் ப்ரபஞ்ச ஸ்வரூபமாகிய நாபீகமலத்தின் ஸ்வரூபத்தைச்

சுருக்கமாகச் சொன்னேன். 'ப்ரஹ்மாவும் அவனுடைய ஸ்தானமும் கார்யவர்க்கத்தில் அடங்கினவைகளே. ஆகையால் மற்ற கார்ய வர்க்கமெல்லாம் தினந்தோறும் ஸ்ருஷ்டிக்கப்படுவதுபோல் அவைகளும் தைனந்தின ஸ்ருஷ்டிக்கு ஏன் உட்பட்டவையல்ல' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. எவ்வகைப் பலனையும் விரும்பாமல் நடத்தும் தர்மத்திற்கு ப்ரஹ்மாவாயிருத்தலும் ப்ரஹ்மலோக ப்ராப்தியும் பலனாக உண்டாகின்றன. 'ஆனால், பலனை விரும்பாமல் அனுஷ்டிக்கும் தர்மத்திற்கு மோக்ஷமே பலனன்றி, ப்ரஹ்மபட்டமாவது ப்ரஹ்ம லோகமாவது பலனன்றே' என்கிறாயோ? வாஸ்தவமே. ஆயினும், பலனை விரும்பாமல் தர்மானுஷ்டானஞ் செய்பவர் முதலில் ப்ரஹ்மலோகம் சென்று அங்குச் சிலகாலம் இருந்து, அப்பால் ப்ரஹ்மாவோடு மோக்ஷம் பெறுவார்கள். மற்றை லோகங்களெல்லாம் காம்ய கர்மங்களுக்குப் பலனாக நேருமவையாகையால் அவற்றிற்குக் கல்பந்தோறும் ஸ்ருஷ்டியும் ப்ரளயமும் உள்ளவைகளே. நிஷ்காமர்கள் பெறும்படியான ப்ரஹ்ம லோகத்திற்கும் ப்ரஹ்மதேவனுக்கும் கல்பந்தோறும் ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் இல்லை; மற்றும் இரண்டு பரார்த்தம்வரையில் அவை அழியாதிருக்கும். மற்ற லோகங்கள் அங்ஙனம இருக்கமாட்டா. அவற்றிற்குக் கல்பந்தோறும் ஸ்ருஷ்டி ப்ரளயங்கள் உண்டு. ப்ரஹ்மதேவனது ஸ்தானமாகிய ஸத்யலோகம் முதலிய லோகங்கள் காம்ய கர்மங்களால் நேருமவை யல்ல. ஆகையால் அவற்றின் ஸ்ருஷ்டி ப்ரளயங்களும் மற்ற லோகங்களின் ஸ்ருஷ்டி ப்ரளயங்களைப்போன்றவையல்ல.

விதுரர் வினவுகிறார் :—எல்லாவற்றையும் உள்ளபடி அறிந்தவரும் அறிந்தபடியே உரைக்க வல்லவருமாகிய

ப்ரஹ்மர்ஷியே! சேதநாசேதனங்களடங்கின ப்ரபஞ்
ஸ்வரூபனும் இத்தகையதென்று நிரூபிக்கமுடியா
அற்புத செயலுடையவனுமாகிய ஸ்ரீமஹாவிஷ்ணுவு
குக் காலத்தையும் ஓர் சரீரமாகச் சொன்னீர். அந்த
காலமென்னும் வஸ்து ப்ரளயத்தில் இருந்ததாகவு
சொல்லக் கேட்டேன். இதனால் அக்காலமென்னு
பொருள் நித்யமென்பதாகத் தோற்றுகிறது. ஆனா
அது ஸ்ருஷ்டிக்கு உட்பட்டதா? அன்று? அதனுடை
ஸ்தூலரூபம் எத்தகையது? ஸூக்ஷ்மரூபம் எத்தகை
யது? அக்காலத்தின் ஸ்வரூபத்தை உள்ளபடி எமக்கு
மொழிவீராக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—அப்பா! விதுரனே
காலத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன், கேட்ப
யாக. காலம் கண்ணுக்குப் புலப்படும் வஸ்து அன்று
அதன் கார்யங்களைக் கொண்டே அதை அறியவேண்டும்
ஆகையால் அதன் தூண்டுதலால் விளையும் ப்ரபஞ்ச ஸ்ரு
ஷ்டியைச் சொல்லுகிறேன். மேல், சொல்லுவதெல்லா
அக்காலத்தின் ஸ்வரூபமேயென்றுணர்வாயாக. பர
புருஷன் ஸத்வாதி குணங்களின் பரிணாமத்திற்கிடமான
ப்ரக்ருதியைச் சரீரமாகவுடையவன்; பூமி முதலி
விசேஷங்கள் எவையுமில்லாதவன். ஈஸ்வரன் ஸ்ருஷ்
டிக்கு முற்காலத்தில் ஸூக்ஷ்ம ப்ரக்ருதியைச் சரீரமா
வுடையவனாயிருப்பான். அப்பொழுது ப்ரக்ருதியின்
பரிணாமங்களாகிய ப்ருதிவி முதலிய தத்வங்கள் எவை
யும் புலப்படா. ஆகையால் அவன் ஸ்ருஷ்டிக்கு முற்கா
லத்தில் ப்ருதிவி முதலிய விசேஷங்கள் எவையுமில்லாதி
ருந்தான். அவனுக்கு அவனே காரணமன்றி மற்றொரு
காரண வஸ்து கிடையாது. அப்படி வேறொரு காரண
வஸ்து உளதாயின், மற்ற ப்ருதிவி முதலிய தத்வங்

களெல்லாம் தந்தமது காரணவஸ்துக்களில் மறைந்தாற் போல் ஈச்வரனும் தன்னுடைய அக்காரண வஸ்துவில் மறைந்திருக்க வேண்டும். அங்ஙனம் மறைந்ததாக ச்ருதிகளில் எங்கும் சொல்லாமையாலும் இவனுக்கு வேறொரு காரணமில்லையென்று சொல்லுகையாலும் அவன் தனக்குத் தானே காரணமா யிருப்பவன். இத்தகையனாகிய பரம புருஷன் விளையாடவேண்டு மென்னும் விருப்பத்தினால் விளையாட்டிற்குக் கருவிகள் வேண்டுமென்று, உபாதானகாரணமாகிய ப்ரக்ருதியோடு கூடின தன்னை ஜகத்தாகப் படைத்தான். சேதனாசேதனங்களுக்கு நியாமகனான ஈச்வரன் தான் நிமித்தகாரணமாகவும் ப்ரக்ருதி புருஷன் காலம் ஆகிய இவற்றோடு கூடி உபாதானகாரணமாகவும் இருந்து, தானே ஜகத்தை ஸ்ருஷ்டித்தான். ஆகையால் இந்த ப்ரபஞ்ச மெல்லாம் பரம புருஷனே. அவனே ஜகத்காரண வஸ்து. கார்யமாகிய ஜகத்தும் அவனே. 'பகவானொருவனே கார்ய காரணங்களிரண்டாகவும் எப்படி ஆகக்கூடும்' என்னில், சொல்லுகிறேன் கேட்பாயாக. சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய பகவான் ஒருவனே யாயினும், அவஸ்தா பேதத்தினால் கார்யமாயும் காரணமாயுமிருக்கக் கூடும். மண் ஒன்றே உருண்டையாகவும் குடமாகவும் இருப்பதைக் காண்கின்றோம். அங்ஙனமே சேதனாசேதனங்களைச் சரீரமாகவுடைய பகவானுக்கு ஸ்தூலாவஸ்தையென்றும் ஸூக்ஷ்மாவஸ்தை யென்றும் இரண்டு அவஸ்தைகளுண்டாகையாலே அவனொருவனே கார்ய காரணங்களிரண்டாகவுமிருக்கை அமையும். ஸ்தூலாவஸ்தையே கார்யமாயிருக்குந்தசை. ஸூக்ஷ்மாவஸ்தை காரணமாயிருக்குந் தசை. ஈச்வரனுக்கு ஸ்தூலாவஸ்தையும் ஸூக்ஷ்மாவஸ்தையும் நேரே இல்லையாயினும், ஸ்தூல ப்ரக்ருதி

யையும் ஸூக்ஷ்ம ப்ரக்ருதியையும் சரீரமாகவுடையவனு கையால் ஸ்தூலாவஸ்தையும் ஸூக்ஷ்மாவஸ்தையும் ஈஶ்வரனுக்குப் பொருந்தும். ப்ரபஞ்சமாகப் பரிணமித்திருக்கின்ற ப்ரக்ருதியே ஸ்தூல ப்ரக்ருதியாம். அதுவே நாமரூபங்களையுடையது. ப்ரளயத்தில் நாமரூபங்களுக் கிடமல்லாமல் ஈஶ்வரனிடத்தில் மறைந்திருக்கும் ப்ரக்ருதி ஸூக்ஷ்ம ப்ரக்ருதியாம். இதுவே அவ்யக்த மென்னும் பேருடையது. இதுவே ஸ்ருஷ்டிக்கு முன்னிருக்குந்தசை. ஸூக்ஷ்ம தசையை அடைந்த ஸூக்ஷ்ம ப்ரக்ருதியும் ப்ரபஞ்சமாகப் பரிணமிக்கின்ற ஸ்தூல ப்ரக்ருதியும் பகவானுக்குச் சரீரமாகையால், அவனுக்கு ஸ்தூலாவஸ்தையும் ஸூக்ஷ்மாவஸ்தையும் அதன் மூலமாய்ப் பொருந்துகின்றன. கார்யதசையை அடைந்து ப்ரபஞ்ச ரூபமாய் விரிந்து கண்ணுக்குப் புலப்படுவதும் பரப்ரஹ்மத்திற்குச் சரீரமுமாகிய இந்த ஸ்தூல ப்ரக்ருதியானது ஸ்ருஷ்டிக்குப் பூர்வகாலத்தில் அவ்யக்தாவஸ்தை பெறுமாறு ஸம்ஹாரஞ் செய்யப்பெற்றது(சுருக்கப்பெற்றது). காலத்தையொழிய ஸ்ருஷ்டிமுதலியவை எவையும் ஸம்பவிக்கமாட்டா. ஆகையால் அக்காலம் ஈஶ்வரனைப்போல் எல்லாத் திறமைகளும் அமைந்திருக்கு மாகையாலும் அவ்வீஶ்வரனுக்குச் சரீரமாகி அவனுக்குட்பட்டிருக்குமாகையாலும் அதை ஈஶ்வரனென்றே சொல்லலாம். அக்காலமென்னும் பொருள் ப்ரத்யக்ஷத்தினுல் அறியமுடியாத ஸ்வரூபமுடையது. கார்யங்களைப் பற்றியே அதை ஊஹிக்க வேண்டும். அத்தகையதான காலத்திற்கு அவ்யக்தமான அந்த ப்ரக்ருதியும் உட்பட்டேயிருந்தது. ஆகையால் ப்ரளயத்திலும் காலம் ஸஹாயமாகவே இருந்தது. ஸ்ருஷ்டியிலும் ஸம்ஹாரத்திலும்காலம்தொடர்ந்துவருவதே. பரப்ரஹ்மமென்று கூறப்படுகிற பரமபுருஷன் ஜகத்தைப்

படைத்து அதில் உட்புகுந்திருக்கின்றானாகையால் ப்ர பஞ்சமெல்லாம் பரமபுருஷனே யென்று கூறப்படுகின்றது. ஆகையால் பரமபுருஷ ஸ்வரூபமாகிய இந்த ப்ரபஞ்ச மெல்லாம் ஸ்ருஷ்டிக்கு முன்பு அவனுடைய ஸங்கல்பத் தினால் நாமரூபங்களுக் கிடமல்லாமல் ஸம்ஹாரஞ் செய் யப்பெற்று அவ்விஷ்ணுவினிடத்தில் மறைந்து அவ்யக்த தசையை அடைந்து காலத்திற்கு உட்பட்டிருந்தது. அப்பொழுது மஹத்து முதலிய ப்ரக்ருதியின் பிரிவு கள் எவையுமில்லாமல் மறைந்தன. பரப்ரஹ்மம் தன் ஸங் கல்பத்தினால் கார்ய தசையில் மஹத்து அஹங்காரம் முத லிய ஸ்தூலாவஸ்தைகளை அடைந்த அசேதன மெனப் படுகிற ப்ரக்ருதியோடும் சேதன வர்க்கங்களோடும் கூடி தேவ மனுஷ்யாதிகள் அடங்கின ப்ரபஞ்சமாக விரிந்திரு ந்து மீளவும் தன் ஸங்கல்பத்தினாலேயே அந்த ப்ரபஞ் சத்தையெல்லாம் ஸம்ஹரித்து மஹத்து அஹங்காரம் முதலிய ஸ்தூலாவஸ்தைகளையும் ப்ரக்ருதியில் மறையச் செய்து அவ்யக்தமான ப்ரக்ருதியாகவே யிருந்து நின் றான் (அவ்யக்த ப்ரக்ருதியை மாத்ரமே தனக்குச் சரீர மாகக்கொண்டு நின்றான்). ஒரு மண்ணே ஒரு காலத்தில் உருண்டையாகவும் மற்றொரு காலத்தில் குடமாகவும் இருக்கிறதாகையால் அவ்வொரு மண்ணுக்கே காரண மாயிருக்கையும் கார்யமாயிருக்கையுமாகிய இரண்டு அவஸ்தைகளும் உண்டாகிறாப்போல், சேதனா சேதனங் களோடுகூடின ஈச்வரன் ஒருவனே ஸூக்ஷ்மம் ஸ்தூலம் என்கிற இரண்டு அவஸ்தைகளால் காரணமாயும் கார்ய மாயும் இருக்கக்கூடும். குடத்தைப் பார்த்து இது மண் ணென்று சொல்லுவதுபோல் ப்ரபஞ்சத்தை ஈச்வர னென்று சொல்லக்கூடும். ப்ரளய தசையில் ஸூக்ஷ்ம சே தனாசேதனங்களோடுகூடின பரப்ரஹ்மம் காலத்தினால்

பரிச்சேதிக்கப்பட்டதாகவே யிருந்தது. 'காலத்தினால் பரிச்சேதிக்கப் படுகையாவது: காலத்தினால் விளையும் விகாரங்களுக் கிடமாயிருக்கையே. இது ஸ்வரூபம் மாறப் பெறுந்தன்மையதான ப்ரக்ருதிக்குச் சேருமேயன்றி ஸ்வரூபம் மாறப்பெறாத சேதனர்களுக்கும் ஈஶ்வரனுக்கும் அத்தன்மை பொருந்தாது. காலத்தினால் பரிச்சேதிக்கப் பட்டிருக்குமாயின் நித்யமென்கிற புகழும் குலையுமே' என்னில், அப்படி அன்று. ஸ்ருஷ்டி தசையில் தேவமனுஷ்யாதிகள் அடங்கின ப்ரபஞ்ச ஸ்வரூபியாகிய பகவான் எப்படி காலத்தினால் பரிச்சேதிக்கப் பட்டிருக்கிறானோ, அங்ஙனமே, ஸ்ருஷ்டிக்கு முன் தசையாகிய ப்ரளய தசையிலும் ஸூக்ஷ்ம சேதனாசேதனங்களோடு கூடின ஈஶ்வரன் காலத்தினால் பரிச்சேதிக்கப்பட்டவனாகவே யிருந்தான். இங்ஙனமே மேல் வரப்போகிற ப்ரளயத்திலும் ஸ்ருஷ்டியிலும் ஸூக்ஷ்மமாயும் ஸ்தூலமாயுமுள்ள சேதனாசேதனங்களோடு கூடின ஈஶ்வரன் காலத்தினால் பரிச்சேதிக்கப்பட்டவனாகவே யிருப்பான். ஆயினும் கீழ்ச் சொன்ன தோஷம் ஸ்ருஷ்டி ப்ரளய தசைகள் இரண்டிலும் துல்யமே யென்னில், வாஸ்தவம். ஆயினும், அவஸ்தைகள் காலபரிச்சின்னங்களேயன்றி அவஸ்தைகளையுடைய ஈஶ்வரன் நித்யனே. ப்ரக்ருதிக்கு ஸ்தூலாவஸ்தையென்றும் ஸூக்ஷ்மாவஸ்தையென்றும் இரண்டு அவஸ்தைகள் உண்டென்று முன்னமே மொழிந்தோம். ஸூக்ஷ்மாவஸ்தையே காரணாவஸ்தை யென்றும் ப்ரளயாவஸ்தையென்றும் கூறப்படும். ஸ்தூலாவஸ்தை கார்யாவஸ்தையென்றும் ஸ்ருஷ்ட்டி அவஸ்தையென்றும் கூறப்படும். இவ்விரண்டு அவஸ்தைகளும் சேதனர்க்கும் ஈஶ்வரனுக்கும் இந்த ப்ரக்ருதியின் மூலமாய் உண்டாகின்றனவேயன்றி இயற்கையில் ஏற்பட்டவை யல்ல

சேதனர்கள் என்றும் அணுபரிமாணர்களே. அவர்களுக்கு எக்காலத்திலும் ஸ்தூலாவஸ்தை யென்பது சேராது. ஈஶ்வரன் விபுவாகையால் ஸூக்ஷ்மாவஸ்தை எந்நாளும் பொருந்தாது. ஆயினும் விபுவானஈஶ்வரன் அணுவான சேதனர்களுக்குள் வ்யாபித்து நிற்குந்திறமையுடையவனென்பது அவனுடைய விசித்ர சக்தியைப் பொருந்தினது. ஆகையால் அந்த ப்ரக்ருதியின் ஸ்தூல ஸூக்ஷ்மாவஸ்தைகள் இரண்டும் பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்ற காலத்தினால் விளைபவைகளே. ஆதலால் ப்ரக்ருதிக்குக் காலபரிச்சேதம் உண்டு. அதன் ஸம்பந்தத்தினால் சேதனர்களுக்கும் ஈஶ்வரனுக்கும் அந்தக் காலபரிச்சேதம்உண்டாகின்றது. இயற்கையில் ஏற்பட்டதன்று. சேதனர்களுக்கு ப்ரக்ருதி ஸம்பந்தம் கர்மத்தினால் விளையுமதாகையால் அபுருஷார்த்தங்களுக்கிடமாகின்றது. ஈஶ்வரனுக்கு அந்த ப்ரக்ருதி ஸம்பந்தம் தன் ஸங்கல்பத்தினால் வருகிறதாகையாலும், அந்த ப்ரக்ருதி அவனுக்கு உட்பட்டதாகையாலும் அது அவனுக்கு அபுருஷார்த்தங்களை விளைக்கவல்லதன்றென்று முன்னமே கூறப்பெற்றது. ஆகையால் ப்ரக்ருதியின் மூலமாய் சேதன ஈஶ்வரர்களுக்கும் அந்த ஸ்தூல ஸூக்ஷ்ம தசைகள் உண்டாகின்றன, அதன்மூலமாய்க் காலபரிச்சேதமும் உண்டாகின்றது. அது அவர்களுடைய நித்யத்வத்திற்கு பாதகமாகாது. இங்ஙனம் எல்லாவற்றிற்கும் காலம் பரிச்சேதமென்று அதன் ஸ்வரூபத்தையும், காலத்தினால் தூண்டப்படுகிற வஸ்துக்களின் ஸ்ருஷ்டியையும் சொன்னேன். இனி ஸ்ருஷ்டியின் பிரிவுகளையும் ப்ரளயத்தின் பிரிவுகளையும் சொல்லுகிறேன், கேட்பாயாக. அங்ஙனம் காலத்தினால் பரிச்சேதிக்கப்பட்டதாக (காலத்திற்குட்பட்டதாக)ச் சொல்லப்பெற்ற வஸ்துவின் ஸ்ருஷ்டி

ப்ராக்ருதமென்றும் வைக்ருதமென்றும் இருவகைப்பட்டு மீளவும் ஒன்பது பிரிவுகளாகப் பிரியும். இதன் ப்ரளயமும் காலம் த்ரவ்யம் குணம் ஆகிய மூன்று காரணங்களால் மூன்று வகைப்பட்டிருக்கும். இன்னவனுக்கு இன்ன காலத்தில் மரணமென்று காலத்தின் நியதியால் ஏற்படும் ப்ரளயம் ஒன்று. இது காலிக ப்ரளயம்; நித்ய ப்ரளயமென்றும் கூறப்படும். ஸங்கர்ஷணனுடைய முகத்தினின்றுண்டாகிற அக்னியினாலும் காற்று முதலியவற்றாலும், குடம் முதலியவற்றுக்கு தடி முதலியவற்றாலும் உண்டாகக்கூடிய நாசமே த்ரவ்ய ப்ரளயமாம். இது நைமித்திக ப்ரளயமென்று கூறப்படும். ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் ஏற்றக்குறைவுகளின்றி ஸாம்யாவஸ்தையை அடைகையில் உண்டாகும் நாசம் குண ப்ரளயம். இது ப்ராக்ருத ப்ரளயமென்று கூறப்படும். இங்ஙனம் காலம் த்ரவ்யம் குணம் ஆகிய இம்மூன்று காரணங்களால் ப்ரளயம் மூன்று வகைப்பட்டிருக்கும். இனி ஒன்பது வகையான ஸ்ருஷ்டியின் விவரத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. முதலில் பரமபுருஷன் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று ஸங்கல்பிக்கின்றான். அந்த ஸங்கல்பத்தினால் சேதனர்களான புருஷர்களும் அசேதனமான ப்ரக்ருதியும் ஸ்ருஷ்டியாகிற கார்யத்தில் முயற்சி கொண்டவையாகின்றன. அத்தகைய சேதனசேதனங்களைச் சரீரமாகவுடைய பரமபுருஷனிடத்தினின்று மஹத்தென்னும் தத்வம் உண்டாகின்றது. ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் ஸ்ருஷ்டிக்க முயன்ற பகவானுடைய ஸங்கல்பத்தினால் ஏற்றக்குறைவுகளின்றி ஸமமாயிருக்கும் நிலைமையைத் தவிர்ந்து வைஷம்யத்தை அடைகின்றன. அத்தகைய ஸத்வாதி குணமயமான ப்ரக்ருதியின் ஓர் பரிணாமமே மஹத்தத்வமாம். இது முதன்மையான ஸ்ரு

ஷ்டி. இரண்டாவது அஹங்கார ஸ்ருஷ்டி. இந்த அஹங்காரத்தினின்றுமே ப்ருதிவி முதலிய ஐந்து பூதங்களும் தன்மாத்ரைகளும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் மனதும் உண்டாகின்றன. மூன்றாவது ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களின் ஸ்ருஷ்டி. இது தன்மாத்ர ஸ்ருஷ்டியென்றும் த்ரவ்ய ஸ்ருஷ்டியென்றும் இரண்டுவிதமாயிருக்கும். தன்மாத்ரைகளாவன: ப்ருதிவி முதலிய பூதங்களின் ஸூக்ஷ்மாவஸ்தைகள். முதலில் தன்மாத்ரங்களைப் படைத்து அதன் மூலமாய் பஞ்சபூதங்களைப் படைத்தான். நான்காவது இந்த்ரியங்களின் ஸ்ருஷ்டி. இவ்விந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்களென்றும் கர்மேந்த்ரியங்களென்றும் இருவகைப்பட்டிருக்கும். ஐந்தாவது இந்த்ரியாபிமானி தேவதைகளின் ஸ்ருஷ்டி. வைகாரிகமென்னும் பேருடைய எந்த ஸாத்விகாஹங்காரத்தினின்று மனஸ்தத்வம் உண்டாகின்றதோ, அந்த வைகாரிகாஹங்காரத்தினின்றுமே இவ்விந்த்ரியாபிமானி தேவதைகள் உண்டாகின்றனர். ஆறாவது அண்டத்தின் ஸ்ருஷ்டி. இது நான்முகனுடைய புத்தியால் உண்டானதன்று; அவனுக்கு அந்தர்யாமியாகிய பகவானுடைய ஸங்கல்பத்தினுலுண்டானது. இவ்வாறும் ப்ராக்ருத ஸ்ருஷ்டிகள். வைக்ருத ஸ்ருஷ்டிகளையும் சொல்லுகிறேன், கேட்பாயாக. 'ஜகத்து இன்னவிதமென்று நெஞ்சால் நினைக்கமுடியாததும் பலவகைப்பட்டதும் அற்புதமுமாயிருப்பது. இத்தகைய ப்ரபஞ்சத்தை நான்முகன் எவ்வளவு வருத்தப்பட்டுப் படைத்தானே?'' என்று சிந்திக்கவேண்டாம். தன்னை நினைப்பவர்களுடைய ஸம்ஸாரவருத்தங்களைப் போக்குந் தன்மையனான பகவான் ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்ற ப்ரஹ்மதேவனுக்கு அந்தர்யாமியாயிருந்து இங்ஙனம் விசித்ரமாயும் பலவகைப்பட்டதும் நினைக்கமுடியா

தமுமாகிய ப்ரபஞ்சத்தைப் படையாநின்றான். இது அவ னுக்கு லீலை (விளையாட்டு). விளையாட்டில் வருத்தம் உண் டோ? ஏழாவது ஸ்தாவர வர்க்க ஸ்ருஷ்டி. இது முக்ய ஸ்ருஷ்டியாம். இது ஆறுவகைப்பட்டிருக்கும். ஸ்தாவரங் கள் வனஸ்பதிகளென்றும் ஓஷதிகளென்றும் லதைக ளென்றும் த்வக்ஸாரங்களென்றும் வீருத்துக்களென் றும் த்ருமங்களென்றும் ஆறுவகைப்பட்டவை. ஆனது பற்றியே அவைகளின் ஸ்ருஷ்டியும் ஆறுவகைப்பட்டிருக் கும். அவற்றில் வனஸ்பதிகளாவன—புஷ்ப உத்பத்தியில் லாமல் காய்க்குந் தன்மையுடைய அரசு பலா முதலிய வ்ருக்ஷங்கள். ஓஷதிகளாவன—புஷ்பித்துக் காய்த்துப் பழுக்கும் வரையில் பிழைத்து உடனே பட்டுப்போகுந் தன்மையுடைய செடி முதலியவை. லதைகளாவன— படருந் தன்மையுடைய மாலதி மல்லி முதலிய கொடிகள். த்வக்ஸாரங்களாவன — பட்டைகள் [1] ஸாரமாயிருக்கப் பெற்ற வாழை மூங்கில் முதலியவை. வீருத்துக்களா வன—புதர்புதராய்ப் படருந்தன்மையையுடைய கொடி கள். த்ருமங்களாவன—புஷ்பித்துக் காய்க்குந் தன்மை யுடையவைகளும் நெடுநாள் வரையில் ஜீவித்திருப்பவை களுமாகிய மா முதலிய மரங்கள். ஆகிய இவ்வாறு வகைப்பட்ட ஸ்தாவரங்களும், கதியும் ஆஹாரமும் இல் லாதவை; சைதன்யம் வெளித்தோற்றப் பெறாதவைகள் சீத உஷ்ணாதி ஸுகதுக்கங்களை விளைக்கும் ஸ்பர்சம் உள் ளடங்கப் பெற்றவைகள்; வெளி விசேஷங்கள் எவையும் தெரியப் பெறாதவைகள் ; உள்ளே உண்டான ஸ்பர்சங் களை மாத்ரம் அறியுந் திறமையுள்ளவைகள். எட்டாவது திர்யக் ஜந்துக்களின் ஸ்ருஷ்டி. திர்யக்ஜந்துக்கள் பசு பக்ஷிமுதலியவை. அது இருபத்தெட்டு வகைப்படும். அவ

1. முக்கியமாயிருக்கப்பெற்ற-உறுதியாயிருக்கப்பெற்ற.

றிற்குப் பொதுவான அடையாளஞ் சொல்லுகிறேன், கேட்பாயாக. நேற்று இன்று நாளை என்கிற கால பேதத்தைப்பற்றின அறிவில்லாதவை; ஆஹாரம் நித்ரை பயம் மைதுனம் ஆகிய இவற்றை மாத்ரமே அறிபவை; அன்றியும், க்ராணேந்த்ரியத்தினால் மோந்தமாத்ரத்தில் தமக்கு இஷ்டமான பொருளை அறியுந் திறமையுடையவை; மனத்திலுள்ள ஸுக துக்கம் முதலியவைகளை நன்றாக அறியுந் தன்மையுடையவை. இவற்றிற்குள்ள இருபத்தெட்டு பேதங்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஸத்புருஷர்களிற் சிறந்த விதுரனே! பசு வெள்ளாடு எருமை க்ருஷ்ணம்ருகம் (கறுப்புமான்) பன்றி கவயம் (பசுவைப் போன்ற ஓர்வகை நாற்கால் ஜந்து) ருரு (கறுப்புச் சாரலையுடைய கலைமான்) ஆடு ஒட்டை ஆகிய இந் நாற்கால் ஜந்துக்கள் ஒன்பதும் இரட்டைக் குளம்புடையவை. கழுதை குதிரை கோவேறுகழுதை கௌரம்ருகம் சரபம் சமரம்ருகம் ஆகிய இவை யாறும் ஒற்றைக் குளம்புடையவை. விதுரனே! ஐந்து நகமுடைய பசுக்களைச் சொல்லுகிறேன் கேள். நாய் நரி செந்நாய் புலி பூனை முயல் முள்ளம்பன்றி ஸிம்ஹம் குரங்கு யானை ஆமை உடும்பு ஆகிய இந்தப் பன்னிரண்டும் ஐந்து நகமுடையவை. மகரமீன் முதலியவை ஜலஜந்துக்கள். இவ்விதம் இருபத்தெட்டு விதமாகின்றன. கங்கம் (பெரும்பருந்து) கழுகு கொக்கு பருந்து காடை கரடி மயில் ஹம்ஸம் ஸாரஸம் சக்ரவாகம் காக்கைகோட்டான் இவைகளும் மற்றுமுள்ளபக்ஷிகளும் எட்டாவது ஸ்ருஷ்டியைச் சார்ந்தவை. ஒன்பதாவது மானிடர்களின் ஸ்ருஷ்டி. இது ஒருவகைப்பட்டதே. இந்த மானிடர் நல்ல ப்ரயத்னமில்லாவிடின் பெரும்பாலும் அதோகதியில் செல்லுந் தன்மையர். ஆகையால் இவர்க்கு அர்வாக் ஸ்ரோதஸ்ஸுக்களென்று பேர்.

பூமியில் ஆஹார ஸஞ்சாரங்களாகையாலும் இவர்களுக்கு இந்தப் பேர் உண்டாயிற்று. இம்மனிதர்கள் ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்றவர்; ஆனதுபற்றியே வேலை செய்யுந் தன்மையர்; துக்கத்தையும் ஸுகமாக நினைத்திருப்பவர். சிறந்த நன்மையுடையவனே! ஸ்தாவர ஸ்ருஷ்டியும் திர்யக் ஸ்ருஷ்டியும் மனுஷ்ய ஸ்ருஷ்டியும் ஆகிய இம்மூன்றும் வைக்ருத ஸ்ருஷ்டிகளே. ப்ராக்ருத ஸ்ருஷ்டியில் ப்ரஸங்கத்தினால் தேவஸ்ருஷ்டி வைகாரிகமென்று சொல்லப்பட்டது; அந்த தேவஸ்ருஷ்டியும் வைக்ருதத்தில் அடங்கினதே. வைக்ருதமான தேவ ஸ்ருஷ்டியில் அடங்கின கௌமார ஸ்ருஷ்டி ப்ராக்ருத ஸ்ருஷ்டியிலும் சேர்ந்ததே. எப்படியென்னில், குமாரர்கள் முதலிலேயே ப்ரஹ்மாவால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவராகையால் குமாரஸ்ருஷ்டி ப்ராக்ருத ஸ்ருஷ்டியில் அடங்குகின்றது. குமாரர்களில் அடங்கின நீலலோஹிதன் ஸனகாதிகளுடன் ஸ்ருஷ்டிக்கப்பட்டவனாயினும் கல்பந்தோறும் ஸ்ருஷ்டிக்கப்படுகிறானாகையால் அவனுடைய ஸ்ருஷ்டி வைக்ருதஸ்ருஷ்டி ஆகின்றது. ஆகையால் கௌமாரஸ்ருஷ்டி ப்ராக்ருத ஸ்ருஷ்டியிலும் வைக்ருத ஸ்ருஷ்டியிலும் அடங்கினதாயிருக்கும். தேவ ஸ்ருஷ்டி எட்டுவகைப்பட்டிருக்கும். தேவதைகளும் பித்ரு தேவதைகளும் வைதிக கர்மங்களால் ஆராதிக்கப்பெறுவதுபற்றி ஒரு வகையரானவர். அஸுரர்கள் ஒருவகை. கந்தர்வர்களும் அப்ஸரஸ்ஸுக்களும் ஒருவகை. ஸித்தர்கள் ஒருவகை. யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் ஒருவகை. சாரணர்கள் ஒருவகை. பூதர்கள் ப்ரேதர்கள் பிசாசர்கள் ஆகிய மூவரும் ஒருவகை. ஆக தேவ ஸ்ருஷ்டி எட்டு வகைப்பட்டிருக்கும். வாராய் விதுரனே! ஈஸ்வரன் நான்முகனுக்கு அந்தர்யாமியாயிருந்தும் கேவலம் தானாகவும் நடத்தின பத்து விதமான ஸ்ருஷ்டிகளும் இங்ஙனம் உனக்

குச் சொல்லப்பட்டன. இவ்வாறு ஸமஸ்த வஸ்துக்களை யும் தனக்கு உட்படுத்திக்கொள்ளுந் தன்மையதான கால த்தின் ஸ்வரூபமும் கூறப்பெற்றது. இதற்குமேல் மனுக் களையும் மன்வந்தரங்களையும் சொல்லுகிறேன். கல்பாதி களில் ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மதேவனுக்கு அந்தர் யாமியாகி அவனைச் சரீரமாகக்கொண்டு, அவன் மூல மாய் ரஜோகுணம் தலையெடுக்கப் பெற்றவனும் ஸத்ய ஸங்கல்பனும் ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தியனுமாகிய ஸர் வேஶ்வரன் தானே தன்னால் தன்னைப் படைக்கின்றான். கீழ்ச்சொன்ன ஒன்பது வகைப்பட்ட ஸ்ருஷ்டிகளில் அண்ட ஸ்ருஷ்டி ஆகாசம் முதலிய தத்வங்களின் ஸ்ரு ஷ்டிகளைப்போல் க்ரமத்தில் நடப்பதன்று; ஒரே காலத் தில் நடக்கும். அண்டங்கள் கணக்கற்றவை. அவையெல் லாம் ஒரே காலத்தில் படைக்கப் பெறுகின்றன. ஆகாசம் முதலிய தத்வங்களின் ஸ்ருஷ்டி மாத்ரம் க்ரமத்தில் நடப் பதாயிருக்க, பல அண்டங்களும் ஒரே காலத்தில் ஸ்ருஷ் டிக்கப் பட்டனவென்பது எப்படி சேருமென்னில், ஈஶ் வரன் ஆச்சர்ய சக்தியுடையவனுகையால், பல அண்டங் களையும் அவன் ஒரேகாலத்தில் படைக்கவல்லவனே. ஆகா சாதி பூதங்களும் இங்ஙனமே ஒரேதடவையில் ஸ்ருஷ்டிக் கப்பட்டவை யாகலாமே யென்னில், அப்படி அன்று. ஶ்ருதி அப்படி சொல்லாமையால் அது பொருந்தாது. ஈஶ்வரனுக்குச் சக்தி உண்டேயாகிலும் அவன் அவற்றை அங்ஙனம் படைக்கவில்லை. ப்ரஹ்மாண்டங்கள் மாத்ரம் நதிமுதலிய ஜலப்ரதேசங்களில் நீர்க்குமிழிகள் நீர்ச்சுழி கள் முதலியவை பலவும் ஒரே ஸமயத்தில் உண்டாகிறாப் போல் ஒரே ஸமயத்தில் உண்டாயின. ஒன்று உண்டான பின்பு மற்றொன்று உண்டாயிற்றென்கிற காலபேதத்தைப் பெரியோர்கள் ஒப்புக்கொள்கிறதில்லை. 'இந்த்ராதி தேவ

தைகள் கல்பங்தோறும் வெவ்வேருகஏற்படுகின்ருர்களா? அல்லது முன் கல்பத்தில் இந்த்ராதி தேவதைகளாயிருந்த ஜீவாத்மாக்களே மற்ருெரு கல்பத்திலும் அவ்விந்த்ராதி தேவதைகளாயிருக்கின்ருர்களா' என்னில், விதுரனே! இந்தக் கல்பத்தில் எந்த தேவதைகளும் அஸுரர்களும் இந்த்ரன் முதலிய நாமங்களோடும் ஸஹஸ்ராக்ஷனுயிருக்கை (ஆயிரங் கண்ணனுயிருக்கை) முதலிய உருவங்களோடும் இருந்ததாகச் சொல்லப்படுகின்ருர்களோ, அவர்களே மற்ருெரு கல்பத்திலும் அந்தந்த நாமரூபங்களோடு அந்தந்த அதிகாரங்களை நிர்வஹிக்கின்ருர்களென்கிறதில்லை. ஆனுல் இந்த்ராதி பட்டங்கள் மாத்ரம் கல்பங்தோறும் ஏற்படுகின்றவைகளே. அந்தந்த ஐம்வர்யங்களும் நாமங்களும் ஆயிரங் கண்ணனுயிருத்தல் முதலிய உருவங்களும் மாறுகிறதில்லை. முன் கல்பத்தில் எந்த ஜீவாத்மா எந்த இந்த்ராதி நாம ரூபங்களோடு இருந்தானே, அந்த ஜீவாத்மாவே மற்ருெரு கல்பத்திலும் அதே இந்த்ராதி நாமரூபங்களோடு பிறக்கமாட்டான். வேறு நாமரூபங்களோடு பிறப்பான். பத்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

காலநுட்பங்களையும் யுகமன்மந்வந்தராதியானபிரிவுகளையும் கல்பாதிகளின் பரிமாணத்தையும் கூறுதல்.

வாராய் விதுரனே! இங்ஙனம் காலத்தினுல் தூண்டப்படும் வஸ்துக்களின் ஸ்ருஷ்டியைச் சொன்னேன். இனி, கால ஸ்வரூபத்தையும், அதன் ஸ்தூல ஸூக்ஷ்ம பேதங்களையும் மேன்மை தாழ்மைகளையும் சொல்லு

கிறேன். முதலில் காலத்தினால் பரிச்சேதிக்கத் தகுந்தவைகளான வஸ்துக்களின் மேன்மை தாழ்மைகளைச்சொல்லுகிறேன். கேட்பாயாக. 'காலத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லவேண்டியிருக்க, காலத்தினால் பரிச்சேதிக்கப் படும் வஸ்துக்களின் மேன்மை தாழ்மைகளைச் சொல்ல வேண்டியது ஏதுக்காக' என்னில், சொல்லுகிறேன்கேள். காலம், பரமாணு முதல் ஸம்வத்ஸரம் வரையிலுமுள்ள ஸூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களையுடையதாகி ஸூர்யனுடைய கதியினால் அறியத்தக்கதாயிருக்கும். அவற்றில், ஸூர்யன் எவ்வளவில்பரமாணுவின்அளவுள்ள தேசத்தைக்கடந்து செல்வானோ, அவ்வளவு காலம் பரமாணு வெனப்படும். எவ்வளவில் அவன் பன்னிரண்டு ராசி ஸ்வரூபமாகிய புவனகோசத்தைக் கடந்து செல்வானோ, அந்தக் காலம் ஸம்வத்ஸரமெனப்படும். ஆகையால் ஸூர்யனுடைய ஸஞ்சாரத்திற்கு விஷயமாகிய தேசத்தின் மேன்மை தாழ்மைகளைச்சொல்லாவிடின் ஸூர்ய கதியினால் ஊஹிக்கத்தகுந்ததாகிய காலத்தின் பிரிவுகள் ஏற்படமாட்டா. ஆதலால் காலத்தினால் தூண்டப்படுகின்ற வஸ்துக்களின் ஸ்தூல ஸூக்ஷ்மபேதத்தை நிரூபித்துச் சொல்ல வேண்டியது அவச்யமாய் விட்டது. முதலில் காலத்தினால் பரிச்சேதிக்கப்படுகின்ற வஸ்துவின் ஸூக்ஷ்ம ரூபத்தினுடைய கடைசியெல்லையைச்சொல்லுகிறேன் கேட்பாயாக. கார்ய வஸ்துவின் அம்சங்களில் எது மிகவும் அற்பமான அம்சமோ, எந்த அம்சத்திற்கு வேறொரு அம்சம் (அவயவம்) இல்லையோ, அன்றியும் கார்யாவஸ்தையையும் ஸமுதாயாவஸ்தையையும் அடையாமல் இருக்கின்றதோ, அதைப் பரமாணுவென்று அறியவேண்டும். மனிதர்கள் இந்த ஸூக்ஷ்மமான பிரிவை அறியாமல் பலவகையான காலத்தின் ஸூக்ஷ்ம அம்சங்களை ஒரே

காலமென்று ப்ரமிக்கின்றூர்கள். இங்ஙனம் தாழ்மையில் கடைசியெல்லையைச் சொன்னேன். இனி மேன்மையில் கடைசியெல்லையைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. எந்தக் கார்ய வஸ்துவின் கடைசியான அவயவம் பரமாணுவென்று கூறப்பெற்றதோ, அத்தகையதும் கார்யாவஸ்தையை அடைந்ததும் வேறு விகாரங்களை அடையாமல் தன் ஸ்வரூபத்தோடிருப்பதுமாகிய வஸ்துவின் கேவலமான ஸ்வரூபமே பரம மஹானென்று(மேலான மேன்மையென்று) கூறப்படும். அதற்குமேற்பட்ட மேன்மை எதுவுமே இல்லை. தன்னிடத்தில் உள்ள பிரிவுகள் தனியே அறியப்பெறுதது. எதைக் காட்டிலும் தாழ்ந்த அவயவம் இல்லையோ, அது பரமாணு வென்று சொன்னேன். அங்ஙனமே எதைக் காட்டிலும் மேலான உருவம் இல்லையோ அதுவே பரம மஹத்தாம். அதாவது—இந்த ப்ரபஞ்சமே பரம மஹத்தென்று கூறப்படும். அதில் இடையில் ஸ்வர்க்காதிகள் முதலிய பற்பல பிரிவுகள் உளவாயினும் அவற்றைக் கொள்ளாமல் ப்ரபஞ்சமென்கிற ஒருபதார்த்தமாகக் கொண்டு பார்க்கையில் அதைவிட மேற்பட்ட உருவம் எதுவும் அகப்படாது. இந்த ப்ரபஞ்ச வஸ்துவும் பரமாத்மாவின் கார்ய வஸ்துக்களில் ஒன்றே. இந்த ப்ரபஞ்சமே புவனகோசமாம். இது பரம மஹத்தெனப்படும். இங்ஙனம் காலத்தினுல் பரிச்சேதிக்கப் படாநின்ற வஸ்துவின் தாழ்மை மேன்மைகளைச் சொன்னேன். இத்தகைய தாழ்மை மேன்மைகளைக் காலத்தில் சொல்லிக் காட்டுகிறேன். பகவானுக்கு உட்பட்டு அவனிட்ட வழக்காயிருப்பதும் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாததும் கண்ணுக்குப் புலப்படும் வஸ்துக்களின் பரிணமத்திற்கு (மாறுதலுக்கு)க் காரணமாயிருப்பது மாகிய காலத்தினுடைய தாழ்மையும் மேன்மையும், பரமாணு முதல்

பரமமஹத்து வரையிலுமுள்ள வஸ்துக்களின் ஸம்பந்தத்திஞல் ஊஹிக்கத் தக்கவைகளாயிருக்கும். எந்தக் காலம் மிகுதியும் ஸூக்ஷ்மமாயிருக்குமோ, எதைக் காட்டிலும் கீழ்ப்பட்ட காலம் இல்லையோ, அக்காலம் பரமாணு காலமென்று அறியலாம். எந்தக் காலம் மிகுதியும் மேன்மையுற்றதோ, எதைக் காட்டிலும் மேலானகாலம் மற்றொன்றில்லையோ, ஸம்வத்ஸரமென்னும் பேருக்கிட்டமான அத்தகைய மேன்மையைப் பெறுகின்ற அக்காலம் பரமஹத்காலமென்றுஅறியத்தக்கதாம். காலத்தின் கடைசியான ஸூக்ஷ்ம அவயவம் பரமாணுவென்றும், மேலான அவயவம் பரமஹத்தென்றும் கூறப்படும். காலத்தின் பிரிவுகளில் ஸம்வத்ஸரத்தைக் காட்டிலும் மேலான பிரிவும், பரமாணுவைக் காட்டிலும் தாழ்வான பிரிவும் மற்றொன்றும் இல்லை. 'பரமாணுவைக் காட்டிலும் கீழ்ப்பட்ட பிரிவு இல்லையாயினும், யுகம் மன்வந்தரம் முதல் பரார்த்தம் வரையிலும் பற்பல பிரிவுகள் இருக்கின்றனவே' என்னில், ஸம்வத்ஸரங்கள் பலவும் சேர்ந்தால் ஒரு யுகமும், அந்த யுகங்கள் பலவும் சேர்ந்தால் ஒரு மன்வந்தரமும், அத்தகைய மன்வந்தரங்கள் பலவும் சேர்ந்தால் ஒருகல்பமும், அவை பலவும்சேர்ந்தால் ஒரு பரார்த்தமும் ஆகின்றன. இங்ஙனம் பரார்த்தம் வரையிலுள்ள மற்ற பிரிவுகளெல்லாம் ஸம்வத்ஸரத்தின்தொகுதியே யன்றி வேறன்று. ஆகையால் அவற்றை மேற்பட்ட அவயவங்களாக இங்கு எடுத்துக்கொள்ளவில்லை. இங்ஙனம் வஸ்துக்களின் தாழ்மை மேன்மைகளையும், அவற்றால் ஊஹிக்கப்படும் காலத்தின் தாழ்மை மேன்மைகளையும் சொன்னேன். இனி இடையிலுள்ள வஸ்துக்களின் பிரிவுகளையும் அவற்றால் ஊஹிக்கப்படும் காலத்தின் பிரிவுகளையும் சொல்லுகிறேன். இரண்டு பரமாணுக்கள்

சேர்ந்தால் ஒரு அணுவாகும். மூன்று அணுக்கள் சேர்ந்தால் ஒரு த்ரஸரேணுவாம். இந்த த்ரஸ்ரேணுவாவது சாளரத்தின் ரந்த்ரங்களில் நுழைந்த ஸூர்ய கிரணங்களில் தோற்றும் தூசியே. இது ஆகாயத்திற் கிளம்புமேயன்றி, பூமியில் இறங்காது. மூன்றுத்ரஸரேணுக்கள் சேர்ந்தால் ஒரு த்ருடியாம். பல த்ருடிகள் சேர்ந்தால் ஒரு வேதம். மூன்று வேதங்கள் சேர்ந்தால் ஒரு லவம். மூன்று லவங்கள் சேர்ந்தால் ஒரு நிமிஷம். மூன்று நிமிஷங்கள் சேர்ந்தால் ஒரு க்ஷணம். ஐந்து க்ஷணங்கள் சேர்ந்தால் ஒரு காஷ்டை. பதினைந்து காஷ்டைகள் சேர்ந்தால் ஒரு லகு. பதினைந்து லகுக்கள் சேர்ந்தால் ஒரு நாழிகை. இரண்டு நாழிகை ஒரு முஹூர்த்தம். ஆறு நாழிகை, அல்லது ஏழு நாழிகை ஒரு ப்ரஹரம். இதுவே யாமமென்றும் கூறப்படும். திதிகளுக்கு வ்ருத்தியென்றும் க்ஷயமென்றும் இரண்டு அவஸ்தைகள் உண்டு. வ்ருத்தியில் ஏழு நாழிகை ஒரு யாமமாம். க்ஷயத்தில் ஆறு நாழிகை ஒரு யாமமாம். காலை மாலை ஸந்த்யைகளைச் சேர்ந்த இரண்டுமுஹூர்த்தங்களைக்கழித்துக் கணக்கிட வேண்டும். இங்குச்சொல்லுகிற காலத்தின் பிரிவுகளெல்லாம் மனுஷ்யர்களைப்பற்றினவை. நாழிகையின் ஸ்வரூபத்தை விவரித்துச் சொல்லுகிறேன் கேள். பன்னிரண்டரைப் பலம் எடையுள்ள தாம்ரத்தினால் ஓர் பாத்ரத்தை இயற்றவேண்டும். அது ஒருபடி ஜலம்கொள்ளும். அதனடியில் ஐந்து மாஷங்களினெடையுடைய பொன்னால் செய்ததும் நாலங்குலம் நீளமுடையதுமாகிய ஓர் ஊசியினால் த்வாரம் செய்யவேண்டும். அந்தப் பாத்ரத்திற்கு ப்ரஸ்தமென்னும் பேர். அதை ஜலத்தில் வைத்தால் எவ்வளவு காலத்தில் அது அந்த ரந்த்ரத்தின் வழியால் நிறையப்பெற்று, ஜலத்தில் மூழ்குமோ அக்காலமே

ஒரு நாழிகையாம். அத்தகைய நாழிகைகள் ஆறு, அல்லது ஏழு சேர்ந்தால் ஒரு யாமமாம். அத்தகைய யாமங்கள் எட்டுக் கூடினால் மனிதர்களுக்கு ஓர் இராப்பகலாம். பதினைந்து இராப்பகல்கள் சேர்ந்தால், ஓர் பக்ஷமாம். மாநதனே! (சத்ருக்களின் கர்வத்தைப்போக்கும் தன்மையனே! நண்பர்களுக்குவெகுமதியளிப்பவனே!) அது சுக்லமென்றும் க்ருஷ்ணமென்றும் இருவகைப்பட்டிருக்கும். அந்தச் சுக்லபக்ஷம் க்ருஷ்ணபக்ஷம் ஆகிய இரண்டுபக்ஷங்களும் சேர்ந்தால் ஒரு மாதமாம். இது மனிதர்களுக்கு வழங்கிவரும் காலப்பிரிவு. அந்த மனிதர்களின் மாதம் பித்ரு தேவதைகளுக்கு ஒரு அஹோராத்ரமாம். அம்மாதங்கள் இரண்டு சேர்ந்தால் மனிதர்களுக்கு ஒரு ருதுவாம். அம்மாதங்கள் ஆறு சேர்ந்தால் (அதாவது மூன்று ருதுக்கள் சேர்ந்தால்) ஓர் அயனமாம். அவ்வயனம் தக்ஷிணாயனமென்றும் உத்தராயணமென்றும் இரண்டு வகைப்படும். ஆறு மாதம் தக்ஷிணாயனம்; ஆறுமாதம் உத்தராயணம். தக்ஷிணாயனம் உத்தராயணம் ஆகிய இவ்விரண்டு அயனங்களும் சேர்ந்தால் தேவதைகளுக்கு ஒரு அஹோராத்ரமாம். (அஹோராத்ர மாவது இரவும் பகலும் அடங்கின ஒருநாள்.) பன்னிரண்டு மாதங்கள் சேர்ந்தால் மனிதர்களுக்கு ஒரு ஸம்வத்ஸரமாம். மனிதர்களுக்கு நூறு ஸம்வத்ஸரங்கள் பூர்ணாயுஸ்ஸென்று நிரூபிக்கப்பெற்றது. பித்ருதேவதைகளுக்கும் மற்ற தேவதைகளுக்கும் அவரவர் கணக்கின்படி பதினைந்து அஹோராத்ரங்கள் கூடினால் ஒரு பக்ஷமென்றும், அத்தகைய பக்ஷங்கள் இரண்டு கூடினால் ஒரு மாதமென்றும் அம்மாதங்கள் ஆறு கூடினால் ஓர் அயனமென்றும், மாதங்கள்பன்னிரண்டுகூடினால் ஒரு ஸம்வத்ஸரமென்றும் அவரவர் கணக்கின்படி நூறு ஸம்வத்ஸரமே அவரவர்க்

குப் பூர்ணயுஸ்ஸென்றும் அறியலாம். என்றும்கண்ணிமை கொட்டாமல் ஜாகரூகனும் ஸமர்த்தனுமாகிய ஸூர்யன் திங்கள் செவ்வாய் முதலிய க்ரஹங்களும் அஶ்வினி முத லிய நக்ஷத்ரங்களும் மற்றை ஸாதாரண நக்ஷத்ரங்களும் அடங்கின காலசக்ரத்தினிடையில் நின்று பரமாணு முதல் ஸம்வத்ஸரம் ஈருகவுள்ள காலத்தினால் பன்னிர ண்டு ராசி ஸ்வரூபமாகிய ஜகத்தைச் சுற்றி வருகின்றான். ஸூர்ய கதியைப் பிடித்துப் பார்க்கில் ஸம்வத்ஸர மெ ன்றும், ப்ருஹஸ்பதியின் கதியைப் பற்றிப் பார்க்கையில் பரிவத்ஸர மென்றும், முப்பது நாள் கொண்டது ஒரு மாதமென்னும் விதமாக ஸூர்யகதி விசேஷத்தைப்பற் றிப் பார்த்தால் இடாவத்ஸரமென்றும், சந்த்ரகதியைப் பற்றிப்பார்ப்பின் இத்வத்ஸர மென்றும், நக்ஷத்ரகதியைக் கொண்டு கணக்கிடில் வத்ஸரமென்றும் சொல்லப்படும். இங்ஙனம் ஸூக்ஷ்மமாயும் ஸ்தூலமாயும் பிரிந்து ஸமஸ்த வஸ்துக்களையும் பரிணமிக்கச் செய்வதாகிய காலத்தின் ஸ்வரூபத்தை நிரூபித்துச் சொன்னேன். இத்தகைய கால த்திற்கு உட்படாமல் வாழ விரும்புவோர் இக்காலத்தைச் சரீரமாக வுடையவனும் இக்காலத்திற்கு உட்படாதவனும் ஸூர்யனுக்கு அந்தராத்மாவா யிருந்து இக்காலத்தை நடத்துகின்றவனுமாகியபரமாத்மாவைப்பணியவேண்டும். ப்ராணிகளுக்கு ஜன்ம ஜரா மரணாதி விகாரங்களை விளைக் கின்ற பரம்புருஷன் ஸ்ருஷ்டிக்கப்படுகின்ற வஸ்துக்களின் கர்ம சக்தியைக் கால மென்கிற தன் சக்தியால் பலவாறு பரிணமிக்கச் செய்பவனும் யாகங்களால் ஸாதிக்கப்படுவ தும் ஸத்வாதி குணங்களுக் கிணங்கினதுமாகிய பலனை விளைப்பவனுமாகி ஜீவனுக்கு அந்தந்த ஸமயத்தில் தர்ப விஷயமாக வரும் மதிமயக்கத்தைத் தீர்க்கும்பொருட்டு ஸூர்யனுக்கு அந்தர்யாமியாகி ஆகாயத்தில் திரிகின்

றுன். ஸூர்யனைச் சரீரமாக வுடையவனும் முன்சொன்ன ஸம்வத்ஸரம் முதலிய ஐவகையான வர்ஷ ஸ்வரூபியுமாகிய பகவானுக்குப் பணிவிடை செய்வீர்களாக.

விதுரர் சொல்லுகிறார்:—பித்ருக்கள் தேவதைகள் மனிதர் ஆகிய இவர்களுக்கு அவரவர்க்குச் சொன்ன நாட்கணக்கின்படி நூறு ஸம்வத்ஸரங்கள் பூர்ணாயுஸ்ஸு என்று இந்த மூன்று லோகங்களி லிருப்பவர்களுடைய ஆயுஸ்ஸின் பரிமாணத்தை மாத்ரமே மொழிந்தீர். இந்த மூன்று லோகங்களுக்கு வெளியிலிருக்கும் மற்ற ஜ்ஞானிகளின் ஆயுள் நிலைமையை மொழிவீராக. மஹர்ஷீ! எனக்குத் தெரியாதென்னவேண்டாம். உம்மைக் காட்டிலும் தெரிந்தவர் எவரும் அகப்படார். ஏனென்னில், ஓ மைத்ரேயரே! பகவத்ஸ்வரூபியாகிய காலத்தின் கதியை நீர் நன்றாக அறிவீர். உம்மைப்போன்ற ஜ்ஞானிகள் யோகத்தினால் ஏற்பட்ட அறிவென்னும் உட்கண்ணால் ஜகத்து முழுவதையும் உள்ளபடி காணப்பெறுவார்களல்லவா? யோகிகளின் நெஞ்சுக்கு விஷயமாகாதது எதுவுமே இல்லை. ஆகையால் யோகிகளில் தலைவராகிய நீர் யோகஜ்ஞானத்தினால் எல்லாவற்றையும் அறியுந் திறமையுடையவர். உமக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. ஆதலால் என் ஸந்தேஹத்தைத் தீர்ப்பீராக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—விதுரனே! த்ரைலோக்யத்திற்கு வெளிப்பட்ட நான்முகன் முதலிய அனைவருடைய நாட்கணக்கையும் முந்நூற்று அறுபது நாட்கள் அடங்கின நூறு வர்ஷங்களாகிற ஆயுஸ்ஸின் அளவையும் சொல்லுகிறேன். முதலில் யுகங்களின் அளவையும் அவற்றின் ஸ்வரூபத்தையும் அவற்றில் தர்மம் நடக்கும் தாரதம்யத்தையும் சொல்லக் கேள். க்ருதமென்றும் த்ரேதையென்றும் த்வாபரமென்றும் கலியென்றும்

விழித்துக்கொண்டு நடத்தின ஜகத் ஸ்ருஷ்டியானது பதினான்கு மனுக்கள் உள்ளடங்கப்பெற்று பகவத் ஸ்வரூபனாகிய அந்த ப்ரஹ்மதேவனுடைய பகற்காலம்வரையிலும் தொடர்ந்துவரும். ப்ரஹ்மாவினுடைய ஒரு பகலில் பதினான்கு மன்வந்தரங்கள் அடங்கியிருக்கும். ஒவ்வொரு மனுவும் தனக்கு ஏற்பட்டதும் சிறிது அதிகமாயிருக்கப் பெற்றதுமாகிய எழுபத்தொரு யுககாலம் வரையில் த்ரைலோக்யத்தைப் பரிபாலித்துவருவான். முன்னிருந்த மனுவைத் தொடங்கி மேல்வரப்போகிற மனுவரையிலுமுள்ள மத்ய காலங்களை மன்வந்தரங்களென்று வழங்குகிறார்கள். அந்த மன்வந்தரங்களில் அந்தந்த மனுக்களும் அம்மனுக்களின் வம்சத்தில் க்ரமமாகப் பிறக்கும் அரசர்களும் ரிஷிகளும் தேவதைகளும் 'தேவ ச்ரேஷ்டர்களான இந்த்ராதிகளும் அவர்களைப் பின் சென்ற கந்தர்வாதிகளும் ஆகிய இவர்கள் அனைவரும் ஒரேகாலத்தில் த்ரைலோக்யத்தைப் பாதுகாக்கின்றார்கள். இந்த ஸ்ருஷ்டி ப்ரஹ்மாவால் நடத்தப்படுகின்றது.' இதற்கு தைனந்தின ஸ்ருஷ்டியென்று பேர். ப்ரஹ்மதேவன் தன் கணக்கில் ஏற்பட்ட தினங்கள்தோறும், இவற்றை ஸ்ருஷ்டிக்கிறானகையால் இந்த ஸ்ருஷ்டிக்கு தைனந்தின ஸ்ருஷ்டியென்னும் பேர் யதார்த்தமாயிருக்கும். இந்த ஸ்ருஷ்டியில் மூன்று லோகங்களும் அடங்கியிருக்கும். இந்த தைனந்தின ஸ்ருஷ்டியில் ஜீவாத்மாக்கள் தந்தமது புண்ய பாபரூப கர்மங்களால் திர்யக்குகளாகவும் பித்ரு தேவதைகளாகவும் தேவதைகளாகவும் பிறக்கின்றார்கள். மன்வந்தரங்களில் பகவான் சுத்த ஸத்வ மயமான திவ்ய மங்கள விக்ரஹங்களைத்தரித்துப் புருஷாகாரமுடையவனாகி மனு முதலியவர்களை த்வாரமாகக்கொண்டு இந்த ப்ரபஞ்சத்தைப் பாதுகாக்கின்றான். ஆகையால் மனு முதலியவர்

களே நேராகப் பாதுகாக்கின்றார்களென்று ப்ரமிக்க வேண்டாம். பகவானே அம்மனு முதலியவர் மூலமாய் உலகங்களைப் பாதுகாக்கின்றான். இங்ஙனம் ப்ரஹ்மாவின் பகல் நடத்தையைச் சொன்னேன். இனி ராத்ரி வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ப்ரஹ்ம தேவன் சிறிது தமோகுணம் தலையெடுக்கப்பெற்று உலகங்களைப் படைக்கையாகிற வ்யாபாரத்தைத் துறந்து காலவசத்தினால் எல்லாம் தன்னில் அடங்கப்பெற்றவனாகி ஸாயங்காலத்தில் வெறுமனே உட்கார்ந்திருப்பான். க்ரமமாக ராத்ரி தொடர்ந்து வருகையில், பூர்லோகம் முதலிய மூன்று லோகங்களும் சந்த்ர ஸூர்யர்கள் தொலைந்து பேரிருள் மூடப்பெற்று உடனே மறைகின்றன. அந்த ஸாயங்காலத்தில் பகவானுடைய சக்தியும் ஸங்கர்ஷணனுடைய முகத்தினின்றுண்டானதுமாகிய ருத்ராக்னியால் மூன்று லோகங்களும் நெருப்புப்பற்றி எரியும். அப்பொழுது அவ்வக்னியின் வெப்பத்தைப் பொறுக்கமுடியாமல் பீடிக்கப்பட்டவராகி மஹர் லோகத்தில் வாஸஞ் செய்பவரான ப்ருகு முதலியவர் அவ்வுலகத்தினின்று ஜனலோகம் போய்ச் சேருவார்கள். இத்தகையதான கல்பாவஸான காலத்தில் ஸமுத்ரங்கள் கரை புரண்டு வளர்ந்து மேலெழுந்து வரும். அப்பொழுது பெருங்காற்றுக்கள் பயங்கரமாக வீசிக்கொண்டிருக்கும். அந்தக் காற்றின் வேகத்தினால் ஸமுத்ரங்களில் பெருப்பெரிய அலைகள் கிளம்பும். அங்ஙனம் பயங்கரமான பெருப்பெரிய அலைகளின் ஆடம்பரங்களை யுடையனவாகி மிகுதியும் கலக்கமுற்றிருக்கின்ற அந்த ஸமுத்ரங்கள் பாய்ந்து ஸங்கர்ஷணாக்னியால் எரிக்கப்பெற்ற மூன்று லோகங்களையும் நனைத்து ஒரே வெள்ளமாக்கிவிடும். அந்த ப்ராளய ஜலத்தின் இடையில் ஆதிசேஷனை ஆஸனமாகவுடைய பகவான்

தன்னைத் தான் அநுபவிக்கையாகிற யோக நித்ரையால் கண்களை மூடிக்கொண்டு ஜனலோகத்தில் வாஸஞ் செய்பவர்களால் துதிசெய்யப் பெற்றிருப்பான். பரமாணு முதல் ஸம்வத்ஸரம்வரையிலுமுள்ள காலநிலைமையால் ஏற்பட்டவைகளும் இங்ஙனம் சொன்ன அளவுடையவைகளுமாகிய அஹோராத்ரங்களால் (நாட்களால்), மற்ற ப்ராணிகளின் ஆயுஸ்ஸைக் காட்டிலும் மேற்பட்டதாகிய இந்த ப்ரஹ்மாவின் நூறு வர்ஷங்களாகிற ஆயுஸ்ஸும் க்ரமத்தில் க்ஷீணித்துப்போகின்றது. (நமக்கு நம் கணக்கின்படி நூறு வர்ஷங்கள் வயது ஏற்பட்டிருப்பதுபோல் ப்ரஹ்மதேவனுக்கும் அவன் கணக்கின்படி நூறு வர்ஷங்களே ஆயுஸ்ஸாக ஏற்பட்டிருக்கின்றன. நமது ஆயுள் நாளுக்கு நாள் க்ஷீணிப்பதுபோல், அந்த ப்ரஹ்மாவினுடைய ஆயுளும் க்ஷீணித்துக்கொண்டுதானிருக்கின்றது. நாம் நான்கு நாளைக்கு முன்னே மரணம் அடைவோமாயின், நம்மைப் படைத்த நான்முகன் நாலுநாள்கழித்தாயினும் நம்மைப்போலவே மரணம் அடையப்போகிறவனே யன்றி என்றும் அழியாதிருப்பவனன்று. அவன் நம்மைப் படைப்பதும் அந்தர்யாமியான பரமாத்மாவின் தூண்டுதலாலன்றித்தானே படைக்கிறானல்லன். இப்பொழுது ப்ரஹ்மாவினுடைய ஆயுஸ்ஸில் சிறிது கழிந்து விட்டது. சிறிதே மிகுந்திருக்கின்றது. எவ்வளவு கழிந்தது? எவ்வளவுமிகுந்திருக்கின்றதென்னில்—சொல்லுகிறேன், கேட்பாய்). அந்த ப்ரஹ்மதேவனுக்கு அவன் கணக்கின்படி நூறு வர்ஷங்களே ஆயுஸ்ஸென்று மொழிந்தேனல்லவா? அந்த ஆயுஸ்ஸின் பாதியைப் பரார்த்தமென்று மொழிவார்கள். இங்ஙனம் இரண்டு பரார்த்தங்கள் அடங்கின அவனுடைய ஆயுஸ்ஸில் பூர்வ பரார்த்தம் (முதல் பாகம்)கழிந்து சென்றது. உத்தர பரார்த்தம்(மேல்பாதி)

இப்பொழுது நடந்துகொண்டிருக்கின்றது. இந்தப் பூர்வ பரார்த்தத்தை ப்ரதம பரார்த்தமென்றும், உத்தர பரார்த்தத்தை த்விதீய பரார்த்தமென்றும் சொல்லுவர்கள். ப்ரதம பரார்த்தத்தின் முதலில் ப்ராஹ்மமென்னும் பேருடைய பெருங் கல்பம் நடந்தது. இந்தக் கல்பத்தில் பிறந்த ப்ரஹ்மாவுக்குச் சப்த ப்ரஹ்மமென்னும் பேர் வழங்கிற்று. அவன் வேதமயனு யிருந்தானுகையால் அவனுக்கு அங்ஙனம் பேர் வழங்கிவந்தது. பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தையும் அதைப்பற்றின உபாஸனத்தையும் அதை ஆராதிக்கும் வழிகளையும் விசதமாக எடுத்துரைப்பதாகிய வேதங்களே வடிவங்கொண்டு வந்தாற்போல் வேதமயனுன ப்ரஹ்மதேவன் இந்தக் கல்பத்தில் பிறந்தானுகையால் இதற்கு ப்ராஹ்ம கல்பமென்னும் பேர் வழங்கிற்று. அந்த ப்ரதம பரார்த்தத்தின் கடைசியில் ஒரு கல்பம் உண்டாயிற்று. அதை அறிவுடையோர் பாத்ம கல்பமென்று சொல்லுகிறுர்கள். இந்தக் கல்பத்தில்அநிருத்த பகவானுடைய நாபீஸரஸ்ஸினின்று (தடாகம்போன்ற நாபியினின்று) ப்ரபஞ்சமாகிற கமலம் உண்டாயிற்று. ஆகையால் இந்தக் கல்பத்திற்குப் பாத்ம கல்பமென்னும் பேர் உண்டாயிற்று. பரத வம்சாலங்காரனே! விதுரா! இந்த த்விதீய பரார்த்தத்திற்கும் இதை ஓர் கல்பமாகக் கூறுவர். இது வராஹ கல்பமென்னும் பேர் பெற்றது. இந்தக் கல்பத்தில்.பகவான் வராஹரூபியாய்த்தோற்றினுன். ஆகையால் இந்தக் கல்பம் வராஹ கல்பமென்று கூறப்படுகின்றது. அப்பா! விதுரனே! நான்முகன்வரையிலுமுள்ளவர் அனைவரும் காலகதிக்குட்பட்டவரென்பதை மொழிந்தேன். இங்ஙனமே பரமாத்மாவும் கால நிலைமைக்குட்பட்டவனென்று நீ நினைக்கவேண்டாம். இரண்டுபரார்த்தங்கள் அடங்கின இக்காலம் அனுதியான பகவானுக்கு

ஒருநிமிஷம்போல்போகும். அவன் ஆதிஅந்தமில்லாதவன். ஆகையால் அவனுக்குக் காலநிலைகிடையாது. அவன் காலத்திற்கு உட்பட்டவனன்று. 'அநாதியாகிய ஹிரண்ய கர்ப்பன் முதலிய ஜீவாத்மாக்களும் காலத்திற்குட்பட்டவரென்று மொழிந்தீர். இங்ஙனமே பகவான் அநாதியாயினும் அவனும் காலத்திற்குட்பட்டிருக்கக் கூடுமே' என்னில், அப்படி இல்லை. அவன் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளையும் நாமரூபங்கள் தீண்டப்பெறுமவனல்லன். ஹிரண்ய கர்ப்பாதிகள் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளையும் நாமரூபங்களுடையவராகையால் அவர்கள் ஆதியந்தமுடையவர்களே. 'ஆனால் பகவானுக்கு மாத்ரம் ஏன் நாமரூபங்கள் இல்லை. அவனே இந்த ஜகத்தாகப் பரிணமிக்கிறானாகையால் இந்த ப்ரபஞ்சமெல்லாம் அவனே. ஆகையால் இந்த ப்ரபஞ்சத்திலுள்ள நாமரூபங்களெல்லாம் அவனைச் சேர்ந்தவைகளே. மண் குடமாகவும் மடக்காகவும் மற்றும் பல உருவங்களாகவும் மாறி அந்தந்த நாமரூபங்களைப் பெறுவதுபோல் பகவானொருவனே நிமித்த காரணமும் உபாதான காரணமுமாயிருந்து ஜகத்தைப் படைத்து அந்தந்த நாமரூபங்களை அடைகின்றான். ஆகையால் அவனுக்கு நாமரூபங்கள் இல்லையென்பது எங்ஙனம் சேருமென்னில்' சொல்லுகிறேன், கேட்பாயாக. ஈஸ்வரன், ப்ரக்ருதி புருஷர்களைச் சரீரமாகக் கொண்டு அந்த ப்ரக்ருதிபுருஷர்களைத் தூண்டி ஜகத்தைப் படைக்கின்றான். படைத்த ஜகத்திலெல்லாவற்றிலும் உட்புகுந்து அவற்றின் நாம ரூபங்களுக்கு நிர்வாஹகனாயிருக்கின்றான். ஆதலால் அவன் அந்த நாமரூபங்களைப் பெறுகின்றானன்றி இயற்கையில் அவை ஏற்பட்டவையன்று. ஹிரண்ய கர்ப்பாதி ஜீவாத்மாக்களுக்கும் இயற்கையில் நாமரூபங்கள் ஏற்பட்டவையன்றாகிலும், அவர்கள் அநா

தியான கர்ம ஸம்பந்தத்தினுல் நாமரூபங்களைப் பெறுகின்றூர்கள். ஈஶ்வரன் அப்படி அல்லன். தன் ஸங்கல்பத்தினுல் ப்ரபஞ்சத்தைப் படைத்து அதனுள் புகுந்து நியாமகனுகி அந்த நாமரூபங்களுக்குத் தான் விஷயமாகின்றுன். இது கர்மத்தினுல் உண்டாவதன்று. அவன் லீலைக்காகவே தன் ஸங்கல்பத்தினுல் இங்ஙனம் நடக்கின்றுனன்றி வேறில்லை. ஆகையால் அவனுக்கு நாமரூபங்களில்லை யென்பதற்கு எவ்வித ஆக்ஷேபனையுமில்லை. ஆனதுபற்றி அவன் ஹிரண்யகர்ப்பாதிகளைப்போல் காலத்திற்குட்பட்டவனல்லன். இக்காலம் பரமாணு முதலாகப்பெற்று இரண்டு பரார்த்தங்களை முடிவாகவுடையதென்று முன்னமே மொழிந்தேன். அத்தகையதான இக்காலம் பரமாத்மாவைத்தவிர ப்ரஹ்ம ருத்ராதிகளான மற்றவர் அனைவர்க்கும் ப்ரபு. அந்த ப்ரஹ்மருத்ராதிகள் தம்மை ஒளிப்பெருக்குடன் விளங்குபவரென்று நினைத்துக்கொண்டிருப்பார்களன்றி, வாஸ்தவத்தில் அவர்கள் காலத்திற்குட்பட்டுத் தத்தம் பெருமை மழுங்கப் பெற்றிருப்பவர்களே. தேசபரிச்சேதம் காலபரிச்சேதம் வஸ்து பரிச்சேதம் என்கிற மூன்று வகைப்பட்ட அளவுகளுக்கும் உட்படாமல் தனக்குத் தானே ப்ரபுவாகிய பரமாத்மாவை இக்காலம் தீண்டவல்லதன்று. இந்தப் பரமாத்மாவின் வைபவத்தைச் சிறிது எடுத்துக் கூறுகிறேன், கேட்பாயாக. இந்த ப்ரஹ்மாண்டம், சப்தாதி விஷயங்களைந்தும் வாக்குமுதலிய வ்யாபாரங்கள் ஐந்தும் ப்ராணன் முதலிய காற்றுக்கள் ஐந்தும் ஸங்கல்பம் முதலிய மனோவிகாரமொன்றும் ஆகிய பதினுறு விகாரங்கள் அமைந்ததும் ஒன்றைவிட ஒன்று பதின்மடங்கதிகமான ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் அஹங்காரம் மஹத்து ப்ரக்ருதி ஆகிய

இவ்வேழு ஆவரணங்களால் வெளியில் சூழப்பெற்றதும் ஐம்பது கோடி யோஜனை விஸ்தார முடையதுமா யிருக்கும். இத்தகையதான இவ்வண்டம் மூல ப்ரக்ருதியில் பரமாணுபோல் தோற்றும். இம் மூல ப்ரக்ருதியில் இத்தகைய மற்றும் பல அண்டராசிகள் கோடி கோடியாக அடங்கிப் பரமாணுக்கள்போல் புலப்படுகின்றன. ஜகத்திற்குக் காரணங்களாகிய மஹத்து முதலிய ஸமஸ்த காரணவஸ்துக்களுக்கும் காரணமாயிருப்பதும் அழியாததுமாகிய இந்த மூல ப்ரக்ருதியை மஹானுபாவனாகிய பரமபுருஷனுக்குச் சரீரமென்று ஶ்ருதிகள் சொல்லுகின்றன. இங்ஙனம் சிந்திக்கமுடியாத பலவகை வைபவங்களையுடைய மூல ப்ரக்ருதியைச் சரீரமாகவுடைய பரமாத்மாவுக்குக் காலம் எங்ஙனம் ப்ரபுவாகும்? காலம் அவனுக்கு உட்பட்டதேயன்றி, அவன் இதற்குட்பட்டவனல்லன். பதினொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ ப்ரஹ்மதேவன் அஜ்ஞான வ்ருத்திகளையும் ருத்ரனையும் ஸனகாதிகளையும் மரீசிமுதலியவர்களையும் தர்மம் அதர்மம் முதலியவற்றையும் படைத்து ப்ரஜாவ்ருத்தியின் பொருட்டு மனு சதரூபை என்னும் ஆண் பெண்களைப் படைத்தல். }

மைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் விதுரனே! இங்ஙனம் காலமென்னும் பேருடையதான பரமாத்மாவின் மஹிமையை நிரூபித்துச் சொன்னேன். காலத்திற்குச் சொன்ன மஹிமையெல்லாம் பரமாத்மாவின் பெருமையே. ஜகத்தையெல்லாம் தன் வசப்படுத்திக்கொள்ளுந் தன்மையதான காலம் பரமாத்மாவுக்கு உட்பட்டிரு

க்குமென்றால், இது அவனுடைய மஹிமையல்லவா? இங்ஙனம் இக்காலம் பரமபுருஷனுடைய மஹிமையைக் காட்டுகின்றதுபற்றி இதைப் பரமபுருஷனுடைய மஹிமையே யென்னலாம். இம்மஹிமையை உனக்கு விசதமாகச் சொன்னேன். இனி ப்ரஹ்மதேவன் ப்ரபஞ்சம் படைத்த விதம் சொல்லுகிறேன், கேட்பாயாக. அந்த ஆதிகர்த்தாவான ப்ரஹ்மதேவன் முதலில் அந்த தாமிஸ்ரம், தாமிஸ்ரம், மஹாமோஹம், மோஹம், தமஸ்ஸு, ஆகிய இவ்வைந்தையும் ஸ்ருஷ்டித்தான். இவை அஜ்ஞானத்தின் தொழில்கள். தமஸ்ஸு ஸ்வரூபம்தெரியாதிருத்தல். மோஹம் தேஹாதிகளில் உண்டாகும் அஹம்புத்தி. அதாவது தேஹாத்ம ப்ரமம். மஹாமோஹம் விஷயங்களை அனுபவிக்க வேண்டுமென்னும் விருப்பம். தாமிஸ்ரம் அதற்குத் தடை செய்பவரிடத்தில் உண்டாகும் கோபம். அந்ததாமிஸ்ரம் அதனுடைய நாசத்தில் 'நானே நாசம் அடைந்தேன்' என்னும் புத்தி. இவை அஜ்ஞான வ்ருத்திகளெனப்படும். இவை நரக ஸாதனங்களாகையால் (நரகத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும் கருவிகளாகையால்) இவற்றின் ஸ்ருஷ்டி பாபிஷ்டமென்பதைக் கண்டு 'என்ன நாம் இங்ஙனம் பாப ஸ்ருஷ்டியைச் செய்தோமே' என்று அம்மறையவன் தன்னை வெறுத்துக்கொண்டு வெகுமதியாதிருந்தான். அப்பால் பகவானை த்யானஞ்செய்து அதனால் தூயமன முடையவனாகி அம்மனத்தினால் வேறு சிலரைப் படைத்தான். ஸ்வயம்புவாகிய அந்த ப்ரஹ்மதேவன், ஜிதேந்த்ரியர்களும் பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானஞ்செய்பவர்களும் நிவ்ருத்தி தர்மத்தில் மனவூக்க முடையவர்களுமாகிய ஸனகர் ஸனந்தனர் ஸநாதனர் ஸனத்குமாரர் ஆகிய இம்முனிவர்களைப் படைத்தான். ப்ரஹ்மதேவன் தன் புதல்வர்களான அந்த ஸன

காதிகளைப் பார்த்து, ‘குழந்தைகளே! ப்ரஜைகளைப் படைப்பீர்களாக’ என்று மொழிந்தான். அந்த ஸனகாதிகள் நிவ்ருத்தி தர்மத்தில் நிலை நின்று மிகுதியும் விரும்பி வருந்திப் பெறத்தகுந்த வஸ்துவும் அதைப் பெறுதற்குரிய உபாயமும் வாஸுதேவனே யென்று திடமான மன உறுதியுடையவராகையால் தந்தை மொழிந்த ஸ்ருஷ்டி கார்யத்தைச்செய்ய விரும்பாதிருந்தார்கள். இங்ஙனம் தனது கட்டளையை அவர்கள் அங்கீகரியாமல் தன்னை அவமதித்தமை கண்டு கமலயோனி பொறுக்கமுடியாத பெருங்கோபம் உண்டாகப்பெற்று அங்ஙனம் தனக்கு உண்டான அந்தக் கோபத்தை அடக்கத் தொடங்கினான். அந்தக் கோபத்தை அவன் தன் புத்தியால் எவ்வளவு அடக்கிக் கொண்டிருப்பினும் அக்கோபம் உள்ளடங்காமல் அந்த ப்ரஹ்மாவினுடைய புருவங்களின் இடையினின்று அந்த க்ஷணத்தில் நீலநிறமும் சிவப்பு நிறமும் அமைந்த ஓர் குமாரனாகவெளித்தோற்றிற்று. தேவதைகளனைவர்க்கும் முதலில் உண்டான அவனே பெருமை பொருந்திய சிவபெருமானாவான். அவன் நிடலென்று பிறந்தானாகையால் பவனென்று பேர்பெற்றான். அவன் பிறந்தவுடனே ப்ரஹ்மதேவனை நோக்கி ‘தாதாவே! எனக்கு நாமங்களை ஏற்படுத்துவாயாக. ஜகத்குரு! (உலகங்கட்கெல்லாம் தந்தையே!) எனக்கு ஸ்தானங்களையும் ஏற்படுத்துவாயாக’ என்று மொழிந்துகொண்டே அழுதான். பத்ம ஸம்பவனும் ஜ்ஞானாதி குணங்கள் அமைந்தவனுமாகிய ப்ரஹ்மதேவன், அந்த பவனுடைய வார்த்தையைக் கேட்டு இனிய உரையுடன் அவனை ஸமாதானப் படுத்தமுயன்று இங்ஙனம் மொழிந்தான். ‘குழந்தாய்! அழாதே. அப்படியே உனக்கு ஏற்பாடு பண்ணுகிறேன். தேவர்களிற் சிறந்தவனே! நீ பயமுற்ற பாலன்போல், அழுதாயல்ல

வா? ஆகையால் அதையே நிமித்தமாகக்கொண்டு உன்னை ப்ரஜைகள் ருத்ரனென்னும் பேரால் அழைக்கப்போகிறார்கள். ஹ்ருதயம் இந்த்ரியங்கள் ப்ராணன் ஆகாயம் காற்று அக்னி ஜலம் பூமி ஸூர்யன் சந்த்ரன் தவம் ஆகிய இவற்றை ஸ்தானங்களாக உனக்கு நான் முன்னமே ஏற்படுத்தியிருக்கின்றேன். 'இங்ஙனம் பதினொரு ஸ்தானங்களில் இருக்கின்ற உனக்கு ஒவ்வொரு பேர் வீதம் பதினொரு நாமங்களையும் கற்பிக்கின்றேன். மன்யு, மனு, மஹா காலன், மஹான், சிவன், ருதத்வஜன், உருரேதஸ்ஸூ, பவன், காலன், வாமதேவன், த்ருதவ்ரதன் என்கிற இந்தப் பதினொரு நாமங்களையும் உனக்கு நான் கற்பித்தேன். வாராய் ருத்ரனே! மற்றும், தீவ்ருத்தி, அசனை, உமை, நியுத், ஸர்ப்பிஸ்ஸூ, இளை, அம்பிகை, இராவதி, ஸூதை, தீக்ஷை, ருத்ராணீ என்கிற பதினொருபத்னிகளையும் உனக்குக் கொடுக்கின்றேன். நீ, உன் பத்னிகளுடன்கூடி நான் கொடுத்த இந்நாமங்களையும் ஸ்தானங்களையும் அங்கீகரிப்பாயாக. இந்த ஸ்த்ரீகளுடன்கூடிப் பற்பல ப்ரஜைகளைப் படைப்பாயாக. நீ ப்ரஜாபதியல்லவா? இந்த நாமதேயம் நீ ப்ரஜைகளைப் படைத்தாலல்லவோ பொருளுடையதாகும்? நீ ப்ரஜைகளைப் படைப்பதற்காக உண்டாயினை' என்றான். தந்தையாகிய நான்முகன் இங்ஙனம் கட்டளையிடுகையில், உற்பத்தி ப்ரளயம் முதலியவற்றை நன்கறிந்தவனும் இளம் பிள்ளையுமாகிய நீலலோஹிதன் (கறுப்பும் சிவப்பும் அமைந்த பவன்) பலத்திலும் ஆகாரத்திலும் ஸ்வபாவத்திலும் தன்னோடொத்த ப்ரஜைகளை ஸ்ருஷ்டித்தான். அந்த ருத்ரன் ஸ்ருஷ்டித்த ப்ரஜைகள் யாவரும் அவனைப் போலவே ரௌத்ராகாரமுடையவர்களாயிருந்தனர். ஆகையால் அந்த ப்ரஜைகளும் ருத்ரர்களென்றே பேர்பெற்றனர். அந்த ருத்ரர்கள்

ஜகத்தையெல்லாம் நாற்புறத்திலும் விழுங்கத் தொடங்கினார்கள்; அன்றியும் கணக்கில்லாமல் கூட்டங் கூட்டமாயிருந்தார்கள். அவர்கள் அங்ஙனம் இருப்பதைக் கண்டு [1] கமலாஸனன், 'இவர்களால் என்ன விளையுமோ' என்று சங்கித்து ருத்ரனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான் :—தேவஶ்ரேஷ்டனே! ருத்ரனே! இங்ஙனம் நீ படைத்த ப்ரஜைகள் உன்னைப்போலவே இருக்கின்றனர்; மிகவும் தீவ்ரமான கண்ணோக்கங்களால் [2] என்னோடுகூடத் திசைகளையெல்லாம் தஹிக்கின்றனர். இத்தகைய ப்ரஜைகளால் ஆகவேண்டிய கார்யம் ஒன்றும் இல்லை. நீ ஸ்ருஷ்டிப்பதை நிறுத்துவாயாக. நீ தவஞ்செய்வாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகுக. ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸுகம் விளைப்பதாகிய நற்றவம் செய்வாயாக. அங்ஙனம் தவஞ்செய்வாயாயின், அந்தத் தவமஹிமையாலேயே இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் முன்னிருந்தாற்போலவே படைப்பாய். புருஷன் தவத்தினாலேயே பரமாத்மாவைப் பெறுவான். அந்தப் பரமபுருஷன் ப்ராக்ருதமான இந்த்ரியங்களுக்கு விஷயமாகமாட்டான். அவன் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் இருப்பிடமாயிருப்பான். ஸமஸ்த கல்யாண குணங்களுக்கும் அவனொருவனே விளைநிலமாயிருப்பவன். ஆகையால் அவன் தவத்தினால் அடையக் கூடியவனேயன்றி, மற்ற எதற்கும் கோசரமாகமாட்டான். ப்ராக்ருதமான இந்த்ரியங்களுக்கு விஷயமாகமாட்டானேயன்றி அப்ராக்ருதமான நித்ய முக்தர்களுடைய இந்த்ரியங்களுக்கு விஷயமாகக் கூடியவனே. நெஞ்சென்னும் உட்கண்ணால் அவ

1 ப்ரஹ்மதேவன்.

2 என்னையும் எல்லாத் திசைகளையும் தஹிக்கின்றனவென்று கருத்து.

னைக் காணமுடியுமேயன்றித் தோல் கண்ணாகிய மேல் கண்ணால் அவனைக் காணமுடியாது. இங்ஙனமே அப்ராக்ருதமான இந்த்ரியங்களுக்கு அவன் விஷயமாவான். அவன் ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் நிறைந்தவன். ஆகையால், நமது இஷ்டங்களை ஈடேற்றுவதற்கும் அனிஷ்டங்களைப்போக்குவதற்கும் உரிய ஜ்ஞானமும் சக்தியும் என்றும் மாறாதிருக்கப் பெற்றவன். அவன் ஸமஸ்த பூதங்களிலும் அமைந்திருப்பவனாகையால் அவனைப் [illegible]வதற்கு நாம் தேடிக்கொண்டு போகவேண்டியதி[illegible] பூதங்களில் அடங்கின நம்மிடத்திலும் அவன் அ[illegible]திருக்கிறானாகையால் நமது ஹ்ருதய கமலத்தில் இருக்கின்ற அவனைப் பணிய நாம் வருந்தவேண்டிய அவஶ்யமில்லை. ஆகையால் தவம் புரிந்து பரமாத்மாவை ஆராதிப்பாயாக. அங்ஙனம் செய்யின் அநாயாஸமாகவே விரைவில் அவனைப் பெறலாம். இங்ஙனம் பலரும் தவம் புரிந்து அவனை அநாயாஸமாக விரைவில் பெறுகின்றார்கள்' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் ப்ரஹ்மதேவன் ஆஜ்ஞையிடுகையில், அந்நீலலோஹிதன் வாணியின் கேள்வனாகிய அவ்வயனை ப்ரதக்ஷிணஞ் செய்து 'நீர் சொன்னபடி செய்கிறேன்' என்று அவனுடைய நியோகத்தை அங்கீகரித்துத் தவம்புரிவதற்காக வனத்திற்குச் சென்றான். அதன்பிறகு அவ்வன்னவூர்தி ஸ்ருஷ்டியைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருக்கையில் பகவானுடைய சக்தியாகிய உலகங்களைப் படைக்குந் திறமையுடன் கூடின அவனிடத்தினின்று உலகங்களைப் [illegible] செய்யுந் தன்மையரான பத்துப் புதல்வர்கள் உண்[illegible]ர்கள். அந்தப்பதின்மர் ஆரென்னில் சொல்லுகிறேன் [illegible]ரீசி, [illegible]த்ரி, அங்கிரஸ்ஸு, புலஸ்த்யர், புலஹர்

க்ரது, ப்ருகு, வஸிஷ்டர், தக்ஷர், நாரதர் என்னும் இவர்களே. இவர்களில் நாரதர் ப்ரஹ்மாவின் மடியினின்றும், தக்ஷர் அங்குஷ்டத்தினின்றும், வஸிஷ்டர் ப்ராணத்தினின்றும் ப்ருகு த்வக்கினின்றும் (தோலினின்றும்), க்ரது கரத்தினின்றும் (கையினின்றும்), புலஹர் நாபியினின்றும், புலஸ்த்யர் காதினின்றும், அங்கிரஸ்ஸு முகத்தினின்றும், அத்திரி கண்ணினின்றும், மரீசி மனஸ்ஸினின்றும் உண்டானார்கள். மீளவும் அந்நான்முகன் ஸ்ருட்டியைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கையில், அவனுடைய வலது ஸ்தனத்தினின்று தர்மம் உண்டாயிற்று. இந்த தர்மத்தில்தான் நாராயணன் நிலைபெறுகின்றான். (தர்மத்திற்கு நாராயணன் அதிஷ்டான தேவதை). தர்மம் நடக்குமிடத்தில் ஸ்ரீமந் நாராயணன் இருக்கின்றானென்று நிச்சயிக்கலாம். அந்த ப்ரஹ்மாவின் பின்புறத்தினின்று அதர்மம் உண்டாயிற்று. இந்த அதர்மத்தில் உலகங்களுக்கு பயங்கரனான ம்ருத்யு நிலைபெற்றிருப்பான். (ம்ருத்யு அதர்மத்திற்கு அதிஷ்டான தேவதை. அதர்மம் நடக்குமிடத்தில் ம்ருத்யு நிலைகொண்டிருக்கிறானென்று நிச்சயிக்கலாம்). ஹ்ருதயத்தினின்று காமமும், புருவங்களினின்று க்ரோதமும், கீழுதட்டினின்று லோபமும் (பிறர் பொருளில் விழையும் பேராசையும்), முகத்தினின்று வாக்கும் (வாக்குக்கு அதிஷ்டான தேவதையாகிய ஸரஸ்வதியும்), மேட்ரத்தினின்று (ஆண்குறியினின்று) ஸமுத்ரங்களும், அபானத்தினின்று பாபங்களுக்கிடமான நிருதியும் உண்டாயின. அன்றியும், அவனுடைய [illegible]ஹநிழலினின்று கர்த்தம ப்ரஜாபதி உண்டானான்; [illegible]ன் ஸ்வாயம்புவ மனுவின் புதல்வியாகிய தேவஹூதி கணவன்; இந்த்ரியங்களை வெ[illegible]ஜகத்

ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய ப்ரஹ்மாவினுடைய மனத்தினின்றும் தேஹத்தினின்றும் இவ்வாறு ப்ரபஞ்சம் உண்டாயிற்று. வாக்குக்கு அதிஷ்டான தேவதையாகிய ஸரஸ்வதியைப் படைத்தான் ப்ரஹ்மதேவனென்று சொன்னேனே அந்த விஷயத்தில் ஒரு கதை சொல்லுகிறேன், கேட்பாயாக. அந்த ஸரஸ்வதி நுண்ணியதும் அழகியதுமான சரீரமுடையவளும் ஆனதுபற்றியே காண்போருடைய மனத்தை மயக்கும்படியான அழகியுமாயிருந்தாள். ஸ்வாயம்புவானவன் அத்தகையளான தன்புதல்வியைப் பார்த்து, அவள் காமவிகாரமின்றித் தன்னை விரும்பாதிருப்பினும், தான் காமவிகார முடையவனாகி அவளை விரும்பினனென்று எமக்குக் கேள்வி. அங்ஙனம் தன் புதல்வியைத் தானே புணரவேண்டுமென்னும் விருப்பமாகிற அதர்மிஷ்டமான கார்யத்தில் புத்தி உண்டாகப் பெற்றவனும் தமது தந்தையுமாகிய அந்த ப்ரஹ்மாவைப் பார்த்து அவனுடைய புதல்வர்களாகிய மரீசி முதலிய முனிவர்கள் தந்தையிடத்தில் நம்பிக்கையின் மிகுதியால் அவனுக்கு நற்புத்தி உண்டாகும்படி அறிவித்தார்கள். அவர்கள் அவனுக்குத்தெரிவித்தவிதம் சொல்லுகிறேன், கேள். 'முன்புள்ளோர் இங்ஙனம் செய்ததில்லை. இப்பொழுதுள்ளவரும் இங்ஙனம் செய்கிறதில்லை. மேல்வரப்போகிறவரும் இவ்வண்ணம் ஆசரிக்கமாட்டார்கள். தனக்குத் தானே தர்ம மர்யாதைகளை நிலைநிறுத்த வல்லராகிய நீர் மன்மத விகாரத்தை அடக்காமல் தன் புதல்வியைப் புணரமுயன்றமையாகிற இந்தக் கார்யம் மற்றெவரும் செய்யமாட்டார். 'மஹானுபாவர்களான எமக்கு இது தோஷத்தை விளைப்பதாகாது' என்று நினைக்கவேண்ட[illegible] ஜகத்குரு! ப்ரபஞ்சத்தில் நடக்கவேண்டிய தர்ம மர்[illegible] தைக[illegible]யும் முக்யமாக நடத்த வேண்டிய[illegible]

நீரொருவரே. மிகுந்த மஹிமை அமைந்தவர்க்கும் இத் தகைய செயல் புகழுக்கிடமாயிராது. ஏனென்னில், உம்மைப் போன்ற பெரியோர்களின் ஆசாரத்தைக் கண்டு 'இம்மஹாநுபாவன் இங்ஙனம் ஆசரிக்கின்றான். ஆகையால் நாமும் இங்ஙனம் ஆசரிப்பின் மேன்மை பெறலாம்' என்றும், 'இங்ஙனம் ஆசரிப்பின் பாதகமில்லை' என்றும், 'அங்ஙனம் ஆசரித்து க்ஷேமத்தை அடையவேண்டும்' என்றும் ப்ரஜைகள் அங்ஙனம் ஆசரிப்பார்கள். ஆகையால் உம்மைப்போன்ற பெரியவர்கள் இத்தகைய பாபகார்யத்தைச் செய்யின் அது உங்களுடைய மஹிமையால் உங்களுக்கு தோஷத்தை விளைக்கவல்லதல்லாமற்போயினும். ப்ரபஞ்சத்திலுள்ளவர், 'நாமும் இங்ஙனம் செய்யலாம், இம்மஹாநுபாவர் இங்ஙனம் செய்தாரே' என்று தாமும் அங்ஙனம் பாவச்செயல்களைச் செய்து அழிந்து போதற்கிடமாம். ஆதலால் ஜனங்களின் புத்தி மாறாதிருக்கும்பொருட்டாயினும் உம்மைப்போன்ற பெரியோர்கள் இங்ஙனம் பாப கார்யங்களைச் செய்யலாகாது' என்று தந்தைக்குத் தெரிவித்து, அப்பால் 'இவரைத் தடுக்க முடியாது. இவர் தம்மை பகவானே தடுக்கவேண்டும். ஆகையால் அவனையே நாம் சரணம் புகுவோம்' என்று நினைத்து 'எந்த பகவான் தன்னிடத்தில் நாம ரூப விபாகங்களின்றி ஸூக்ஷ்மதசையை அடைந்த சேதநாசேதன ரூபமான ஜகத்தைத் தன் ஸங்கல்பத்தினால் நாம ரூபங்களுக்கிடமாக்கி வ்யக்தமாயிருக்கச் செய்தானோ அத்தகையனும் ஜகத்காரண வஸ்துவுமாகிய பரம புருஷனுக்கு நமஸ்காரம். அந்த பகவான் அதர்மத்தினின்று மீளுகையாகிற தர்மத்தை நிலைநிறுத்திப் பாதுகாப்பானாக' என்று பகவானைச் சரணம் அடைந்து வேண்டிக்கொண்டார்கள். இங்ஙனம் மரீசி முதலிய ப்ரஜாபதி

களாகிற தன் புதல்வர்கள் எதிரில் நின்று சொல்லிக்கொண்டிருக்கக் கண்டு ப்ரஜாபதிகளில் தலைவனாகிய அந்த ப்ரஹ்மதேவன் வெட்கமுற்று அந்தக் காமக் கருத்தைத் துறந்தான். அந்த ப்ரஹ்மதேவனை துறந்த பயங்கரமான அந்தக் காமக்கருத்தைக திசைகள் எடுத்துக்கொண்டன. அதெப்படி தெரிகிறதென்னில, சொல்லுகிறேன. திசைகளில் இருளாகத் தோற்றும் பனி அந்தக் காமக் கருத்தை ஏற்றுக்கொண்டதனு லுண்டானதேயென்று அறிஞர் நினைக்கின்றார்கள். ஆகையால் அந்தத் திசைகள அவன் விட்ட காமக்கருத்தை யெடுத்துக்கொண்டது உண்மையே. அப்பால் ஸ்ருஷ்டி கர்த்தாவான அநநானமுகக்கடவுள், 'ப்ரஜைகளை முன் கல்பத்தில் அமைந்திருநதாற்போலவே எங்ஙனம் படைப்பேன்' என்று சிநதித்துக்கொண்டிருக்கையில், ஒருக்கால் ருக்கு முதலிய வேதங்கள் உண்டாயின. ஹோதா முதலிய நான்கு ருத்விக்குகளைச் சேர்நதவைகளும் சாதுர் ஹோத்ரமென்னும் மந்த்ரத்தினுல் அறியத் தகுநதவைகளுமான யஜ்ஞாதி கர்மங்களின் விரிவும் ஆயுர்வேதம் முதலிய உபவேதங்களும் நயாயங்களும் தாமத்தின் நான்கு பாதங்களும் ஆஶ்ரமங்களும் அவற்றின் தொழில்களும் ப்ரஹ்ம தேவனிடத்தினின்று உண்டாயின.

விதுரர் வினவுகிருர் :—தவத்தைப் பொருளாகவுடைய மைத்ரேயரே! ப்ரபஞ்சத்தைப் படைக்கும் ப்ரஜாபதிகளில் தலைவனுகிய ப்ரஹ்மதேவன் வேதம் முதலியவற்றையெல்லாம் முகத்தினின்று ஸ்ருஷ்டித்தானென்பது எமக்குத் தெரியும். ஆனுல் இந்த அம்சம் எமக்குத் தெரியாது. அது யாதெனில், சொல்லுகிறேன். அந்த நான்முகக்கடவுள் எதைதை எதனுல் ஸ்ருஷ்டித்தானெனபது எமக்குத் தெரியாது. அதை எமக்கு மொழிவீராக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் அதர்வம் என்னும் பேருடைய நான்குவேதங்களையும் கிழக்கு முதலிய நான்கு முகங்களால் ஸ்ருஷ்டித்தான். சஸ்த்ரம் இஜ்யை ஸ்துதிஸ்தோமம் ப்ராயச்சித்தம் ஆகிய இந்நான்கையும் நான்முகன் கிழக்கு முதலிய தனது நான்கு முகங்களினின்றும் உண்டாக்கினான். இவை நான்கும் ஹோதா அத்வர்யு உத்காதா ப்ரஹ்மா என்கிற நான்கு ருத்விக்குகள் யாகங்களில் உபயோகப்படுத்தும் ஶ்ருதி விசேஷங்கள். ஆயுர்வேத மென்கிற வைத்ய சாஸ்த்ரத்தையும் தனுர்வேத மென்கிற தனுர்வித்யையையும் காந்தர்வவேதமென்கிற பரதசாஸ்த்ரத்தையும் ஸ்தாபத்ய வேதமென்கிற சில்ப சாஸ்த்ரத்தையும் முன்போலவே கிழக்குமுதலிய முகங்களால் க்ரமமாக ப்ரஹ்மதேவன் ஸ்ருஷ்டித்தான். எல்லாமறிந்தவனும் ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவுமாகிய ப்ரஹ்மதேவன் ஐந்தாம் வேதமாகிய இதிஹாஸங்களையும் புராணங்களையும் தனது எல்லா முகங்களினின்றும் ஸ்ருஷ்டித்தான். அன்றியும் அம்மறையவன் ஷோடசி உக்த்யம் என்கிற இரண்டு கர்மங்களைக் கிழக்கு முகத்தினின்றும், சயனம் அக்னிஷ்டோமம் என்கிற கர்மங்களைத் தெற்கு முகத்தினின்றும், அப்தோர்யாமம் அதிராத்ரம் என்கிற கர்மங்களை மேற்கு முகத்தினின்றும், கோஸவம் வாஜபேயம் என்கிற கர்மங்களை வடக்கு முகத்தினின்றும் ஸ்ருஷ்டித்தான். வித்யை தானம் தவம் ஸத்யம் என்னும் இவையே தர்மத்தினுடைய நான்கு பாதங்கள். இந்நான்கையும், ப்ரஹ்மசர்யம் முதலியநான்கு ஆஶ்ரமங்களையும், அவற்றின் தொழில்கள் நான்கையும் கிழக்கு முதலிய நான்கு முகங்களினின்று க்ரமமாக நான்முகன் ஸ்ருஷ்டித்தான். ப்ரஹ்மசர்யம் முதலிய ஆஶ்ரமங்களின் தொழில்கள் யாவை

யெனில், சொல்லுகிறேன், கேள். ஸாவித்ரம் ப்ராஜாபத்யம் ப்ராஹ்மம் ப்ருஹத் என்று ப்ரஹ்ம சர்யாஶ்ரமத்தின் தொழில் நான்குவகைப்பட்டிருக்கும். இந்நான்கில் ஸாவித்ரமாவது—ஸ்த்ரீ ஸங்கமில்லாமை முதலிய ப்ரஹ்ம சர்யம். ப்ராஜாபத்யமாவது—உபநயனம்முதல்காயத்ரியை அத்யயனம் பண்ணிக்கொண்டு மூன்று ராத்ரிகள் நடத்தும் ப்ரஹ்மசர்யம். ப்ராஹ்மமாவது—வ்ரதங்களை ஆசரித்துக்கொண்டு ஸம்வத்ஸரம்வரையில் நடத்தும் ப்ரஹ்ம சர்யம். ப்ருஹத்தாவது — வேதங்களையெல்லாம் ஓதும் வரையில் ஆசரிக்கும் ப்ரஹ்மசர்யம். வார்த்தை ஸஞ்சயம் சாலீனம் சிலம் உஞ்சம் என்னுமிவை க்ருஹஸ்தாஶ்ரமத்தின் தொழில்கள். இவற்றில் வார்த்தையாவது—சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்படாத க்ருஷி (பயிர் செய்கை) முதலிய வ்யாபாரம். ஸஞ்சயமாவது—அத்யாபனம் (வேத மோதுவிக்கை) முதலியவற்றால் ஸம்பாதிக்கும் தனத்தை ஆயுள்வரையிலும் ஜீவனத்திற்காகச் சேர்த்துவைக்கை. சாலீனமாவது—யாசிக்காமல் கிடைக்கும் த்ரவ்யத்தைக்கொண்டு ஜீவிக்கை. சிலமாவது—கழனிகளில் உதிர்ந்த நெல் கதிர்களைப்பொறுக்கி ஜீவித்தல். உஞ்சமாவது உதிர்ந்த நெல்லுகளைப்பொறுக்கி ஜீவிக்கை. இவற்றில் சிலம் உஞ்சம் இவையிரண்டும் ஒரே தொழில். வைகானஸரென்றும் வாலகில்யரென்றும் ஔதும்பரரென்றும் பேனபரென்றும் வானப்ரஸ்தர்கள் நான்கு வகைப்பட்டிருப்பர். இவர்களில், உழுது பயிரிடாமல் தானே விளையும் தான்யங்களால் ஜீவிப்பவர் வைகானஸர். புதிய அன்னம் முதலியவை அகப்பட்டவுடனே பழய அன்னாதிகளை விடுகிறவர்கள் வாலகில்யர். பொழுது விடிந்தவுடன் எழுந்திருந்து எந்த திக்கை முதலில் பார்க்கிறார்களோ அந்த திக்கிலிருந்து கொண்டுவந்த காய்கிழங்கு முதலிய

வற்றால் ஜீவிப்பவர் ஔதும்பரர். மரங்களினின்று தானே விழும்பழம் முதலியவற்றால் ஜீவிப்பவர் பேனபர். (கன்றுகளின் வாயோரங்களில் படிந்திருக்கும் நுரைகளைப்பருகி ஜீவிப்பவர் பேனபரென்று சிலர்கூறுவர்). இங்ஙனம் வானப்ரஸ்தர்கள் நான்கு வகைப்பட்டவர். குடீசகர் பஹூதகர் ஹம்ஸர் நிஷ்க்ரியர் என்று ஸந்யாஸிகளும் நான்கு வகைப்பட்டிருப்பர். தனது ஆஸ்ரமத்திற்கு விதித்த தர்மங்களை முக்யமாக அனுஷ்டிப்பவர் குடீசகர். கர்மத்தை அப்ரதானமாகக்கொண்டு ஜ்ஞானத்தை முக்யமாக அனுஷ்டிப்பவர் பஹூதகர். ஜ்ஞானாப்யாஸ நிஷ்டர் ஹம்ஸர். தத்வஜ்ஞானம் கைபுகுந்தமையால் ப்ரவ்ருத்தி தர்மங்களில் கண் வைக்காதிருப்பவர் நிஷ்க்ரியர். இவர்களே பரமஹம்ஸரென்று கூறப்படுமவர். ஆன்வீக்ஷிகி த்ரயி வார்த்தை தண்டநீதி என்னும் இவை ப்ரஹ்மாவின் முகங்களினின்று உண்டாயின. இவற்றில் ஆன்வீக்ஷிகியாவது ஆத்மானாத்ம விவேக வித்யை (ஆத்மா ஜ்ஞான ஸ்வரூபன். தேஹம் ஜடமாயிருக்கும் ஆகையால் அசேதனமான தேஹம் ஆத்மாவாகமாட்டாது. இங்ஙனம் தேஹம் ஆத்மாவைக்காட்டிலும் வேறுபட்டதென்று தெரிவிக்கும் ஶாஸ்த்ரம ஆத்மானாத்ம விவேகவித்யை. இதற்கு மோக்ஷம் பலன். தத்வத்ரயஜ்ஞானமில்லாமல் மோக்ஷம் உண்டாகாது. தத்வத்ரயமாவது, சித்தும் அசித்தும் ஈஶ்வரனும். சித்தாவது, ஜ்ஞான ஸ்வரூபனான ஜீவன். அசித்தாவது, அசேதனமான ப்ரக்ருதி. ஈஶ்வரன் இவையிரண்டையும் சரீரமாகவுடைய பரமபுருஷன். இம்மூன்று தத்வங்களின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தாலொழிய மோக்ஷம் உண்டாகாது. ஆகையால் அவ்வறிவை விளைவிக்கும் ஆன்வீக்ஷிகி மோக்ஷத்தையே பலனாகவுடையது). த்ரயியாவது கர்மவித்யை (கர்மங்களின்

ஸ்வரூபத்தை அறிவிக்கும் வித்யை. கர்மங்கள் பகவானுடைய ஆராதன ரூபமான யாகம்முதலிய கர்மங்கள். இவற்றின் ஸ்வரூபத்தை அறிவிக்கும் வித்யை வேதங்களே. அவ்வேதங்கள் ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் என்று மூன்று வகைப்பட்டிருக்கும். இவ்வேதங்கள் மூன்றுமே கர்ம வித்யையென்றும் த்ரயியென்றும் கூறப்படும். வேதங்கள் நான்குவகைப்பட்டிருக்க, மூன்று வேதங்களென்பது எங்ஙனம்பொருந்துமெனனில், வேதங்கள் நான்கென்பது வாஸ்தவமே. ஆயினும் அவற்றில் அதர்வ வேதத்தை யொழிய மற்றை மூன்று வேதங்களை இங்குச் சொல்லுகிறது. ஆகையால் நான்கு வேதங்களெனபதற்கு விரோதமில்லை. இங்கு த்ரயியென்று மூன்று வேதங்களில் விதித்த யஜ்ஞாதி கர்மங்களைச் சொல்லுகிறது. இது ஸ்வர்க்காதிகளைப் பலனாகவுடையது). வார்த்தையாவது க்ருஷி கோரக்ஷம் வாணிஜ்யம் குஸீதமென்று நான்கு வகைப்பட்ட வ்யாபாரம். க்ருஷி பயிர் செய்கை. கோரக்ஷம் பசுக்களை ஸம்ரக்ஷணம் செய்கை. வாணிஜ்யம் வர்த்தக வ்யாபாரம். குஸீதம் வட்டி ஜீவனம். தண்ட நீதியாவது தண்டிக்கும் விதத்தை அறிவிக்கும் நீதி. இவற்றில் ஆன்வீக்ஷிகி ப்ராஹ்மணர்களைச் சேர்ந்தது. த்ரயி ராஜாக்களைச்சேர்ந்தது. ராஜாக்களுக்கே பெரும்பாலும் யாகாதி கர்மங்களைச் செய்யும் யோக்யதை உண்டு. ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்யர் மூவர்க்கும் யாகாதி கர்மங்களில் அதிகார முண்டேயாயினும் யாகாதி கர்மங்கள் மிகுந்த த்ரவ்யங்களால் நடத்தவேண்டியவையாகையால் அந்த யோக்யதை அரசர்களுக்கே பெரும்பாலும் உள்ளது. அன்றியும் ப்ரஜைகளைப் பாதுகாக்கின்ற மன்னவர் தமது காவற் சோர்வினால் ப்ரஜைகள் செய்யும் பாபங்களைத் தாமே பெறுவார்கள். அந்தப் பாபங்கள் தீரும்பொருட்டும்

ப்ரஜைகளின் க்ஷேமத்திற்காகவும் அவர்கள் தர்மகார்ய ங்களை அவஸ்யம் ஆசரிக்கவேண்டும். தர்மங்களை ஆசரிப் பதனால் நன்மை உண்டாவதும் தவிர பாபங்களும் தீருமெ ன்று ஸ்ருதிகள் சொல்லுகின்றன). வார்த்தை வைஸ்யர் களைச் சேர்ந்தது. தண்ட நீதி சூத்ரர்களைச் சேர்ந்தது. தண்டிக்கும் கார்யம் க்ஷத்ரியர்களைப் பொருத்ததேயாயி னும் தண்டனை சூத்ரர்களிடத்திலேயே உபயோகப்படுத் தக்கூடியதாகையால் சூத்ரர்களைச் சேர்ந்ததென்று கூறுகிறார்கள். இந்நான்கும் ப்ரஹ்மாவினுடைய கிழக்கு முதலிய நான்கு முகங்களினின்று உண்டாயின. இங் ஙனமே நான்கு வ்யாஹ்ருதிகளும் க்ரமமாக உண்டாயின. அனந்தரம் இந்த ப்ரஹ்மாவினுடைய ஹ்ருதயாகாசத்தி னின்று ப்ரணவம் உண்டாயிற்று. மீளவும் அவனுடைய ரோமங்களினின்று உஷ்ணிக்கென்னும் சந்தஸ்ஸும், த்வக்கினின்று காயத்ரியென்னும் சந்தஸ்ஸும், மாம்ஸத் தினின்று த்ரிஷ்டுப்பென்னும் சந்தஸ்ஸும், ஸ்னாயுவினி ன்று (நரம்பினின்று) அனுஷ்டுப் சந்தஸ்ஸும், அஸ்தியி னின்று (இரும்பினின்று) ஜகதியென்னும் சந்தஸ்ஸும் மஜ்ஜையின்று பங்க்தியென்னும் சந்தஸ்ஸும், ப்ராண னில் நின்று ப்ருஹதியென்னும்சந்தஸ்ஸும் உண்டாயின. அந்த ப்ரஹ்மாவினுடைய ஜீவனிடத்தினின்று ககாரம் முதலிய இருபத்தைந்து அக்ஷரங்களும், தேஹத்தி னின்று அகாரம் முதலிய ஸ்வரங்களும், இந்த்ரியங்களி னின்று ஶ-ஷ-ஸ-ஹ என்னும் இவ்வக்ஷரங்களும், பலத் தினின்று ய-ர-ல-வ என்னும் இவ்வக்ஷரங்களும் நிஷாதம் முதலிய ஏழு ஸ்வரங்களும் அந்த ப்ரஹ்மாவின் லீலையால் உண்டாயின. குழந்தாய்! விதுரனே! சப்த ஸ்வரூபமான சரீரத்தை யுடையவனும் வ்யக்தமாயும் அவ்யக்தமாயு முள்ள இருபத்து நான்கு தத்வ ஸ்வரூபியுமாகிய அந்த

நான்முகனிடத்தினின்று, ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸாதி ரூபத்தினாலும் ப்ரக்ருதி ப்ரத்யய பத வாக்யாதி ரூபத்தினாலும் அந்தந்த பாஷா ரூபத்தினாலும் பரவியிருக்கின்ற சப்த ப்ரஹ்மம் உண்டாயிற்று. முன்பு பலவகைப் பொருள்கள் அடங்கின ப்ரபஞ்சம் உண்டாயிற்று. பின்பு பலவாறு பிரிந்து விரிந்திருப்பதான சப்த ப்ரபஞ்சம் உண்டாயிற்று. அபிதை லக்ஷணை கௌணி முதலிய வ்ருத்திகளால் அந்த சப்த ப்ரபஞ்சம் விரிந்திருக்கும். அப்பால் அந்த ப்ரஹ்மதேவன் சப்த ஸ்வரூபமான அந்தச் சரீரத்தைக் காட்டிலும் மற்றொரு சரீரத்தை அங்கீகரித்து ஸ்ருஷ்டியில் மனத்தை நிறுத்திச் சிந்தித்தான். வாராய் கௌரவனே! ஸ்ருஷ்டி ஸாமர்த்யம் மிகுந்திருக்கப்பெற்ற ரிஷிகளைக்கொண்டும் தான் நேராகவும் நடத்தின ஸ்ருஷ்டியும் பரவாமல் சுருங்கியிருப்பதைக் கண்டு ப்ரஹ்மதேவன் சிந்தித்தான். அவன் சிந்தித்த விதம் சொல்லுகிறேன் கேள். 'நான் ஓயாமல் ஸர்வகாலமும் ப்ரஜைகளைப் படைக்கையாகிற வ்யாபாரத்தைச் செய்துகொண்டிருக்கின்றேன். ஆயினும் ப்ரஜைகள் வ்ருத்தி அடையவில்லை. இது ஆச்சர்யமாயிருக்கின்றது. இந்த ப்ரஜா வ்ருத்தி விஷயத்தில் தெய்வம் ப்ரதிபந்தகமாயிருக்கின்றதென்று (தடை செய்யா நின்றதென்று) நினைக்கின்றேன். இது நிச்சயம்' என்று ப்ரஹ்மதேவன் மனத்தில் சிந்தித்தான். இங்ஙனம், அவன் தன்னுடைய ஸ்ருஷ்டி கார்யம் நிரம்ப நிறைவேறாமலிருப்பதைக் கண்டு அங்ஙனம் சிந்தித்தமை யுக்தமே. மற்றும், அவன் தெய்வானுகூல்யத்தை எதிர்ப்பார்த்துக்கொண்டிருந்தான். இத்தகையனான அந்த ப்ரஹ்மாவின் உருவம் அப்பொழுது இரண்டு ப்ரகாரமாக ஆயிற்று. (அதாவது முன்னுருவத்தோடுகூட மற்றொரு உருவம் உண்டா

யிற்று), அந்த உருவத்தையே காயமென்று கூறுகிறார்கள். அங்ஙனம் இரண்டு ப்ரகாரமாகப் பிரிந்த உருவங்களினின்று ஆணும் பெண்ணுமாகிய ஓர் மிதுனம் உண்டாயிற்று. அவ்விரண்டில் ஒருவனாகிய புருஷனே ஸ்வாயம்புவமனுவென்னும் பேருடைய ஸார்வபௌமனானன். அவ்விரண்டில் மற்றொருத்தியாகிய பெண் மிகுந்த மஹிமை பொருந்திய இம்மனுவுக்கு பார்யையானாள். அவள் சதரூபையென்னும் பேருடையவள். அந்த மனுவும் சதரூபையும் உண்டானது முதல் மைதுன தர்மத்தினால் ப்ரஜைகள் வ்ருத்தி அடைந்தன. அந்த ஸ்வாயம்புவ மனு சதரூபையென்கிற தன் பார்யையிடத்தில் ஐந்து குழந்தைகளைப் பெற்றான். அவ்வைந்து குழந்தைகளில் இரண்டுபேர் பிள்ளைகள். மூன்றுபேர் பெண்கள். இரண்டு பிள்ளைகளில் ஒருவன் ப்ரியவ்ரதனென்னும் பேருடையவன். மற்றொருவன் உத்தான பாதனென்னும் பேருடையவன். ஸத்புருஷர்களில் சிறந்தவனே! பெண்களில் ஒருத்தி ஆகூதியென்னும் பேருடையவள். மற்றொருத்தி தேவஹூதியென்னும் பேருடையவள். மற்றொருத்தி ப்ரஸூதியென்னும் பேருடையவள். அவர்களில் முதற்பெண்ணாகிய ஆகூதி யென்பவளை ருசியென்னும் முனிவர்க்கும், நடுப்பெண்ணாகிய தேவஹூதி யென்பவளைக் கர்த்தமருக்கும், மூன்றும் பெண்ணாகிய ப்ரஸூதி யென்பவளை தக்ஷருக்கும் கொடுத்தான். இந்த ஆகூதி முதலியவரிடத்தினின்றும் உண்டான ப்ரஜைகளால் ஜகத்து முழுவதும் நிரம்பிற்று. பன்னிரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

பூமி ஜலத்தில் ஆழ்ந்திருப்பதை கண்டுமனு ப்ரஹ்மதேவனைப்பார்த்து வாஸம்செய்ய இடம் வேண்டுதலும், ப்ரஹ்மதேவன் அதைப்பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீபகவான் வராஹரூபியாய்த்தோன்றி ஹிரண்யாக்ஷனைக கொன்று பூமியைக்கொண்டுவந்து ஜலத்தின்மேல் ஸ்தாபித்தலும்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—வாராய் மன்னவனே! இங்ஙனம் மைத்ரேயர் மொழிகின்ற மிகவும் பரிசுத்தமான வசனத்தைக் கேட்டு வாஸுதேவனுடைய கதையைக் கேட்பதில் பேராவலுடையோனாகிய விதுரன் மீளவும் வினவினான்.

வாரீர் மைத்ரேய முனிவரே! அந்த ஸ்வாயம்புவமனு ப்ரஹ்மாவுக்கு ப்ரியபுத்ரனென்றும் பூமிக்கெல்லாம் ப்ரபுவென்றும் மொழிந்தீர். அவர் அன்பிற்கிடமான பத்னியைப்பெற்று, அப்பால் என்செய்தார்? ஸத்தமரே! ராஜாக்களில் முதன்மையானவரும் ராஜரிஷியுமாகிய அந்த மனுவின் சரித்ரத்தை எனக்கு மொழிவீராக. நான் அதைக் கேட்பதில் மிகுந்த ஶ்ரத்தையுடையவனாயிருக்கின்றேன். ஏனென்னில் அவர் ஸ்ரீமஹா விஷ்ணுவை அவலம்பமாக வுடையவரல்லவா. (பகவானிடத்தில் பக்தியுடையவரல்லவா). ஆகையால் அவருடையசரித்ரம் அவஶ்யம் கேட்கத் தகுந்ததே. 'ஆனால் நேரே பகவானுடைய சரித்ரத்தையே கேட்கலாமே. பாகவதர்களின் சரித்ரத்தைக் கேட்பதனால் என்?'' என்னில் சொல்லுகிறேன். எவர்கள் தமது ஹ்ருதயத்தில் முகுந்தனுடைய (போக மோக்ஷங்களைக் கொடுக்கவல்லனாகிய பகவானுடைய) பாதாரவிந்தங்களை உபாஸிக்கின்றார்களோ, அத்தகையரான பாகவதர்களின் குணங்களைக் கேட்கப்பெறுகையே புருஷர்கள் நெடுநாள் ஶ்ரமப்பட்டு ஸம்பாதித்த சாஸ்த்ராப்யாஸத்திற்கு

ப்ரயோஜனமென்று பேரறிஞர் விரைந்து புகழ்ந்து கூறு கிறார்கள். ஆகையால் பகவானுடைய குணங்களைப்போல் பாகவதர்களின் குணங்களும் கேட்கத் தகுந்தவைகளே.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—விநயம் முதலிய குணங்கள் நிறைந்தவனும் ஸஹஸ்ரசீர்ஷாவான (ஆயிரந்தலையனாகிய) பரமபுருஷனுடைய பாதங்களையிடும் மணிபோன்றவனுமாகிய விதுரன் இங்ஙனம் மொழிகின்றமையில், அதனால் பகவானுடைய கதையில் தூண்டப்பெற்ற அம்மைத்ரேய முனிவர் மயிர்க்கூச்சல் உண்டாகப்பெற்றவராகி விதுரனைக் குறித்து மொழிந்தார்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—எப்பொழுது ஸ்வாயம் புவமனு தன் பார்யையாகிய சதரூபையுடன் உண்டானாரோ, அப்பொழுதே இவர் ப்ரஹ்மாவை நமஸ்கரித்துக் கை குவித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தார். 'நீரொவரே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் பிறவியை விளக்கும் பிதாவும் ஜீவனங்கொடுக்கும் போஷகனுமாயிருப்பவர். ஆகையால் உமக்கு மற்றொருவரை எதிர்பார்த்து ஆக வேண்டிய கார்யம் ஒன்றுமே இல்லை. ஆயினும் உமது ப்ரஜைகளாகிய எங்களுக்கு எந்தக் கர்மத்தினால் நன்மை உண்டாகுமோ அதைச் சொல்லவேண்டும். அனைவராலும் துதிசெய்யத் தகுந்த மஹிமையுடையவரே! எங்கள் சக்திக்குத்தகுந்த கார்யங்களில் எந்தக்கார்யஞ்செய்தால் இவ்வுலகத்தில் முழுவதும் புகழும் பரலோகத்தில் பெறற்கரிய நற்கதியும் உண்டாகுமோ, அத்தகையதான கார்யத்தை எங்களுக்கு விதிக்கவேண்டும்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்;–அப்பா! நீ தூயமனத்துடன் 'என்னைப் பாதுகாக்கவேண்டும்' என்று தானே ப்ரார்த்தித்தனை.' இதனால் நான் உன் விஷயத்தில் மிகவும் ஸந்தோஷம் அடைந்தேன். பூமிக்கெல்லாம் நாத

உங்களுக்கு க்ஷேமம் உண்டாகுக. வாராய் பண்டிதனே! தந்தையிடத்தில் புதல்வர்கள் செய்யவேண்டிய பூஜை இவ்வளவே. அதாவது—த்வேஷமில்லாமல் தமது சக்திக்குப் பொருந்தினபடி ப்ரீதியுடன் அவனுடைய ஆஜ்ஞையை அங்கீகரித்துச் செய்கையே. (தமது சக்திக்குப்பொருந்துமாறு தந்தையின் கட்டளையைத் தவறாமல் நடத்துகையே தந்தையிடத்தில் பிள்ளைகள் செய்யும் ஶுஶ்ரூஷையாம்). அங்ஙனம் என் சரீரத்தினின்றுண்டாகி என் புதல்வனாகிய நீ இந்த உன் பார்யையிடத்தில் குணங்களால் உனக்குத் தகுந்த பிள்ளைகளைப் பிறப்பித்து பூமியை தர்மத்துடன் பாதுகாப்பாயாக. மற்றும், யாகங்களால் பரமபுருஷனை ஆராதிப்பாயாக. இதுவே எனக்கு மேலான ஶுஶ்ரூஷையாம். வாராய் மன்னவனே! நீ தர்மம் தவறாமல் ப்ரஜைகளைப் பாதுகாத்து வருவாயாயின், அங்ஙனம் ப்ரஜாபரிபாலனஞ் செய்கிற உன் விஷயத்தில் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்த இருடீகேசன் ஸந்தோஷம் அடைவான். யஜ்ஞமூர்த்தியும் அனாதியுமாகிய பகவான் எவர் விஷயத்தில் ஸந்தோஷம் அடையாதிருப்பானோ, அவர்கள் படும் ஶ்ரமமெல்லாம் ப்ரயோஜனமற்றதே யாகும். ஏனென்னில், அவர்கள் தாம் ஸர்வாந்தராத்மாவான பகவானை ஆதரிக்காமல் உபேக்ஷித்தவரல்லவா. ஆதலால் பகவானுக்கு ஸந்தோஷத்தை விளைக்காத கார்யங்கள் பயனற்றவைகளே. அத்தகைய கார்யங்களைச் செய்பவர்க்கு வீண்ஶ்ரமமே பயனும். ஆகையால் நீ அந்தப் பரமபுருஷனை யாகங்களாலும் க்ஷத்ரிய வ்ருத்தியான ப்ரஜாபாலனத்தினாலும் ஸந்தோஷமடையச் செய்வாயாயின், அதுவே நீ எனக்குச் செய்யும் ஶுஶ்ரூஷையாம்.

மனு சொல்லுகிறான்:—வாரீர் பாபத்தைப் போக்கும் குருவே! மஹானுபாவராகிய உமது ஆஜ்ஞையில்

கிற்கின்றேன். ப்ரபூ! ஆனால் ப்ரஜைகளும் நானும் இவ்வுலகத்தில் வாஸஞ்செய்வதற்குரிய ஓர் ஸ்தானத்தைக் காட்டிக் கொடுப்பீராக. 'பூமியே, ஸமஸ்த ப்ராணிகளுக்கும் வாஸ ஸ்தானமாயிருக்க ஸ்தானம் காட்டவேண்டுமென்கிறீரேயென்?' எனனில் சொல்லுகின்றேன். ஸமஸ்த ப்ராணிகளுக்கும் எது வாஸஸ்தானமாயிருக்கின்றதோ, அத்தகைய பூமியானது மஹாஜலத்தில் மூழ்கியிருக்கின்றது. தேவனே! ஆகையால் இந்த பூமிதேவியை மேலுக்கெடுப்பதில் யத்னஞ்செய்வீராக. அனதுபற்றியே நாங்கள் வஸிப்பதற்குரிய ஸ்தானத்தை ஏற்படுத்திக்கொடுப்பீரென்று வேண்டுகிறேன்' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார் :—இங்ஙனம் மனுசக்ரவர்த்தி மொழிந்ததைக் கேட்டுப் பரமேஷ்டியானவன், பூமி ஜலத்தில் மூழ்கியிருப்பதை அறிந்து, 'இந்த பூமியை நான் எப்படி எடுப்பேன்?' என்று தன் புத்தியைக் கொண்டு நெடுநேரம் சிந்தித்தான். 'நான் ப்ரளயகாலத்திலுள்ள ஜலத்தையெல்லாம் பானஞ்செய்தேன். பூமியையும் ஸ்தாபித்தேன். பிறகு தேவதைகள் அஸுரர் பித்ருக்கள் மனுஷ்யர் முதலிய ப்ரஜைகளை நான் ஸ்ருஷ்டித்துக்கொண்டிருக்கையில், அந்த பூமி ஜலங்களால் முழுக்கப்பெற்று ரஸாதலம் போய்ச்சேர்ந்தது. நம்மை ஈஸ்வரன் ஸ்ருஷ்டிக்கும்படி நியமித்திருக்கின்றான். இதற்குமேல் நாம் செய்யவேண்டிய கார்யம் என்? எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நான் எந்த பகவானுடைய ஸங்கல்பத்தினால் உண்டானேன், அத்தகையனான ஈஸ்வரன், நான் இப்பொழுது என் செய்யவேண்டுமோ அதை நிறைவேற்றுவானாக' என்று சிந்தித்துக்கொண்டிருந்தான். இங்ஙனம் சிந்தித்துக்கொண்டிருக்கின்ற அந்த ப்ரஹ்மாவின் நாஸிகா விவரத்தினின்று (மூக்கின் துவா

ரத்தினின்று) அங்குஷ்ட ப்ரமாணமுடைய ஓர் பன்றிக் குட்டி வெளித்தோற்றிற்று. நிர்த்தோஷனே! விதுரா! (ப்ரஹ்மதேவனே இங்ஙனம் வராஹ உருவத்துடன் தோற்றினனென்று நினைக்கவேண்டாம். இது பரம புருஷனுடைய செயலென்று சிந்திப்பாயாக). அந்த நான்முகன் பார்த்துக்கொண்டிருக்கையில், மிகவும் ஸூக்ஷ்மமான அவ்வராஹம் ஆகாயத்தில் இருந்துகொண்டு ஒரு க்ஷணத்தில் யானையின் அளவுடையதாகி வளர்ந்தது. அவ்வராஹம் உண்டானதும் அது ஆகாயத்தில் சென்றதும் யானைபோல் வளர்ந்ததும் ஆகிய இது, பார்க்கின்றவர்க்கு மிகவும் ஆச்சர்யமாயிருந்தது. அப்பால் ப்ரஹ்மதேவன் மரீசிமுதலிய புதல்வர்களோடும் ஸனகர்முதலிய கு[illegible]ர்களோடும் அந்த வராஹ உருவத்தைக் கண்டு பலவாறு சிந்தித்தான். 'திவ்யமும் (பரம பதத்தில் வாஸஞ்செய்வதும்) சுத்த ஸத்வ மயமாயிருப்பதுமாகிய பரப்ரஹ்மமே இங்ஙனம் பன்றியென்கிற ஓர் மாறுவேடம் பூண்டு தோற்றிற்றோ? இத்தகைய வராஹ உருவம் எனது நாஸாவிவரத்தினின்று (மூக்கின் த்வாரத்தினின்று) வெளியாயிற்று. ஆ! இதென்ன ஆச்சர்யம்? முதலில் இவ்வராஹம் அங்குஷ்டத்தின் நுனிக்கணுவின் அளவுடையதாகப் புலப்பட்டது; பிறகு க்ஷணகாலத்தில் கண்டசைலம் (பர்வதத்தினின்று நழுவின ஓர் பெரிய சிலை) போன்ற உருவமுடையதாய் வளர்ந்து புலப்பட்டது. இங்ஙனம் வராஹ உருவத்தினால் தன் ஸ்வரூபத்தை மறைத்து என்மனத்தை வருத்திக்கொண்டு புலப்படுகிற இவ்வஸ்து யஜ்ஞ ஸ்வரூபியான அந்த பகவானதானோ? (யஜ்ஞ ஸ்வரூபியாகிய அந்த பகவான் தானே இங்ஙனம் வராஹ உருவத்தினால் தன் ஸ்வரூபத்தை மறைத்து என் மனத்தை மயங்கச் செய்துகொண்டு புலப்படுகின்றானோ?)'

என்று பலவாறு சிந்தித்தான். அந்த ப்ரஹ்மதேவன் இங்ஙனம் தன் புதல்வர்களான மனு முதலியவர்களோடு சிந்தித்துக் கொண்டிருக்கையில், யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படும் பரமபுருஷனாகிய பகவான் பெரிய பர்வதம்போன்ற வராஹ உருவத்துடன் ஓர் கர்ஜனம் செய்தான். ஸமர்த்தனும் வராஹரூபியுமான அந்த பகவான் திசைகளில் ப்ரதித்வனி யெழச்செய்கின்ற கர்ஜனையால் ப்ரஹ்மதேவனையும் அந்த ப்ராஹ்மணோத்தமர்களான மரீசிமுதலியவர்களையும் ஸந்தோஷம் அடையச் செய்தான். கபடவராஹ உருவம் பூண்ட பகவான் தமது ஶ்ரமங்களெல்லாம் தீரும்படி செய்த குர்க்குரத்வனியைக் கேட்டு ஜனலோகம் தபோலோகம் ஸத்யலோகம் ஆகிய இம்மூன்று லோகங்களில் வாஸஞ்செய்பவராகிய அங்குள்ள முனிவர்கள் அனைவரும் பரிசுத்தங்களும் ருக்கு யஜுஸ்ஸு ஸாமம் ஆகிய இம்மூன்று வேதங்களைச் சேர்ந்தவையாகையால் மூன்றுவகைப்பட்டவைகளுமான ஸூக்தங்களால் ஸ்தோத்ரம் செய்தார்கள். வேதங்களால் விதிக்கப்படுகின்ற யாகங்களை ஸ்வரூபமாகவுடைய அந்த பகவான் அங்குள்ள மரீசி முதலிய ஸத்புருஷர்கள் தன் கல்யாண குணங்களை எடுத்துரைப்பதான வேதத்தைச் சொல்லி ஸ்தோத்ரம் செய்வதைக் கேட்டு மீளவும் குர்க்குரத்வனி செய்து ப்ரஹ்மதேவன் முதலிய அவ்விபுதர்களின் நன்மைக்காகப் பெரிய மத்தகஜத்தின் லீலைபோன்ற லீலையுடையவனாகி ஜலத்திற்குள் ப்ரவேசித்தான். ஆகாயத்தில் திரிகின்ற அந்த வராஹ ஸ்வரூபியான பகவான் வாலை உயரத் தூக்கிக்கொண்டு கடினமான ஸடைகளை (கழுத்து மயிர்களை) உதறுகின்றவனும் உடம்பு முழுவதும் கடினமான மயிர்கள் நிறைந்த தோலுடையவனும் குளப்படிகளால் மேகங்களை அடிப்பவனும் வெளுத்த கோரைய்

பற்களுடையவனும் ப்ரகாசிக்கின்ற நேத்ரமுடையவனு கையால் கண்ணோக்கத்தினால் முழுவதையும் விளங்கச் செய்பவனும் பூமியை மேலெடுக்க முயன்றவனுமாகி ப்ர காசித்தான். தான் யஜ்ஞஸ்வரூபனாயினும் தேவ கார்யத் தைப்பற்றி மாயா வராஹ உருவம் பூண்ட பகவான் பசு வைப்போல் க்ராணத்தினால் மோந்து பூமியின் பதவியை த்தேடுகின்றவன்போன்று பயங்கரமான கோரைப் பற்க ளுடையவனாயினும் அழகிய நோக்கம் அமைந்த நேத்ரங் களால் தன்னைத் துதிசெய்கின்ற அந்தணர்களை மேலெ முப் பார்த்து ஜலத்தில் ப்ரவேசித்தான. அங்ஙனம் கபட வராஹ ரூபியான பரமபுருஷனால் உட்புகப்பெற்ற அந்த ஸமுத்ரம், வஜ்ரமயமான பர்வதம்போல் மிகவும் கடின மான பகவானுடைய அங்கம் தன்மேல் விழுந்த வேகத்தி னால் நடுவெல்லாம் கலங்கப்பெற்று வருந்தினாற்போல் சப் தம் செய்வதாகி நீண்ட அலைகளாகிற புஜங்களை நீட்டி 'யஜ்ஞேஶ்வரனே! என்னைப் பாதுகாப்பாயாக. இங்ஙனம் என்னைப் பிளந்து ஹிம்ஸிக்கவேண்டாம' என்று முறை யிட்டதுபோன்றது. மூன்று ஸவனங்களே மூன்று கணுக் களாகப் பெற்றவனும் (முசுப்பின் அருகில் மூன்றுரேகை களை யுடையவனும்) கரையைக் கடந்தவனும் ஸம்ஸாரத் தினின்று கடக்கச் செய்பவனுமாகிய வராஹ ரூபியான பகவான் கரையில்லாமல் நிரம்பியிருக்கிற ஜலம் முழு வதும் முடியும்படி அர்த்த சந்த்ர பாணங்களை நிகர்த் திருக்கின்ற தன் குளம்புகளால ஜலத்தைப் பிளந்து கொண்டு ரஸாதலத்தில் ப்ரவேசித்தான். அங்கு பூமி யைக் கண்டான். இந்தப் பரமபுருஷன் ப்ரளய ஸமயத் தில் அந்த ஜலத்தில் சயனிக்க விரும்பி ப்ராணிகளுக்கெல் லாம் ஆதாரமாகிய எந்த பூமியைத் தனது உதரத்தில் அன்புடன் தரித்தானோ, அத்தகைய பூமிதேவியைய் ரஸா·



560. வராஹரூபியான பகவான் மஹா ஜலத்தினின்று பூமியை மேலுக்கெடுத்தல்.

ஸஞ் செய்யாமல் பாபத்தினால் அழுக்கடைந்த மனமுடையவர் உன்னுருவத்தைக் காண்பாராயினும் ப்ராக்ருத ஜந்துக்களைப்போல் இதுவும் ஒன்றென்றே நினைப்பார்களன்றி 'இது அப்ராக்ருதம்' என்றும் 'சுத்தஸத்வமயம்' என்றும், 'கர்மத்தினால் விளைந்ததல்லாமல்' பகவான் தன் ஸங்கல்பத்தினால் ஏற்றுக்கொண்டது' என்றும் தெரிந்து கொள்ளமாட்டார்கள். நீ யஜ்ஞஸ்வரூபன். ஜகதீஸ்வரா! உன்னுடைய த்வக்கில் காயத்ரி முதலிய சந்தஸ்ஸுக்களும், ரோமங்களில் தர்ப்பங்களும், நேத்ரத்தில் ஆஜ்யமும், பாதங்களில் அத்வர்யு ஹோதா உத்காதா ப்ரஹ்மா என்கிற இந்நால்வர் அனுஷ்டிக்கவேண்டிய கர்மங்களும் திகழ்கின்றன. உனது முகத்தின் நுனியில் ஸ்ருக்கென்கிற யஜ்ஞபாத்ரமும், நாஸிகைகளில் ஸ்ருவமென்கிற யஜ்ஞ பாத்ரமும், உதரத்தில் இடையென்னும் பேருடையதும் ஹவிஸ்ஸை உட்கொள்ள உபயோகப் படுவதுமான யஜ்ஞபாத்ரமும், காதுகளின் ரந்த்ரத்தில் ஸோம பானம் செய்கிற சமஸமென்னும் யஜ்ஞபாத்ரமும், முகத்தில் ப்ராசித்ர மென்கிற ப்ரஹ்ம பாத்ரமும், வாயின் த்வாரத்தில் க்ரஹமென்கிற பாத்ரங்களும் உண்டாயின. பகவானே! அக்னிஹோத்ரமென்னும் கர்மம் ஒன்றுண்டே; அது உன்னுடைய பக்ஷணமாயிற்று. யஜ்ஞங்களில் தீக்ஷாஸம்ஸ்காரமென்றொரு கர்மம் உண்டு. அது யஜ்ஞாரம்பத்தில் யஜமானன் தீக்ஷை பெற்றுக்கொள்ளல். தீக்ஷையென்னும் தேவதையை யஜமானனிடத்தில் ஸ்தாபிக்கையே தீக்ஷா ஸம்ஸ்காரமாம். அது இஷ்டியாலும் க்ஷௌரம் முதலியவற்றாலும் ஸித்திக்கும். தீக்ஷணீயேஷ்டியென்கிற இத்தகைய தீக்ஷையானது அடிக்கடி ஏற்றுக்கொள்கிற உன்னுடைய அவதாரங்களே. ஆஜ்யத்தை ஹவிஸ்ஸாகவுடைய உபஸத்தென்கிற மூன்று யாகங்

கள் உண்டு. இவையே உன் கழுத்து. ப்ராயணீயமென்கிற ஆரம்பேஷ்டியும் உதயனீயமென்கிற அவஸானேஷ்டியும் உன்னுடைய கோரைப்பற்கள். ப்ரவர்க்யம் உன்னுடைய நாக்கு. ஸப்யமென்கிற அக்னியும் ஒளபாஸனாக்னியும் உன்னுடைய சிரஸ்ஸு. இஷ்டகாசயனங்கள் உன்னுடைய ப்ராணன்கள். இங்ஙனம் நீ யஜ்ஞ ஸ்வரூபனாயிருக்கின்றனை. அன்றியும், ஸோமயாகம் உன்னுடைய ரேதஸ்ஸு. ப்ராதஸ்ஸவனம் (விடியற்காலத்தில் நடத்தும் ஹோமம்) முதலியவை உன்னுடைய நிலைமைகள். அக்னிஷ்டோமம் அத்யக்னிஷ்டோமம் உக்த்யம் ஷோடசி வாஜபேயம் அதிராத்ரம் அப்தோர்யாமம் என்கிற இவ்வேழு யாகங்களும் ஸம்ஸ்தையென்னும் பேருடையவை. இவையும் இவற்றின் பிரிவுகளும் உன்னுடைய த்வக்கு(மாம்ஸம்) முதலிய ஸப்த தாதுக்கள். பல யஜமானர்களையுடைய கர்மங்கள் ஸத்ரங்களெனப் படுகின்றன. அவையெல்லாம் உனது சரீரத்தின் ஸந்திகள். யஜமானனுடைய அனுஷ்டானமாகிற இஷ்டியானது உனது சரீரத்தின் மத்ய ப்ரதேசம். இங்ஙனம் ஸோமத்தையுடைய யாகங்களும் ஸோமமில்லாத யாகங்களும் நீயே. யஜ்ஞமென்னும் பேருடைய கர்மங்களெல்லாம் உன்னுடைய ஆராதனங்களே. ஸமஸ்தமான மந்த்ரங்கள் தேவதைகள் த்ரவ்யங்கள் ஆகிய யாகஸாதனங்களெல்லாம் நீயே. நீ ஸமஸ்த யாகஸ்வரூபன். ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்ட தானாதி க்ரியைகளும் நீயே. இங்ஙனம் யஜ்ஞாதி கர்மங்களைப் பரக்கச்சொல்லுகிற வேதத்தின் பூர்வபாகமெல்லாம் உன்னையே கூறுகின்றது. இத்தகைய உனக்கு அடிக்கடி நமஸ்காரம் செய்கின்றோம். சப்தாதி விஷயங்களில் ஆஸக்தியில்லாமையாகிற வைராக்யம், பகவானுடைய சரித்ரங்களைக்கேட்பது, அவற்றை வாயால் பாடுவது நெஞ்சால்

நினைப்பது அவனைப் பூஜிப்பது முதலிய ஆசாரங்களை யுடைய பக்தி, மனத்தை வேறுவிஷயங்களில் செல்லவொட்டாமல் அடக்கி வெல்லுவது ஆகிய இவற்றால் விளையும் ஜ்ஞானத்தினால் அருள்புரியத் தகுந்தவனும் நீயே. இங்ஙனம் பகவானுடைய உண்மையை அறிவதற்கு வேண்டிய உபாயங்களை எடுத்துக் கூறுகிற வேதத்தின் உத்தரபாகமும் உன்னையே கூறுகின்றது. இத்தகைய உனக்கு அடிக்கடி நமஸ்காரம் செய்கின்றோம். வராஹ ராம க்ருஷ்ணாதி அவதாரங்கள் மூலமாய் ந்யாஸ வித்யையை வெளியிட்ட மஹோபகாரகனும் நீயே. வேதத்தினுடைய உத்தரபாகத்தின்பொருளை எடுத்துரைக்கின்ற வராஹாதி புராணங்களாலும் ஸ்ரீராமாயணம் முதலிய இதிஹாஸங்களாலும் கூறப்படுகின்றவன் நீயே. இப்படிப்பட்ட உனக்கு நமஸ்காரம் செய்கின்றோம். வாராய் ஜ்ஞானாதி ஷாட்குண்ய நிதியே! புவிமங்கை நாயகனே! நீ பர்வதங்களோடு கூடின பூமியை உனது கோரையின் நுனியால் தரித்துக்கொண்டிருக்கின்றனை. இங்ஙனம் உன்னால் தரிக்கப்பெற்ற இந்த பூமியானது, ஓர் மத்தகஜம் ஜலத்தில் விளையாடி அதினின்று வெளிப் புறப்பட்டுக் கரையேறும்பொழுது அதன் தந்தத்தினால் தரிக்கப்பெற்றதும் இலைகளோடு கூடினதுமாகிய ஓர் தாமரைக்கொடிபோல் விளங்குகின்றது. வாராய் நாதனே! வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களெல்லாம் அவயவங்களாயிருக்கப்பெற்றதும் கோரையின் நுனியால் தரிக்கப்பட்ட பூமண்டலத்துடன் கூடியதுமாகிய இந்த உன் வராஹ உருவம், அகன்ற கொடுமுடியில் மேகம் படியப்பெற்ற குலபர்வதத்தின் சோபை உண்டாகப் பெற்று விளங்குகின்றது. ஜகதீசா! ஸ்தாவரங்களையும் ஜங்கமங்களையும் நிலைப்படுத்தும் பொருட்டு, உன் பத்னியும் உலகங்களுக்கு மாதாவுமா

இந்த பூதேவியை ஸ்தாபிதஞ் செய்வாயாக. லோகங் களுக்கெல்லாம் பிதாவும் பாதுகாப்பவனும் நீயே. ஆகை யால் நாங்கள் அந்த பூமியில் இருந்துகொண்டு பிதாவா கிய உனக்கும் மாதாவாகிய பூமிதேவிக்கும் நமஸ்காரத் தினால் சுச்ரூஷை செய்வோமாக. யாகம் செய்யும் ப்ரா ஹ்மணர்கள் மந்த்ரத்தினால் அக்னியை அரணிக்கட்டை யில் ஸ்தாபிப்பதுபோல், உன்னுடைய தாரண சக்தியை இந்த பூமியில் ஸ்தாபித்தனை. ப்ரபோ! ப்ராக்ருதனாகிய மற்ற எந்தப் புருஷன்தான் ரஸாதலத்தில் சேர்ந்த பூமி யை நீ மேலுக்கெடுத்த இந்தக் கார்யத்தை [1] இதமித்த மென்று சிந்திக்க முயற்சிகொள்வான்? மிகவும் ஆச்சர் யமாயிருக்கின்றமையால் இதை எவனும் வாயாற்சொல்ல வல்லனாகமாட்டான். உன்னிடத்தில் இது ஓர் ஆச்சர்யம் அன்று. ஏனென்னில் ஸமஸ்த ஆச்சர்யங்களுக்கும் நீ இருப்பிடம். இத்தகைய நீ உன்னுடைய மாயையால் மிக வும் ஆச்சர்யமான இந்த ஜகத்தையெல்லாம் ஸ்ருஷ்டித் தனை. இந்த ஜகத்தின் ஸந்நிவேசம் பலவாறாயிருக்கின் றது. ஒவ்வொன்றும் இன்னது இனியதென்று சிந்திக்க முடியாதிருக்கின்றது. இப்படிப்பட்ட ஜகத்தை ஸ்ருஷ் டித்த நீ இந்த பூமியை எடுத்தது ஒரு ஆச்சர்யம் அன்று. வாராய் ஜகதீசனே! வேதமயமான சரீரத்தை உதறுகின்ற நீ உன் ஸடைகளின் (கழுத்து மயிர்களின்) நுனிகளால் மேல் கிளப்பப்பட்ட பரிசுத்தமான நீர்த்திவலைகளால் அலம்பப்பெற்று ஜனலோகம் தபோலோகம் ஸத்யலோ கம் ஆகிய இவற்றில் வஸிக்கின்றவராகிய நாங்கள் அனை வரும் பரிசுத்தர்களானோம். எங்கள் ப்ரயோஜனங்க ளெல்லாம் ஈடேறின. ஆகவே, நாங்கள் க்ருதார்த்தர்களா னோம். ஜகத் ஸ்ருஷ்டி முதலிய உன் வ்யாபாரங்களுக்கு

[1] இன்னது இனியதென்று.

முடிவே இல்லை. அத்தகையனான உன் செயல்களின் எல்லையை எவன் அறியவிரும்புகிறானோ, அவன் மதி கேடனென்றே நினைக்கவேண்டும். ஆ! அப்படியும் ஒருவன் விரும்புவானோ? ஸ்வாமீ! ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனே! ஆச்சர்யமான ஜகத்ஸ்ருஷ்டியை நடத்துகின்ற உனது யோகமாயையென்னும் சக்தியின் குணங்களாகிய ஸத்வாதிகளின் ஸம்பந்தத்தினால் ஜகத்து முழுவதும் மோஹித்துக் கிடக்கின்றது. இதை ஸுகித்திருக்கச் செய்வாயாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—ஸகல ஜகத் ரக்ஷகனான பகவான் இங்ஙனம் வேதவாக்யங்களோடொத்த வாக்யங்களைச் சொல்கின்ற மரீசிமுதலிய மஹர்ஷிகளால் அருகில் நின்று ஸ்தோத்ரம் செய்யப்பெற்றவனாகித் தன் குளம்பில் அடங்கிக் கிடக்கிற ஜலத்தின்மேல் பூமியை ஸ்தாபித்தான். ப்ரஜைகளைப் பாதுகாப்பவனும் ஷாட்குண்ய பரிபூர்ணனும் விஷ்வக்ஸேனனென்று பேர்பெற்றவனுமாகிய அந்த வராஹபகவான் அவலீலையாக ரஸாதலத்தினின்று தான் மேலுக்கெடுத்த பூமியை அந்த மஹா ஜலத்தின்மேல் நிலைநிற்கச்செய்து மறைந்தான். இந்த பகவானுடைய ஆச்சர்ய சக்திகளை எவ்வளவு சொல்லினும் த்ருப்தி உண்டாகாது. இவனை நெஞ்சால் நினைத்த மாத்ரத்தில், நினைத்தவனுடைய ஸம்ஸார துக்கங்களெல்லாம் தாமே பறந்தோடும். அப்படிப்பட்ட பகவான் வராஹாவதாரம்செய்த இந்த வ்ருத்தாந்தம் மிகவும் மங்களகரமாயிருக்கும். அன்றியும், அனைவரும் கேட்க ஆசைப்படத்தகுந்ததும் பரிசுத்தமுமாயிருக்கும். இவ்வண்ணம் மொழியப்பெற்ற இந்த வராஹாவதார வ்ருத்தாந்தத்தை எவன் கேட்பானோ, அல்லது எவன் பிறரைக் கேட்கச்செய்வானோ, அவனுடைய நெஞ்சில்

ஜனார்த்தனன் சீக்ரத்தில் அருள்புரிந்து நிற்பான். ஸமஸ்த புருஷார்த்தங்களையும் கொடுக்கவல்லனாகிய அந்த மஹானுபாவன் அருள்புரிவானாயின், மனிதனுக்குப் பெறக்கூடாதது எதுவுமே இல்லை. ஆயினும் அல்பங்களாகிய மற்ற புருஷார்த்தங்களால் என்ன உபயோகம்? ஆகையால் அவன் அவற்றை விரும்பலாகாது. 'ஆனால் பகவானைப் பணிவது நிஷ்ப்ரயோஜனமே' என்னலாகாது. 'இவன் நம்மைச் சரீரமாகக்கொண்டு நமக்கு அந்தராத்மாவாயிருப்பவன். இங்ஙனமே இவன் ஸமஸ்த லோகங்களையும் சரீரமாகக்கொண்டு அவற்றிற்கெல்லாம் அந்தராத்மாவாயிருப்பவன்' என்னும் புத்தியுடன் அவனை எவர் பணிவார்களோ, அவர்களுக்கு அவரது ஹ்ருதய குஹையில் வாஸஞ்செய்கின்ற அந்தப் பரமபுருஷன் சிறந்த புருஷார்த்தமாகிற தன் ப்ராப்தியைத் தானே ஈடேற்றிக் கொடுப்பான். இவ்வுலகில் பிறந்தவர்க்கு பகவானைப் பெறுகையே மேலான புருஷார்த்தமாம். அது மற்ற எவ்வகை உபாயங்களாலும் ஸாதிக்க முடியாது. அவன் இரக்கினால் தான் அவனைப் பெறமுடியும். அப்படிப்பட்ட பரமபுருஷார்த்தத்தை இந்த வராஹோபாக்யானம் கேட்பவர் அனாயாஸமாகப் பெறுவார்கள். தர்ம அர்த்த காம மோக்ஷங்களென்கிற புருஷார்த்தங்களின் ஸாரத்தை அறிந்தவன் பூர்வ வ்ருத்தாந்தங்கள் பலவற்றினிடையில் ஸம்ஸார துக்கத்தைப் போக்குவதாகிய பகவானுடைய கதையாகிற அம்ருதத்தைக் காதுகளாகிற அஞ்சலிகளால் நிரம்பவும் பானஞ்செய்து பசுவைத் தவிர எவன் தான் ப்ரீதி உண்டாகப் பெறாதிருப்பான்? நல்லதென்றும் தீயதென்றும் கண்டறியும் விவேகமற்ற பசுவைத் தவிர மற்ற மனிதராகப் பிறந்தவர் அனைவரும் ப்ரீதி உண்டாகப் பெறுவார்கள். ஆ! பகவானுடைய சரித்ரம் இவ்வாறு

மிகவும் ஆச்சர்யமாயிருக்கும். பதின்மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

(விதுரர், பகவான் வராஹாவதாரம்செய்து ஹிரண்யாக்ஷனைக் கொன்றதற்குக் காரணம் வினவுதலும், மைத்ரேயர் அதற்குக் காரணம் சொல்லத் தொடங்கி திதிக்கு ஸந்த்யாகாலத்தில் கஶ்யபரிடத்தினின்று கர்ப்பம் உண்டானதைக் கூறுதலும்.)

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—விதுரன் பகவானுடைய கதைகளையே கேட்கவேண்டுமென்றும், மற்றவை எவையும் செவியிற் படலாகாதென்றும் கடுநியம முடையவன். ஆகையால் அவன் பகவானுடைய கதைகளை எவ்வளவு கேட்பினும் த்ருப்தி உண்டாகப் பெறுந்தன்மையனல்லன். அவ்விதுரன் பூமியை உத்தரிக்கையாகிற காரணத்தைப் பற்றி வராஹ உருவங்கொண்ட பகவானுடைய சரித்ரத்தை மைத்ரேய முனிவர் மொழியக்கேட்டும், அது சுருக்கமாயிருந்தமையால் அவ்வளவில் த்ருப்தி உண்டாகப் பெறுதவனாகிக் கைகளைக் குவித்துக்கொண்டு அம் மைத்ரேய முனிவரைப் பார்த்து வினவினான்.

விதுரன் சொல்லுகிறான்:—முனிவர்களில் தலைவரான மைத்ரேயரே! எவன் பூமியை எடுத்தானோ, அந்த யஜ்ஞஸ்வரூபனாகிய ஆதிவாராஹ மூர்த்தியே தைத்யர்களில் முதல்வனாகிய ஹிரண்யாக்ஷனை வதித்தானென்று நீரே சொல்லக் கேட்டோம். தன் கோரைப் பற்களின் நுனியால் அவலீலையாக பூமியை மேலுக்கெடுக்கின்ற அந்த ஆதிவராஹ மூர்த்திக்கும் தைத்யராஜனாகிய ஹிரண்யாக்ஷனுக்கும் எந்தக் காரணத்தைப்பற்றி யுத்தம் நேரிட்டது?

மைத்ரேயர் சொல்லுகிறார்:—வீரனே! நீ நன்றாக வினவினாய்? உன் கேள்வியைப் பற்றி நான் மிகவும் மகிழ்

தோஷப்படுகின்றேன். ஏனென்னில், மரணஸ்வபாவரான மானிடவர்களுடைய ம்ருத்யு பாசத்தை அறுக்குந் திறமை யுடையதான ஸ்ரீ ஹரியின் அவதார கதையைப்பற்றி வினவினையல்லவா? மனிதர்கள் பிறந்தும் செத்தும் நின்றிடருந்தன்மையராயிருப்பவர். இவர்களுக்கு இந்த ஸம்ஸாரமே ம்ருத்யு. இது பாசம்போல் இவர்களை எல்லாவிதத்திலும் பந்தனஞ் செய்கின்றது. இதை அறுத்துக்கொண்டு மீளுவதற்கு மற்றொரு உபாயம் எதுவும் இல்லை. பகவானுடைய அவதார கதைகளைக் கேட்பார்களாயின், அந்த ஸம்ஸாரம் தானே அறுந்துபோம். ஆகையால் நீ பகவானுடைய அவதாரத்தைப் பற்றிக் கேட்ட கேள்வி மானிடவர்க்கு மிகவும் நன்மைக்கிடமாகையால் நான் அதற்கு ஸந்தோஷப்படுகின்றேன். உத்தானபாதனுடைய புத்ரனாகிய த்ருவன் பாலனாயிருந்தே, நாரதமுனிவர் பாடின பகவானுடைய கதையைக் கேட்டு ம்ருத்யுவின் தலையில் அடியிட்டு (ம்ருத்யுவைப் பொருள் செய்யாமல் வென்று) பகவானுடைய ஸ்தானத்தை அடைந்தான். இப்படிப்பட்ட வைபவமுடைய பகவத் கதையைப் பற்றி நீ வினவினையாகையால் அது மிகவும் நன்மைக்கிடமாயிருக்குமென்பதைப்பற்றி ஸந்தோஷிக்கின்றேன். வாராய் விதுரனே! நீ வினவின ஹிரண்யாக்ஷனுடைய உற்பத்தி முதலிய வ்ருத்தாந்தத்தைக் கூறுகின்றேன், கேட்பாயாக. இவ்விஷயத்தில் முன்பு நான் இங்ஙனம் ஓர் இதிஹாஸம் கேட்டிருக்கின்றேன். தேவர்க்கும் தேவனாகிய நான்முகனைத் தேவதைகள் வினவும்போது இந்தக் கதையை அவன் அவர்கட்கு மொழிந்தான். அதை நான் பரம்பரையாகக் கேட்டேன். வாராய் விதுரனே! தக்ஷப்ரஜாபதியின் புதல்வியாகிய திதியென்பவள் தனக்கு ஸந்தானம் உண்டாகவேண்டு

மென்று விருப்ப முற்றவளாகிக் காமவிகாரத்தினால் பீடிக்கப்பட்டு ஸந்த்யாகாலத்தில் தன் பர்த்தாவும் மரீசியின் புத்ரருமாகிய காஶ்யபமுனிவரைப் பார்த்துப் புணர விரும்பினாள். காஶ்யபர் முனிவர்களில் சிறந்தவர். திதியும் மிக்க தவமுடையவள். இப்படிப்பட்ட விவேக முடையவள் அம்முனிவரைப் பார்த்து அகாலமான ஸந்த்யா ஸமயத்தில் புணரவிரும்பினாளாயின் இனி மற்றவரைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஆ! என்ன ஆச்சர்யம்? காமத்திற்குக் கண் கிடையாது. எப்படிப்பட்ட விவேகிகளுடைய விவேகத்தையும் அது அழித்துவிடும். அப்பொழுது அந்தக் காஶ்யப மஹர்ஷி யஜ்ஞங்களுக்கு ப்ரபுவும் (யஜ்ஞங்களால் ஆராதிக்கப் படுகின்றவனும்) அக்னியைச் சரீரமாக வுடையவனு மாகிய பரமபுருஷனை ஸூர்யன் அஸ்தமிக்கும் ஸமயத்தில் ஹோமங்களால் ஆராதித்து அக்னிஹோத்ர க்ருஹத்தில் உட்கார்ந்து பரப்ரஹ்ம த்யானத்தில் மனதூக்கமுற்றிருந்தார். அத்தகையரான அம்மஹர்ஷியைக்கிட்டி திதி மன்மத விகாரத்தினால் மதிமயங்கப்பெற்று இங்ஙனம் மொழிந்தாள்.

திதி சொல்லுகிறாள்:—வாரீர் வித்வானே! (எல்லா முணர்ந்தவரே!) இந்த மன்மதன், கையில் தனுஸ்ஸை எடுத்துக்கொண்டு தன் பராக்ரமங்களையெல்லாம் காட்டி, வாழைமரத்தை ஓர் மத்தகஜம் பீடிப்பதுபோல், உமது நிமித்தமாக தீனையாயிருக்கின்ற என்னை வருத்துகின்றான். அன்றியும், என் சக்களத்திகள் அனைவரும் சிறந்த புதல்வர்களைப் பெற்று வாழ்வதைக்கண்டு அவர்களுடைய ஸம்ருத்திகளால் நான் மனம் பரிதபிக்கப் பெற்றிருக்கின்றேன். ஆகையால் இப்படிப்பட்ட என் விஷயத்தில் அனுக்ரஹம் செய்யவேண்டும். உமக்கு க்ஷேமம் உண்டாகுக. பர்த்தாவிடத்தில் மிக்க வெகுமானம்

பெற்ற மடந்தையர்களின் புகழ் எல்லா வுலகங்களிலும் நிரம்பி நிற்கும். பர்த்தாவினிடத்தில் பெறும் வெகுமதி யாவதென்னென்னில், சொல்லுகிறேன். உம்மைப்போன்ற கணவன் மடந்தையரிடத்தில் ப்ராஜாரூபமாய்ப் பிறப்பானாயின் (உம்மைப்போன்ற கணவனிடத்தினின்று மடந்தையர் புதல்வரைப் பெறுவார்களாயின்) அவர்கட்கு அதுவே சிறந்த வெகுமதியாம். அவரது புகழ் ஸமஸ்த லோகங்களிலும் நிறைந்து நிற்கும். மற்றும், பெண்களிடத்தில் வாஞ்சையுடைய எங்கள் பிதாவான தக்ஷப்ரஜாபதியானவர் முற்காலத்தில் எங்களைத் தனித்தனியே விசாரிக்கத் தொடங்கி 'குழந்தாய்! நீ எந்த மணவாளனை மணம்புரியப் போகின்றாய்?' என்று வினவினார். ஸந்தானத்தை வளரச்செய்யுந்தன்மையுள்ள அந்த தக்ஷப்ரஜாபதி தன் புத்ரிகளாகிய எமது அபிப்ராயத்தை அறிந்து அந்தப் பெண்களில் எவர்கள் உம்முடைய ஸ்வபாவத்தை விரும்பியிருந்தார்களோ, அந்தப் பதின்மூன்று பெண்களையும் உமக்குக் கொடுத்தார். நாங்கள் பதின்மூவரும் உம்மிடம் அபிப்ராயம் ஒத்திருப்பினும், நீர் வைஷம்யத்தை (பக்ஷபாதத்தை) ஆசரிப்பது யுக்தமன்று. ஆகையால், வாரீர் காஸ்யபமஹர்ஷீ! மங்களஸ்வபாவமுடையவரே! எனது விருப்பத்தை நிறைவேற்றுவீராக. தாமரையிதழ்போன்ற கண்களை யுடையவரே! மிகுந்த மஹிமை அமைந்தவரே! மஹாநுபாவனான ஓர் புருஷனிடத்தில் வருத்தமுற்றவர் எவரேனும் அடுத்து வருவார்களாயின், அவர்கள் அங்ஙனம் அடுத்து வருவது வீணாகாதல்லவா? ஆகையால் மஹாநுபாவராகிய உம்மை மன வருத்தத்துடன் அடுத்திருக்கின்ற அடியாளுடைய விருப்பத்தை நீர் அவஸ்யம் நிறைவேற்றவேண்டும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் வீரனாகிய

மாத்ரமேயன்றி மோக்ஷ புருஷார்த்தமும [illegible] மாகவே ஸித்திக்கப் பெறுவான். பரலோக [illegible] விரும்பும் புருஷனுடைய பத்னியைச் சரீரத்தின் பாதி யென்று ஸ்ருதிகள் சொல்லுகின்றன. ஸ்வர்க்கத்தையும் அபவர்க்கத்தையும் (மோக்ஷத்தையும்) ஸாதிக்கவல்ல வைகளான தர்மங்களில் ஸ்த்ரீ, புருஷர்கள் இருவர்க்கும் சேர்ந்தே அதிகாரம் உள்ளது. பத்னியில்லாதவனுக்கு அந்தக் கார்யங்களில் அதிகாரமில்லை. பத்னியிடத்தில் இஹபரலோக பாரங்களை வைத்துப் புருஷன் மனக்கவலை தீர்ந்து கரையேறுவான். நாங்கள் பத்னியைக்கொண்டு, மற்றை ஆஸ்ரமஸ்தர்களால் ஜயிக்க முடியாத இந்த்ரியங்களாகிற சத்ருக்களை அவலீலையாக வெல்லுவோம். துர்க்கத்திலிருப்பவன் திருடன் முதலிய துஷ்ட ஜீவன்களை எப்படி அனாயாஸமாக ஜயிப்பானோ, அப்படியே க்ருஹஸ்தாஸ்ரமத்திலிருப்பவர் இந்த்ரியங்களை அனாயாஸமாக ஜயிப்பார்கள். ப்ரஹ்மசாரி ஸந்யாஸி வானப்ரஸ்தன் ஆகிய இம்மூன்று ஆஸ்ரமஸ்தர்களும் சப்தாதி விஷயங்களில் மனம் செல்லப்பெறுவார்களாயின் அதோகதியைப் பெறுவார்கள். அவர்க்கு அது கூடாதென்று சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்டிருக்கிறதாகையால் தோஷத்தை விளைக்கும். க்ருஹஸ்தனுக்கு சப்தாதி விஷயானுபவத்தைச் சாஸ்த்ரங்கள் தோஷமென்று சொல்லவில்லையாகையால் அவனுக்கு அது அதோகதியை [illegible] கொடாது. க்ருஹஸ்தனும் சாஸ்த்ரங்களில் [illegible]க்கு நிஷேதிக்கப் பட்ட சப்தாதி விஷயங்களில் முயற்சி கொள்வானாயின், அதோகதியைப் பெறுவானென்பதில் ஸந்தேஹமில்லை. சாஸ்த்ரங்கள் அனுமதி [illegible]ங்களை அனுபவிப்பதில் யாதொரு [illegible] ஆகையால் க்ருஹஸ்தன் இந்த்ரி

ஜனங்களை விரும்புகின்றவனுக்கல்லவோ தன்னுடையவ னென்றும் பிறனென்றும் பேதபுத்தி உண்டாகும். இவனோ வென்றால் எல்லோரையும் ஸமமாகப் பார்க்குந் தன்மை யன். ஸாம்ஸாரிக லோகங்களையும் ஸம்ஸாரத்திலுள்ள அதிசயங்களையும் எதிர்பார்க்கின்றவனல்லன். ஆகை யால் இவனுக்குத் தன்னுடையவனென்றும் பிறனென் றும் பேதம் பாராட்டுந்தன்மை கிடையாது. ஸம்ஸாரத் தில் கால் தாழ்ந்த நாம் இம்மஹானுபாவன் பாதங்களால் உதைத்து தூரத்தில் துறந்ததும் அவனால் போகங்களெல் லாம் அநுபவிக்கப் பெற்றதுமாகிய மாயையை (மாயை யெனப்படுகிற ப்ரக்ருதியின் பரிணாமமாகிய இந்த ப்ரபஞ்ச த்தை) நானாவித ஐஶ்வர்யங்களை ஸாதித்துக்கொடுப்பவை யாகிய வ்ரதங்களை அனுஷ்டித்து ப்ரார்த்திக்கின்றனம். 'இவன் ஶ்மஶானங்களில் திரிகின்றவன்; ஆனதுபற்றியே அபரிசுத்தஸ்வபாவன். இத்தகையனான இவனிடத்தி னின்று என்னென்று சங்கிக்கின்றாய்' என்கிறாயோ? ஜ்ஞானத்தை மறைப்பதாகிய அவித்யையின் ஆவரணத் தைப் பேதிக்கவேண்டுமென்று விரும்பும் பண்டிதர்கள் இந்த ருத்ரனுடைய சரித்ரத்தை நிர்த்துஷ்டமென்று புகழ்கின்றார்கள் ஜ்ஞானத்தை விரும்புகிறவர்கள் சிலர் இவனை உபாஸிக்கின்றார்கள். ஆகையால் பிசாசு போல் ஶ்மசானங்களில் திரிகின்றானென்று இவனைப் பழிக்கலாகாது. 'ஆனால் அவன் ஏன் பிசாசுபோல் ஶ்ம ஶானங்களில் திரிகின்றான்?' என்னில், தனக்கு நிகரா னவனும் மேற்பட்டவனு மில்லாதபடி மிகவும் சிறப்புற்ற வனாயினும், ஜ்ஞானத்தை விரும்பும் ஸத்புருஷர்களுக்கு ஜ்ஞானத்தை விளக்கும் உபாயமாகி ஜ்ஞானம் பெறவிரு ம்பித் தன்னை உபாஸிக்கின்றவரும் இங்ஙனமே இருக்க வேண்டுமென்று அவர்களைப் பயிற்றுவிக்கும் பொருட்டும்

பிசாசங்களின் ஆசாரத்தை அனுஷ்டித்து வருகின்றான். அன்றியும் சொல்லுகின்றேன், கேட்பாயாக. இவன் தன்னைத் தான் அனுபவிப்பதில் ஊக்கமுற்றிருப்பான். இவனுடைய நடத்தையை அறியாதவர் இவனுடைய ஆசாரத்தை நிந்திக்கின்றார்கள். அவர்கள் பாக்யமற்றவர்களே. அங்ஙனம் நிந்திப்பவர் யாரென்னில், சொல்லுகின்றேன். எவர், நாய்முதலிய ஜந்துக்கள் புஜிக்கும்படியான சரீரத்தையே ஆத்மாவென்று ப்ரமித்து, அதை ஆடைகளாலும் பூமாலைகளாலும் ஆபரணங்களாலும் கஸ்தூரி குங்குமம் சந்தனம் முதலிய பூச்சுக்களாலும் அலங்கரிக்கின்றார்களோ, அவர்களே (அந்த தேஹாத்மாபிமானிகளே) இம்மஹானுபாவனுடைய ஆசாரத்தைப் பரிஹஸிக்கின்றார்கள். அவர்கள் பாக்யமற்றவரென்பதில் ஸந்தேஹமுண்டோ? ப்ரஹ்மதேவன் முதலியவர்களும் இந்த ருத்ரனால் ஏற்படுத்தப்பட்ட தர்ம மர்யாதைகளைப் பாதுகாத்து வருகின்றார்கள். ஜகத்தெல்லாம் இந்த ருத்ரனையே காரணமாகவுடையது. மாயையெனப்படுகிற ப்ரக்ருதியானது இவனுடைய ஆஜ்ஞைப்படி நடக்கின்றது. எல்லையில்லாத மஹிமைகள் அமைந்த இம்மஹானுபாவன் பிசாசங்களைப் போல் ஸ்மசானங்களில் ஸஞ்சரிப்பது அனுகாரணமே. இவனுக்கு அது இயற்கையில் ஏற்பட்டதன்று; லீலைக்காக ஏறிட்டுக்கொண்டதே. பிசாசங்களைப் போல் நாம் ஸ்மசானங்களில் ஸஞ்சரிக்க வேண்டுமென்னும் விருப்பத்தினால் அவற்றின் ஆசாரத்தைத் தொடர்ந்து நடக்கின்றானன்றி வேறில்லை. இங்ஙனம் மஹிமைகள் அமைந்த இம்மஹா புருஷன் பிசாசங்களின் ஆசாரத்தைப் பின்செல்வது ஆச்சர்யமே.

மைத்ரேயர் சொல்லுகின்றார்:—இங்ஙனம் பர்த்தாவான காஸ்யபர் தெரிவிக்கையில், மன்மத விகாரத்தி

ஞல் இந்த்ரியங்களெல்லாம் கலங்கப்பெற்ற அந்த திதி ஓர் விலை மாது போல் வெட்கமற்றவளாகி ப்ரஹ்மர்ஷியாகிய அந்தக் காஸ்யபருடைய வஸ்த்ரத்தைப் பிடித்து இழுத்தாள். அந்தக் காஸ்யபர் ஸந்த்யாகாலத்தில் செய்யலாகாதென்று ஶாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றமையால் அப்பொழுதைக்கு விபரீதமாகிய கார்யத்தில் தன் பார்யையாகிய திதி செய்யும் நிர்ப்பந்தத்தைக் கண்டு தெய்வரூபனுகிய ஈஶ்வரனுக்கு நமஸ்காரஞ் செய்து அந்த திதியுடன் ஏகாந்தத்தில் கலந்திருந்தார். ஆ! என்ன ஆச்சர்யம்? அப்பால் அம்மஹர்ஷி ஜலத்தில் ஸ்நானம் செய்து ப்ராணயாமம் பண்ணி மௌனவ்ரதத்துடன் விகாரங்களற்றவனும் ஜ்ஞான ஸ்வரூபனும் என்றும் அழியாதிருப்பவனுமாகிய பரப்ரஹ்ம மென்னும் பரமபுருஷனை த்யானித்துக்கொண்டு ப்ரணவத்தை ஜபித்தார். வாராய விதுரனே! பிறகு திதி தான செய்த கெட்டகார்யத்தின் தோஷத்தை நினைத்து வெட்கமுற்று அம்மஹர்ஷியின அருகாமையில் வந்து தலை வணங்கப் பெற்றவளாகி ப்ரஹ்மர்ஷியாகிய அந்தக் காஶ்யபரைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தாள்.

திதி சொல்லுகிருள்:—வாரீர் ப்ராஹ்மணோத்தமரே! காஶ்யப மஹர்ஷீ! பூதங்களுக்கு நாதனுகிய ருத்ரன் என்னுடைய இந்த கர்ப்பத்தைப் பாழ் செய்யாதிருப்பானுக. அவன் பூதங்களுக்கு நாதனென்றீர். அவன் விஷயத்தில் நான் அபராதஞ் செய்தேன். ஆகையால் அவன் என் கர்ப்பத்தைப் பாழ் செய்யக்கூடும். அப்படி நேராதிருக்கும் படி நீர் அருள்புரிய வேண்டும். தேவர்களில் மேன்மை பெற்றவனும் மஹாதேவனென்று பேர் பெற்றவனும் உக்ர ஸ்வரூபனுமாகிய ருத்ரனுக்கு நமஸ்காரம். இவன் [illegible]ணிகளுடைய விருப்பங்களைப் பெய்

யுந் தன்மையனல்லவா? ஒருபலனையும் விரும்பாமல் தன்னைப் பற்றுவோரிடத்தில் மங்களஸ்வபாவனு யிருப்பவன். இயற்கையில் எவர்க்கும் தண்டனை செய்பவனல்லன். அபராதஞ் செய்து கோபத்திற்கிடமானவரிடத்தில் தண்டனை செய்யும் ஸ்வபாவன்; ஸம்ஹார காலத்தில் கோப ஸ்வரூபனுயிருப்பவன். இத்தகையனுன இந்த ருத்ரனுக்கு நமஸ்காரம் செய்கின்றேன். என் உடன் பிறந்தவளது பர்த்தாவும் மிகுந்த அனுக்ரஹமுடையவனும் பார்வதியின் பதியும் பகவானுமாகிய அந்த ருத்ரன், தயையென்பது சிறிது மில்லாத வேடர்களாலும் தயை செய்யத்தகுந்த ஸ்த்ரீகளாகிய எமது விஷயத்தில் அருள் புரிவானுக.

மைத்ரேயர் சொல்லுகிருர்:—அந்தக் காஸ்யப ப்ரஜாபதி ஸந்த்யாகாலத்திற் செய்யவேண்டிய நியமமெல்லாம் முடிந்த பின்பு, தன் கர்ப்பத்திற்குத் தான் தேட வேண்டிய க்ஷேமத்தை ப்ரார்த்திக்கின்றவளும் பயத்தினுல் நடுக்க முற்றவளுமாகிய பார்யையைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்.

காஸ்யபர் சொல்லுகிருர்:—மங்களஸ்வபாவ முடையவளே! உன் புத்தி சுத்தியற்றிருந்தமையாலும், ஸந்த்யாமுஹூர்த்தத்தில் செய்யக் கூடாத கார்யத்தைச் செய்த தோஷத்தினுலும், அன்றியும் எனது ஆஜ்ஞையைக் கடந்தமையாலும், ருத்ரன் முதலிய தேவதைகளை அவமதித்தமையாலும் உனக்கு இரண்டு புத்ராதமர்கள் (உபயோகமற்ற பிள்ளைகள்) பிறக்கப் போகின்றுர்கள். அவ்விருவரும் உலகங்களுக்கு அமங்களத்தைச் செய்பவராயிருப்பார்கள். அவர்கள் பெருங் கோபாவேச முற்றவராகி லோகபாலர்களோடு கூடின மூன்று லோகங்களையும் அடிக்கடி அழப்படுத்திக் கொண்டிருப்

யவர்கள். ஒரு அபராதம் செய்யாமல் தயைசெய்யத் தகுந்தவைகளான ப்ராணிகளையெல்லாம் வதிப்பதும், ஸ்த்ரீகளைப் பறித்துக் கொண்டு வந்து சிறையில் அடைப்பதும், மஹானுபாவர்களான பெரியோர்களுக்குக் கோபம் வரும்படி செய்வதுமே தொழிலாயிருப்பார்கள். இப்படி இருக்கும் தருணத்தில், உலகங்களுக் கெல்லாம் ப்ரபுவும் அவற்றிற்கு ஸுகத்தை விளைப்பவனுமாகிய பகவான், அப்பொழுது கோபாவேசமுற்று, வராஹமாகவும் நரஸிம்ஹனாகவும் அவதாரஞ் செய்து, பர்வதங்களை வஜ்ராயுதம் பிடித்த தேவேந்த்ரன் பிளப்பது போல் யுத்தத்தில் வதிக்கப் போகின்றான்.

திதி சொல்லுகிறாள்:—ப்ரபூ! எல்லாவற்றையும் அறியுந் திறமை யுடையவரே! சக்ராயுதத்தினால் அழகிய புஜத்தை யுடைய பகவான் தானே நேரில் என்புத்ரர்களை வதிப்பானாயின், அதை நான் ஸம்மதிக்கின்றேன். ஆனால் கோபமுற்ற ப்ராஹ்மணன் மூலமாய் வதம் நேருமாயின், அது எனக்கு ஸம்மதமன்று. அதை நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். 'பெரியோர்களுக்குக் கோபத்தை விளைவிப்பார்கள் உன் புதல்வர்கள்' என்று மொழிந்தீர். அதனால் 'ப்ராஹ்மணர் கோபித்து எங்கு வதித்து விடுகின்றார்களோ' என்று பயந்தேன்; பரமபுருஷன் நேரே வதிப்பானாயின், அது எனக்கு ஸம்மதமே. 'பெண்ணே! ப்ராஹ்மணனிடத்தினின்றாவது மற்ற எவனிடத்தினின்றாவது வதம் நேரட்டுமே. அதில் நீ என்ன விசேஷத்தைக் கண்டாய்' என்கிறீரோ? சொல்லுகிறேன். ப்ராஹ்மணசாபத்தினால் அடியுண்டவன் விஷயத்திலும் ப்ராணிகளுக்கெல்லாம் பயத்தை விளைக்கின்றவன் விஷயத்திலும் 'உலகத்திலுள்ளவன் எவனுக்கும் நம்மால் துக்கம் நேரவேண்டாம்' என்று நினைக்குந் தன்மையுள்ள நரக

வாஸியான ஜந்துக்களும் அனுக்ரஹம் செய்யமாட்டா. கீழ்ச் சொன்ன இரண்டுபேர் விஷயத்திலும் நரகவாஸிகளும் மனஇரக்கம் உண்டாகப் பெறமாட்டார்கள். ஆகை யால் ப்ராஹ்மணசாபத்தினுல் மாண்டவரும் ஸமஸ்தலோகங்களுக்கும் பயம் விளைப்பவரும் மஹாபாபிஷ்டர்கள். அன்றியும், இவர்கள் எந்தெந்த ஜாதியில் பிறக்கின்ருர்களோ, அந்தந்த ஜாதியிலுள்ள இனத்தார்களும் இவரிடத்தில் மனஇரக்கங் கொள்ளமாட்டார்கள். ஆகையால் ப்ராஹ்மணசாபத்தினுல் நேரும் மரணத்திற்கு நான் பயப்படுகின்றேன். அது அவர்களுக்கு நேராதிருக்கும் படி அருள்புரியவேண்டும். சக்ராயும் தரித்த பரமபுருஷன் தானே வதிப்பாளுயின், அது எனக்கு ஸம்மதமே.

காஸ்யபர் சொல்லுகிருர் :—மங்கையர் மணியே! நீ, தான் செய்த அபராதத்தைப்பற்றி அனுதாபப்படுகையாலும், உடனே யுக்தாயுக்தங்களைப்பற்றி விசாரித்தமையாலும் பரமபுருஷனிடத்தில் வெகுமதி உண்டாயிருப்பதினுலும் ருத்ரனிடத்திலும் என்னிடத்திலும் ஆதாவோடிருக்கின்றமையாலும், உன் புதல்வர்களிருவரில் ஒருவனுகிய ஹிரண்யகசிபுவுக்கு ஸத்புருஷர்களால் புகழத்தக்க ஓர் புதல்வன் உண்டாவான். அவன் ப்ரஹ்லாதனென்னும் பேர் பெறுவான். இந்த உன்பேரனுடைய புகழைப் பகவானுடைய புகழோடொக்கப் பாடுவார்கள். அன்றியும், உன் பேரனுடைய ஸ்வபாவத்தை அனுஸரிப்பதற்காக ஸத்புருஷர்கள், கட்டைமாற்றுன பொன்னை யவக்ஷாரம் முதலியவற்றைச் சேர்த்து அக்னியில் புடமிடுவது முதலிய உபாயங்களால் சுத்திசெய்வதுபோல், தமது மனத்தை நிர்வைரத்வம் (வைரமற்றிருக்கை) முதலிய குணங்களால் ஸ்வாதீனப்படுத்த முயற்சிகொள்வார்கள். 'நாம் இவனைப்போல் நிஷ்டையை பெறவேண்டும்'

என்று ஸத்புருஷர்களும் ஆசைப்பட்டு அனுஸரிக்கும்படி உன் பேரன் அழகிய சீலமுடையவனாயிருப்பான். மற்றும், எந்த பகவானுடைய அனுக்ரஹத்தினால் இந்த ஜகத்தெல்லாம் அருள்புரியுமோ, இந்த ஜகத்தெல்லாம் எந்த பகவானுடைய ஸ்வரூபமாயிருக்கின்றதோ, எவன் மற்றொரு கருவியையும் எதிர்பாராமல் தானே எல்லாவற்றையும் ஸாக்ஷாத்கரிக்கவல்லவனோ, அப்படிப்பட்ட பரமபுருஷன் உன் பேரனுடைய பக்தியால் ஸந்தோஷம் அடைவான். அவனுக்கு பகவானிடத்தில் என்றும் மாறாத பக்தி உண்டாயிருக்கும். அத்தகைய உன்பேரன் பகவானிடத்தில் நிகரில்லாத பக்தியுடையவனும் மிகுந்த ப்ரபாவமுடையவனும் பரிசுத்தமான மனமுடையவனும் மஹிமையுடைய பெரியோர்களிடையிலும் மிகுந்த மஹிமையுடையவனுமாகி மேன்மேலும் வளர்ந்து வருகின்ற பகவத் பக்தியால் சோதிக்கப்பெற்ற (அழுக்கெடுக்கப்பெற்று நிர்மலமாயிருக்கின்ற) தன் மனத்தில் பகவானை நிலைநிறுத்திக்கொண்டு அந்த பகவானையொழிந்த மற்ற ஐஶ்வர்யம் முதலியவற்றையெல்லாம் துச்சமாக நினைத்துத் துறக்கப்போகின்றான். அன்றியும், அவன் பகவானையொழிந்த மற்ற எந்த வஸ்துவிலும் மனப்பற்றில்லாமல் நல்ல ஸ்வபாவமுடையவனும் குணங்களுக்கு விளைநிலமாகிப் பிறருடைய ஸம்ருத்தி எவ்வளவு அதிகமாயிருக்கக் காணினும் மிகுந்த ஸந்தோஷமுறுபவனும் பிறர் வருத்தப்படக் காண்பானாயின் தானும் வருத்தமுறுகின்றவனும் தனக்குச் சத்ருக்கள் ஒருவரும் சேரப்பெறாதவனுமாயிருப்பான். சந்த்ரன் வெயிற்காலத்தில் விளையும் வெப்பத்தையெல்லாம் போக்குவதுபோல் அவன் ஜகத்தின் சோகத்தையெல்லாம் போக்குந்திறமையுடையவனாயிருப்பான். உன் பேரன், ஜ்வலிக்கின்ற குண்டலங்களால் அலங்கரிக்கப்பெற்ற முகமுடைய

வனும் தன் பக்தர்களின் விருப்பங்களுக்குத் தகுந்தபடி அப்ராக்ருதமான திவ்யமங்கள விக்ரஹங்களைக் கொள்கின்றவனும் தாமரையிதழ்போன்ற கண்களுடையவனும் கெட்டகுணங்கள் சிறிதும் தீண்டப்பெறாதவனும் மங்கையர் மணியாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு ஆபரணம் போன்றவனுமாகிய பரமபுருஷனைத் தன் ஹ்ருதயகமலத்திலும் வெளியிலும் காணப்பெறுவான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—திதி தனக்கு ஓர்பேரன் பிறப்பானென்றும், அவன்மிகுந்த பகவத்பக்தியுடையவனாயிருப்பானென்றும் கேட்டு மிகவும் ஸந்தோஷம் அடைந்தாள். தன் புதல்வர்களுக்கு பகவானிடத்தினின்று வதம் நேருமென்பதை அறிந்து, 'என் புதல்வர்கள் ஸ்ரீ மஹா விஷ்ணுவுடன் சண்டைசெய்து அவன் கையால் மரணம் அடையப் போகின்றார்களாகையால் அவர்க்குப் புகழும் நற்கதியும் விளையும்' என்பதை ஆலோசித்து மனத்தில் உத்ஸாஹமுடையவளாயிருந்தாள். பதினென்காவது அத்யாயம் முற்றிற்று.

---

{ திதியின் கர்ப்பத்திலுள்ள காச்யபருடைய வீர்யத்தின் தேஜஸ்ஸினால் தேவதைகள் ஒளி மழுங்கப்பெற்று அதன்காரணத்தை ப்ரஹ்மதேவனை வினவுதலும், அவன் காரணத்தை விஸ்தாரமாகக் கூறுதலும். }

மைத்ரேயர் சொல்லுகிறார்:—திதியானவள் தன்பர்த்தாவான காச்யப ப்ரஜாபதியினுடையதும் பிறருடைய தேஜஸ்ஸைப் பாழ்செய்வதுமான அத்தவீர்யத்தை 'எந்த வேளையில் என் செய்வாரோ' என்று இந்த்ரனிடத்தினின்று சங்கித்தவளாகி நூறு வர்ஷம் வரையில் கர்ப்பத்தில் தரித்திருந்தாள். அந்த கர்ப்பத்தேஜஸ்ஸினால் உலகம் முழுவதும் ஸூர்யன் முதலிய வெளிச்சமெல்லாம்

மழுங்கப் பெற்றனர். லோகபாலர்கள் அனைவரும் தமது ப்ரபாவமெல்லாம் பாழடையப்பெற்றுத் திசைக ளெல்லாம் இருள் மூடப்பெற்றிருக்கையால் 'இது கிழக்கு, இது மேற்கு' என்கிற விவேகமற்றவராகி ப்ரஹ்மா வினிடம் சென்று அவனுக்கு இந்த [1] துரவஸ்தையைத் தெரிவித்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள்:—வாரீர் வல்லமை அமைந்த ப்ரஹ்மதேவனே! நாங்கள் இப்பொழுது எந்தக் காரணத்தினால் மிகவும் பயந்திருக்கின்றோமோ, அதை நீரே அறிவீர். 'நானும் உங்களைப்போன்றவனே. ஆகை யால் எப்படி அறிவேன்' என்னில், சொல்லுகின்றோம். நீர் காலத்தினால் தீண்டப்பெறாத ஜ்ஞான முடையவர். உம்முடைய அறிவு காலத்தினால் மழுங்கப்பெறுகிறதில்லை. பகவான் உம்மிடத்தில் ஆவேசித்து ஸ்ருஷ்டியை நடத்து கின்றானாகையால் நீர் எல்லாம் அறியுந்திறமையுடையவர். இங்ஙனம் பகவானுக்குச் சரீரமாயிருக்கின்ற உமக்குத் தெரியாதது எதுவுமே இல்லை. தேவர்க்கும் தேவனே! உலகங்களைப் படைப்பவனே! அவற்றைப் பாதுகாப்பவர் அனைவரிலும் சிறந்தவனே! எங்களுக்கு மேற்பட்டவரு டைய அபிப்ராயத்தையும் கீழ்ப்பட்டவருடைய அபிப் ராயத்தையும் நீர் நன்றாக அறிவீர். தேவமனுஷ்யாதி நாமரூபங்களுக்கிடமாகிக் கார்யதசையை அடைந்த ஜகத் திற்கெல்லாம் காரணன் நீரே. 'ஜகத்காரணன் பர மாத்மாவேயன்றி நானன்றே' என்கிறீரோ? ரஜோ குணத்தை முக்யமாகவுடைய ப்ரஹ்மதேவனைச் சரீர மாகக் கொண்டு உலகங்களைப் படைக்கின்ற பரமாத்மா நீரே. 'ஆனால் நானே பரமாத்மாவாயின், அவன் கர்மத் திற்கட்டுப்பட்டவனோ' என்னில், ரஜோகுணம் தலையெடுக்

1. கெட்ட ஸ்திதியை

கப்பெற்ற நான்முகனுகிய உம்மைச் சரீரமாகக்கொண்டு உமக்கு அந்தராத்மாவாயிருக்கின்ற பரமபுருஷன் கர்மத்தினுல் உம்மைச் சரீரமாகக்கொண்டவனல்லன். அவன் தன்னுடைய ஸங்கல்ப ரூப ஜ்ஞானத்தினுல், ப்ரஹ்மதேவனென்னும் பேருடைய இந்த உம்மைச் சரீரமாகககொண்டவன். அவன் ஸங்கல்ப ரூப ஜ்ஞானத்தையே பலமாகவுடையவன். இங்ஙனம் பரமாத்மஸ்வரூபியான உமக்கு நமஸ்காரம். ஜீவாத்மாக்களை நீர தேவமனுஷ்யாதி உருவங்களைப் பெறச்செய்கின்றீர். ஜகத்தெல்லாம் உம்மிடத்தில் அடங்கியிருக்கின்றது. நீர காரியமாயும் காரணமாயுமிருப்பவர். வாஸ்தவத்தில் கார்யதசையையும் காரணதசையையும் அடைநத சேதனுசேதனங்களைக் காட்டிலும் வேறுபட்டவர். இப்படிப்பட்ட உம்மை எவர் என்றும் மாருத பக்தியுடன் உபாஸிக்கின்ருர்களோ; மற்றும், எவர் ப்ராணனகளையும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களையும் மனத்தையும் ஜயித்து நனருக பக்தியோகம் கைகூடப்பெற்று உமது அனுக்ரஹம் பெற்றவருமாயிருபபார்களோ, அத்தகையர்களுககு எவ்விதத்திலும் அவமதி உண்டாகாது. (இப்படியிருக்க உம்முடைய ப்ரஜைகளும் உமது கட்டளையின்படி நடப்பவர்களுமாகிய எங்களுக்குப் பிறரால் பரிபவம் நேரிடுவது யுக்தமன்று). வேதமென்கிற உமது வாக்கினுல் ஸமஸ்த ப்ரஜைகளும் நாமணிக்கயிற்ருல் பசுக்கள்போல் கட்டுண்டு உமக்கு அதீனங்களாகிப் பூஜைசெய்கின்றன. இங்ஙனம் மேன்மையுடைய உமக்கு நமஸ்காரம். உம்முடைய ஸம்பந்தமுடைய ஜனங்களும் உம்முடைய ஆஜ்ஞையைத் தொடர்ந்தவருமாயிருப்பவர்க்குப் பிறரால் பரிபவம் நேரும்படி நீர் பார்த்துக்கொண்டிருப்பது யுக்தமன்று. வாரீர் மிகுந்த மஹிமையுடையவரே! இப்படிப்பட்ட வண்ணங்களையுடைய

[illegible] உலகமுழுவதும் இருள் [illegible] இரவென்றும் பகலென்றும் பிரிவில்லாமையால் [illegible] கர்மங்களெல்லாம் லோபிக்கப்பெற்ற எங்களுக்கு [illegible] விளைப்பீராக. இவ்வனர்த்த ஆபத்தில் அழுந்தியிருக்கின்ற எங்களை நீர் மிகவும் தயை பெருகப்பெற்ற கண்ணோக்கத்தினால் கடாக்ஷிக்கக்கடவீர். உலகம் முழுவதும் பேரிருள் நிரம்பியிருக்கின்றமையால் ராத்ரியென்றும் பகலென்றும் பிரிவேயறாய்விட்டது; அதனால் அஹோராத்ரங்களில் நடக்கவேண்டிய கார்யங்களெல்லாம் பாழடைந்தன. இப்படி நாங்கள் வருந்துகின்றோம். நீர் மிகுந்த தயை வழியப்பெற்ற உமது கண்களால் எங்களைக் கடாக்ஷிப்பீராக. 'உங்களுக்கு இப்பொழுது என்ன ஆபத்து நேரிட்டது' என்னில் சொல்லுகின்றோம். வாரீர் தேவனே! திதியின் கர்ப்பத்தில் வைக்கப்பட்ட காஶ்யபருடைய வீர்யமானது திசைகளையெல்லாம் இருள்மூடச் செய்துகொண்டு, கட்டையில் பற்றின அக்னிமேல் வளர்ந்து வருகின்றது. இதுவே எங்களுக்கு நேர்ந்த பெரிய ஆபத்தென்று அறிவீராக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—நீண்டழகிய பாஹுதண்டங்களையுடைய விதுரனே! வேத ஶப்தங்களால் அறியத் தகுந்தவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனும் ஸ்வயம்புவும் (தானே தோன்றினவனும்) ஆகிய அந்த ப்ரஹ்மதேவன் சிரித்து இனிய வார்த்தையால் ஸந்தோஷப் படுத்திக்கொண்டு தேவதைகளைக் குறித்து [illegible]ம் மொழிந்தான்.

[illegible] தேவன் சொல்லுகிறான்:—வாரீர் [illegible] தேவர்களே! உங்களுக்கு முன்னே [illegible] புதல்வர்களுமாகிய [illegible] காதிகள் [illegible]

னும் இவ்வுலகம் [illegible] ஆகாயமார்க்கத்தினால் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றன. அந்த ஸங்காதிகளு ஒருகாலத்தில் [illegible]மயமான திவ்யமங்கள விக்ரஹ முடையவனும் [illegible]திலும் எக்காலத்திலும் எவ்விடத்திலும் [illegible] ஐஸ்வர்ய முடையவனுமாகிய பகவானுடைய வாஸஸ்தானமும் ஸம்ஸார லோகங்களாலும் [illegible]ப்பட்டதுமாகிய விஷ்ணு லோகத்திற்கும் போகின்றன. அந்த விஷ்ணுலோகத்திற்கு வைகுண்டலோகமென்றும் பேர் உண்டு. இந்த வைகுண்டலோகத்தில் வாஸஞ் செய்யும் புருஷர்கள் அனைவரும் ஒருபலனையும் எதிர்பாராமல் தர்மத்தை ஆசரித்து அதனால் பரமபுருஷனை ஆராதிக்குந் தன்மையர். அவர்கள் எல்லோரும் பகவானுடைய ஆகாரத்தை நிகர்த்த ஆகாரமுடையவர். இவ்வுலகத்தில் கேவலம் சாஸ்த்ரத்தினால் அறியக்கூடியவனும் ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் நிறைந்தவனும் ஜகத்திற்கு முக்யகாரணனும் ஸர்வஸ்மாத்பரனுமாகிய பரமபுருஷன் ரஜோகுணமும் தமோகுணமும் தீண்டப் பொறாமல் சுத்தஸத்வமயமான திவ்யமங்கள விக்ரஹத்தைத் தரித்துத் தன்னைச்சேர்ந்தவர்களாகிய நம்மை மனக்களிப்புறச் செய்து கொண்டு வீற்றிருக்கின்றான். அன்றியும், இவ்வுலகத்தில் நிஃச்ரேயஸமென்னும் பேருடைய ஓர் வனம் இருக்கின்றது. அவ்வனம் அந்தந்த ருதுக்களில் எவ்வெவ்வகையான புஷ்பங்களும் காய்களும் பழங்களும் விளையக் கூடுமோ, அவையெல்லாம் ஸர்வகாலத்திலும் மாறாதிருக்கப் பெற்று மிகுந் [illegible] அமைந்திருப்பவைகளும் விரும்பின [illegible] பெய்பவைகளுமாகிய பற்பல வ்ருக்ஷ[illegible] [illegible] விளக்[illegible] கைவல்யமே (பேர்[illegible] [illegible] மோக்ஷமே) [illegible]

அந்தப் பறவைகளனைத்தும் அதையே கேட்டுக்கொண்டிருக்கும். மற்றும், இவ்வனத்தில், மந்தாரம் குருக்கத்தி மருதாணி நெய்தல் செண்பகம் அரணம் புன்னை நாககேஸரம் மகிழ் தாமரை பாரிஜாதம் ஆகிய இவையெல்லாம் துளஸியை ஆபரணமாக அணிந்த பகவான் அந்தத் துளஸியின் கந்தத்தை வெகுமதித்திருக்கக் கண்டு அந்தத் துளஸியின் தவத்தைக் கொண்டாடுகின்றன. இவ்வனத்திலுள்ள பாரிஜாதாதி வ்ருக்ஷங்களும் நெய்தல் முதலியவைகளும் 'ஆ! நன்மணமுடைய நமது புஷ்பங்கள் இருப்பினும், பகவான் துளஸியை அணிந்து அதை வெகுமதிக்கின்றானே. ஆ! துளஸி ஜன்மாந்தரத்தில் செய்த தவமே தவம்' என்று மனத்தில் த்வேஷமில்லாமல் துளஸியைப் புகழ்கின்றன. இங்ஙனம் திர்யக் ஜந்துக்களும் ஸ்தாவரங்களும் பகவானுடைய ஸம்பந்தத்திற்கு ஆசைப்படும்படியான இவ்வனத்தில் விவேகிகளான புருஷர்கள் போகஸ்தானத்தையும் போக்யவஸ்துக்களையும் போகக்கருவிகளையும் அநாதரித்து மதிமயங்கப்பெறாமல் பகவானுடைய குணங்களைப் பாடுவது ஆச்சர்யமன்று. அன்றியும், இந்த வைகுண்ட லோகம் பகவானுடைய பாதாரவிந்தங்களில் தலைவணங்கி நமஸ்காரஞ் செய்வது மாத்ரத்தினால் கிடைத்தவைகளும் வைடூர்யம் மரகதம் ஸ்வர்ணம் இவற்றால் இயற்றப்பெற்றவைகளுமான பக்தர்களின் விமானங்களால் முழுவதும் நிறைந்திருக்கும். இந்த விமானங்களில் வீற்றிருக்கும் புருஷர்களுக்கு, மிகவும் பருத்த இடையின் பின்புறமுடையவரும் புன்னகையால் விளங்கும் முகத்துடன் திகழ்கின்றவருமாகிய மங்கையர்மணிகளும் தமது பரிஹாஸம் முதலிய விலாஸங்களால் காமவிகாரத்தை விளைவிக்க வல்லராகவில்லை. ஏனென்னில், அவர்கள் பகவானிடத்தில் ஆழ்ந்தமனமுடையவர். ஆகையால்

அவரது மனத்தை இழுக்க இவர்கட்கு ஸாத்யமில்லை. சிற
ந்த உருவமுடையவளும் சிலம்புத்தண்டையால் பாதங்களை
ஒலிக்கச்செய்கின்றவளும் ராகம் முதலிய தோஷங்க
ளற்றவளுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியானவள் இந்த வைகு
ண்டலோகத்தில் ஸ்படிகரத்னங்களால் இயற்றின சுவர்
களுடையதும் அழகுக்காக இடையிடையில் ஸ்வர்ணத்தி
னால் அலங்காரஞ் செய்யப்பெற்றதுமாகிய பகவானுடைய
க்ருஹத்தில் விளையாட்டிற்காகக் கையிலேந்தின தாமரை
மலருடன் அந்த ஸ்படிகரத்னமயமான சுவர்களில் ப்ரதிப
லித்தவளாகித் தன்கையிலுள்ள தாமரை மலரால் அந்தச்
சுவர்களைத் துடைத்துச் சித்ரஞ் செய்பவள்போல் புலப்
படுவாள். எந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அனுக்ரஹம் பெறுவ
தற்காக மற்றவரெல்லோரும் அவளை ஆராதிக்கையாகிற
ப்ரயத்னங்களைச் செய்கின்றார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீ
மஹாலக்ஷ்மி இங்கு பகவானுடைய க்ருஹத்தில் தன்கை
யிலுள்ள லீலாரவிந்தத்தினால் விளக்கிறவள்போல் புல
ப்படுவாள். வாரீர் தேவதைகளே! இந்த லோகத்தில்
ஸ்ரீமஹாலக்ஷ்மி தனது லீலோத்யானத்தில் பவழங்
களால் இயற்றின கரைகளையுடையவைகளும் அம்ருதம்
போன்ற நிர்மல நீர் நிறைந்தவைகளுமாகிய நடைவாவி
களில் தனக்குப் பணிவிடைசெய்கின்ற மாதர்களோடு
கூடித் துளஸிகளால் பகவானைப் பூஜித்துக் கொண்டிருக்
கையில், அப்பொழுது அழகிய முன்னெற்றி மயிர்களு
டையதும் உயர்ந்த மூக்குடன் விளங்குவதுமாகிய தன்மு
கம் அந்த நடைவாவியின் ஜலத்தில் ப்ரதிபலிக்கக் கண்டு
அதை பகவானுடைய முகமாக ப்ரமித்து அந்த ஜலஸ
மீபத்தில் தன்முகத்தை வைத்து அதைப் பகவானே[1]சும்
பனம் பண்ணுகின்றானென்று நினைத்துக் கொண்டாள்.

1. முத்த மிடுகிறானென்று.

ஸ்ரீமஹாலக்ஷ்மியின் மடப்பம் இத்தகையது. பாபங்களைப் போக்குந்தன்மையுள்ள பகவானைக் காட்டிலும் வேறான அர்த்த காமாதி விஷயங்களைப் பற்றினவைகளும் அந்த அர்த்தம், காமம் முதலியவற்றை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயங்களை அறிவிக்கின்ற தண்டநீதி காம தந்த்ரம் முதலியவைகளை ஆராய்ந்துரைத்துப் பொழுது போக்கச் செய்வதினால் புத்திப்ரமத்தை விளைப்பவைகளும் பரமபுருஷார்த்தமான பரமபுருஷனுடைய கதைகளைக் கேட்கும்பாக்யமற்ற மதிகேடரான மனிதர்களால் ஆதரவுடன் கேட்கப் பெற்றவைகளும் கேட்டமாத்ரத்தில் கேட்பவர்களின் புண்யத்தைப் பறித்துக் கொண்டு போமவைகளும் அங்ஙனம் கேட்பவர்களை எவ்விதத்திலும் பிடிப்பில்லாத பாழ்நரகங்களில் விழத்தள்ளுகின்றவைகளுமாகிய குத்ஸித கதைகளை எவர்கள் கேட்கின்றார்களோ, அவர்கள் வைகுண்டனுடைய வாஸஸ்தானமாகிய இந்த லோகத்தை அடையமாட்டார்கள். இங்ஙனம் அர்த்தத்திலும் காமத்திலும் கால்தாழப் பெற்று பாக்ய மற்றவர்களாகிய மனிதர்கள் தேவதைகளும் ஆசைப்படும்படியான மனுஷ்யஜன்மத்தைப் பெற்றும் நிவ்ருத்தி தர்மத்துடன் கூடின தத்வஜ்ஞானத்தைப் பெறுதவராகிக் கடக்கமுடியாததான பகவானுடைய மாயையால்மதிமயங்கப்பெற்று பரமபுருஷார்த்தஸித்தியைக் கையிலங்கு நெல்லிக்கனியாக்கவல்ல இந்தப்பரமபுருஷனுடைய ஆராதனத்தைச் செய்யாமல் பாழாகின்றார்களே. ஆ! இதென்ன வருத்தம். பலன்களை விரும்பிச்செய்யும் தர்மங்களையெல்லாம் துறந்து எல்லாம் பகவானுடைய ஆராதனங்களேயென்று நினைத்து அவனுடைய முகமலர்த்தியே ப்ரயோஜனமாகச் செய்யும் தர்மமாகிய நிவ்ருத்தி தர்மத்துடன் 'ஈஶ்வரனே நாம் வருந்திப் பெற

வேண்டிய புருஷார்த்தமும், அதைக் கைகூடுவிக்கும் உபாயமுமாவான்' என்கிற தத்வஜ் ஞானத்தை எதனால் அநுயாஸமாகப் பெறக்கூடுமோ, அப்படிப்பட்ட மனுஷ்ய ஜன்மத்தைப் பெற்றும் பகவானுடைய மாயையால் மதிமயங்கி அவனுடைய ஆராதனத்தைச் செய்யாமல் பாழாகின்றார்களே. அப்படிப்பட்ட பாக்ய ஹீனர்களுக்கு இந்த வைகுண்டலோகம் பெறக்கூடியதன்று. கெடுகாள் யமம் நியமம் முதலிய அஷ்டாங்க யோகத்தை அப்யஸிப்பதனால் படிந்திருப்பதும் அனைவரும் ஆசைப்படத்தகுந்ததுமாகிய நல்லியற்கை யுடையவர்களும் ஸகலஜகத் ரக்ஷகனான பகவானுடைய நற்புகழை ஒருவருக்கொருவர் பாடுவதனால் அவனிடத்தில் அநுராகம் தலைக் கொண்டு அதனால் தழுதழுப்புற்றுக் கண்ணீர் பெருகப் பெற்று உடம்பு முழுவதும் மயிர்க்கூச்சல் உண்டாயிருப்பார்களோ, அப்படிப்பட்ட பாக்யசாலிகள் தேவஶ்ரேஷ்டனான பகவானிடத்தில் மிகுந்த பக்தி உண்டாகப் பெற்றவராகி இந்த லோகத்தைப் பெறுவார்கள். இவ்வுலகம் பகவானிடத்தில் பக்தி செய்பவர்க்குப் பெறக்கூடியதேயன்றி மற்றவர்க்கு நெஞ்சிலும் நினைக்க முடியாதது. அப்படிப்பட்ட வைபவமுடையதும் தாங்கள் ஒருநாளும் பாராததும் தேவஶ்ரேஷ்டர்களின் விமானங்களால் ப்ரகாசிப்பதும் அற்புதமும் திவ்யமும் (அமானுஷமாயிருப்பதும்) ஸமஸ்த லோகங்களாலும் முக்யமாக வெகுமதிக்கத்தகுந்ததும் ஜகத்குருவான பரமபுருஷனால் நித்யவாஸம் செய்யப் பெற்றதுமாகிய அந்த வைகுண்டலோகத்திற்கு ஸனகாதிமுனிவர்கள் தமது யோக மாயாபலத்தினால் (யோகமஹிமையால் கிடைத்த ஆச்சர்ய சக்தியாகிய அணிமாதி ஐஶ்வர்யபலத்தினால்) சென்று நிரம்பவும் சிறந்த ஸந்தோஷத்தை அடைந்தார்கள். அப்பால் அம்முனி



592. ஸ்ரீவைகுண்ட லோகம்.

வர்கள் அந்த வைகுண்டலோகத்தில் ஆறு கோட்டை வாசற்களைக் கடந்து பகவானைப் பார்க்கவேண்டுமென்னுங் குதூஹலத்தினால் ஆங்காங்குள்ள ஆச்சர்யங்களில் சிறிதும் கண்வைக்காமல் சென்று ஏழாவது கோட்டையுள் நுழைந்து, அங்கு ஒருவர்க்கொருவர் நிகர்த்த வயதுடையவர்களும் கையில் கதை ஏந்தினவர்களும் தோள்வளை குண்டலம் கிரீடம் முதலிய சிறந்த ஆபரணங்களால் அழகிய வேஷமுடையவர்களுமாகிய இரண்டு தேவர்களைக் கண்டனர். அவ்விருவரும் பருத்த நான்கு புஜங்களுடையவர்; அந்த புஜங்களின் இடையாகிய மார்பில் வனமாலை யென்னும் பூமாலையை அணிந்திருப்பவர். அப்பூமாலையில் மதித்த வண்டுகள் மொய்த்துக்கொண்டிருக்கும். அவர்கள் புருவம் வளையப் பெற்று ஸ்பஷ்டமாய் விளங்குகின்ற நாஸிகைகளாலும் சிவந்த நேத்ரங்களாலும் முகம் சிறிது உக்ரமாயிருக்கப் பெற்றவர். இத்தகையரான அவ்விரண்டு தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்கையில் அவர்களை அநாதரித்து அவர்களைக் கேளாமலே, ஸ்வர்ணத்தினாலும் வஜ்ரமணிகளாலும் இயற்றின கதவுகளையுடைய கீழ் வாசற்களை எங்ஙனம் தாண்டி வந்தார்களோ, அங்ஙனமே இந்த ஏழாவது வாசலையும் தாண்டிச் சென்றார்கள். 'அவர்கள் அங்ஙனம் கேளாமலே நுழைந்ததற்குக் காரணம் என்' என்னில் சொல்லுகிறேன். அம்முனிவர்கள் [1] வைஷம்ய மில்லாத தம்முடைய த்ருஷ்டியால் சங்கையற்றிருப்பவர்; ஆனதுபற்றியே எல்லா இடங்களிலும் தடையில்லாமல் ப்ரவேசிப்பவர்.

1. அம்முனிவர்கள் ஜீவாத்மஸ்வரூபத்தையும் ப்ரக்ருதிஸ்வரூபத்தையும் ஈஸ்வர ஸ்வரூபத்தையும் நன்கறிந்தவர். ஆனதுபற்றியே வித்யை விநயம் முதலிய குணங்கள் நிறைந்த ப்ராஹ்மணன் அவையொன்று மில்லாத பசு யானை நாய் புலையன் முதலிய எல்லா இடங்களி

ஆகையால் நம்மைத் தடுப்பாரில்லை யென்றும் நமக்கு நுழையத்தகாத இடமில்லை யென்றும் நினைத்து அவர்கள் அந்த த்வாரபாலகர்களைக் கேளாமலே நுழைந்தார்கள். அப்பொழுது, பகவானுக்கு ப்ரதிகூலமான ஸ்வபாவமுடைய அந்த வாசற்காக்கும் தேவர்கள் இருவரும் திகம்பரர்களாகி வயது சென்றவர்களாயினும் ஐந்து வயதுள்ள பாலர்கள்போல் தோற்றுகின்றவரும் பரமாத்மாவின் உண்மையை அறிந்தவருமாகிய அந்நான்கு முனிவர்களும் நுழைவதைக்கண்டு 'ஆ! உங்களுக்கு இங்குங்கூட தைர்யமா' என்று அவருடைய ப்ரபாவத்தைப் பரிஹஸித்து, அங்ஙனம் தடுக்கத் தகாதவர்களாகிய அவர்களைப் பிரம்பினாலும் வாக்கினாலும் தடுத்தார்கள். அம்முனிவர்கள் பூஜிக்கத் தகுந்தவராயினும் மற்ற தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுது ஸ்ரீவிஷ்ணுவின் வாசற்காப்பவராகிய அந்த தேவதைகளால் அங்ஙனம் தடுத்துப்பரிபவிக்கப் பெற்றவராகித் தமக்கு மிகவும் நண்பனாகிய பரமபுருஷனைப் பார்க்கவேண்டுமென்னும் விருப்பத்திற்கு பங்கம் (தடை) நேர்ந்தமையால் சிறிது கோபம் உண்டாகி அதனால் சீக்ரமாகக் கண்கள் கலங்கப்பெற்று மேல்வருமாறு மொழிந்தார்கள்.

---

லும் ஆத்மாக்கள் ஜ்ஞானஸ்வரூபராகி ஒருவாறாகவே யிருப்பவராகையால் அவற்றையெல்லாம் அவர்கள் ஸமமாகவே பார்க்குந்தன்மையர். மற்றும், ப்ராஹ்மணன் பசுயானை நாய் புலையன் முதலிய சரீரங்களெல்லாம் ப்ராக்ருதியின் பரிணாமங்களேயாகையால் ஒரு படிப்பட்டவைகளே. அவற்றில் அந்தராத்மாவாயிருக்கிற பரமாத்மாவும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்து ஒருபடிப்பட்டவனே. அவர்கள் இதை அறிந்தவராகையால் எல்லாவற்றையும் எல்லாவிதத்திலும் ஸமமாகப் பார்த்திருந்தமையால் வைஷம்யமில்லாத த்ருஷ்டியுடையவர். அத்தகைய த்ருஷ்டியால் நிர்ப்பயமாய் நுழைந்தார்களென்று கருத்து.



595. வைகுண்ட லோகத்தில் உள்ளே நுழையவிடாமல் தடுக்கும் த்வார பாலர்களை, ஸனகாதிகள் சபித்தலும், ஸ்ரீபகவான் அவ்விடம் வருதலும்.

குமாரர்கள் சொல்லுகிறார்கள்:—நெடுநாள் பகவானை ஆராதித்து அதன் மஹிமையால் இந்த வைகுண்ட லோகம் சேர்ந்து இங்கு வாஸம் செய்கின்றவரும் அந்த பகவானோடொத்த தர்மங்களையுடையவருமாகிய உங்களுக்கு ஏன் ஸ்வபாவம் இப்படி விபரீதமாயிருக்கின்றது? நெடுநாள் பகவானை ஆராதித்து இந்தவைகுண்டலோகத்திற்கு வந்துசேர்ந்தீர்கள். கறுத்த மேனியும்நான்குபுஜங்களும் கிரீடமும் சங்க சக்ரங்களும் ஆபரணமும் வனமாலையும் முதலியபகவானுடைய தர்மமெல்லாம் அமையப் பெற்றிருக்கின்றீர்கள். இத்தகையராகி இவ்வுலகத்தில் வஸிக்கின்ற உங்களுக்கு இந்த விஷமஸ்வபாவம் பொருந்தாது. 'ஆமாம். நாங்கள் வாசற்காப்பவர். எங்களுக்கு இதுதர்மமே. புதிதாக வந்தவர்களைத் தடுப்பதும் பழகினவர்களைத் தடுக்காமல் நுழைய விடுவதும் த்வார பாலர்களாகிய எங்களுக்கு ஏற்றவைகளே. இல்லையாயின் எங்கள் மேல்ப்ரபுவின் தண்டனை வருமே' என்கின்றீர்களோ? அதில்லை. இந்த வைகுண்டலோகத்திலுள்ளபுருஷர்களெல்லோரும் மிகவும் சாந்தியுடையவரா யிருக்கின்றார்கள். இங்குக் கலஹமென்பது கிடையாது. இப்படிப்பட்ட இந்த லோகத்தில் குடிலபுத்தியர்களான உங்களுக்கு உங்களைப்போல் சங்கிக்கத்தகுந்தவன் எவன் இருக்கின்றான்? எவனேனும் குடிலபுத்தியன் நுழைவனோ என்னவோ என்கிற சங்கையாலன்றோ நீங்கள் தடைசெய்கின்றீர்கள். உங்களைப் போல் குடிலபுத்தியனாகி ஸந்தேஹிக்கத் தகுந்தவன் எவனேனும் இங்கு உளனாகிலன்றோ எங்களைச் சங்கித்துத் தடுக்கவேண்டும். இந்தலோகத்திற்கு அப்படிப்பட்டவன் எவனும் வரமுடியாது. ஆகையால் நீங்கள் இங்ஙனம் சங்கிக்க இடமில்லை. 'இவ்வுலகம் இத்தகையதே. இங்கு வஞ்சனை செய்பவன்  ஆயினும்

நீங்கள் நுழைவது பகவானுக்கு அனிஷ்டமாயிருக்கு மென்று நினைத்து நாங்கள் தடுக்கின்றோம்' என்கிறீர்களா? பகவான் ப்ரபஞ்சத்தையெல்லாம் தன்குக்ஷியில் வைத்துக்கொண்டு பாதுகாக்குந் தன்மையன். அவனுக்கு 'இவன்தான் உள்ளே நுழையத்தகுந்தவன். இவன் உள்ளே நுழையத்தகுந்தவனல்லன்' என்கிற வைஷம்யம் இல்லை. பகவான் ஜகத்தையெல்லாம் தன்வயிற்றில் வைத்து ரக்ஷிப்பதையும் நீங்கள் தடுப்பீர்கள் போலும். பெரிய ஆகாசத்திற்காட்டிலும்கடம் முதலியவற்றிலுள்ள ஆகாசம் எங்ஙனம் வேறுபட்டதன்றோ, ஒன்றாகவேயிருக்குமோ, அங்ஙனமே பரமாத்மாவைக் காட்டிலும் ஜீவாத்மாவை வேறுபட்டவனன்றென்றும் பரமாத்மாவுக்குட்பட்டு அவனோடேவனாயிருப்பவனென்றும்பண்டிதர்கள் அறிகின்றார்கள்.' ஆனால்பெரிய ஆகாசமும்கடாதிபதார்த்தங்களிலுள்ள ஆகாசமும்ஒன்றாயிருப்பதுபோல்ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரேபொருள்தானோ என்னில்,ஒரேபொருளன்று. பெரிய ஆகாசமும்கடாதிகளின் ஆகாசமும் ஒரு பொருளாயிருப்பதுபோல் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒரே பொருளென்னும்படி பிரிக்கமுடியாதிருப்பார்கள். ஜீவாத்மாவுக்குப் பரமாத்மாவை யொழிந்து நிலைமையே கிடையாது. எப்பொழுதும் பரமாத்மாவுக்குச் சரீரமாய் அவனால் தரிக்கப்பட்டு அவனுடையஸங்கல்பத்தின்படியே நடப்பவனாயிருப்பான். ஆகையால் ஒரு பொருள் போல் தோற்றுவரேயன்றி வாஸ்தவத்தில் ஜீவாத்ம பரமாத்மாக்கள் வேறுபட்டவரே. ஆயினும் ஜீவாத்மா பரமாத்மாவையொழியச் செல்லாமையால் ஒரு பொருள் போலவே தோற்றுவான். ஆகையால் ஸர்வாத்மகனாகையாலே (ஸர்வவஸ்து ஸ்வரூபனாகையாலே) அவனுக்கு வைஷம்யம் இல்லை. ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களுக்கு ப்ர

ஸக்தியில்லாத இத்தேசத்தில் பிறரைத் தடுக்கையாகிற இந்த ஏற்பாடு தேவவேஷம் பூண்ட உங்களால் ஏற்படுத்தப்பட்டதாயென்? அநுகூலமான வேஷமுடையவர் போல் தோற்றுகின்றீர்கள். வாஸ்தவத்தில் நீங்கள் தேவதைகளல்லர் போலும். மேலுக்கு மாத்ரமே தேவவேஷம் பூண்டவர்போல் தோன்றுகிறீர்கள். இவ்விடத்தில் இங்ஙனம் பிறரைத் தடுக்கும்படியான வழக்கத்திற்கு அவகாசமேயில்லை. இது உங்களால்தான் ஏற்பட்டதாயிருக்கவேண்டும். உலகத்தில் ஒருவன், வயிற்றில் ஆஹாரவைஷம்யத்தினால் மாறுபாடுண்டாகி அதனால்விளையக்கூடிய ரோகத்தினின்று பயப்படுவது போல், நீங்கள் எதைப்பற்றி பயப்படுகிறீர்களோ, அந்தக் காரணம் யாது? அத்தகைய காரணம் ஒன்றும் இல்லையே. நீங்கள் ஏன் பயப்படுகிறீர்கள்? சரீரங்கள் தோறும் அந்தர்யாமியாயிருந்தும் அவற்றின் தோஷங்கள் தீண்டப்பெறாதவனாகி நிர்ப்பயனாயிருக்கின்ற பரமபுருஷனுக்குப் பிறரால் பயம் உண்டென்று நீங்கள் நினைப்பதற்குக்காரணம் யாதோ தெரியவில்லை. அதைப்பற்றியன்றோ நீங்கள் எங்களைத் தடுக்கின்றீர்கள். ஆகையால் தன்னோடொத்தவர்களும் தனக்கு மேற்பட்டவர்களும் இன்றி வைகுண்டநாதனாகிய பகவானுக்கு வாசற்காப்பவராகி மந்தபுத்தியராயிருக்கின்ற உங்களுக்கு எது யுக்தமோ, அதை விசாரிக்கின்றோம். அது என்னென்னில், நீங்கள் இந்த லோகத்தினின்று தன்னினம் பிறவினமென்கிற வைஷம்யபுத்தியால் மிகவும் பாபிஷ்டங்களான காம க்ரோத லோபங்களென்கிற மூன்று சத்ருக்கள் எந்த லோகங்களில் மாறுதிருக்கின்றார்களோ, அப்படிப்பட்ட லோகங்களுக்குப் போய்ச் சேருவீர்களாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:— ப்ராஹ்மண சாப

மாகையால் எப்படிப்பட்ட அஸ்த்ர ஸமூஹங்களாலும் தடுக்கமுடியாதபடி அம்முனிவர்கள் இங்ஙனம் மொழிந்ததைக் கேட்டு, அந்த க்ஷணமே ஸ்ரீவிஷ்ணுவின் ப்ருத்யர்களான அந்த தேவர்கள் அம்முனிவர்களின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு, 'ஆ! என்ன செய்தோம்? நிரபராதிகளான பக்தர்விஷயத்தில் நாம் இப்படி சாபங் கொடுத்து அபராதப்பட்டோமே. இந்த பாகவதாபசாரத்தினால் நாமும் ஸம்ஸாரத்தில் விழுவோமோ'! என்று மிகவும் பயத்தினால் நடுங்குகின்ற அம்முனிவர்களுக்கு தண்டனிட்டு, இங்ஙனம் விண்ணப்பம் செய்தார்கள்.

த்வாரபாலகர் சொல்லுகிறார்கள்:—அபராதம் செய்தவனுக்கு எத்தகைய தண்டனை விதிக்கத்தகுமோ, அதையே நீங்கள் நடத்தினீர்கள். ஆகையால் இவ்விஷயத்தில் உங்கள்மேல் ஒருபிழையும் இல்லை. இந்த தண்டனை எங்களுக்கு உண்டாகுமாக. தேவஸ்வபாவரான உங்கள் விஷயத்தில் நாங்கள் பட்ட அபராதத்தை யெல்லாம் இது போக்குமாக. நாங்கள் உங்களை அவமதித்ததையாகிற எங்கள் பாபமெல்லாம் தீருமாகையால் இந்தச் சாபம் எங்களுக்கு ஸம்மதமே. ஆனால் நாங்கள் ஒன்று வேண்டிக்கொள்கின்றோம். நீங்கள் எங்களிடத்தில் 'ஐயோ' என்றிரங்கிச் சிறிதாயினும் அனுதாபம் பிறக்கப் பெற்றிருப்பீர்களாயின், அதனால், நாங்கள் எப்படிப்பட்ட மூடஜன்மங்களில் பிறக்கினும் எங்களுக்கு பகவத்விஷயத்தில் நினைவை அழிக்கும்படியான மதிமயக்கம் உண்டாகாதிருக்குமாக. இங்ஙனம் அருள்புரிவீர்களாக.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் தன்னுடைய ப்ருத்யர்கள் பெரியோர்களிடத்தில் அபராதப்பட்டதை அந்த க்ஷணமே அறிந்து, தன்னிடத்தில் பக்தியுடைய பெரியோர்களின் மனத்திற்கினியனும் தாமரை யுந்தி

யனுமாகிய பகவான் பரமஹம்ஸர்களான மாமுனிவர்களால் கூசிப்பிடிக்கத் தகுந்த தன் மெல்லடிகளால் மலர்மங்கையுடன் நடந்து வந்தான். அம்மஹாநுபாவன் நடந்து வரும்பொழுது அவனுடைய பாரிஷதர்கள் (ப்ருத்யர்கள்) குடை சாமரம் விசிறி பாதுகை முதலியவைகளை எடுத்துக்கொண்டு வந்தார்கள். அந்தப் பரமபுருஷன் தன்னுடைய பக்தர்கள் செய்யும் தவத்தின் பயனே இங்ஙனம் கண்ணுக்குப் புலப்படும்படி ஓர் அற்புதவடிவங்கொண்டு வந்தாற்போல் தோன்றினான். அந்த பகவானுக்கு இருபுறங்களிலும் ஹம்ஸங்கள் போல் திகழ்கின்ற இரண்டு சாமரங்களை அவனுடைய ப்ருத்யர்கள் வீசிக்கொண்டு வந்தார்கள். அவனுடைய சிரஸ்ஸுக்கு நேராகச் சந்த்ரன்போல் வெளுத்தழகிய கொற்றக்குடை பிடித்தார்கள். அந்தக் குடையின் ஓரங்களில் முத்துச்சரங்களால் இயற்றின சாளரங்கள் சாமரக்காற்றினால் அசைந்து கொண்டிருந்தன. அந்த முத்துச் சாளரங்களின் நுனிகளினின்று நீர்த்துளிகள் பெருகின. அதனிடையில் அவ்வழகன் மிகவும் அழகாக ப்ரகாசித்தான். அவன் பரிபூர்ணமான அனுக்ரஹத்தினால் மிகவும் தெளிந்து அழகாயிருக்கின்ற முகமுடையவன்; ஆசைப்படத் தகுந்த ஒளி மென்மை முதலிய குணங்களுக்கு இருப்பிடம்; ஸ்னேஹம் நிறைந்த கண்ணோக்கத்தின் வெள்ளத்தினால் மனத்தைப்பறிக்கின்றவன்; கறுத்து அகன்ற தன்மார்பில் விளங்கும் ஸ்ரீமஹாலக்ஷ்மியால் ஸ்வர்க்கலோகத்திற்குச் சூடாமணி போன்றதும் தனக்கு வாஸஸ்தானமுமாகிய வைகுண்டலோகத்தையெல்லாம் விளங்கச் செய்பவன்போன்றிருப்பான். அன்றியும், அவன் பருத்த இடையின் புறத்தில் தரித்திருக்கின்ற பீதாம்பரத்தின் மேல் விளங்குகின்ற அரைநூல் மாலையாலும் தேனைப்

பருகி மதித்துப் பாடும் வண்டினங்கள் நிறைந்த வனமாலையாலும் திகழ்வுற்று மணிக்கட்டுக்கைகளில் அழகிய கடகங்களை அணிந்து ஸ்ரீகருடனுடைய தோளின்மேல் கையை வைத்துக் கொண்டு மற்றொரு கையினால் தாமரைமலரைப் பிடித்து லீலையாகச் சுழற்றிக்கொண்டிருந்தான். அவன் ஒளியின்மிகுதியால் மின்னலையும் அவமதிக்கின்ற மகரகுண்டலங்களாகிற அலங்காரத்தினால் அழகிய கபோலங்களும் உயர்ந்த மூக்குடைய திருமுகமும் அமைந்து ரத்னங்கள் இழைத்த கிரீடம் தரித்து புஜதண்டங்களின் இடையில்விளங்குவதும் மனத்தைப் பறிப்பதும் சிறப்புற்றதுமாகிய முத்துமாலையாலும் கழுத்தில் அணியப்பெற்றகௌஸ்துப மணியினாலும்ப்ரகாசித்தான். ‘எனக்கு மேற்பட்ட அழகு மற்றொருவர்க்கும் இல்லையென்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மியின்கர்வமெல்லாம் இந்த பகவானுடைய திவ்யதேஹ ஸௌந்தர்யத்தில் அடங்கிற்றென்று தன்னுடைய பக்தர்கள் மனத்தினால் ஊஹிக்கும்படி பலவகையான ஸௌந்தர்யங்களெல்லாம் நிறைந்தவனும் நான்முகனாகிய நானும் ருத்ரனும் தேவதைகளாகிய நீங்களுமாகிய நம்மனைவராலும் பஜிக்கத்தகுந்தவனுமாகிய அந்தப் புருஷோத்தமன் வரக் கண்டு ஸனகாதிமுனிவர்கள், பார்த்தது போதுமென்கிற த்ருப்தி உண்டாகப் பெறாத கண்களுடையவராகிச் சிரங்களை வணங்கி நமஸ்காரம் செய்தார்கள். செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களின் தாதுகள் போன்ற விரல்களின் பராகத்தோடு கூடின துளஸியின் தேன்மணம் கொண்டு வீசும் காற்றானது நாஸிகைகளின் ரந்த்ரத்தினால் உட்புகுந்து அம்முனிவர் ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்தவராகையால் மனம் கலங்கப் பெறாதவராயினும், அவர்களுடைய மனத்

த்தையும் சரீரத்தையும் கலங்கச் செய்தது. அவர் மனது ஆநந்தத்தின் மிகுதியால் ஒன்றும் தெரியாமல் கலங்கிற்று. சரீரம் மயிர்க்கூச்சல் உண்டாகப் பெற்றது. அம்முனிவர்கள் மிகவும் அழகியதும் சிவந்திருப்பதுமாகிய கீழுதட்டில் படிந்ததும் குருக்கத்தியின் புஷ்பத்தை நிகர்த்துமாகிய புன்னகை அமைந்திருப்பதும் கருத்தகமலம் போன்றதுமாகிய அந்த பகவானுடைய முகத்தைக் கண்டு மனோரதம் நிறைவேறப்பெற்று, மீளவும் நகங்களாகிற செம்மணிகள் நிறைந்ததாகிய அந்த பகவானுடைய பாதங்களைக் கண்டு ஒரே தடவையில் அவனுடைய ஸமஸ்த அவயவங்களின் அழகையும் கண்டநுபவிக்க வல்லரல்லாமையால் இங்ஙனம் அடிக்கடி அவனுடைய அங்கஸௌந்தர்யங்களையெல்லாம் தனித்தனியே கண்டு பிறகு மனத்தில் த்யானித்து நிலைநிறுத்திக் கொண்டார்கள். இவ்வுலகத்தில் கர்மயோகம் ஜ்ஞானயோகம் பக்தியோகம் முதலிய உபாயங்களின் ப்ரகாரங்களுடைய ஸ்வரூபத்தை ஆராய்ந்தறியும் புருஷர்களின் த்யானத்திற்கு விஷயமாயிருப்பதும் மிகவும் ப்ரீதிக்கிடமானதும் கண்களுக்கு அழகியதும்புருஷாகாரமுடையதுமாகிய சரீரத்தைக் காட்டுகின்றவனும் தனக்கு அஸாதாரணங்களும் ஸ்வாபாவிகங்களுமான அணிமை முதலிய அஷ்டஐஸ்வர்யங்களோடு கூடினவனுமாகிய அந்த பகவானை அம்முனிவர்கள் ஸ்தோத்ரஞ் செய்தார்கள்.

குமாரர்கள் சொல்லுகிறார்கள்:—நீ துர்ப்புத்திகளுடைய ஹ்ருதயத்தில் எப்பொழுதும் இருப்பவனாயினும் அவர்க்குத் தோற்றாமல் மறைந்தேயிருப்பாய். அப்படிப்பட்ட நீ, ஆதியந்தமில்லாத பரமபுருஷனே! எங்கள் கண்ணுக்கு விஷயமாயினை. நாங்கள் உன்புதல்வனும் எங்கள் தமப்பனுமாகிய நான்முகனால் வர்ணிக்கப் பெற்ற உன்

ஸ்வரூபரூபகுண விபூதிகளை எப்பொழுது கேட்டோமோ அப்பொழுதே நீ எங்கள் காதுவழியாய் ஹ்ருதய குஹையில் ப்ரவேசித்தனை. எங்கள் தமப்பனிடத்தில் நாங்கள் உன் ஸ்வரூபத்தைக் கேட்டது முதல் இது வரையில் உன்னை த்யானித்துக் கொண்டிருந்தோம். அங்ஙனம் த்யானிக்கப் பெற்ற நீ இப்பொழுது எங்கள் கண்ணுக்குப் புலப்பட்டனை. ஆகையால் நாங்கள் ப்ரயோஜனம் கைகூடப்பெற்றோம். வாராய் பரமனே! (அனைவரினும் மேன்மையுற்றவனே!) பகவானே! சுத்த ஸத்வமயமான தேஹத்தினால் இந்த பக்தர்களுக்கு க்ஷணந்தோறும் மேலான அனுராகத்தை விளைவிக்கின்ற நீயே எங்கள் தமப்பன் உபதேசித்த ஆத்ம தத்வமென்று நாங்கள் அறிந்தோம். எங்களுக்கு எங்கள் தமப்பனாகிய ப்ரஹ்மதேவன் உபதேசித்த பரமாத்மதத்வம் நீயே யென்று நாங்கள் நிச்சயித்துக் கொண்டோம். ஸம்ஸாரத்தில் வெறுப்பு உண்டாகப்பெற்று அதனால் மாறுமல்விளைந்த பக்தியோகங்களால் சப்தாதிவிஷயங்களில் விருப்பம் தொலைந்து அஹங்காரமற்றுப் புகழ் பெற்ற முனிவர்கள் தமது மனத்தில் எந்த ஆத்மதத்வத்தை உபாஸிப்பார்களோ, அப்படிப்பட்ட பரவஸ்து நீயே யென்றறிந்தோம். வாராய் பகவானே! உன் திருவடிகளையே உபாயமாகப் பற்றி ஸ்வரூபத்திற்கிணங்காதவைகளும் வருந்தி அனுஷ்டிக்கத் தக்கவைகளுமான மற்ற உபாயங்களையெல்லாம் துறந்து வல்லராயிருப்பவர் அனைவராலும் பாடத்தகுந்ததும் பரிசுத்தமுமான புகழ் அமைந்ததுமான உன்னுடைய கதையின் ரஸத்தை அறிந்தவர்கள்உன்னுடையஅனுக்ரஹத்தினால் விளைவதாகிய மேலான மோக்ஷத்தையும் ஒரு பொருளாக நினைக்கமாட்டார்கள். உன்னுடைய புருவநெரிப்புக்களால் விளைபவைகளும் பயத்திற்கிடமாயிருப்பவைகளுமா

கிய மற்ற ஸ்வர்க்காதி ஸம்பத்துக்களை அவர்கள் விரும்ப மாட்டார்களென்பதில் ஸந்தேஹம் உண்டோ? இப்படியிருக்க, வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத ஸ்வரூப ஸ்வபாவங்களையுடைய உன்னை ஸாக்ஷாத்கரித்த நாங்கள் மற்றொன்றை விரும்புவதற்கு ப்ரஸக்தி உண்டோ! பகவானே! எங்கள் மனம் உன்னுடைய பாதாரவிந்தங்களில் மதுகரம்போல் (வண்டுபோல்) களிப்புற்றிருக்குமாயின், எங்களுடைய வாய்மொழிகள் துளஸியைப் போல் உன்னுடைய பாதாரவிந்தங்களில் படிந்து அவற்றிற்கு மேன்மையை விளைப்பவைகளாயிருக்குமாயின் (உன்பாதாரவிந்தங்களைத் துதிசெய்யுமாயின்), எங்கள் காதுகளும் உன் குண கணங்களால் நிறைந்திருக்குமாயின், எங்கள் பாபங்களுக்குத் தகுந்தபடி எங்களுக்கு எப்படிப்பட்ட நீச யோனிகளில் ஜன்மம் உண்டாயினும் உண்டாகுமாக. அதைப்பற்றி எங்களுக்கு விசாரம் இல்லை. எங்கள் மனது வாக்கு முதலிய இந்த்ரியங்களெல்லாம் உன்னிடத்தில் படிந்து வேறு விஷயங்களில் செல்லாதிருக்குமாயின், நீசஜாதிகளில் நேரிடும் பிறவியைப் பற்றி நாங்கள் சிந்திக்கிறோமல்லோம். ஸமஸ்த வேதாந்தங்களாலும் வேதங்களாலும் மற்ற ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களாலும் அறியத்தகுந்தவனே! சுத்தஸத்வமயமான எந்த உருவத்தை இப்பொழுது எங்களுக்கு விளங்கக் காட்டினையோ அந்த உருவத்தைக் கண்டதனால், ஜகதீசனே! எமது நேத்ரங்கள் மிகவும் ஸுகத்தை அடைந்தன. புத்தி ஸ்வாதீனமாயிருக்கப்பெறாத குத்ஸித யோகிகளால் அறியமுடியாத எந்த பகவானை நாங்கள் இங்ஙனம் காணப் பெற்றோம், அப்படிப்பட்ட பரமபுருஷனாகிய உனக்கு இதோ நமஸ்காரம் செய்கின்றோம். பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

ஸனகாதிகள் த்வாரபாலர்களைச் சபித்த தற்காக அனுதாபப்படுதலும் பகவான் அவர்களுக்கு ஸமாதானங்கூறுதலும்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—அந்த ஸனகாதி முனிவர்கள் பகவானுடைய திவ்யமங்கல விக்ரஹத்தை யே எப்பொழுதும் த்யானஞ்செய்யுந் தன்மையர்; மற் றும் பக்தியோகமே முக்யதர்ம மாயிருக்கப் பெற்றவர். அவர்கள் இங்ஙனம் ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டிருக் கையில், அம்மொழியைப் புகழ்ந்து வைகுண்டலோகத் தை வாஸஸ்தானமாகவுடைய பகவான் மேல் வருமாறு கூறினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—ஜயனென்றும் விஜய னென்றும் பேருடைய இந்த என்னுடைய வாசற்காப்ப வர் இருவரும் என்னை அவமதித்து என்னுடைய பக்தர் களாகிய உங்கள் விஷயத்தில் மிகவும் அபசாரப்பட்டார் கள். முனிவர்களே! என்னைத் தொடர்ந்த பக்தர்களா கிய நீங்கள் இவர்கள் விஷயத்தில் எந்த தண்டனை விதித் தீர்களோ, அந்த தண்டனையையே 'இவர்களுக்கு இது வே இருக்கட்டும்' என்று நானும் அங்கீகரித்தேன். அதற்குக் காரணம் தேவதைகளான உங்களை இவர்கள் அவமதித்தமையே. இங்ஙனம் எமது ப்ருத்யர்கள் உங் கள் விஷயத்தில் அபசாரப்பட்டதைப் பற்றி இப்பொழுது நான் உங்களை அருள்புரிய வேண்டுகின்றேன். 'ஆம். அப ராதம் உளதாயினும், மேலோர்களன்றோ அருள்புரிய வேண்டத்தக்கவர்' என்கிறீர்களோ? ஆம். அது யுக்த மே. எனக்கு ப்ராஹ்மணர்கள் மேலான தெய்வம். ஆகை யால் நான் உங்களை அருள்புரியச் செய்ய வேண்டுவது யுக்தமே 'ஆயினும் எங்களைப் பொறுப்பிக்கும்படி நீ என்ன

அபராதம் செய்தாய்' என்கிறீர்களோ? சொல்லுகிறேன். என்னைச் சேர்ந்தவர்களால் நீங்கள் அவமதிக்கப் பெற்றீர்களென்பதை நான் செய்த அபராதமாகவே நினைக்கின்றேன். அது என்னுடைய பிழையாகவே எனக்குத் தோற்றுகிறது. அன்றியும், ப்ருத்யன் அபராதம் செய்வானாயின், அவனுடைய ஸ்வாமியின் பெயரைச் சொல்லி 'இன்னவன் தன்ப்ருத்யன்மூலமாய் இன்னின்ன தப்புகள் செய்தான். ஆகையால் இவன் துஷ்டன்' என்று உலகத்தவர் பழிப்பராயின், வெண்குஷ்டம் முதலிய வ்யாதியானது சரீரத்தின் அழகைப் பாழ் செய்வது போல், அவ்வபவாதம் அந்த ஸ்வாமியின் கீர்த்தியைப் பாழ் செய்யும். ஆகையால், என்னைச் சேர்ந்தவர் செய்யும் பிழையெல்லாம் என் புகழைப் பாழ் செய்யுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனதுபற்றி அவர் செய்த அபராதமெல்லாம் என்னுடையதே. ஆதலால் நான் உங்களைப் பொறுப்பிக்க வேண்டுவது யுக்தமே. அன்றியும், என் புகழ் பரிசுத்தமானது; அம்ருதம்போல் மிகவும் இனிதாயிருக்கும்; அது செவியிற்படுமாயின், சண்டாலன் வரையிலுள்ள ஸமஸ்த ஜகத்தையும் உடனே பாவனஞ் செய்யவல்லது. அப்படிப்பட்ட நான் எவ்விதத்திலும் தடையில்லாதிருப்பவன். இப்பொழுது உங்கள் நிமித்தமாக என்புகழ் நிந்தைக்கு இடமாகுமாயின், ('இவன் ஆச்ரிதர்களுக்கு துர்லபன்' என்கிற நிந்தைக்கிடமாகுமாயின்), உங்களுக்கு ப்ரதிகூலமான செயலுடைய என் புஜத்தையும் சேதித்து விடுவேன். என் பாதாரவிந்தங்களின் பராகத்தை [illegible] வரும் பரிசுத்திமன்று புகழ்கின்றூர்களே; இதற்குக் காரணம் நான் ப்ராஹ்மணர்களை ப்ரத்தையுடன் [illegible] வருகையே. ப்ராஹ்மணஸேவையால்தான் என் பாத[illegible] [illegible] பாவனமாயின. அன்றியும், என்னை [illegible]

மாத்ரத்தில் ஸமஸ்தலோகங்களின் பாபத்தையும் நான் போக்க வல்லனாயிருப்பதும், நான் ஸௌசீல்யமுடையவனாயிருப்பதும் ஆகிய இக்குணங்களெல்லாம் எனக்கு ப்ராஹ்மண ஸேவையால் தான் உண்டாயின. இப்படிப்பட்ட நான் ஆதரவில்லாதிருப்பினும், என்னை ஸ்ரீமஹாலக்ஷ்மி விடாமல் தொடர்ந்திருப்பதற்குக் காரணம் ப்ராஹ்மண ஸேவையே. எந்த ஸ்ரீமஹாலக்ஷ்மியின் கடாக்ஷம் சிறிது கிடைப்பதற்காக மற்றை ப்ரஹ்ம ருத்ராதிகள் அனைவரும் பற்பல வ்ரதங்களை ஆசரிக்கின்றார்களோ, அப்படிப்பட்ட ஸ்ரீமஹாலக்ஷ்மி நான் தன்னை ஆதரியாதிருப்பினும் ப்ராஹ்மண ஸேவையின் ப்ரபாவத்தினால் என்னை விடாமல் தொடர்ந்து வருகின்றாள். மற்றும், யாகங்களில் யஜமானன் நெய் ஒழுகும்படி நெய்யில் நனைத்து ஹோமஞ்செய்யும் ஹவிஸ்ஸை அக்னியின் மூலமாய் நானே புசிக்கின்றேன். அங்ஙனமே தனது வர்ணாஶ்ரமங்களுக்கு ஏற்பட்ட கர்மங்களைச் செய்து அவற்றின் பலன்களை என்னிடத்தில் ஸமர்ப்பித்து ஸந்தோஷமுற்றிருக்கும் ப்ராஹ்மணன் கபளம் கபளமாய் புஜிக்கும்போது அந்த ப்ராஹ்மணனுடைய வாய்வழியாய் அவ்வன்னத்தை நானே புஜிக்கின்றேன். நான் அந்த ப்ராஹ்மணனது வாய்மூலமாய் எப்படி புஜிக்கிறேனோ, அப்படி அக்னியின் மூலமாய் புஜிக்கிறதில்லை. அத்தகைய ப்ராஹ்மணன் மூலமாய் புஜிக்கும்பொழுது எனக்கு உண்டாகும் த்ருப்தி அக்னியின் மூலமாய் புஜிக்கும்பொழுது உண்டாகிறதில்லை. ப்ராஹ்மணர்களின் பாததூளியைப் போல் பாவனமானது மற்றொன்றும் இல்லை. அந்த ப்ராஹ்மணர்களின் பாததூளியை நான் கிரீடங்களால் தரிக்கின்றேன். அந்த ப்ராஹ்மணர்கள் திரஸ்காரம் செய்யினும் அவர்களை எவன் தான் பெறுக்கமாட்டான்? எவன் ஆச்

சர்ய சக்தியுடையவன். என் சக்திக்கு எல்லையே கிடையாது. அதற்குத் தடையும் கிடையாது. என்னுடைய விபவங்களும் அப்படிப்பட்டவைகளே. மற்றும், என் ஸ்ரீபாத தீர்த்தமாகிய கங்கை சந்த்ரசேகரனை ருத்ரனையும் அவனோடுகூடின லோகங்களையும் புனிதஞ்செய்கின்றது. இப்படி பரம பாவனனாகிய நானும் அந்த ப்ராஹ்மணர்களின் பாததூளியைச் சிரஸா வஹிக்கின்றேன். ப்ராஹ்மணர்கள் எனக்குச் சரீரம்போன்றவர். அவர்களிடத்தில் நான் ஸர்வகாலத்திலும் மாறாமல் ஸந்நிதானமுடையவனாயிருப்பேன். இங்ஙனமே பசுக்களும் எனக்குச் சரீரமாயிருக்கும். அவைகளிடத்திலும் நான் நித்ய ஸந்நிதானம் செய்கின்றேன். எவ்விதத்திலும் ரக்ஷிப்பவரில்லாமல் அநாதங்களாகிய ப்ராணிகளும் எனக்குச் சரீரமாயிருப்பவை. அவைகளிடத்திலும் நான் நித்யவாஸஞ் செய்கின்றவன். இம்மூவரையும் எவர் பேதபுத்தியுடன் பார்க்கின்றார்களோ, அவர்கள் பாபதோஷத்தினால் கண்கெட்டவர்கள்; மற்றும், ஸர்ப்பம்போல் மிகுந்த கோபமுடையவர். அன்றியும், அவர்கள் யமதண்டனைக்கும் உட்படுவார்கள். அப்பொழுது என் ப்ருத்யனாகிய யமனது ஆதீனத்திலுள்ள இரும்பு முகமுடைய கழுகுகள் அவரது கண்களைக்குற்றிப் பாழ்செய்யும். ஆகையால் ப்ராஹ்மணர்களையும் பசுக்களையும் அந்த ப்ராணிகளையும் 'இவர்கள் பகவானைக் காட்டிலும் வேறுபட்டவர்' என்று பேதபுத்தியுடன் பார்க்கின்றவர் நரகம் அடைவார்களாகையால் அவர்களை அங்ஙனம் பேதபுத்தியுடன் பார்க்கலாகாது. அந்த ப்ராஹ்மணர்கள் ஒருக்கால் திரஸ்காரஞ்செய்யினும், 'இவர்கள் பகவன் மூர்த்திகளே' என்னும் புத்தியுடன் அவர்களைப் பூஜித்துச் சிறிதும் விகாரமின்றி அம்ருதம்போன்ற புன்னகையுடன் கூடித் தாமரை மலர்

போல் விளங்கும் முகமுடையவராகி அனுராகம் நிறைந்த மொழிகளைப் பேசிக்கொண்டு புத்ரனைப்போல் அழைப்பார்களாயின், அவர்கள் எனக்கு நேரே மஹோபகாரஞ் செய்தவராவார்கள். அவர்கள் எனது அனுக்ரஹத்திற்குப் பாத்ரமாவார்கள். ஆகையால் தங்கள் ப்ரபுவாகிய என்னுடைய அபிப்ராயத்தை அறியாமல் உங்களிடத்தில் இவர்கள் அபராதப் பட்டார்கள். ஆகையால் அதன் பலனாகிய உங்கள் சாபமாகிற தண்டனையை அனுபவித்து மீளவும் என்னிடம் வந்து சேருவார்கள். 'நாங்கள் செய்த தண்டனையே உனக்கும் ஸம்மதமாயின், நீ ப்ருத்யர்களிடத்தில் செய்யும் அனுக்ரஹமாவதென்' என்கிறீர்களோ? என் ப்ருத்யர்களாகிய இவர்களுக்கு நீங்கள் கொடுத்த சாபம் சீக்ரத்தில் முடிந்து என்னிடம் வந்துசேரும்படி ஏற்படுத்துகை என்னுடைய அனுக்ரஹத்தின் பலனே என்று மொழிந்து நின்றான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—அந்த பகவான் மொழிந்த வார்த்தை வேதத்தோடு ஒத்திருந்தது; அன்றியும் அனைவரும் ஆசைப்படத் தக்கதும் மனுஷ்யர்களால் அங்ஙனம் சொல்லமுடியாததுமாயிருந்தது. அத்தகையதான அந்த பகவானுடைய வார்த்தையைக் கேட்டு அம்முனிவர்கள் அதன் அழகையும் அவனுடைய குணத்தையும் கண்டு 'நாம் கோபமாகிற ஸர்ப்பத்தினால் கடியுண்டு மதிமயங்கி என்ன காரியம் செய்தோம்? சீ! இப்படி மஹானுபாவனாகிய இந்த பகவானுடைய ப்ருத்யர்கள் மேல் கோபங்கொண்டு சாபமிட்டோமே. இது செய்யத்தகுந்த கார்யமா?' என்று மிகவும் மனத்தில் பரிதபித்தார்கள். ('மஹானுபாவனாகிய இவன் அற்பர்களாகிய நம் விஷயத்தில் இங்ஙனம் மொழிகின்றானே.

இது விளையாட்டோ? வாஸ்தவமோ? தெரியவில்லையே' என்று அவனுடைய மொழியின் கருத்துத் தெரியாமையாலும், கோபித்துச் சாபமிட்டமையாலும் அம்முனிவர்கள் மனத்தெளிவற்றிருந்தார்கள்). அந்த பகவான் மொழிந்த வசனங்கள் சுருக்கமாகவே யிருந்தனவாயினும் அறியவேண்டிய அர்த்தங்கள் பலவும் அமையப்பெற்றிருந்தன. ஆனதுபற்றியே அவ்வசனத்தின் பொருள்கள் ஸாதாரணமாய் அறியக்கூடாதிருந்தன. மற்றும், அவ்வசனங்கள் ஆழ்ந்த கருத்துடையவைகளும் பற்பல ஆழ்ந்த பொருள்கள் அமைந்தவைகளுமாயிருந்தன. அம்முனிவர்கள் பகவான் மொழிந்த அவ்வுரையைக் கேட்டு 'இதன் பொருள் இன்னது' என்றும் அவன் மனத்தில் கொண்டிருக்கும் கருத்து இன்னதென்றும் நிச்சயித்துக் கண்டறிய முடியாதிருந்தார்கள். அந்த பகவானுடைய ஆச்சர்ய சக்தியை என்னென்றுசொல்லுவேன்? அவனுடைய யோகமாயையின் மஹிமை அற்புதமாயிருக்குமல்லவா. அவன் தனது யோகமாயையால் இந்த ப்ரபஞ்சங்களையெல்லாம் எனக்குள் மறைந்திருந்து ஸ்ருஷ்டித்து, 'இவனே ஸ்ருஷ்டித்தான்' என்று எல்லோரும் ப்ரமிக்கும்படி அந்த ப்ரபஞ்சங்களுக்கு என்னை ப்ரபுவாக ஏற்படுத்தினான். அவனுடைய செயல்களெல்லாம் இப்படியே விசித்ரமாயிருக்கும். அவன் மொழிந்த வார்த்தையின் கருத்து அறிய முடியாதிருந்தது. ஆகையால் அம்முனிவர்கள் அதைக்கேட்டு மனம் கலங்கப்பெற்றார்கள். மற்றும், தாம் வெகுகாலமாய் விரும்பியிருந்த பகவானுடைய காட்சியும் அவனோடு ஸம்பாஷணமும் அவனுடைய கருணைகடாக்ஷமும் நேர்ந்தமைபற்றி ஸந்தோஷம் அடைந்து உடம்பு முழுதும் மயிர்க்கூச்சல் உண்டாகப் பெற்றிருந்தார்கள். அவர்கள் அந்த பகவானுடைய கருத்தை

சிரஸா வஹிக்கின்றார்கள். அப்படிப்பட்ட அம்மலர்மங்கையானவள், உன் பாதாரவிந்தங்கள் பாக்யசாலிகளான பாகவதர்களால் புதுப்புதிய துளஸி மாலைகளை இட்டுப் பூஜிக்கப்படுவதையும் மேலான வண்டுகள் குடி கொண்டிருப்பதையும் கண்டு 'ஸ்ரீபாதங்களின் அழகு மேலானது. ஆகையால் நான் மார்பில் வாஸஞ் செய்பவளாயினும் யோகிகள் முதலிய பல ஸேவா ஜனங்களின் நெருக்கத்தையும் பாராமல் துளஸியுடன் பாதாரவிந்தங்களையே பணிகின்றேன்' என்று பெரு விருப்பத்துடன் உன்னை விடாமல் அனுவர்த்திக்கின்றனள். நீயோ வென்றால் உன் மனத்திற்கு மிகவும் இனியரான பரம பாகவதர்களின் ப்ரஸங்கத்தினால் ஓழிவில்லாதவனாகி இந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மியை அதிகமாக ஆதரிக்கிறதில்லை. ஆகையால் ஸ்ரீமஹாலக்ஷ்மி உன்னை விடாமல் பணிவதற்கு, ப்ராஹ்மண ஸேவை காரணமன்று. உன்னுடைய ஸௌபாக்யமும் அவளுடைய ப்ரீதியும் காரணமேயன்றி வேறில்லை. அவளை ஆதரியாமைக்குக் காரணம் ஓழிவில்லாமையே. 'ப்ராஹ்மண ஸேவையால் பரிசுத்தனானேன்' என்றாய். அதுவும் ஸரியன்று. ப்ராஹ்மணர்கள் நடக்கும் வழிகள் தோறும் படிந்திருக்கின்ற புண்யமான தூளியும் ஸ்ரீவத்ஸமென்கிற அடையாளமும் உன்னைப் பாவனஞ் செய்கின்றனவா? இல்லை. நீ இயற்கையாகவே பாவனமாயிருக்கின்றவன். எல்லையில்லாத ஸௌந்தர்யத்தையுடைய நீ ஸ்ரீவத்ஸமென்கிற அடையாளத்தை எதுக்காகத் தரிக்கின்றனை. உனக்கு இல்லாத அழகு அதனால் உண்டாக வேண்டுமோ? உண்டாகவேண்டியதில்லையே. அங்ஙனமே ஸ்வயம் பரிசுத்தனாகிய நீ ப்ராஹ்மணர்களின் பாததூளியைச் சிரஸாவஹிப்பது சுத்திக்காகவோ? அன்று. லோகசிக்ஷையின்பொருட்டே நீ அங்ஙனம் ப்ராஹ்மணர்

களின் பாததூளியைச் சிரஸாவஹிக்கின்றனே. அதற்கு வேறு காரணமில்லை. வாராய் த்ரியுகனே! (ஜ்ஞானசக்திகள் பல ஐஶ்வர்யங்கள் வீர்ய தேஜஸ்ஸுக்கள் என்கிற மூன்று இரட்டைகளையுடையவனே!) நீ தர்மஸ்வரூபன். தவம் தானம் தயை என்கிற இம்மூன்றும் உனக்கு அஸாதாரணமாயிருப்பவை. தர்மஸ்வரூபனாகிய உனக்கு இம்மூன்றும் மூன்று பாதங்கள். நீ அம்மூன்று பாதங்களால் ப்ராஹ்மணர்களிடத்தில் ஸஞ்சரிக்கின்றனே. தமோகுணம் தலையெடுத்தவரும் ரஜோகுணம் தலையெடுத்தவரும் உன்னுடைய பாதங்களாகிய அம்மூன்றையும் அழிக்கப் பார்ப்பார்கள். உனக்கு மேலான தெய்வங்களாகிய அந்த ப்ராஹ்மணர்களைப் பாதுகாக்கும் பொருட்டுச் சுத்த ஸத்வமயமான வடிவங்களைக்கொண்டு ராமக்ருஷ்ணுதி அவதாரங்களைச் செய்து அந்தத் தவம் முதலிய உன் பாதங்களை அழிக்குந் தன்மையரான தாமஸர்களையும் ராஜஸர்களையும் நிக்ரஹித்துத் தவம் தானம் தயையென்கிற அம்மூன்று பாதங்களால் ஜங்கமஸ்தாவரங்களடங்கின ஜகத்தை யெல்லாம் போஷிக்கின்றனே. இதில் ஸந்தேஹம் உண்டோ? இங்ஙனம் நீ தர்மஸம்ஸ்தாபனத்திற்காக அவதரிக்கின்றவனுகையால் உன்டைய அனுஷ்டானத்தினுல் உலகங்களைத் திருத்தும் பொருட்டு ப்ராஹ்மணர்களின் பாததூளியைச் சிரஸாவஹிக்கின்றனேயன்றி, உன் சுத்திக்காக வன்று. ப்ராஹ்மணேத்தமர்களின் குலம் உன்னுல் பாதுகாக்கத் தகுந்தது. ஆகையால் எல்லோரினும் மேன்மையுற்றிருக்கின்ற நீ அந்த ப்ராஹ்மண குலத்தைப் பூஜிப்பதினுலும் ப்ரிய வாக்யத்தினுலும் கௌரவித்துப் பாதுகாக்கா திருப்பாயாயின், அப்பொழுதே நீ ஏற்படுத்தின மங்களகரமான வேதமார்க்கமெல்லாம் பாழாய்விட்டு

ருக்கும். ஏனென்னில், நீ எல்லோரிலும் மேன்மையுடையவன். நீ எதை அனுஷ்டிக்கின்றனையோ, அதையே உலகமெல்லாம் ப்ரமாணமாகக் கொள்ளும். ஆகையால் நீ ப்ராஹ்மணர்களைப் புகழ்ந்து மேன்மைப்படுத்தாதிருப்பாயாயின், ஜனங்களும் அங்ஙனம் செய்ய முயற்சி கொள்ளமாட்டார்கள். ஆனதுபற்றி நீ ப்ராஹ்மணர்களை மேன்மைப்படுத்துவது யுக்தமே. ப்ரபூ! நீ சுத்தஸத்வத்திற்கிடமாயிருப்பவன். நீ ஜனங்களுக்கு க்ஷேமத்தை விளைக்க விரும்பிப் பற்பல அவதாரங்களைச் செய்து தர்ம விரோதிகளை வேருடன் களைகின்றனை. வேதமார்க்கம் பாழாய்விடுவது உனக்கு மிகவும் அநிஷ்டமாயிருக்குமன்றோ? நீ மூன்று லோகங்களுக்கும் ப்ரபு. நீ ஜகத்தையெல்லாம் தரிக்கின்றவன். இந்த ஜகத்தைப் போஷிக்கின்றவனும் நீயே. நீ ப்ராஹ்மணர்களின் பாதங்களில் விழுந்து வணங்கி அவர்களுடைய பாததூளியைச் சிரஸா வஹிப்பினும், உன் ப்ரபாவம் குறையாது. நீ அங்ஙனம் ப்ராஹ்மணர்களை வணங்குவது லீலையே. உலகத்திலுள்ளவர் அனைவரும் இங்ஙனம் ஆசரிக்க வேண்டுமென்று அறிவிக்கும்பொருட்டு நீ அவ்வாறு நடக்கின்றனையன்றி வேறில்லை. வாராய் ஜகதீசனே! நீ இந்த உன் ப்ருத்யர்களுக்கு நாங்கள் விதித்த தண்டனையை அனுமதி செய்தாலும், அல்லது நீ வேறு தண்டனை விதித்தாலும், அதுவுமின்றி முன்போலவே இவ்வுலகத்தில் இருக்கும்படி அனுக்ரஹம் செய்தாலும், ஸத்யமாகச் சொல்லுகிறோம், அதில் எங்களுக்கு ஸம்மதியேயன்றி, அஸம்மதி இல்லை. இங்ஙனம் நாங்கள் செய்த அபராதத்திற்குத் தகுந்தபடி எங்களுக்கும் ஓர் தண்டனை விதிப்பாயாக. 'நீங்கள் என்ன அபராதம் செய்தீர்கள்' என்கிறாயோ? நாங்கள் நிரபராதிகளான

உன் த்வாரபாலர்களுக்குப் பாபிஷ்டமான சாபம் கொடுத்தோமல்லவா. புதிதாக நுழைகிறவர்களைத் தடுப்பது த்வாரபாலர்களுக்கு இயற்கையே. ஆகையால் அவர்கள் எங்களைத் தடுத்தது தோஷமாகாது. நாங்கள் அவர்களுக்குச் சாபங் கொடுத்தது எங்களுக்கு தோஷமே. ஆகையால் அபராதிகளான எங்களுக்கு தண்டனை விதிப்பாயாக—என்றார்கள்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான் :—இந்த என் ப்ருத்யர்கள் அஸுரர்களாகப் பிறந்து அது முதல் (ஜன்மமே பிடித்து) என்னிடத்தில் கோபங் கொண்டு அதனால் என்னை எப்பொழுதும் பாவனை செய்து (த்யானஞ் செய்து) அதன் மூலமாய் என்னுடைய ஸம்பந்தம் எப்பொழுதும் மாறாமல் தொடரப்பெற்று அதன் ப்ரபாவத்தினால் சீக்ரமாகவே மீண்டு என்னிடம் வந்து சேருவார்கள். வாரீர் அந்தணர்களே! நீங்கள் இந்த த்வாரபாலகர்மேல் சாபங் கொடுத்தீர்களே. அது நானே உங்கள் வாய் மூலமாய் நடத்தின கார்யம். (நானே உங்கள் வாயிலிருந்து இவர்களுக்கு இந்தச் சாபங் கொடுத்தேனன்றி நீங்கள் புத்திபூர்வகமாகச் சாபங் கொடுத்தீர்களல்லீர்). ஆகையால் இந்த உண்மையை அறிந்து நீங்கள் பரிதபிக்காதிருப்பீர்களாக—என்றான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான் :—அப்பால் அந்த முனிவர்கள், கண்களுக்கு ஆநந்தம் விளைக்கின்ற வைகுந்தனையும், ஸ்வயம்ப்ரகாசமாயிருக்கின்ற அவனுடைய வாஸஸ்தானமான வைகுண்ட லோகத்தையும் கண்டு பகவானை ப்ரதக்ஷிணம் செய்து நமஸ்கரித்து விடைபெற்று பகவானுடைய ஸம்பத்தைப் புகழ்ந்துகொண்டு ஸந்தோஷமுற்றவராகிப் புறப்பட்டுப் போனார்கள். இங்ஙனம் முனிவர்கள் போனபின்பு ஸ்ரீ பகவான் தன் ப்ருத்

யர்களை ஸமாதானப்படுத்த முயன்று இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீ பகவான் சொல்லுகிறான் :—நீங்கள் போவீர்களாக. பயப்படவேண்டாம். நீங்கள் போயினும், உங்களுக்கு ஸுகமே உண்டாகுமாக. 'இப்படி நீ எங்கள் மேல் அனுக்ரஹம் செய்வாயாயின், ப்ராஹ்மண சாபத்தைத் தடுத்து எங்களை இங்கேயே ஏன் நிறுத்திக்கொள்ளலாகாது' என்கிறீர்களோ? ப்ரஹ்ம தண்டரூபமான தேஜஸ்ஸை நான் தடுக்கவல்லனாயினும், அங்ஙனம் நான் விருப்பம் கொள்ளமாட்டேன். ஏனென்னில், எனக்கு அதுவே ஸம்மதம். நீங்கள் இவ்விடத்தினின்று வெளிப்பட்டுப்போவதை முன்னமே எனது மனைவியாகிய மலர்மங்கை ஒரு காலத்தில் கோபமுற்று நிரூபித்திருக்கின்றாள். ஆகையால் இது எனக்குமாத்ரமேயன்றி ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கும் ஸம்மதமே. 'முன்பு எப்பொழுது?' என்னில், அதையும் சொல்லுகின்றேன், கேட்பீர்களாக. நான் ப்ரணயகலஹத்தினால் வெறுமனே சயனித்துக்கொண்டிருக்கும் பொழுது என்னுடைய வாஸஸ்தானத்தினின்று ஸ்ரீதேவியானவள் வெளியில் சென்று மீளவும் உள்ளே வரும்பொழுது வாசலில் காத்திருக்கின்ற நீங்கள் அவளைத் தடுத்தீர்கள். அப்பொழுது அவள் கோபித்து இந்த அம்சத்தை நிர்த்தேசித்திருக்கின்றாள். ஆகையால் நீங்கள் என்னிடத்தில் ஸர்வகாலமும் மாறாமல் கோபம் உடையவராகி ப்ராஹ்மவித்துக்களான அந்தணரிடத்தில் பட்ட அபராதத்தின் பயனான சாபத்தைக் கடந்து அற்பகாலத்திலேயே மீண்டு என்னிடம் வந்து சேருவீர்கள்' என்றான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான் :— இங்ஙனம் பகவான் தன் த்வாரபாலர்களுக்கு ஆஜ்ஞாபித்து ஸ்ரீமஹா

லக்ஷ்மியுடன் தன்னுடைய வாஸஸ்தானம் போய்ச்சேர்ந்தான்; அந்த வாஸஸ்தானம் விமானங்களின் வரிசைகளால் நிறைந்து அவ்விமானங்களே ஆபரணங்களாகப் பெற்றுச் சிறந்த செல்வப்பெருக்குடன் கூடி அன்பிற்கிடமாகி அழகாயிருந்தது. தேவஶ்ரேஷ்டர்களாகிய அந்த த்வார பாலர்கள் எவ்விதத்திலும் கடக்கமுடியாத ப்ராஹ்மண சாபத்தினால் வைகுண்டலோகத்தில் இருக்கும்பொழுதே ஒளிமழுங்கப் பெற்றவராகி(பல்பிடுங்கின பாம்புபோல்)கர்வம் தொலைந்து நின்றார்கள். வாரீர் குழந்தைகளே! அவர்கள் வைகுண்டலோகத்தினின்று விழுந்தார்கள். அப்பொழுது விமானங்களின் நுனியில் வீற்றிருப்பவர் 'ஹா ஹா' என்று உரக்கக் கூச்சலிட்டார்கள். அதனால் பெரிய ஹாஹாகாரம் உண்டாயிற்று. ஸ்ரீவிஷ்ணுவின் த்வாரபாலர்களாகிய அந்த தேவஶ்ரேஷ்டர்களே திதியின் கர்ப்பத்தில் ப்ரவேசித்திருப்பதும் உக்ரமுமாகிய கஶ்யபருடைய வீர்யத்தில் இப்பொழுது புகுந்திருக்கின்றார்கள். அவ்விருவரும் ஒரே தடவையில் அந்த கர்ப்பத்தில் ப்ரவேசித்தார்கள். அவர்கள் யமளர்களான அஸுரர்களாகப் பிறக்கப் போகின்றார்கள். இப்பொழுது கர்பத்திலிருக்கின்ற அவர்களுடைய தேஜஸ்ஸினால் உங்களுடைய தேஜஸ்ஸு பரிபவிக்கப்பட்டிருக்கின்றது (மறைந்திருக்கின்றது). இப்பொழுது பகவான் அவர்களைக் கொன்று உங்களுடைய தேஜஸ்ஸை நிலைநிறுத்துவான். 'அந்தபகவான் எப்போது செய்யப் போகிறான்? அவன் இங்ஙனம் செய்ய வல்லனோ?' என்று சங்கிக்கிறீர்களோ? சொல்லுகிறேன் கேளுங்கள். அவனே ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துங்காரணவஸ்து; மூன்றுலோகங்களுக்கும் அதிபதி. அவனே நமக்கு க்ஷேமங்களைச் செய்வான். இங்ஙனம் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனும் ஸர்வ

ஜகத் காரணனுமாகிய பகவானுக்கு நம்முடைய இஷ்டத்தை நிறைவேற்றுவது ஒரு பொருளோ? இது ஒரு வருத்தமோ? அவன் ஆச்சர்யமான யோகமாயையுடையவன். அவனுடைய மாயையை மஹாயோகிகளுக்கும் கடக்க முடியாது. அவன் விஷயத்தில் நீங்கள் சங்கிக்கவேண்டாம். அவன் எதை எப்பொழுது நினைப்பானோ, அதை அப்பொழுதே நிறைவேற்றவல்லவன். அவன் நமது இஷ்டத்தை அன்யாஸமாக நிறைவேற்றுவான். பதினாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

{ஹிரண்யாக்ஷ ஹிரண்யகசிபுக்களின் பிறவியும், ஹிரண்யாக்ஷனுடைய ப்ரபாபவமும், அவன் திக்விஜயம் செய்தலும்.}

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்.—தேவதைகள், இங்ஙனம் ப்ரஹ்மதேவன் தங்கள் வ்யஸனத்திற்குக் காரணம் இன்னதென்று சொல்லக் கேட்டு, 'ஈஶ்வரன் க்ஷேமத்தை விளைப்பான்' என்ற வசனத்தினால் பயம் தீர்ந்தவராகி அனைவரும் ப்ரஹ்ம லோகத்தினின்று ஸ்வர்க்கம் போய்ச் சேர்ந்தார்கள். பிறகு திதியோவென்றால், தன்பர்த்தாவான காஶ்யபர் 'உன் பிள்ளைகள் மூன்று லோகங்களையும் தேவர்களையும் பரிதபிக்கச் செய்வார்கள்' என்று மொழிந்த வசனத்தை நினைத்து 'என் குழந்தைகளுக்கு தேவதைகளால் என்ன பயம் நேரிடுமோ' என்று சங்கித்துக் கொண்டிருக்கையில், நூறாண்டுகள் நிரம்பின. அங்ஙனம் நூறாண்டுகள் நிரம்பினபின்பு அந்த திதி ஓரே காலத்தில் இரண்டு பிள்ளைகளைப் பெற்றாள். அவர்கள் பிறக்கும் பொழுது அவ்விடத்தில் ஸ்வர்க்கத்திலும் பூமியிலும் அந்தரிக்ஷத்திலும் உலகங்களுக்கு மிகவும் பயங்கரங்களான பற்பல உற்பாதங்கள்

விழுந்தன. பர்வதங்களோடு கூடின பூமியின் ப்ரதேசங்களெல்லாம் நடுக்க முற்றன. திசைகளெல்லாம் ஜ்வலித்தன. குறைக்கொள்ளிகளும் இடிகளும் விழுந்தன. உலகங்களுக்கு மேல் வரும் பீடையை அறிவிக்கின்ற தூமகேது முதலியவைகளும் தோன்றின. அப்பொழுது மிகவும் பயங்கரமான சுழற்காற்றுகள் வீசின. அவை சிறிதும் மேற்படமுடியாமல் கடினமான ஸ்பர்சமுடையவைகளாயிருந்தன. மற்றும், அவை 'பட்பட்' என்கிற த்வனிகளை விளைத்தன; பெருப்பெரிய வ்ருக்ஷங்களையும் வேரோடு பிடுங்கின. அவற்றிற்கு வெகுதூரம் மேற்கிளம்பின தூட்களே த்வஜங்கள்போல் தோன்றின. அப்பொழுது திடீலென்றுமேகங்கள் கூட்டங்கூட்டமாய் ஆகாசத்தில் கிளம்பின. அம்மேகங்களில் மின்னற்கள் அட்டஹாஸம் செய்பவைபோல் மின்னின. அம்மேகஸமூஹங்களால் ஆகாயத்தில் ஸூர்யன்முதலிய ஒளியுள்ள க்ரஹங்கள் எவையும் புலப்படவில்லை; எல்லாம் மறைந்தன. அதனால் ஆகாயம் முழுவதும் இருள் மூடப் பெற்றிருந்தது. ஆகையால் ஆகாயத்தில் அந்தந்த ஸ்தானங்கள் எல்லாம் சிறிதும் கண்ணுக்குத் தோற்றாதிருந்தன. ஸமுத்ரம் பேரலைகள் மேலெழுப்பெற்று அவ்வலைகளால் இடையிலுள்ள மகரமீன்முதலிய ஜலஜந்துக்களெல்லாம் கலங்கப்பெற்று வருத்தமுற்றதுபோல் பெருங்கோஷமிட்டது. வாபீ கூப தடாகாதிகளும் நதிகளும் வாடிவதங்கின தாமரைமலர்களுடையவையாகிக் கலங்கின. சந்த்ர ஸூர்யர்கள் இருவரும் ராஹுவினால் பீடிக்கப்பட்டிருந்தார்கள். அவ்விருவர்க்கும் அடிக்கடி பரிவேஷங்கள் உண்டாயின. ஆகாயத்தில் மேகமில்லாமலே மேககர்ஜனங்கள் உண்டாயின. பர்வத குஹைகளினின்று ரதகோஷங்கள் போன்ற பெரும் த்வனிகள் செவிப்பட்டன. க்ராமங்

களின் இடையிலுள்ள நரிகள் முகங்களால் தீவ்ரமான அக்னியைக் கக்கிக்கொண்டு அமங்களமாகச் சத்தமிட்டன. இங்ஙனமே நரிகளும் கோட்டான்களும் பயங்கரமான த்வனிகளைச் செய்தன. நாய்கள் கழுத்தை உயரத் தூக்கிக் கொண்டு ஆங்காங்கு ஸங்கீதம்போலும் ஊளையிடுவது போலும் பலவாறு குலைத்தன. கழுதைகள் கடினமான தமது குளம்புகளால் பூமியைக் குற்றிக்கொண்டு கீச்கீச்சென்னும் சப்தங்களைச் செய்வதில் மிகவும் உத்ஸாஹமுடையவையாகி மதித்துக் கூட்டங்கூட்டமாய் ஓடின. பக்ஷிகள் இங்ஙனம் அமங்களமான சப்தங்களைக் கேட்டு பயந்து கூச்சலிட்டுக்கொண்டு தந்தமது கூடுகளினின்று வெளிக்கிளம்பி விழுந்தன. இடைச்சேரிகளிலும் அரண்யங்களிலுமுள்ள பசுக்கள் மலமூத்ரங்களை விட்டன. பசுக்கள் ரக்தங்களைக் கறந்து பயந்தன. மேகங்கள் சீயைப் பெய்தன. ஆங்காங்கு ஆலயங்களிலுள்ள தேவப்ரதிமைகள் கண்ணீர் பெருக்கின. காற்றில்லாமலே மரங்கள் முறிந்து விழுந்தன. குரு புதன் முதலிய சுபக்ரஹங்களையும் மற்றும் பல நக்ஷத்ரங்களையும் அங்காரகன் முதலிய மற்ற க்ரூரக்ரஹங்கள் பீடித்துக் கொண்டு கடந்து சென்றன. வக்ரகதியாகத் திரும்பி வந்து ஒன்றோடொன்று யுத்தஞ் செய்தன. இவையும் மற்றும் பல உத்பாதங்களும் உண்டாயின. ப்ரஹ்மபுத்ரர்களான மரீசி முதலியவர் தவிர மற்ற ப்ரஜைகளெல்லோரும் அந்தந்த உத்பாதங்களின் பலன்களை அறியாதவராகையால் பயந்து ஜகத்தெல்லாம் பாழாய்ப்போகிறதென்று நினைத்தார்கள். ப்ரஹ்மபுத்ரர்களோவென்றால் த்ரிகாலத்திலுமுள்ள வஸ்துக்களின் ஸ்வரூபத்தை அறிந்தவராகையால் பயப்படவில்லை. அங்ஙனம் பிறந்த அவ்வஸுரர்களிருவரும் சீக்ரமாகத் தம்முடைய பௌருஷம் வெளியி

பெற்று இரும்புபோல் மிகவும் உறுதியாயிருக்கின்ற தேஹத்துடன் மேலான பர்வதங்கள்போல் வளர்ந்தார்கள். அவர்கள் ஸ்வர்ணமயமான கிரீடங்களின் நுனிகளால் ஆகாயத்தையளாவிக்கொண்டிருந்தார்கள். தோள்வளைகளுடன் திகழ்கின்ற புஜங்களால் திசைகளைத் தகைந்தார்கள். பாதங்களால் அடிவைப்புகள் தோறும் பூமியை நடுங்கச் செய்தார்கள். இடையில் மிகவும் அழகான அரைநூல் மாலை அணிந்து ஸூர்யனை அதிக்ரமித்து ப்ரகாசித்தார்கள். கச்யபப்ரஜாபதி அவ்விருவர்களில் எவன் தன் தேஹத்தினின்று முதலில் பிறந்தானோ, அவனுக்கு ஹிரண்யகசிபுவென்று பேர் இட்டார்; திதி எவனை முதலில் ப்ரஸவித்தாளோ, அவனுக்கு ஹிரண்யாக்ஷனென்று பேர் இட்டார். ஹிரண்யகசிபு தன் புஜபலத்தினால் கொழுத்தவனாகி ப்ரஹ்மதேவனிடம் வரம் பெற்று எவ்விதத்திலும் மரணமற்றவனாகி லோகபாலர்களோடு கூடின மூன்று லோகங்களையும் தனக்கு வசப்படுத்திக் கொண்டான். ஹிரண்யகசிபுவின் தம்பியாகிய ஹிரண்யாக்ஷன் தமையனுடைய அன்பிற்கிடமாகித் தானும் தமையனிடத்தில் ப்ரீதியுடையவனாயிருந்தான். அவன் கதையைக் கையில் ஏந்திக்கொண்டு யுத்தஞ்செய்ய விருப்பமுற்று எங்கே யுத்தம் கிடைக்குமென்று தேடிக்கொண்டு ஸ்வர்க்கம் சென்றான். அந்த ஹிரண்யாக்ஷன் பிறர்க்குப் பொறுக்கமுடியாத மஹா பலமுடையவன். அவன் கால்களில் ஸ்வர்ணமயமான சிலம்புத் தண்டைகள் அணிந்திருந்தான். அவை அழகாய் ஒலித்துக்கொண்டிருக்கும். மற்றும், அவன் புஷ்பங்கள் [1] பல்லவங்கள் முதலியவற்றால் தொடுக்கப்பெற்ற வைஜயந்தியென்னும் மாலையால் அலங்காரமுற்றிருப்பான். தோளில் பெரிய கதை

1. தளிர்கள்.

யைத் தரித்துக்கொண்டு மனோபலம் தேஹபலம் வரபலம் இவைகளால் கர்வமுற்று எவ்விதத்திலும் தடுக்கமுடியாதவனும் எங்கும் பயமற்றவனுமாயிருப்பான். அவனைக் கண்டு தேவதைகள் பயந்து கருடனைக் கண்ட ஸர்ப்பங்கள்போல் மறைந்தார்கள். அஸுரஶ்ரேஷ்டனாகிய அந்த ஹிரண்யாக்ஷன், தன் தேஜஸ்ஸினால் இந்த்ரனோடுகூடத் தேவர்களெல்லோரும் மறைந்திருப்பதை அறிந்து மதித்து அவர்களைக் காணாமல் மிகவும் ஸிம்ஹநாதம் செய்தான். அப்பால் அந்த ஹிரண்யாக்ஷன் ஸ்வர்க்கத்தினின்று திரும்பி விளையாட விரும்பி ஆழ்ந்திருப்பதும் பயங்கரமான அலைகளின் த்வனியுடையதுமாகிய ஸமுத்ரத்தில் ப்ரவேசித்து மஹா பலமுடையவனாகையால் யானைபோல் அதைக் கலக்கினான். அங்ஙனம் அவன் ஸமுத்ரத்தில் இழிந்தவுடனே வருணனுடைய ஸேனா ஜனங்களாகிய ஜல ஜந்துக்களெல்லாம் பயந்து மதிமயங்கி, அவ்வஸுரன் அவைகளை உபத்ரவஞ் செய்யாதிருப்பினும் அவனுடைய தேஜஸ்ஸினால் பரிபவிக்கப்பட்டுக் கூட்டங்கூட்டமாய் வெகுதூரம் ஓடிப்போயின. மிகுந்த பலமுடைய அவ்வஸுரன் அனேக வர்ஷங்கள் வரையிலும் ஸமுத்ரத்தில் உலாவிக் காற்றினால் கிளப்பப்பெற்ற பெருப்பெரிய அலைகளை, இரும்பினால் செய்யப்பட்ட தன் கதையினால் அடிக்கடி அடித்துக்கொண்டிருந்தான். இப்படியிருக்கையில் அவன் ஒருகால் அந்த ஸமுத்ரத்திலுள்ள விபாவரியென்கிற வருணபட்டணத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அந்த விபாவரியென்னும் பட்டணத்தில் அஸுரர்களின் லோகமாகிய பாதாளத்தைப் பாதுகாப்பவனும் ஜலஜந்துக்களுக்கு அதிபதியுமாகிய வருணனைக் கிட்டிச் சிறிது நகைத்து அவனை வஞ்சிக்கும்பொருட்டு அற்பன்போல் நமஸ்காரஞ் செய்து 'வாராய் அதிராஜனே!

வருணா! எனக்கு யுத்தம் கொடுப்பாயாக' என்றான். மீள வும் அவன் அவ்வருணனைப் பார்த்து அவனுக்கு யுத்தத் தில் விருப்பத்தை விளைவிப்பவனாகி இங்ஙனம் மொழிந் தான்.

ஹிரண்யாக்ஷன் சொல்லுகிறான் :—நீ லோகபாலர் களில் மேலானவன்; பெரும்புகழுடையவன். வீணாகக் கொழுத்துத் தங்களைத் தாமே பெரிய வீரர்களென்று நினைத்திருக்கும் துஷ்டர்களுடைய வீர்யத்தைப் போக் கடிக்குந் தன்மையன். 'நான் இத்தகையனென்று நீ எப் படி நிச்சயித்தாய்' என்கிறாயோ? ப்ரபூ! நீ முன்பு ஸமஸ்த தைத்யர்களையும் தானவர்களையும் ஜயித்து ராஜ ஸூய யாகத்தினால் தேவனை ஆராதித்தாயல்லவா' என் றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார் :—அந்த வருணபக வான், மதம் வளரப்பெற்றவனும் தனக்கு த்வேஷியு மாகிய அஸுரன் இங்ஙனம் மொழிந்ததைக் கேட்டு நன்கு வஞ்சிக்கப்பெற்றவனாகிப் பெருங் கோபம் உண்டா கப்பெற்றான். ஆயினும், அவன் அந்தக் கோபத்தைத் தன் புத்தியால் அடக்கிக்கொண்டு அவ்வஸுரனைக் குறி த்து இங்ஙனம் மொழிந்தான்.

வருணன் சொல்லுகிறான் :—வாராய் அஸுரனே! நாம் சண்டை செய்யும் விருப்பம் நீங்கப் பெற்றவர். அஸுரஸ்ரேஷ்டனே! யுத்தத்தில் ஸமர்த்தனாகிய உன்னை எவன் யுத்தத்தில் ஸந்தோஷிக்கச் செய்வானோ, அப் படிப்பட்டவன் பரமபுருஷனைத் தவிர மற்ற எவனும் எனக்குப் புலப்படவில்லை. நீ யுத்தமார்க்கங்களில் மிகவும் வல்லமையுடையவன். உனக்குத் தகுமாறு யுத்தங் கொடு த்து ஸந்தோஷப்படுத்த வல்லவன் எவனும் எனக்குத் தெரியவில்லை. ஆனால் பரமபுருஷன் ஒருவன் மாத்திரம்

உனக்குத் தகுந்த யுத்தங்கொடுத்து உன் விருப்பத்தை நிறைவேற்றி உன்னை ஸந்தோஷப்படுத்துவான். ஆகையால் அந்தப் பரமபுருஷனிடம் போவாயாக. 'அவன் யார்' என்னில், சொல்லுகிறேன் கேட்பாயாக. உன்னைப் போன்ற மனஸ்விகள் எந்தப் புருஷனை ஸ்தோத்ரஞ் செய்கின்றார்களோ, அவனே அந்தப் பரமபுருஷனாவான். அவன் மஹாவீரன். அத்தகையனான அந்தப் பரமபுருஷனைக் கிட்டி கர்வமெல்லாம் தொலைந்து வீரர்கள் மாண்டு சயனிக்கும்படியான யுத்தபூமியில் நாய்நரிகளால் சூழப் பெற்றவனாகிச் சயனிப்பாய். 'உன்னைப்போல் அவனும் சண்டைசெய்வதில் விருப்பமற்றிருப்பானாயின், என் செய்யலாம்' என்கிறாயோ? அந்த பகவான் உன்னைப்போன்ற துஷ்டர்களை அழிக்கும்பொருட்டும் ஸத்புருஷர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டும் வராஹாதி அவதாரங்களைக் கொள்கின்றான். ஆகையால் அவன் விஷயத்தில் நீ அங்ஙனம் சங்கிக்க இடமில்லை. நீ அவனிடம் சென்று உன் விருப்பம் நிறைவேறப் பெறுவாய்' என்றான். பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

### ஹிரண்யாக்ஷ ஹிரண்ய கசிபுக்களின் உற்பத்தியும், அவர்களில் ஹிரண்யாக்ஷனுடைய ப்ரபாவமும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் விதுரனே! அனந்தரம் [1] துர்மதனாகிய அவ்வஸுரன் அங்ஙனம் வருணன் மொழிந்ததைக் கேட்டுத் தனக்கு எதிரே நின்று யுத்தம் செய்யவல்லவன் ஒருவன் உளனென்று தெரிந்தமையால் மனக்களிப்புற்றவனாகி, அந்தப் பரம புருஷனுடைய பெருமையைப் பொருள் செய்யாமல், நார

1. கொடிய கொழுப்புடையவனாகிய.

தர் மூலமாய் அந்த பகவானுடைய மார்க்கத்தை அறிந்து விரைவுடன் பாதாளத்தில் ப்ரவேசித்தான். அவ்விடத்தில் வராஹ உருவங் கொண்டு பர்வதம்போல் நிகழ்கின்றவனுகிக் கோரையின் நுனியால் பூமியை மேலுக்கெடுக்கின்ற பரம்புருஷனைக் கண்டான். அவனெவ்விடத்திலும் வெற்றிபெறுந் தன்மையன். தாமரை மலர்போன்று சிவந்த ஒளியுடைய தன் கண்ணோக்கத்தினுலும் தன் தேஹகாந்தியாலும் அம்மஹா புருஷன் ஹிரண்யாக்ஷனுடைய தேஜஸ்ஸையெல்லாம் பறித்தான். அவ்வஸுரன் அந்த வராஹ பகவானைக் கண்டு 'காடுகளில் திரிகின்ற ம்ருகம் அன்றோ இங்குப் புலப்படுகின்றது' என்று பரிஹாஸம் செய்தான். அப்பால் அந்த பகவானைப் பார்த்து அவ்வஸுரன் இங்ஙனம் மொழிந்தான்.

ஹிரண்யாக்ஷன் சொல்லுகிறுன் :—அறிவில்லாத மூடனே! இப்படி வருவாயாக; பூமியை விடு. பாதாளத்தில் வாஸம் செய்பவராகிய எங்களுக்கு இந்த பூமியை ப்ரஹ்மதேவன் கொடுத்தான். இல்லையாயின், இந்த பூமி பாதாளத்தில் இறங்கி வர நேராதல்லவா? அடா! தேவாதமனே! நான் பார்த்துக்கொண்டிருக்கையில் நீ இந்த பூமியுடன் க்ஷேமமாகத் திரும்பிப்போகமாட்டாய். பன்றியினுருவங் கொண்டவனே! உன்னைப் பொசுக்கிவிடுவேன். எமது சத்ருக்களாகிய தேவதைகள் உன்னை இங்ஙனம் பாழாகும்பொருட்டே வளர்த்தார்களாயென்? நீ [1] பரோக்ஷத்தில் ஜயிப்பவன்; மாயையால் அஸுரர்களை ஹிம்ஸிக்கின்றாய். அடா அறிவுகெட்ட மூடனே! நீ மாயையே பலமாகக் கொண்டவன்; பௌருஷம் அற்பமாயிருக்கப்பெற்றவன். இப்படிப்பட்ட உன்னைக் கொன்று என்

1. கண் மறைவில்.

னுடைய நண்பர்களின் சோகத்தைப் போக்குகின்றேன். எமது புஜத்தினின்று விடுபட்ட கதையால் நீ தலை சிதறப் பெற்று மாண்டுபோகையில், மூடர்களான எந்த ரிஷி களும் எந்த தேவதைகளும் உனக்கு இப்பொழுது பூஜை செய்கின்றார்களோ, அவர்களெல்லோரும் அவலம்பமற்று (வேரறுந்த வ்ருக்ஷங்கள்போல்) தாமே பாழாய் விடுவார் கள்' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:-அந்த பகவான் சத்ருவா கிய அந்த அஸுரனுடைய வெசவுகளாகிற ஈட்டிகளால் பீடிக்கப்பட்டவனாயினும் கோரையின் நுனியிலிருக்கின்ற வளும் பயப்படுகின்றவளுமாகிய பூமிதேவியைப் பார்த்துச் சத்ருவின் துர்ப்பாஷணைகளால் விளையும் வருத்தத்தைப் பொறுத்துக்கொண்டே, பெண்யானையுடன் கூடின யானை யானது மகரமீனால் அடிக்கப்பட்டு வெளிக்கிளம்பிப் போ வதுபோல், ஸமுத்ர மத்யத்தினின்று வெளிக்கிளம்பிப் போனான். அங்ஙனம் ஜலத்தினின்று வெளிக்கிளம்புகின்ற பகவானை அவ்வஸுரன், யானையை மகரமீன் துரத்து வதுபோல், பின்றொடர்ந்து துரத்திக்கொண்டு பயங்கர மான தன்கோரைகள் நன்கு வெளியாகும்படி வாயைத் திறந்து அப்பொழுது இடியின்கோஷம் போன்ற பே ரொலியுடன் இங்ஙனம் மொழிந்தான்.

ஹிரண்யாக்ஷன் சொல்லுகிறான்.—வெட்கமில்லாத அஸத்துக்களுக்கு எதுதான் செய்யத்தகாத கார்யம்.? 'இதைச் செய்தால் நம்மை ஜனங்கள் பரிஹஸிப்பார்கள் இது நிந்தைக்கிடமான கார்யம். ஆகையால் நாம் இதைச் செய்யலாகாது. செய்யில், நம்மை எல்லோரும் பழிப்பார் கள்' என்று வெட்கப்படும் தன்மையர்க்கன்றோ சில கார் யம் நிந்தைக்கிடமென்று பரிஹரிக்கத்தக்கதாகும். வெட் கமில்லாதவர்க்குச் செய்யத்தகாத கார்யம் எதுவுமே

இல்லை. அவர்கள் நிந்தைக்கிடமான கார்யங்களையும் செய்வார்கள்' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—அந்த பகவான் அவ்வஸுரன் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுது அவனைப் பொருள் செய்யாமல் ஜலத்தின்மேல் ஸஞ்சார யோக்யமான இடத்தில் பூமியை வைத்து அந்த பூமியில் தன் பலமாகிய ஆதாரசக்தியை ஸ்தாபித்தான். அப்பொழுது அம்மஹா புருஷனை ப்ரஹ்மதேவன் ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டிருந்தான். தேவதைகள் அவன் மேல் புஷ்பங்களை இறைத்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவ்வஸுரன் அந்த பகவானைப் பின்றொடர்ந்து வந்தான். அவன் ஸ்வர்ணமயமான ஆபரணங்களை அணிந்து பெரிய கதையை ஏந்திக்கொண்டு ஸ்வர்ண மயமான கவசம் தரித்து ஜ்வலித்துக் கொண்டிருந்தான். அவ்வஸுரன துர்ப்பாஷணைகளால் அடிக்கடி ஸ்ரீவராஹ பகவானுடைய மர்மங்களைப் பீடித்துக்கொண்டு அவனைப் பின்றொடர்ந்தான். அக்காலும் அந்த வராஹபகவான் கடுங்கோபமுடையவனுகிச் சிரித்துக்கொண்டு பரிஹாஸத்துடன் பேசினுன்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— அஸுரனே! எம்மைக் காட்டில் ஸஞ்சரிக்கின்ற ம்ருகமென்று யாது மொழிந்தனையோ, அது வாஸ்தவமே. ஆனுல் உங்களைப் போன்ற நாய்களைத் தேடும் பொருட்டு நாங்கள் ம்ருகவேஷம் பூண்டோம். ம்ருத்யுவின் பாசங்களால் கட்டுண்டிருக்கின்ற நீ தன்னைத் தானே அமங்களகரமாகப் புகழ்ந்துகொள்வதை வீரர்கள் கொண்டாட மாட்டார்கள். பாதாளவாஸிகளான உங்கள் பூமியை நாங்கள் எடுத்துக்கொண்டுபோக வந்தோமல்லவா? பூமி உங்களுடையதென்பதில் ஸந்தேஹம் உண்டோ? (புத்திகேட்டவனே!

இந்த பூமியை எங்களுடையதென்று என் வீணுகப் பிதற்றுகிறுய். பூமிக்கும் உங்களுக்கும் என்ன ஸம்பந்தம்?) நாங்கள் வெட்கமற்று உங்கள் பூமியை எடுத்துக் கொண்டுபோக வந்தோம். நீ எங்களைக் கதையால் அடித்துத் துரத்துகின்றுய். ஆயினும் எந்த ப்ரகாரத்தினுலாவது யுத்தத்தில் எதிர் நிற்கின்றோம். பலிஷ்டனுகிய உன்னுடன் விரோதத்தை ஏறிட்டுக் கொண்ட பின்பு நாங்கள் எங்குப் போவோம்? எங்குப் போயினும் உன்னிடத்தினின்று தப்பித்துக்கொள்ள வல்லரல்லோம். (அறிவு கெட்ட மூடனே! நீயன்றோ வெட்கமில்லாமல், பூமி எங்களுடையதென்று பிதற்றுகின்றுய். நாங்கள் வெட்கமற்றவரல்லோம். கதையால் எங்களைத் துரத்திவிடுவதாக நினைத்துக் கொண்டிருக்கின்றனே. நீயே எம்மால் துரத்தப்பெற்று ஓடப்போகின்றனே. இதைத் திடமாக நெஞ்சில் நினைத்துக்கொள். யுத்தத்தில் உன்னைக்காட்டிலும் மேலாகவே நாங்கள் முயல விரும்புகின்றோம். விருப்பம் மாத்ரமே அன்று; கார்யத்திலும் பின்வாங்கமாட்டோம். பலிஷ்டர்களாகிய எங்களுடன் விரோதித்துக் கொண்டு நீ எங்குப்போய்த் தப்பித்துக்கொள்ளப் பார்க்கின்றனே? எங்குப் போயினும் தப்பித்துக்கொள்ள வல்லனல்லை). நீ பதாதிகளின் கூட்டத்தில் தலைமையுள்ள வீரர்களைக்காட்டிலும் மேலானவன். அத்தகைய நீ ஏன் வெறுமனே இருக்கின்றுய்? நீ எம்மைப் பரிபவிக்க வேண்டுமென்று மனத்தில் கருதுகின்றனையல்லவா. உன் விருப்பத்தை ஈடேற்றுவதற்கு ப்ரயத்னிப்பாயாக. நீ சங்கையின்றி எம்மை வதித்து உனது நண்பர்களின் கண்ணீரைத் துடைக்கப் பார்ப்பாயாக. எவன், தான் செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுதிருப்பானே, அவன் ஸபைக்குத் தகுந்தவனல்லன். அவன் பத்துஜனங்கள் சேர்ந்த ஸபைக்கு வருவா

னுயின், 'இவன் ப்ரதிஜ்ஞை செய்து அதை நிறைவேற்ற முடியாமல் நின்றான்' என்று நிந்திப்பார்கள். ஆகையால் நீ செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுவாயாக. (நீ வீரர்களில், சேர்ந்தவனேயல்லே. உனக்குச் சிறிதும் வீர்யமில்லை. நீவீணுக எம்மைப் பரிபவிக்க வேண்டுமென்று நினைக்கின்றனையன்றி அது உனக்கு ஸாத்யமன்று. என்னைக்கொன்று உன்னுடைய நண்பர்களின் கண்ணீரைத் துடைக்கப் பார்க்கின்றனையல்லவா. பயப்படுந்தன்மையுள்ள உனக்கு அது எப்படி கைகூடும்? நீ வீண்ப்ரதிஜ்ஞை செய்து அது நிறைவேற்றுந் திறமையற்றிருக்கின்றமையால் ஸபைக்குத் தகுந்தவனல்லே. இப்பொழுது என் கையில் மாண்டு செய்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுமல் நிந்தைக்கிடமாகப் போகின்றனை)' என்றான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் பகவான் அவ்வஸுரனைத் திரஸ்கரித்துக் கோபத்தினால் மிகவும் பரிஹாஸஞ் செய்தான். இதைக் கேட்ட அவ்வஸுரனும் தூண்டப்பெற்ற சிறந்த ஸர்ப்பம் போல் பெருங்கோபத்தை யடைந்துக் கொண்டான். அங்ஙனம் கோபாவேசமுற்ற ஹிரண்யாக்ஷன் கோபத்தின் மிகுதியால் பெருமூச்செறிந்துகொண்டிருந்தான்; அன்றியும், இந்த்ரியங்களெல்லாம் கலங்கப்பெற்றான். அத்தகையனுகிய அந்த ஹிரண்யாக்ஷன் ஸமீபத்தில் வந்து பலம் உள்ளளவும் கதையினல் பகவானை அடித்தான். அந்த ஸ்ரீபகவானும் சத்ருவாகிய அஸுரன் தன்மார்பில் விடுத்த கதையின் வேகத்தைப் பரிஹரித்துக் கொண்டான். அவன் அந்த கதை வேகத்துடன் தன்மேல் விழவரும்பொழுது தான் இருந்த இடத்தினின்று கொஞ்சதூரம் குறுக்கே சென்று, யோகம் கைபுகுந்த மஹாயோகியானவன் ம்ருத்யுவைத் தடுப்பது போல், அந்த கதையைத் தன் மேல் படவொட்டா

மல் தடுத்தான். அவ்வஸுரன் அந்த கதை குறிதவறிக் கீழ்விழுவதற்கு முன்னமே அதை எடுத்துக் கொண்டு மீளவும் அடிக்கடி சுழற்றிக்கொண்டிருந்தான். அது கண்டு அவ்வஸுரன்மேல் மிகவும் கோபாவேசமுற்ற பகவான் கோபவேகத்தினால் உதட்டைக் கடித்துக்கொண்டு அவனை எதிர்த்து ஓடினார். அனந்தரம் ஸமர்த்தனாகிய பகவான் தன்கதையால் சத்ருவை வலப்பக்கத்தில் அடித்தான். வாராய் நல்லியற்கையுடைய விதுரனே! அவ்வஸுரன் கதாயுத்தத்தில் வல்லமையுடையவன். ஆகையால் தன் வலத்தோளில் பாயும்படி ஸ்ரீஹரி ப்ரயோகித்த கதை தன்மேல் விழுவதற்கு முன்னமே அதைத் தன் கதையால் அடித்தான். இங்ஙனம் ஹிரண்யாக்ஷன் ஸ்ரீஹரி ஆகிய இருவரும் கோபமும் பரபரப்பும் வளரப்பெற்று ஒருவரை யொருவர் ஜயிக்கவேண்டுமென்னும் விருப்பத்துடன் பெரிய கதைகளால் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டார்கள். அந்த ஸ்ரீவிஷ்ணுவும் அஸுரனும் ஆகிய இருவரும் ஒருவர்மேல் ஒருவர் பொறாமையுடன் கூரான கதைகளால் அங்கங்களை அடித்துக்கொண்டிருக்கையில், அடிபட்ட இடங்களினின்று ரக்தம் பெருகிக்கொண்டிருந்தது. அவர்கள் அந்த ரக்தத்தின் நாற்றத்தை மோந்து மேன்மேலும் கோபம் வளரப்பெற்று பூமியின் நிமித்தமாக ஒருவரை யொருவர் ஜயிக்கவேண்டுமென்னும் விருப்பத்தினால் கதாயுத்தத்தில் ஏற்பட்ட அற்புதமான பலவகை நடைகளில் ஸஞ்சரிப்பவராகி, மதித்த வ்ருஷபங்கள்போல் யுத்தம் செய்தார்கள். அவர்களுடைய யுத்தமானது மிகவும் விளக்கமுற்றிருந்தது. யஜ்ஞமூர்த்தியாகிய பகவான் தன் ஸங்கல்பத்தினால் வராஹ உருவம் கொண்டவன். அம்மஹானுபாவனுக்கு அவ்வஸுரனைக் கொல்வது ஒரு பொருளன்று.

ஆயினும் 'இவன் ஒருக்கால் கொழுப்படங்கி வணங்கி வருவானோ என்னவோ' என்னும் சங்கையினால் பொழுது போக்கிக்கொண்டிருந்தான். அதற்குக் காரணம் அவனிடத்தில் அனுக்ரஹமேயன்றி வேறில்லை. அவ்வஸுரனோவென்றால் சிறிதும் வணங்காமல் சண்டை செய்வதிலேயே செருக்குடையவனாயிருந்தான். வாராய் குருகுலாலங்காரனே! ஸ்ரீவிதுரனே! பகவான் யஜ்ஞங்களால் ஆராதிக்கப்படுகின்றவனும் யஜ்ஞங்களை நடத்துகின்றவனும் யஜ்ஞத்திற்குரிய த்ரவ்ய ஸ்வரூபனுமாகையால் யஜ்ஞ ஸ்வரூபனென்றும் யஜ்ஞமூர்த்தியென்றும் கூறப்படுவான். அம்மஹானுபாவனும் ஹிரண்யாக்ஷனும் பூமியின் நிமித்தமாக அங்ஙனம் யுத்தம் பண்ணிக்கொண்டிருக்கையில், அந்த யுத்தத்தைப் பார்க்கவிரும்பி ப்ரஹ்மதேவன் மரீசிமுதலிய ரிஷிகளால் சூழப்பெற்று அவ்விடம் வந்தான். தேவக்கூட்டங்களுக்குத் தலைவனும் ஜ்ஞானாதிகுணங்கள் நிறைந்தவனுமாகிய ப்ரஹ்மதேவன் அவ்விடம் வந்து, அவ்வஸுரன் மிகுமதங்கொண்டு பயமற்று எவ்விதத்திலும் ப்ரதிசெய்ய முடியாமல் எதிராளியின் செயல்களையெல்லாம் தடுப்பவனாகிப் பொறுக்கமுடியாத பராக்ரமமுடையவனாயிருப்பதையும் கண்டு ஆதிவராஹ ஸ்வரூபியாகிய ஸ்ரீமந்நாராயணனைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—வாராய் தேவாதிதேவனே! இந்த திதியின் புதல்வன் உனது பாதமூலத்தைப் பற்றின தேவதைகளுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் பசுக்களுக்கும் நிரபராதிகளான மற்றுமுள்ள ப்ராணிகளுக்கும் நிஷ்காரணமாக உபத்ரவம் செய்கின்றான். அந்த தேவாதிகள் இவன் செய்யும் உபத்ரவத்தைத் தடுக்க முயற்சி கொள்வார்களாயின், அவர்களை விரட்டி

அவரவர் பொருள்களையும் ப்ராணன்களையும் பறிக்கின்றான். இவன் எம்மிடத்தினின்று வரம்பெற்றான். அந்த வரத்தின் மஹிமையால் தன்னெதிரில் நின்று சண்டை செய்யும் [1] ப்ரதிபக்ஷி மற்றொருவனும் இல்லாதவனானான். அதனால் கொழுத்தவனாகி இவன் தனக்கு ப்ரதிபக்ஷி எவனேனும் அகப்படுவானோவென்று உலகங்களெல்லாம் திரிகின்றான். விளையாடுந் தன்மையனே! இவன் பெரிய மாயாவி. இருந்தாற் போலிருந்து யானை குதிரை முதலிய சதுரங்க பலங்களையும் தன் மாயையினால் படைக்கவல்லவன். நமக்கு இப்படிப்பட்ட ஆச்சர்ய சக்தி உண்டென்று பெருங்கர்வங் கொண்டவன். மாவெட்டியை உதறித்திரியும் மதித்த யானைபோன்றவன்; துர்ப்புத்தியுடையவன்; ஒன்றும் தெரியாத பாலகன் வாலைப் பிடித்து இழுப்பது முதலிய சேஷ்டைகளால், சீறிச்சினந்த ஸர்ப்பத்துடன் விளையாடுவதுபோல், இப்படிப்பட்ட இவ்வஸுரனுடன் விளையாட வேண்டாம். பயங்கரனாகிய இவ்வஸுரன் தனக்கு பலங்கொடுப்பதாகிய ஸந்த்யாகாலம் வரப்பெற்று ஆச்சர்யமான தன் மாயையைக்கொண்டு வளர்ந்து வருவதற்குமுன்னமே இவனை வதிப்பாயாக. நீ ஆஸ்ரிதர்களைக் கைவிடாதவனல்லவா. இப்படி இவனுடன் விளையாடிக் கொண்டிருப்பாயாயின், ஸந்த்யாகாலம் வரின், இவன் ஜயிக்கமுடியாதவனாவான். இவ்வஸுரன் இயற்கையில் தானே பெரியமாயாவி. ஸந்த்யாகாலமும் ஸஹாயமாய்க்கூடுமாயின், இவனையெவர்க்கும் ஜயிக்கமுடியாதே. பிறகு இவன் பலம் வளர்ந்து உன் விஷயத்தில் ஏதேனும் பாபம் செய்வானாயின், நாங்கள் என் படக்கடவோம்? நீ அங்ஙனம் எங்களைக் கைவிடலாகுமா? அச்சுதனே! ஆகையால் நீ இவனுடன் விளையாடிப்பொழுது போக்கிக்

1. சத்ரு.

கொண்டிருக்கவேண்டாம். ஸந்த்யாகாலம் வருவதற்கு முன்னமே இவனை வதித்து விடுவாயாக. ப்ரபூ! ஸந்த்யா காலம் உலகங்கட்கெல்லாம் ப்ரதிகூலமாயிருக்கும். இவ்வேளையில் உலகமெல்லாம் மதி மயங்கப்பெறும். இக்காலம் மிகவும் பயங்கரமாயிருப்பது. இப்படிப்பட்ட ஸந்த்யாகாலமானது இதோ ஸமீபித்து வருகின்றது. வாராய் ஸர்வாந்தர்யாமியும் ஸர்வஸ்வரூபனுமான பகவானே! இக்காலம் அஸுரர்களுக்கு ஜயத்தை விளைப்பது. ஆகையால் அந்த ஸந்த்யாகாலம் வருவதற்கு முன்னமே இவ்வஸுரனைக் கொன்று தேவதைகளுக்கு ஜயத்தை விளைவிப்பாயாக. இப்பொழுது அபிஜித்தென்னும் முஹூர்த்தம் வந்திருக்கின்றது. இது மத்யாஹ்ன முஹூர்த்தம். இது தகுந்த காலம். ஆகையால் உனது நண்பர்களாகிய எங்கள் க்ஷேமத்தின் பொருட்டு ஜயிக்கமுடியாத இவ்வஸுரனைச் சீக்ரத்தில் வதிப்பாயாக. பகவானே! ஸனத்குமாராதி ரிஷிகளின் சாபத்திற்குப் பின்பு நீ இவர்களை அனுக்ரஹித்து 'நானே உங்களை வதிக்கின்றேன்' என்று உன்னையே ம்ருத்யுவாக ஏற்படுத்தினாயல்லவா? தந்தையாகிய கஶ்யபரும் இவர்களுக்கு உன்னையே ம்ருத்யுவாக ஏற்படுத்தியிருக்கின்றார். இங்ஙனம் தனக்கு ம்ருத்யுவாக ஏற்பட்ட உன்னை இவ்வஸுரன் தெய்வாதீனமாய்த் தானே கிட்டினான். யுத்தத்தில் உன் பராக்ரமத்தைக் காட்டி மாயாவியான இவ்வஸுரனை வதித்து உலகங்களையெல்லாம் ஸுகித்திருக்கச் செய்வாயாக. பதினெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

## ஸ்ரீவராஹ பகவான் ஹிரண்யாக்ஷனை ஸம்ஹாரம் செய்தல்.

மைத்ரேயர் சொல்லுகிறார் :—அந்த ப்ரஹ்மதேவன் மொழிந்த வார்த்தை நிர்த்தோஷமும் அம்ருதம்போல் மிக்க மதுரமுமாயிருந்தது. ஸ்ரீபகவான் அந்த வார்த்தையைக் கேட்டு 'ஸர்வ ஸம்ஹாரகனை எனக்கும் சத்ரு பலத்தினின்று பயம் சொல்லுகிறனே' என்று சிரித்து ப்ரீதியை உட்கொண்டதாகிய கடைக் கண்ணோக்கத்தினால் அவ்வசனத்தை அங்கீகரித்தான். ப்ரஹ்மதேவனுடைய க்ராணேந்த்யத்தினின்று தோன்றின அவ்வராஹ பகவான், அப்பால் ஒன்றுக்கும் பயப்படாதவனும் எதிரே நின்று ஸஞ்சரிக்கின்றவனுமாகிய அவ்வஸுரன் மேல் கிளம்பி கதையினால் கன்னத்தின் கீழ் ப்ரதேசத்தில் அடித்தான். அவ்வஸுரன் அந்த கதை தன்மேல் வருவதற்கு முன்னமே அதைத் தன் கதையால் அடித்துத் தள்ளினன். அங்ஙனம் அடிக்கப்பெற்ற அந்த கதை பகவானுடைய ஹஸ்தத்தினின்று நழுவிப் பெருங் கோஷத்துடன் கீழே விழுந்தது. விழும்பொழுது அந்த கதை ஜ்வலித்துக்கொண்டு ப்ரகாசித்தது. அந்த கதை பகவானுடைய ஹஸ்தத்தினின்று நழுவி விழுந்தமை அனைவர்க்கும் ஆச்சர்யமாயிருந்தது. அப்பொழுது அவ்வஸுரன் பகவானை அடிக்க அவகாசம் நேரப்பெற்றும் ஆயுதமற்றிருக்கின்ற அந்த பகவானை அடிக்கவில்லை. அதற்குக் காரணமென்னவெனில், அவ்வஸுரன் யுத்தத்தில் ஆயுதமில்லாதவர்களை அடிக்கலாகாதென்னும் தர்மத்தை வெகு மதித்திருந்தான். ஆகையால் அவன் பகவானை அடிக்காமல் வெறுமனே எதிர்பார்த்தான். அது பகவானுக்கு மிகவும் கோபத்திற்கிடமாயிருந்தது. அங்ஙனம் பகவானுடைய கதை அடிபட்டு விழுந்ததைக் கண்டு யுத்தம்

பார்க்க வந்தவர்கள் எல்லோரும் வருந்தி ஹாஹாகாரம் செய்தார்கள். அப்பொழுது ஸமர்த்தனாகிய பகவான் அவ்வஸுரன் ஆயுதமில்லாதவனை அடிக்கலாகாதென்று தர்மத்தை எதிர்பார்த்திருந்தமைக்கு அவனை வெகு மானித்தான். உடனே பகவான் தன்னுடைய சக்ராயுதத்தை நினைத்தான். அப்பொழுது அந்தச் சக்ராயுதம் நினைத்தமாத்ரத்தில் ஜ்வலித்துக்கொண்டு மிக்க பரபரப்புடன் பகவானிடம் வந்து சேர்ந்தது. அக்காலம் திதியின் புதல்வனென்று வழங்கப்பெற்றவனும் தன்னுடைய ப்ருத்யர்களில் தலைமையுள்ளவனாயிருந்தவனுமாகிய அவ்வஸுரன்மேல் உறைந்துகொண்டு பெருவேகத்துடன் பகவானிடம் வருகின்ற ஸ்ரீஸுதர்சன சக்ரத்தைப் பார்த்து அந்த யுத்த ப்ரதேசத்தில் ஆகாசத்தில் திரிகின்ற ப்ராணிகள் அதன் ப்ரபாவத்தை அறிந்தவராகையால் 'இவ்வஸுரனை வதிப்பாயாக. உனக்கு க்ஷேமம் உண்டாகுக' என்றவை முதலிய பலவகையான வசனங்களை மொழிந்தார்கள். அவ்வஸுரன், தாமரையிதழ் போன்ற கண்களுடையவனும் சக்ராயுதம் தரித்திருப்பவனுமாகிய பகவான் எதிரே நிற்பதைக் கண்டு கோபத்தினால் இந்த்ரியங்களெல்லாம் கலங்கப்பெற்று ரோஷத்தினால் பெருமூச்செறிந்துகொண்டு தன் உதட்டைக் கடித்துக்கொண்டான். பயங்கரமான கோரைப்பற்களையுடைய அவ்வஸுரன் கண்களால் தஹிப்பவன்போல் பார்த்துக்கொண்டு எதிர்த்தோடி வந்து பகவானைக் குறித்து 'இப்பொழுது நீ அடியுண்டு மாண்டாய்' என்று மொழிந்து கொண்டே தன் கதையால் அவனை அடித்தான் யஜ்ஞமூர்த்தியாகிய ஆதிவராஹபகவான் வாயுவோடொத்த வேகமுடைய அந்த கதை வருவதற்கு முன்னமே சத்ருவாகிய அவ்வஸுரன் பார்த்துக்கொண்டிருக்கை

யில் அதைத் தனது இடக்காலால் அவலீலையாகத் தடுத்தான். அப்பால் அவனைப் பார்த்து 'ஆயுதம் எடுத்துக் கொள்வாயாக. முயற்சி செய்வாயாக. நீ அவஸ்யமாய் ஜயிக்கவேண்டுமென்று விரும்புகின்றாயல்லவா? வெறுமனே இருந்தால் எப்படி? கார்யத்தை நடத்துவாயாக' என்று மொழியவும் மொழிந்தான். இங்ஙனம் மொழியப் பெற்ற அவ்வஸுரன் தடைபட்டு விழுந்த கதையை எடுத்துக்கொண்டு அதனால் மீளவும் பகவானை அடித்துப் பெருங்கோஷத்துடன் கர்ஜித்தான். ஸ்ரீபகவான் அங்ஙனம் அஸுரனால் ப்ரயோகிக்கப்பட்டு வருகின்ற கதையைக் கண்டு சிறிதும் பயமின்றி இருந்தபடியே இருந்து கருத்மான் ஸர்ப்பத்தைப் பிடித்துக் கொள்வதுபோல், ஸமீபத்தில் வந்த அக்கதையை அவலீலையாகப் பிடித்துக்கொண்டான். இவ்வாறு தன் பௌருஷம் தடைபட்டிருக்கையில், அவ்வஸுரன் கர்வம் தொலைந்து ஒளி மழுங்கப்பெற்று 'இதோ உன் கதையை வாங்கிக்கொள்வாய்' என்று பகவான் கொடுப்பினும் அதை வாங்கிக் கொள்ள விருப்பமுறாதிருந்தான். ஆனால் அவன் என் செய்தானென்னில், மூன்று நுனிகளையுடையதும் ஜ்வலிக்கின்ற அக்னிபோல் தன் கார்யத்தை நிறைவேற்றுவதில் துடிப்பதுமாகிய சூலத்தை யஜ்ஞஸ்வரூபியும் தன் ஸங்கல்பத்தினால் வராஹ உருவங் கொண்டவனுமாகிய பகவான் மேல் ப்ரயோகிக்கும்பொருட்டு எடுத்துக்கொண்டான். அவ்வஸுரன், ப்ராஹ்மவித்தான அந்தணனைக் குறித்து [1] அபிசாரம் செய்வதுபோல், அந்த பகவானை அச்சூலத்தினால் அடிக்க விரும்பினான். அந்த பகவானோ என்றால், யஜ்ஞஸ்வரூபி; யாகங்களில் கொடுக்கும் ஹவிஸ்ஸுக்களை நேராகவும் இந்த்ராதி தேவதைகள் மூலமாகவும்

1. சூன்யம் வைத்தல் முதலியவை.

தானே புஜிப்பவன்; யாகபலன்களை நிறைவேற்றிக்கொடுப் பவன்; தன் ஸங்கல்பத்தினால் அப்ராக்ருதமான திவ்ய வராஹ உருவங் கொண்டவன். அத்தகைய பகவானிடத் தில் இச்சூலம் என் செய்ய முடியும்? ப்ராஹ்ம ஸ்வரூபத் தை உணர்ந்து ஸர்வ ப்ரகாரத்தாலும் அந்தப் பரமபுரு ஷனையே தஞ்சமாக நினைத்திருக்கும் ப்ராஹ்மணன் விஷயத்தில் அபிசாரம் முதலியவை எங்ஙனம் பயன்பட மாட்டாவோ, அங்ஙனமே இச்சூலம் முதலியவை பக வானிடத்தில் பயன்படமாட்டா. ஆயினும் அம்மூடன் அதை அறியாமல் இதனால் இவனை வதித்து விடலா மென்று நினைத்துப் பேராசையுடன் சூலத்தை எடுத்துக் கொண்டான். அஸுரர்களனைவரிலும் மஹாசூரனாகிய அந்த ஹிரண்யன் ஜ்வாலைகள் மேலெழப்பெற்று ஆகா யத்தினிடையில் ஜ்வலிக்கின்ற அந்த த்ரிசூலத்தை வீர்யம் உள்ளளவும் சுழற்றி பகவான்மேல் ப்ரயோகித்தான். முன்பு கருடன் ப்ரயோகித்த இறகை இந்த்ரன் வஜ்ரா யுதத்தினால் சேதித்தாற்போல், பகவான் கூரிய நுனி யுடைய தன் சக்ராயுதத்தினால் அந்த த்ரிசூலத்தைச் சேதித்தான். அவ்வஸுரன் தான் ப்ரயோகித்த சூலமும் பகவானுடைய சக்ராயுதத்தினால் அறுப்புண்டமை கண்டு ரோஷம் வளர்ந்தவனாகி எதிர்த்து வந்து கர்ஜித்துக் கொண்டு ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமாகிய பகவா னுடைய மார்பில் மிகவும் உறுதியான தன் முஷ்டியால் அடித்து, உடனே அந்தர்த்தானம் அடைந்தான் (கண் ணுக்குத் தெரியாமல் மறைந்தான்). வாராய் விதுரனே! இங்ஙனம் அவ்வஸுரன் முஷ்டியினால் அடிக்கையில், அடி யுண்ட ஆதிவராஹ பகவான், பூமாலையால் அடிக்கப் பெற்ற யானையைப்போல் சிறிதும் சலிக்கவில்லை. அவ்வஸு ரன் அந்தர்த்தானம் அடைந்தபின்பு யோகமாயைகளுக்கு

(ஆச்சர்ய சக்திகளுக்கு) நாதனாகிய ஸ்ரீபகவான்மேல் மாயைகளைப் பலவாறு ப்ரயோகித்தான். அந்த மாயைகளைப் பார்த்து ப்ரஜைகளெல்லோரும் பயந்து ஜகத்திற் கெல்லாம் ப்ரளயம் நேர்ந்ததென்று நினைத்தார்கள். அவ்வஸுரனுடைய மாயையால் பயங்கரமான வேகத்தையுடைய காற்றுகள் வீசத்தொடங்கித் தூட்களைக் கிளப்பிப் பேரிருளை விளைத்தன. க்ஷேபணமென்னும் யந்த்ர விசேஷங்களால் எறியப்பெற்றவைபோல் திசைகளினின்று கற்கள் அபாரமாய் வந்து விழுந்தன. மேகங்கள் மின்னல்களோடும் இடிகளோடும் கூடி துர்க்கந்தமான சீ முதலியவற்றையும் மல மூத்ரங்களையும் மயிர்களையும் எலும்புகளையும் அடிக்கடி வர்ஷித்தன. அம்மேகங்கள் குவியல் குவியலாக ஆகாசம் முழுவதும் நிறைந்தன. அதனால் ஆகாயத்தில் நக்ஷத்ரக் கூட்டங்கள் எவையும் புலப்படவில்லை. பர்வதங்கள் பலவகை ஆயுதங்களைப் பெய்து கொண்டு புலப்பட்டன. அங்ஙனமே ராக்ஷஸஸ்த்ரீகளும் அரையில் அம்பரமின்றி அம்மணங்களாகிச் சூலாயுதங்களை ஏந்தித் தலைமயிர்களை விரித்துக்கொண்டு புலப்பட்டன. ஹிம்ஸிக்குந் தன்மையுள்ள யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் காலாட்களும் குதிரைமேல் ஏறிச் சண்டை செய்யும் வீரர்களும் ரதத்திலிருந்து யுத்தஞ் செய்யும் மஹா வீரர்களும் யானைமேல் நின்ற போர்வீரர்களும் தோன்றி 'குத்து, வெட்டு, கிழி, கொல்லு' என்பவை முதலிய பயங்கரமான சொற்களைப் பெய்தார்கள். த்ரிபாத்விபூதியென்கிற பரமபதத்திற்கு நாதனாகிய பகவான் அம்மாயைகளைக் கண்டு அவற்றைப் பாழ் செய்யும் பொருட்டுத் தனக்கு மிகவும் ப்ரியமான ஸுதர்சனாஸ்த்ரத்தை ப்ரயோகித்தான். அப்பொழுது திதியானவள் 'ஜகத்ரக்ஷகனான பகவான் அவதரித்து உன் பிள்ளைகளை வதிக்கப்போகின்



639. வராஹ பகவான் ஹிரண்யாக்ஷனை ஸம்ஹரித்தலும், தேவதைகள் ஆகாசத்தினின்று பூமழை பொழிதலும்.

ருன்' என்று காஶ்யபர் மொழிந்த வசனத்தை நினைத்துக் கொண்டாள். என் புதல்வர்களுக்கு என்வருமோ வென்று பயப்படுகின்ற அந்த திதியின் மனத்தில் சீக்ரம் நடுக்கம் உண்டாயிற்று. அவளுடைய ஸ்தனத்தினின்று ரக்தம் பெருகிற்று. அப்பொழுது பகவானுடைய ஸுதர்சனாஸ்த்ரத்தினால் அவ்வஸுரனுடைய மாயைகளெல்லாம் பாழாயின. அங்ஙனம் தன் மாயைகளெல்லாம் பாழாகக் கண்ட அவ்வஸுரன் மீளவும் எதிரே வந்து ரோஷத்துடன் கேசவனை அணைக்க முயன்று புஜங்களின் இடையில் அமைத்து நெருக்கி அணைக்கையில், அம்மஹானுபாவன் தன் புஜங்களினிடையினின்று வெளியில் வந்து நிற்கக்கண்டான். தான் செய்த ப்ரயத்னம் வீணானமையால் கோபத்துடன் அவ்வஸுரன் பகவானை முஷ்டிகளால் அடித்தான். ஸ்ரீபகவான் அங்ஙனம் அடித்துக் கொண்டிருக்கின்ற அவ்வஸுரனை, இந்த்ரன் த்வஷ்டாவின் புதல்வனாகிய விஶ்வரூபனை அடித்தாற்போல், காது மூலையில் அடித்தான். அவ்வாறு பகவானால் அவலீலையாக அடிக்கப் பெற்ற அவ்வஸுரன் சரீரம் சுழலப்பெற்றுக் கண்கள் பிதுங்கி வெளிவந்து புஜங்களை உதறி விரித்துக் கொண்டு காற்றினால் வேரில் அறுப்புண்ட பெரியவ்ருக்ஷம் போல் கீழே விழுந்தான். அவன் பூமியில் விழுந்தும் அணுகமுடியாத பேரொளியுடையவனாயிருந்தான். பயங்கரமான கோரைப் பற்களுடையவனும் உதட்டைக் கோபத்தினால் கடித்துக் கொண்டிருப்பவனுமாகிய அவ்வஸுரனை அங்கு வந்திருந்த ப்ரஹ்மாதிகள் பார்த்து இங்ஙனம் ப்ரசம்ஸித்தார்கள்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:—ஆ! என்ன ஆச்சர்யம்! இப்படிப்பட்ட மரணம் எவனுக்கு நேரும்? இப்படி பகவான் கையால் எவன் மரணம் பெறுவான்? யோ

திகள் அசேதனமான ப்ரக்ருதியின் பரிணாமமாகிய தேஹத்தினின்று விடுபடவேண்டுமென்று விரும்பி (ஸம்ஸார நிவ்ருத்தியின் பொருட்டு) ஸமாதியோகத்தினால் எவனை ஏகாந்தத்தில் த்யானிக்கின்றார்களோ, அப்படிப்பட்ட பகவானுடைய பாதத்தினால் அஸுரச்ரேஷ்டனாகிய இந்த ஹிரண்யாக்ஷன் அடியுண்டு அந்த பகவானுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டே சரீரத்தைத் துறந்தான். ஆ! இப்படிப்பட்ட மரணம் மற்றொருவர்க்குக் கிடைக்கத்தக்கதோ? இந்த ஹிரண்யாக்ஷனும் ஹிரண்யகசிபுவும் இந்த பகவானுடைய ப்ருத்யர்களே; சாபத்தினால் அஸுரஜன்மத்தை ப்ராப்தரானார்கள்; இன்னம் சில ஜன்மங்களில் பகவானுடைய ஸ்தானத்தைப் பெறுவார்கள்' என்று அவ்வஸுரனை ப்ரசம்ஸித்தான். அப்பால் தேவதைகள் பகவானை ஸ்தோத்ரம் செய்தார்கள்.

தேவதைகள் சொல்லுகிறார்கள் :—ஸமஸ்தயாகங்களும் அழியாமல் நடப்பதற்கு ஹேதுவாயிருக்கின்ற (யாகங்களை நடத்தும் ஸ்வபாவமுள்ள) உனக்கு அடிக்கடி நமஸ்காரம், நீ ஜகத்தை ரக்ஷிக்கும்பொருட்டு ரஜஸ் தமஸ்ஸுக்களால் தீண்டப்பெறாமல் சுத்தஸத்வமயமான மூர்த்திகளைக் கேவலம் தன் ஸங்கல்பத்தினால் ஏற்றுக்கொள்கின்றனை. அப்படிப்பட்ட உனக்கு அடிக்கடி நமஸ்காரம். உலகங்களை ஹிம்ஸித்துக்கொண்டிருந்த இவ்வஸுரன் தெய்வாதீனமாய் உன்னால் வதிக்கப்பட்டான். வராஹ ஜகதீசனே! நாங்கள் உனது பாதாரவிந்தங்களில் பக்தி உண்டாகப் பெற்றமையால் ஸந்தோஷம் அடைந்தோம். உன்னிடத்தில் பக்தி உண்டாகுமாயின், அது அவரவர் விரும்புகிற எல்லா நன்மைகளையும் நிறைவேற்றிக்கொடுக்கும். ஆனது பற்றியே நாங்கள் சத்ரு முடியப்பெற்று ஸுகித்தோம்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அவ்வாதி வராஹபகவான், பிறர்க்குப் பொறுக்கமுடியாத பராக்ரம முடைய ஹிரண்யாக்ஷனைக் கொன்று ப்ரஹ்மாதிகளான தேவதைகளால் துதி செய்யப்பெற்று என்றும் உத்ஸவங் கள் மாறப்பெறாமல் நித்யோத்ஸவமாயிருப்பதாகிய தன் வைகுண்ட லோகத்தை அடைந்தான். விதுரனே! இது 'ஒருவர்க்கும் செய்ய முடியாத கார்யம். இது பிறர்க்கு எவ்வளவு வருந்தியும் செய்யமுடியாது. இதைப் பகவான் செய்தான்' என்று ஆச்சர்யப் படவேண்டியதில்லை. ஏனென்னில், சொல்லுகிறேன் கேள். வாராய் விதுரனே! வராஹ உருவம்கொண்ட ஸ்ரீஹரியின் சரித்ரத்தை உனக்கு நான் எங்ஙனம் அனாயாஸமகத் தொடங்கி மொழிந்தே னோ, அங்ஙனமே ஸ்ரீவராஹபகவான் ஆழ்ந்த பராக்ரம முடைய ஹிரண்யாக்ஷனை யுத்தத்தில் அவலீலையாகவே வதித்தான். அவன் ஹிரண்யாக்ஷனை வதித்தபடியே எனக்கு என்குரு மொழிந்தார். நானும் என் குருவினிடம் கேட்டபடியேசிறிதும் சோராமல் உனக்குமொழிந்தேன்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:—வாராய் பரீக்ஷித்து மன் னவனே! மஹாபாகவதனாகிய (பகவத்பக்தர்களில் மேன் மையுற்றவனாகிய) ஸ்ரீவிதுரன் இங்ஙனம் மைத்ரேயமுனி வர் மொழிந்த பகவத் கதையை (பகவத்கதை உள்ளடங் கப் பெற்ற ஸ்வாயம்புவமனுவின் கதையை)க்கேட்டு மிகுந்த ஸந்தோஷம் அடைந்தான். புண்யசீலர்களும் மிகுந்த புகழுடையவர்களுமாகிய மற்றவர்களுடைய கதையைக் கேட்கினும் ஸந்தோஷம் விளையும். ஆயின் ஸ்ரீவத்ஸலக்ஷமாவான (ஸ்ரீவத்ஸமென்கிற அடையாளத் தையுடைய) ஸ்ரீஹரியின் கதையைக் கேட்கின் ஸந்தோ ஷம் விளையுமென்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமோ? முன்பு தன்னினத்தில் தலைமையுள்ள ஓர் யானையானது

தன்னைச் சேர்ந்த பெண்யானைகள் வருந்தி வீலிடும்படி முதலையென்னும் ஜலஜந்துவால் பிடியுண்டு விடுவித்துக் கொள்ள முடியாமல் வேறுகதியற்று 'ஆதிமூலனே!' என்று தன்பாதாரவிந்தங்களை த்யானிக்கையில், இந்த ஸ்ரீபகவான் விரைந்தோடி வந்து அந்த யானையை முதலையினிடம் பிடியுண்டு வருந்துகையாகிற ஆபத்தினின்று விடுவித்தான். அவன் வேறுகதியின்றி மனத்தில் கபடமற்றுத் தன்னைப் பணியும் மனிதர்களால் ஸுகமாக ஆராதிக்கத் தகுந்தவன்; கெடுமனமுடைய மற்றவர்க்கு வருந்தியும் ஆராதிக்க முடியாதவன். அப்படிப்பட்ட பகவானைப் பிறர்செய்த நன்றியை அறியுந்தன்மையுள்ள எவன் தான் பணியமாட்டான்?[1] க்ருதக்னரைத் தவிர மற்றெல்லோரும் பணிவார்களென்பதில் ஸந்தேஹம் இல்லை. ஜகத்தை ரக்ஷிக்கும்பொருட்டு வராஹ உருவம் கொண்ட பகவான் செய்த இந்த ஹிரண்யாக்ஷவதம் மிகவும் அற்புதமானது. ஆயினும் அந்த பகவானுக்கு இது லீலையேயன்றி ஓர் வருத்தமன்று. இப்படிப்பட்ட இந்த ஹிரண்யாக்ஷவதத்தை எவன்கேட்கிருனோ, எவன் பிறர்க்குச் சொல்லுகிருனோ, எவன் இதை அபிநந்திக்கிருனோ, அவன் பாபங்களில் 'இனி இதுக்கு அவ்வருகில்லை' என்னும்படி மஹாபாபமாகிய ப்ரஹ்மஹத்யையினின்றுங் கூட விரைவில் விடுபடுவான். இந்த ஹிரண்யாக்ஷவதமென்னும் பகவச்சரித்ரமானது மிகுந்த புண்யத்தை விளைவிக்கக்கூடியது; ஆனதுபற்றியே மிகவும் பரிசுத்தமானது; தனத்தையும் ஸம்பாதித்துக் கொடுக்க வல்லது; புகழையும் விளைவிக்கும்! ஆயுளையும் வளர்க்க வல்லது; அன்றியும், அவரவர் விரும்பும் புருஷார்த்தங்களுக்கெல்லாம் விளைநிலமாயிருக்கும்; யுத்தத்தில் ப்ராணன்களுக்கும் இந்த்ரியங்களுக்

1. க்ருதக்னர் பிறர் தனக்குச் செய்த உபகாரத்தை மறக்கிறவர்.

கும் திறமையை வளர்க்கும். வாராய் மன்னவனே! இதைக் கேட்பவர்களுக்கு தேஹாவஸானத்தில் ஸ்ரீமந் நாராயணப்ராப்தி உண்டாகும். இதுவே இதற்கு முக்ய மானபலன். பத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஸ்வாயம்புவமனு சரித்ரமும், ஸ்ருஷ்டியின் விரிவும்.

சௌனகர் சொல்லுகிறார்:—வாரீர் ரோமஹர்ஷணபுத்ரே! ஸ்வாயம்புவமனுவானவர் இங்ஙனம் பூமியை யதாஸ்தானத்தில் நிலைநிறுத்தச் செய்து, தனக்குப் பின்பு ஜன்மித்த ப்ராணிகளுக்கு தர்மம்முதலிய நான்கு வகைப்பட்ட புருஷார்த்தங்களை நிறைவேற்றுவதற்கு எந்த உபாயங்களை அனுஷ்டித்தார்? விதுரன் மஹாபாகவதன்; ஸ்ரீக்ருஷ்ணனுக்கு மிகவும் அன்பிற்கிடமான தோழன். விதுரனுக்கு பகவானிடத்தில் ப்ரேமம் அளவற்றிருப்பது. இவ்விதுரன், துர்யோதனன் முதலிய புதல்வர்களோடுகூடின தமையனாகிய த்ருதராஷ்ட்ரனை 'இவன் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் பாவக் கருத்துடையவன்' என்னும் காரணத்தினால் கைவிட்டான். (ஸ்ரீக்ருஷ்ணன் மொழிந்த மந்த்ராலோசனையை அனாதரித்தமையாலும், பகவானிடத்தில் ப்ரீதியுடையவரும் தர்மமர்யாதையைத் தவறாமல் தொடர்கின்றவருமாகிய பாண்டு புத்ரரிடத்தில் த்ரோஹம் செய்தமையாலும் த்ருதராஷ்டரன் ஸ்ரீக்ருஷ்ணனிடத்தில் அபராதப்பட்டான். அதைப் பொறுமையாலும், தான் ஸ்ரீக்ருஷ்ணனைப்பற்றியும் பாண்டவர்களைப் பற்றியும் எவ்வளவு நன்மை உபதேசித்தும் அதை ஏற்றுக்கொள்ளாமையாலும் விதுரன் த்ருதராஷ்ட்ரனைத் துறந்தான். இது ஸ்ரீக்ருஷ்ணனிடத்திலுள்ள ப்ரீதியின் காரியமே). அன்றியும், அவ்விதுரன் மாஹாத்ம்யத்தில்

ஸ்ரீவ்யாஸரைக் காட்டிலும் சிறிதும் குறைந்தவனன்று. அவன் ஸ்ரீவேதவ்யாஸ பகவானுடைய அங்கத்தினின்று பிறந்தவனல்லவா? அன்றியும், அவன் ஸர்வப்ரகாரத்தினாலும் ஸ்ரீக்ருஷ்ணனை ஆஸ்ரயித்தவன். (மாதாவும் பிதாவும் ப்ராதாவும் வாஸஸ்தானமும் ரக்ஷகனும் நண்பனும் கதியும் ஸ்ரீமந்நாராயணனே யென்று நிச்சயித்திருப்பவன்). மற்றும், அவனைப் பணியும் தன்மையுள்ள பாகவதர்களைத் தொடர்ந்து பணியும் ஸ்வபாவமுடையவன். கங்கைமுதலிய புண்யதீர்த்தங்களில் ஸ்நானபானாதிகள் செய்து அவற்றைப் பணிந்தமையாலும் ஜ்ஞானாதிகரான ஸத்புருஷர்களின் ஸேவையாலும் அவன் உள்ளும் புறமும் அழுக்கற்று உஜ்ஜ்வலனாயிருப்பவன். அவ்விதுரன் கங்காத்வாரத்திலுள்ள குசாவர்த்தமென்னும் தீர்த்தத்தில் உட்கார்ந்திருப்பவரும் தத்வங்களை உணர்ந்தவர்களில் தலைவருமாகிய ஸ்ரீமைத்ரேய மஹர்ஷியைக் கிட்டி வணங்கி யாது வினவினான்? வாரீர் ஸூதரே! அந்த விதுரனும் மைத்ரேயரும் ஸம்வாதம் பண்ணிக்கொண்டிருக்கையில், பகவானுடைய பாதாரவிந்தத்தினின்றுண்டானவைகளும் தம்மை ஸ்பர்சித்தவர்களுடைய பாபத்தைப் போக்கடிப்பவைகளுமாகிய கங்காஜலங்கள் போல் கேட்பவர்களின் பாபங்களைப்போக்கவல்ல அமலங்களான பகவத்கதைகள் நடந்திருக்கும். கீர்த்தனம் செய்யத்தகுந்த கம்பீரமான சேஷ்டிதங்களையுடைய அந்த ஸ்ரீவிஷ்ணுவின் கதைகளை எமக்குச் சொல்வீராக. உமக்கு மங்களம் உண்டாகுக. 'ஏன் அடிக்கடி பகவத்கதையை வினவுகிறாய்' என்கிறீரோ? பகவத்கதையின் ரஸமறிந்தவன் அந்த ஸ்ரீஹரியின் லீலையாகிற அம்ருதத்தைப் பானஞ்செய்ய நேரப்பெறின், இது போதுமென்று எவன் [illegible] த்ருப்தி உண்டாகப்பெறுவான்? என்னும் [illegible]

கேட்பினும் த்ருப்தி அடையமாட்டான். ஆகையால் த்ருப்தி உண்டாகப் பெறாமல் வினவுகின்றேன்' என்றார்.

இங்ஙனம் நைமிசாரண்ய வாஸிகளான ஶௌனகாதி முனிவர்களால் வினவப்பெற்ற ஸூதர் பகவானிடத்தில் நிலைநின்ற மனமுடையவராகி அம்மஹர்ஷிகளைக் குறித்துக் கேளுங்களென்று மொழியத் தொடங்கினார்.

ஸ்ரீசுகர் சொல்லுகிறார்:— தன் ஸங்கல்பத்தினால் வராஹ உருவங்கொண்ட பகவானுடைய லீலையாகிய பூமியை மேலுக்கெடுத்த வ்ருத்தாந்தத்தையும், அவன் அநாயாஸமாகச் செய்த ஹிரண்யாக்ஷ வதத்தையும் கேட்டு விதுரன் ஸந்தோஷம் உண்டாகப்பெற்று ஸ்ரீமைத்ரேயரைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ஸ்ரீவிதுரன் சொல்லுகிறான்:— ப்ரஜாபதிகளான மரீசி முதலியவர்க்குத் தலைவனாகிய ப்ரஹ்மதேவன் ப்ரஜைகளைப் படைப்பதற்காக ப்ரஜாபதிகளைப் படைத்து மேல் என் செய்தான்? அதை எனக்குச் சொல்வீராக. வாரீர் அந்தணரே! நீர் இந்த்ரியங்களுக்குத் தெரியாத விஷயங்களையும் நெஞ்சென்னும் உட்கண்ணால் அறியுந் திறமையுடையவர். ஆகையால் நீர் இவ்விஷயத்தைச் சொல்லவல்லவரே! மரீசி முதலிய அந்தணர்களும் ஸ்வாயம்புவமநுவும் ஆகிய அவர்கள் நான்முகனுடைய ஆஜ்ஞையால் இந்த ப்ரபஞ்சத்தைப் படைத்ததாகச் சொன்னீர். அவர்கள் எங்ஙனம் படைத்தார்கள்? அதை விவரித்துச் சொல்வீராக. அவர்கள் பார்யைகளுடன்கூடி ஸ்ருஷ்டித்தார்களா? அல்லது ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களில் பார்யைகளை எதிர்பாராமல் ஸ்வதந்த்ரர்களாயிருந்தார்[illegible]? மரீசி [illegible]லியவர் எல்லோரும் ஒருவர்க்கொருவர் [illegible]ருந்து இந்த ப்ரபஞ்சத்தைப் படைத்தார்

களா? அல்லது தனித்தனியே படைத்தார்களா?—என்று வினவினான்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:—சிந்திக்க முடியாத ப்ரபாவமுடைய ஈஶ்வர ஸங்கல்பத்தினாலும் ஈஶ்வர ஸ்வரூபியான காலம் கூடினமையாலும் ப்ரக்ருதி, ஸ்ருஷ்டியாகிற கார்யத்தில் ஆபிமுக்ய முடையதாகி ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் ஸமமாயிருக்கும் தசை மாறிக் கலக்கமுற்றது. ஸத்வ ரஜஸ் தமோகுணங்கள் அடங்கினதும் அங்ஙனம் கலக்கமுற்றதும் பகவானுக்குச் சரீரமுமாகிய அந்த ப்ரக்ருதியினின்று மஹத்தத்வம் உண்டாயிற்று. பகவானால் தூண்டப் பெற்றதும் ரஜோ குணத்தை முக்யமாகவுடையதுமாகிய மஹத்தத்வத்தினின்று பூதாதியென்னும் பேருடைய அஹங்கார தத்வம் உண்டாயிற்று. இது ஐம்பூதங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் ஆகிய இம்மூன்று உருவமாயிருக்கும். அது ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களையும் ஐந்து தன்மாத்ரைகளையும் ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களையும் ஐந்து கர்மேந்த்ரியங்களையும் ஸ்ருஷ்டித்தது. அந்த ஆகாயம் முதலிய தத்வங்கள் ஒன்றோடொன்று சேராமல் தனித்தனியேயிருந்து அண்டத்தைப் படைக்கும் வல்லமையற்றிருந்தன. அப்பால் பகவானுடைய அநுப்ரவேசத்தினால் ஒன்றோடொன்று கலந்து ஸ்வர்ணம்போல் பளபளவென்று பேரொளியுடன் ஜ்வலிக்கின்ற அண்டத்தைப் படைத்தன. அவ்வண்டகோசம் அதிஷ்டாதாவான சேதனனில்லாமல் ஜலத்தின்மேல் மிதந்து கொண்டிருந்தது. அவ்வண்டத்தில் ப்ரபுவாகிய அநிருத்தன் ஸம்பூர்ணமாக ஆயிரமாண்டுகள் வஸித்திருந்தான். 'அநிருத்தனென்றும், அவ்வண்டத்தில் வஸித்திருந்தானென்றும் சொல்லுகிறீரே. அவன் யாவன்?' என்னில் சொல்லுகிறேன். எந்த பகவானு

டைய நாபியினின்று ஆயிரம் ஸூர்யர்கள் உதித்தாற் போல் அளவிறந்த ஒளியுடன் ப்ரகாசிப்பதான தாமரை மலர் உண்டாயிற்றே, அவனே அநிருத்த பகவான். அவனே அவ்வண்டத்தில் சயனித்திருந்தான். அவனே ஈஸ்வரன். அவனுடைய நாபியிலுண்டான அக்கமலம் தேவாதியான ஸமஸ்த ப்ராணிகளுக்கும் வாஸஸ்தானமாயிருப்பது. அந்தக் கமலத்தினின்று தான் ப்ரஹ்மதேவன் உண்டானன். கர்ப்போதகத்தில் (அண்டத்திற்குள் ஜலத்தில்) சயனித்துக்கொண்டிருந்த பகவான் தன் ஸங்கல்பத்தினால் அந்த ப்ரஹ்மதேவனிடத்தில் ப்ரவேசித்தான். அங்ஙனம் பகவானால் ப்ரவேசிக்கப்பெற்ற அந்த ப்ரஹ்மதேவன் முன் கல்பத்திலிருந்தபடியே உலகங்களையெல்லாம் அவ்வவற்றிற்குரிய ஏற்பாட்டில் சிறிதும் மாறுபாடின்றி ஸ்ருஷ்டித்தான். அவன் முதலில் தமோகுணத்தைக் கொண்டு தாமிஸ்ரம் அந்த தாமிஸ்ரம் தமஸ்ஸு மோஹம் மஹாதமஸ்ஸு என்கிற ஐந்து பிரிவுகளையுடைய அவித்யையை ஸ்ருஷ்டித்தான். அந்த அஜ்ஞான ஸ்ருஷ்டிக்கு உபயோகப் பட்ட தன் தேஹத்தை ப்ரஹ்மதேவன் விரும்பாமல் வெறுப்புற்று அதைத் துறந்தான். அதினின்று பல யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் உண்டானர்கள். அந்த யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பசி தாஹங்களை விளைப்பதாகிய அந்த ப்ரஹ்ம சரீரத்தை க்ரஹித்துக் கொண்டார்கள். அந்தச் சரீரமே ராத்ரியாய் மாறிவருகின்றது. ஆனதுபற்றியே ராத்ரிகாலத்தில் யக்ஷராக்ஷஸர்களுக்கு ஸஞ்சாரம் அதிகமாயிருக்கின்றது. அவர்கள் அந்தச் சரீரத்தைப் பரிக்ரஹித்தவுடனே அவர்களுக்குப் பசியும் தாஹமும் அபாரமாய் உண்டாயின. அங்ஙனம் பசிதாஹங்களால் பீடிக்கப்பெற்ற யக்ஷ ராக்ஷஸர்கள் அந்தச் சரீரத்தையே பக்ஷிக்க விரும்பி எதிர்த்தோடினர்கள். 'நாம் பசி

யாலும் தாஹத்தாலும் வருத்தமுற்றிருக்கின்றோமாகை யால் இந்தச் சரீரத்தை நாம் ரக்ஷிக்கலாகாது' என்று அவர்களில் சிலர் சொன்னார்கள். மற்றவர் 'பக்ஷித்துவிடுவோம்' என்றார்கள். அது கண்டு ப்ரஹ்மதேவன் பயந்து அந்த யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் பார்த்து 'என் சரீரத்தைப் பக்ஷிக்கவேண்டாம். ரக்ஷிப்பீர்களாக' என்று மொழிந்தான். மீளவும் அவர்களைப் பார்த்து வெறுப்புடன் 'ஓ யக்ஷ ராக்ஷஸர்களே! இப்படி அஜ்ஞான ஸ்வபாவர்களாகிய நீங்கள் எனக்குப் புதல்வர்களாகப் பிறந்தீர்களே! சீ! இது வென்?' என்றான். (அவர்களில் பக்ஷிப்பீர்களென்றவர் யக்ஷரானார்கள். ரக்ஷிக்கவேண்டாமென்றவர் ராக்ஷஸரானார்கள்). அப்பால் ப்ரஹ்மதேவன் தேஜஸ்ஸினால் ப்ரகாசித்துக் கொண்டு கிழக்கு முகமாயிருந்து தேவதைகளைப் படைத்தான். அவர்கள் தேஜஸ்ஸுடன் ப்ரகாசித்தார்கள். ப்ரஹ்மதேவன் ஒளியுடன் விளங்குகின்ற எந்த தேஹத்தினால் தேவதைகளைப் படைத்தானோ அந்த தேஹத்தையும் துறந்தான். அதுவே பகலாய் மாறி வருகின்றது. அதைத் தேவதைகள் பரிக்ரஹித்தார்கள். அப்பால் ப்ரஹ்மதேவன் தன் பின் புறத்தினின்று காமத்தில் மிகவும் விருப்பமுடையவரான அஸுரர்களைப் படைத்தான். அவர்கள் [1] காமலோலுபராயிருந்தமையால் மைதுனத்தின் பொருட்டு இந்த ப்ரஹ்மதேவனைச் சூழ்ந்து கொண்டார்கள். அப்பொழுது அந்த ப்ரஹ்மதேவன் சிறித்துக்கொண்டு, வெட்கமற்றிருக்கிற அஸுரர்களால் சூழப்பட்டவனாகிக் கோபமும் பயமும் உண்டாகப்பெற்று அப்புறம் ஓடிப்போனான். அந்நான் முகன், பக்தர்களை அனுக்ரஹிக்கும் பொருட்டு அவரவர்[illegible]த்திக்குத் தகுந்தபடி தன்னைக்காட்டுந் தன்மையனும் தன்னைப்

1. காமத்தில் மிக்க விருப்பமுடையவ ராயிருந்தமையால்.

பற்றினுருடைய துக்கத்தைப் போக்குந் திறமையுடையவனும் விரும்பின விருப்பங்களை நிறைவேற்றிக் கொடுக்கும் மஹானுபாவனுமாகிய பகவானைச் சரணம் அடைந்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிறான்:— பரமாத்மனே! என்னைப் பாதுகாப்பாயாக. நான் உன் கட்டளையின்படி ப்ரஜைகளைப் படைத்துக்கொண்டு வந்தேன். அவைகளில் பாவக் கருத்துடைய இந்த அஸுரப்ரஜைகள் என்னை மைதுனஞ் செய்யத்தொடங்கிச் சுற்றிக்கொள்கின்றன. வாராய் ப்ரபுவே! துக்கித்தவர்களின் துக்கங்களைப் போக்குமவன் நீ யொருவனே யல்லவா? உன் பாதாரவிந்தங்களைப் பணியாதவர்களுக்கு நீயே வருத்தங்களை விளைக்கின்றனை.

மைத்ரேயர் சொல்லுகிறார்:— ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுகையால் பிறர் கருத்தை விசதமாக அறியுந் திறமையுடைய அந்தப் பரமாத்மாவானவன் இந்த ப்ரஹ்மாவின் வருத்தத்தை அறிந்து கொண்டு 'காமத்திற்கிடமாகி பயங்கரமாயிருக்கின்ற இந்த உன் தேஹத்தைத் துறப்பாயாக' என்றான். இங்ஙனம் பகவானுல் மொழியப்பெற்ற ப்ரஹ்மதேவனும் அந்தச் சரீரத்தை அப்படியே துறந்தான். அங்ஙனம் ப்ரஹ்மதேவனுல் துறக்கப்பெற்ற அந்தச்சரீரமே ஸாயங்கால ஸந்த்யை ஆயிற்று. (ஆனது பற்றியே அவ்வேளை காமத்திற்கு விளை நிலமாயிருக்கின்றது). அது அழகிய வடிவங்கொண்ட ஓர் பெண்மணியாகப் புலப்பட்டது; அப்பெண்மணியின் பாதங்கள் தாமரை மலர்போன்று இனிதாக ஒலிக்கின்ற சிலம்புத்தண்டைகளால் திகழ்ந்தன. கண்கள் மதத்தினுல் தழதழத்திருந்தன. அவளுடைய நிதம்பம் அரை நூல் மாலை யென்கிற அலங்காரத்தினுல் திகழ்கின்ற வெண்பட்டு வஸ்த்ரத்தி

ளுல் மறைக்கப்பெற்று விளங்கிற்று. ஸ்தனங்கள் ஒன்ருே டொன்று உறைவதனுல் உயர்ந்து இடை வெளியின்றிப் பருத்துஅழகாயிருந்தன. மூக்கு[1] திலபுஷ்பம்போல் திகழ் வுற்றிருந்தது. பற்கள்[2] குந்த குட்மலங்கள்போல் அழகா யிருந்தன. அவள் ஸ்னேஹத்தை வெளியிடுகின்ற புன்ன கையும் விலாஸங்கள் நிறைந்த கண்ணேக்கமும் அமைந்து லஜ்ஜையினுல் தன் தேஹத்தை வஸ்த்ரத்தின் நுனியால் அடிக்கடி இழுத்து மூடி மறைத்துக் கொண்டிருந்தாள். மற்றும், அவள் வண்டுபோல் கறுத்த முன்நெற்றி மயிர் கள் படிபடியாயிருக்கப்பெற்று மிகவும் அழகியளாயிருந் தாள். வாராய் விதுரனே! அத்தகைய அம்மாதரார் மணியைக் கண்டு அஸுரர்கள் எல்லோரும் மதிமயக்கம் கொண்டு 'ஆ! என்ன உருவம்! என்ன அழகு! இதென்ன நிலைமை! ஆ! இவளுடைய யௌவனப் பருவத்தின் புது மையை என்னென்று சொல்லலாம்! நாம் பலரும் காமுற்றி ருக்கையில், நம்மிடையில் காமக்கருத்தின்றியவள்போல் போகின்ருளே!' என்று பிதற்றலானுர்கள். குத்ஸிதமான புத்தியையுடைய அவ்வஸுரர்கள் அப்பெண்மணியின் அவயவங்களை இத்தகையது அத்தகையதென்று ஊஹி த்துக்கொண்டிருந்து, அப்பால் பெண்ணுருவங்கொண்ட அந்த ஸந்த்யாகாலத்தை ப்ரீதியுடன் கௌரவித்து இங் ஙனம் வினவினுர்கள்.

அஸுரர்கள் சொல்லுகிருர்கள் :— பெண்மணீ! நீ யாவள்? யாருடையவள்? அழகிய இடையின் பின்புற முடையவளே! நீ தேவதையா? அல்லது மனுஷ்யஸ்த் ரீயா? அல்லது மற்றெருத்தியா? வாழைமரம் போன்ற துடைகளுடையவளே! நீ இவ்விடத்தில் என்ன ப்ரயோ ஜனத்தைக் குறித்து உலாவுகின்றனே? வாராய் கோபஸ்வ

1. திலபுஷ்பம் எள்ளுப்பூ. 2. குருந்த மரத்தின் மொட்டுக்கள்.

பாவமுடையவளே! நீ உனது ஸௌந்தர்யமாகிற விலையில்லாத வஸ்துவைக் காட்டி பாக்யமற்றிருக்கிற எங்களை வருத்துகின்றனை. உன் ஜாதி குலங்களைக் கேட்பதினால் என்ன உபயோகம்? நீ எவளாயினும் ஆவாயாக. வாராய் பெண்மணியே! எங்கள் பாக்ய மஹிமையால் உன்னுடைய தர்சனம் கிடைத்தது. [1] நீ பந்தடிக்கிற லீலையால், பார்த்துக்கொண்டிருக்கிற எங்கள் மனத்தைப் பறிக்கின்றனை. நீ பந்தடித்து விளையாடுவது மிகவும் அழகாயிருக்கின்றமையால் எங்கள் மனத்தை இழுக்கின்றது. வாராய் ஸுந்தரியே! உயரக்கிளம்பி விழுகின்ற பந்தை அடிக்கடி உள்ளங்கையால் அடித்துக்கொண்டிருக்கின்ற உன்னுடைய தாமரைமலர்போன்ற பாதமானது ஓரிடத்தில் நிலைநிற்காதிருக்கின்றது. அதனால், பருத்துருண்டகொங்கைகளின் பாரத்தினால் பயந்திருக்கின்ற உனது நுண்ணிடை வருந்துகின்றது. (இயற்கையாகவே உனது இடை நுண்ணியதாயிருக்கின்றது; மேலும், பருத்துருண்டகொங்கைகளின் பாரத்தைப் பொறுக்கமுடியாமல் இளைத்திருக்கின்றது. பந்தடிக்கிற லீலையால் நின்ற இடத்தில் நிற்காமல் அதை மீளவும் நீ வருத்துகின்றனை). உனது கண்ணோக்கம் இளைப்பினால் மெதுவாய் திகழ்கின்றது. அழகிய உன் தலைச்சொருக்கானது அவிழ்ந்திருக்கின்றது. நிர்மலமான அந்தத் தலைமயிர்களை முடித்துக்கொள்வாயாக.

மந்தபுத்திகளான அவ்வஸுரர்கள் இங்ஙனம் பெண்மணிபோல்புலப்படுகின்ற அந்தஸாயங்கால ஸந்த்யையைப் பார்த்து, தங்களை மதி மயங்கச் செய்கின்ற ஓர் பெண்

---

1. இங்கு அஸ்தமிக்கின்ற ஸூர்யனைப் பந்தாகவும், மேகங்கள் இடையிடையில் ஒடிந்திருப்பதை இடையாகவும், நக்ஷத்ரங்களைக் கண்ணாகவும், இருட்டைத்தலைமயிராகவும் ஊஹித்துக்கொள்க.

ளுக நினைத்து 'இவள் நமக்கு' என்று அங்கீகரித்தார்கள். பிறகு ப்ரஹ்மதேவன் அபிப்ராய விசேஷத்தினுல் கம்பீரமாகச் சிரித்துத் தன்னைத் தான் மோந்து ஸௌந்தர்யத்தினுல் கூட்டங்கூட்டமாக கந்தர்வர்களையும் அப்ஸரஸ்ஸுக்களையும் ஸ்ருஷ்டித்தான். ஸௌந்தர்யமென்கிற காந்தி நிறைந்ததும் தனக்கு ஸம்மதமாயிருப்பதுமாகிய அந்தச் சரீரத்தையும் ப்ரஹ்மதேவன் துறந்தான். அதுவே விடியற்கால ஸந்த்யையாயிற்று. அதை விஶ்வாவஸு முதலிய அந்த கந்தர்வர்களே அங்கீகரித்தார்கள். பிறகு ப்ரஹ்மதேவன் தன்னுடைய ஆலஸ்யத்தினுல் பூதங்களையும் பிசாசங்களையும் ஸ்ருஷ்டித்து, அவை தலைமயிரை விரித்துக்கொண்டு அரையில் வஸ்த்ரமின்றி அம்மணமாயிருக்கக் கண்டு கண்களை மூடிக்கொண்டான். வாராய் ஸமர்த்தனை விதுரனே! அந்த நான்முகன் சோம்பலுக் கிடமாயிருப்பதும் பற்றி ஜ்ரும்பணமென்னும் பேருடைய அந்தச் சரீரத்தையும் துறந்தான். இதையே நித்ரையென்று சொல்லுகிறுர்கள். இந்நித்ரையால் ப்ராணிகளின் இந்த்ரியங்களுக்கு ஓய்தல் உண்டாகின்றது. இந்தச் சரீரம் உன்மாதத்திற்கும் இடமாயிருக்கும். இந்த உன்மாதத்தினுல் ப்ராணிகளுக்கு அசுத்தங்களில் வெறுப்பின்றி அவற்றைப் பரிஹரிக்கவேண்டுமென்கிற எண்ணமில்லாமல் பொறுத்திருக்கும்படியான எண்ணம் உண்டாகின்றது. இங்ஙனம் சோம்பலுக்கிடமான அந்தச் சரீரத்தை பூதங்கள் அங்கீகரித்தன. ஆகையால் அந்த பூதங்களும் நித்ரை ஆலஸ்யம் இவைகளை முக்யமாகக் கொண்டிருக்கின்றன. ஜ்ஞானுதிகுணங்கள் நிறைந்தவனும் ஜகத்திற்கெல்லாம் ப்ரபுவுமாகிய அவ்வயன், தன்னை மிகுந்த பலமுடையவனுக நினைத்துக்கொண்டு ஸாத்யரென்னும் தேவக் கூட்டங்களையும் பித்ருதேவதைகளின் கூட்டம்

களையும் பரோக்ஷமாகப் படைத்தான். அவன் அந்த தேஹத்தையும் துறந்தான். தங்களுக்கு உத்பத்திஸ்தானமும் பலமுடையதுமாகிய அந்தச் சரீரத்தைப் பித்ருக்களும் ஸாத்யர்களும் அங்கீகரித்தார்கள். ஆகையால் அவர்கள் பலிஷ்டரானார்கள். ஆனதுபற்றியே, வேதோக்தமான கர்மங்களைச் செய்வதில் ஸமர்த்தரான பண்டிதர்கள் பலத்தை விரும்பி ஸாத்யர்களையும் பித்ருக்களையும் ஹவிர்ப்பாகங்களால் ஆராதிக்கின்றார்கள். அக்கமலயோனி பிறர்க்குப் புலப்படாமையாகிற தன் சக்தியினால் ஸித்தர்களையும் வித்யாதரர்களையும் படைத்து அந்தர்த்தான சக்தி அமைந்து அற்புதமாயிருக்கின்ற அந்தச்சரீரத்தை ஸித்தர்களுக்கும் வித்யாதரர்களுக்கும் கொடுத்தான். ஆகையால் அவர்கள் அந்தர்த்தான சக்தி முக்யமாயிருக்கப் பெற்றார்கள். ப்ரபுவாகிய அந்த ப்ரஹ்மதேவன் தன்னுடைய ப்ரதிபிம்பத்தைப் பார்த்துக்கொண்டு, அந்த ப்ரதிபிம்பரூபமான சரீரத்தில் வெகுமதியுற்றவனாகி அந்த ப்ரதிபிம்ப சரீரத்தினால் கின்னரர்களையும் கிம்புருஷர்களையும் ஸ்ருஷ்டித்தான். பிறகு அந்த ப்ரதிபிம்ப சரீரத்தையும் துறந்தான். அதை அவர்கள்[1] மிதுனங்களாகச்சேர்ந்து பிம்பத்திலும் ப்ரதிபிம்பத்திலும் உண்டாகக்கூடிய அபிமானத்துடன் அந்த ப்ரஹ்ம தேவனையே விடியற்காலத்தில் அவனுடைய சேஷ்டிதங்களைச் சொல்லித் துதித்துக்கொண்டு பாடுகிறார்கள். ஸௌகுமார்யமுடையதும் நீண்டிருப்பதும் பலவகைச் சிக்கைகள் அமைந்தது மாகிய கேஹத்துடன் சயனித்துக் கொண்டிருக்கிற அந்த ப்ரஹ்மதேவன், இவ்வளவு ஸ்ருஷ்டி செய்தும் தன் விருப்பத்தின்படி ப்ரஜைகள் வ்ருத்தி அடையாமையைக் கண்டு கோபங்கொண்டு அந்தச்சரீரத்தைத்

1. ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்து.

துறந்தான். வாராய் விதுரனே! இந்தச் சரீரத்தினின்று உதிர்ந்த தலைமயிர்களே ஸர்பங்களாகப் பிறந்தன. அப் பொழுது சயனித்துக் கொண்டிருந்த அந்த ப்ரஹ்ம சரீரம் [1] ஸௌகுமார்யம் நீளம் கோபம் சிந்தை ஆகிய இவை களுக்கிடமாயிருந்தமையால் அதினின்றுண்டான ஸர்ப் பங்கள் நீண்டவைகளும் மென்மை அமைந்தவைகளும் பலவகைச் சிந்தையும் பெருங்கோபமும் நிறைந்து க்ரூரங் களுமாயிருக்கின்றன. படுத்திருந்த தேஹத்தினின்றுண் டானவையாகையால் நீண்ட கழுத்துடையவைகளுமாயி ருக்கின்றன. போவது தெரியாமல் வெகுவேகத்துடன் செல்லுந் தன்மை யுடையவையாகையால் இவற்றிற்கு நாகங்களென்னும்பேர் விளைந்தது. ஸ்வயம்புவாகிய அந்த ப்ரஹ்மதேவன் தன்னை க்ருதக்ருத்யனாக (ப்ரயோஜனம் கைகூடப் பெற்றவனாக) நினைத்திருந்த ஸமயத்தில் மரீசி முதலிய ப்ரஜாபதிகளின் உதவியின்றித் தானே நேரில் படைத்த ஸ்ருஷ்டியின் கடைசியில் அப்பொழுதே ப்ரஜை களைப் படைக்குந் திறமையுடைய மனுக்களை மனத்தினால் ஸ்ருஷ்டித்தான். அப்பொழுது அந்த மனுக்களுக்குப் புருஷாகாரமான அந்தத் தன்சரீரத்தைக் கொடுத்தான். புருஷாகாரமான சரீரத்தினால் ஸ்ருஷ்டிக்கப்பெற்று அந் தச் சரீரத்தை அவனிடத்தில் பெற்றவர்களாகையால், அம்மனுக்கள் அந்த ப்ரஹ்மதேவனைப் பார்த்து இங்ங னம் ப்ரசம்ஸித்தார்கள் (புகழ்ந்தார்கள்).

வாரீர் உலகங்களைப் படைக்கும் ப்ரஜாபதியே! நீர் ஸ்ருஷ்டித்த இந்தப்புருஷாகாரமான சரீரமானது நன்கு இயற்றப்பெற்றிருக்கின்றது. இந்தப் புருஷாகாரமான தேஹத்தில் ஸ்வர்க்க அபவர்க்கங்களுக்கு ஸாதனமான க்ரியைகளெல்லாம் நிலைபெற்றிருக்கின்றன. ஸமஸ்த க்ரி

1 மென்மை.

யைகளும் புருஷ சரீரத்தினால் ஸாதிக்கத் தகுந்தவை களே. ஆகையால் இந்தப் பௌருஷ தேஹத்துடன் அன்னமெனப்படுகிற போக்யவஸ்துக்களையெல்லாம் அனு பவிப்போமாக என்றார்கள்.

தவத்தோடும் வித்யையோடும் கூடி இந்த்ரியங்களை அடக்கியாள்பவனும் எல்லாம் அறிந்தவனுமாகிய ப்ரஹ்ம தேவன் யோகத்தினாலும் (ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவைப்பற்றின ஜ்ஞான யோகத்தி னாலும்) ஸமாதியென்கிற மனவூக்கத்தினாலும் தனக்கு ஸம் மதமான ரிஷிகளாகிற ப்ரஜைகளைப் படைத்தான். அயோ நிஜனாகிய அந்த ப்ரஹ்மதேவன், அந்த ரிஷிகளுக்கு ஸமாதியோகம், அணிமாதி அஷ்டைஶ்வர்யம் தர்மம் வித்யை வைராக்யம் ஆகிய இவற்றிற்கு விளைநிலமாகிய தன் சரீரத்தில் ஒவ்வொரு அம்சத்தைக் கொடுத்தான்.
இருபதாவது அத்யாயம் முற்றிற்று.

---

கர்த்தமப்ரஜாபதி தவஞ்செய்தலும், அத னால் ஸந்தோஷித்த பகவான் விவாஹத் தின் ஏற்பாட்டைக் கூறுதலும், மனு அவ்விடம் வருதலும்.

ஸ்ரீவிதுரன் சொல்லுகிறான்:—ஸ்வாயம்புவமனுவின் வம்சம் மேன்மையுடையது; ஸத்புருஷர்களால் மிக வும் புகழப்பெற்றது. 'இந்த வம்சத்தில் மைதுனகர்மத் தினால் ப்ரஜைகள் வ்ருத்தி அடைந்தன' என்றீர். இந்த வம்சத்தை எனக்கு மொழிவீராக. தோஷமற்றவரே! அந்தணர்தலைவரே! ஸ்வாயம்புவமனுவின் புதல்வர்களா கிய ப்ரியவ்ரதன் உத்தானபாதன் இவர்கள் வர்ணாஶ்ரம தர்மங்களைத் தவறாமல் ஏழு தீவுகள் அடங்கின பூமண் டலத்தை யெல்லாம் எங்ஙனம் பரிபாலித்து வந்தார்க ளோ, அதைச் சொல்வீராக. அந்த ஸ்வாயம்புவமனுவுக்கு தேவஹூதியென்று ஓர் புதல்வி இருந்தாளென்றும்

அவள் கர்த்தமப்ரஜாபதிக்குப் பத்னியென்றும் நீர் சொல்லக் கேட்டேன். சமம் தமம் முதலிய யோகலக்ஷணங்கள் அமைந்த அந்த தேவஹூதியிடத்தில் மஹா யோகியாகிய (பகவதுபாஸன ரூபமான யோகம் பரிபக்வமாயிருக்கப்பெற்ற) அந்தக் கர்த்தமப்ரஜாபதி எத்தனை பிள்ளைகளைப் பெற்றார்? அதைக் கேட்கவேண்டுமென்னும் விருப்பமுடைய எனக்குச் சொல்வீராக. வாரீர் அந்தணரே! ஜ்ஞாநாதி குணங்கள் நிறைந்தவர்களும் ப்ரஹ்மாவின் புதல்வர்களுமாகிய ருசி·தக்ஷர் இவ்விருவரும் மனுவின் புதல்விகளாகிய ஆகூதி ப்ரஸூதி என்பவர்களை மனைவிகளாகப் பெற்று எங்ஙனம் பிள்ளைகளைப் பெற்றார்களோ, அவ்விதத்தை எனக்கு மொழிவீராக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார் :—மஹாநுபாவராகிய கர்த்தமர் ப்ரஹ்மதேவனால் ப்ரஜைகளைப் படைக்கும்படி தூண்டப்பெற்று ஸரஸ்வதி நதிக்கரையில் பதினாயிரமாண்டுகள் தவஞ்செய்தார். அங்ஙனம் தவம் செய்யுங் காலத்தில் அந்தக் கர்த்தமர் மனவூக்கத்துடன் கூடியதும் தனது வர்ணாஸ்ரமங்களுக்குரியதுமாகிய ஆசாரத்தினாலும் பக்தியினாலும் தன்னைப் பற்றினருடைய விருப்பங்களை நிறைவேற்றுந் தன்மையனான பரமபுருஷனை ஆராதித்துக்கொண்டு வந்தார். இங்ஙனம் அவர் பதினாயிர மாண்டுகள் பக்தியுடன் தனது வர்ணாஸ்ரமங்களுக்கு ஏற்பட்ட செயல்களைச் செய்துகொண்டு அதனால் பகவானை ஆராதித்து வந்தார். வாராய் விதுரனே! இது க்ருதயுகத்தில் நடந்த வ்ருத்தாந்தம். இப்படி பதினாயிரம் வருஷங்கள் நடந்தபின்பு புண்டரீகாக்ஷனாகிய பகவான் அவருடைய தவத்திற்கு ஸந்தோஷம் அடைந்து, பஞ்சோபநிஷன்மந்த்ரங்களால் அறியத் தகுந்ததும் ஸௌக்ந்த்யம் ஸௌகுமார்யம் லாவண்யம் யௌவனம்

முதலிய கல்யாண குணங்கள் அமைந்ததுமாகிய திவ்ய மங்கள விக்ரஹத்தை தரித்துக்கொண்டு வந்து அந்தக் கர்த்தமப்ரஜாபதிக்கு தர்சனம் கொடுத்தான். அந்த பகவான் நிர்மலனும் ஸூர்யன்போல் ஒளியுடன் திகழ்கின்றவனும் வெண்தாமரைகளும் கரு நெய்தல்களும் கலந்து கோக்கப்பெற்ற பூமாலை அணிந்தவனும் நிருநிருத்துக் கறுத்த முன்நெற்றி மயிர்களின் வரிசையால் விளங்குகின்ற தாமரை மலர்போன்ற முகமுடையவனும் நிர்மலமான பீதாம்பரமுடுத்தவனுமாயிருந்தான். மற்றும், அவன் கிரீடமும் குண்டலங்களும் அணிந்து சங்கம் சக்ரம் கதை இவைகளைத் தரித்து லீலைக்காகக் கையில் வெண்தாமரை மலர் ஏந்தி மனோஹரமான புன்னகை அமைந்த கண்ணோக்கமுடையவனுமாயிருந்தான். அம் மஹானுபாவன் அப்பரமபுருஷன் ஸ்ரீகருத்மானுடைய தோளின்மேல் தனது பாதாரவிந்தங்களை இட்டுக்கொண்டு வீற்றிருந்து மார்பில் ஸ்ரீமஹா லக்ஷ்மியுடன் திகழ்கின்றவனும் கழுத்தில் கௌஸ்துப மணி தரித்தவனுமாகி ஆகாயத்தில் கர்த்தம ப்ரஜாபதிக்கெதிரே வந்து நின்றான். அந்த ஸ்ரியபதியைக் கண்டு கர்த்தமர் தன் மனோரதம் கைகூடப் பெற்றவராகிப் பேராநந்தத்துடன் பூமியில் விழுந்து தண்டனிட்டார். அவர் மீளவும் எழுந்து ஸந்தோஷம் நிறைந்த மனமுடையவராகி அஞ்சலி செய்து அவனுடைய குணங்களை எடுத்துரைப்பனவாகிய உரைகளால் தன்னுடைய அபிப்ராயத்தை வெளியிட்டுக் கொண்டு ஸ்தோத்ரம் செய்தார்.

கர்த்தமர் சொல்லுகிறார் :—ஸத் புருஷர்களால் ஸ்தோத்ரஞ் செய்யத்தகுந்தவனே! பரிபூர்ண ஸத்வமயனை உன்னுடைய காட்சியால் என் கண் பயன்பெற்றது. யோகம் கைபுகுந்த மஹாயோகிகளும் பல ஜன்மங்கள்

எடுத்தாயினும் உன் காட்சியையன்றோ விரும்புகின்றார்கள். அப்படிப்பட்ட உன் காட்சி எனக்குக் கிடைத்ததாயின், இதைவிட எனக்கு என்னவேண்டும். கண் படைத்ததற்கு இதைக் காட்டிலும் மற்றொரு பயன் உண்டோ? 'தர்மம் அர்த்தம் காமம் ஆகிய இவையன்றோ புருஷார்த்தம்? என் காட்சியைப் புருஷார்த்தமென்கிறீரே! இதெப்படி?' என்னில் சொல்லுகிறேன். எவர் உன் மாயையால் மதி மயங்கப் பெற்றிருக்கின்றார்களோ, அவர்கள் ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்கு ஓடம்போன்ற உன் பாதாரவிந்தங்களை அற்பஸுகங்களுக்காகப் பணிகின்றார்கள். நரகம்போன்ற ஸம்ஸாரத்தில் அவர்கள் எந்தெந்த ஸுகங்களை விரும்புகிறார்களோ, அவற்றையும் நீ அவர்களுக்குக் கொடுக்கின்றனை. ஆயினும், அவர்கள் ஸுமேரு பர்வதத்தில் சென்று பலகறை தேடுவாரபோல், மஹாநந்தங் கொடுப்பவனாகிய உன்னைப் பணிந்து அற்பஸுகங்களைப் ப்ரார்த்திப்பதற்குக் காரணம் உன் மாயையால் மதிமயங்கப் பெற்றிருக்கையேயன்றி வேறில்லை. ஆகையால் தர்மாதிகளே புருஷார்த்தமென்று நினைத்து அவற்றிற்காக உன்னைப் பணியுமவன் மூர்க்கனேயாவான். இப்படி நிந்திக்கின்ற நானும் அவர்களில் ஒருவனே. நான், இல்லறத்தை வளர்க்கின்றவளும் சீலம் ஒத்திருக்கப் பெற்றவளுமாகிய பார்யையை மணம் புரிய விரும்பி இந்த துரபிப்ராயத்தினால், கல்பவ்ருக்ஷம்போல் விரும்பினவற்றையெல்லாம் கொடுக்குந்திறமையுடையதும் ஸமஸ்த புருஷார்த்தங்களுக்கும் மூலமுமாகிய உன் பாதமூலத்தைப் பற்றினேன். 'இப்படி ஹேயஉபாதேயங்களை (விடத்தகுந்தவைகளையும் பற்றத்தகுந்தவைகளையும்) பிரித்தறியுந் திறமையுடைய நீ அற்பஸுகங்களை விரும்பி அவற்றிற்காக என்னைப் பற்றினையேன்?"

என்னில், சொல்லுகிறேன். வாராய் ஜகதீசனே! இவ்வுலகம் அற்பஸுகங்களால் மதிமயங்கப்பெற்று, ப்ரஜைகளுக்கு நாதனாகிய நீ வெளியிட்ட வேதரூபமான உன் வசனமாகிற தந்திக்கம்பியால் பசுபோல் கட்டுண்டிருக்கின்றது. ஆகையால் அந்த வேதங்களில் வெளிப்படையாய்த் தோற்றுகிற தர்ம அர்த்த காமங்களையே வெகுமதித்து அவ்வற்றில் மனவிருப்பங்கொண்டு அவற்றிற்காக உன்னைப் பணிகின்றார்கள். வாராய் நிர்மலனே! நானும் அந்த உலகத்தவர்களைப் பின்றொடர்ந்து காலஸ்வரூபனாகிய உனக்கு ஆராதனஞ் செய்கின்றேன். நான் பற்றத்தகுந்தவைகளையும் விடத்தகுந்தவைகளையும் நன்றாக அறிந்தவனே. ஆயினும் உன் கட்டளையைப் பின்றொடர்ந்த எங்கள் பிதாவாகிய ப்ரஹ்மதேவனால் ப்ரஜைகளைப் படைக்கும்படி நியமிக்கப் பெற்றவனாகி க்ருஹஸ்த தர்மங்களால் உன்னை ஆராதிக்க வேண்டுகின்றேன். (நீ கால ஸ்வரூபனாகி ,,ஸம்ஸாரிகளின் ஆயுஸ்ஸை வீணாக ஓட்டுகின்றனை. ஆகையால் நான் ஸாம்ஸாரிக தர்மங்களை அனுஷ்டிப்பவனாகிக் காலஸ்வரூபனாகிய உன்னிடத்தில் பயந்து எமது வாழ்நாளைப் பயன்படச் செய்யவிரும்பியும் எங்கள் தந்தையின் கட்டளையைப் பரிபாலனஞ்செய்ய விரும்பியும் காலஸ்வரூபனாகிய உனக்கே ஆராதனஞ்செய்ய விரும்புகின்றேன். எவர் விவேகமற்று தர்ம அர்த்த காமங்களில் உழல்கின்ற ஸம்ஸாரி லோகங்களையும், விவேகிகளாயிருந்தும் அவர்களைப் பின்றொடர்ந்து பசு ப்ராயரான எம்மைப் போன்றவர்களையும் துறந்து ஒருவர்க்கொருவர் உன் குணங்களைச் சொல்லுகையாகிற இனிய அம்ருதத்தினால் தேஹ தர்மங்களான ஜராமரணாதிகளெல்லாம் தீரப்பெற்று ஸம்ஸார தாபங்களையெல்லாம் போக்குவதாகிய உன் ஸ்ரீபாதமாகிற குடையின் நிழலில்

ஒதுங்கி வர்த்திக்கின்றார்களோ, அவர்களுடைய ஆயுஸ்ஸைக் கால சக்ரம் வீண்செய்கிறதில்லை. அவர்களுடைய வாழ்நாளே பயன் பெற்றதாம். காலசக்ரம் மூப்புப் பசி தாஹம் முதலிய சுழல்களையுடையது; பதின் மூன்று மாதங்களை இலையாகப் பெற்றது. இதற்கு முன்னூற்றறுபது நாட்களே மூன்னூற்றறுபது கணுக்களாயிருக்கும். ஆறு ருதுக்களே இதன் சக்கரக் கட்டுகள். கலை காஷ்டை க்ஷணம் முஹூர்த்தம் முதலிய பிரிவுகளே இதன் வட்டைகளாம். ஸமமாகவும் அதிகமாகவும் குறைவாகவும் நடக்கின்ற மூன்று சாதுர்மாஸ்யங்களும் இதற்கு இடையிலிருக்கின்ற மூன்று ரந்த்ரங்களாம். இது மிகவும் தீவ்ரமான வேகமுடையது. இத்தகைய கால சக்ரமானது கேவல ஸம்ஸாரிகளின் ஆயுஸ்ஸை வீணாகப் பறித்துக்கொண்டு போகின்றது. உன் குணங்களை அனுபவிக்கின்ற மஹானுபாவர்களின் ஆயுஸ்ஸை அது வீணாகப் பறிக்கிறதில்லை. அவர்களுடைய ஆயுஸ்ஸையும் இந்தக் கால சக்ரம் பறித்துக்கொண்டு போகின்றதேயாயினும், உன்னைப் பெறமுயர்ச்சி செய்யாத கேவல ஸம்ஸாரிகளின் ஆயுஸ்ஸைப் போல், உன்னைப் பெறவிரும்பி உன் குணங்களைப்பேசி உன்னை அனுபவிக்கின்ற மஹானுபாவர்களின் ஆயுஸ்ஸை வீணாய்த்தொலைகிறதில்லை. 'ஆயினும், ப்ரஹ்ம ருத்ராதிகள் பலரும் இருக்க என் பாதத்தையே விசேஷமாகப் பற்றுவதற்கு என்ன காரணம்?' என்னில் சொல்லுகிறேன். நீ ஸ்ருஷ்டிக்கு முற்காலத்தில் நாமரூபங்களுக்கிடமல்லாத சேதன அசேதனங்களையும் காலத்தையும் சரீரமாகக் கொண்டிருக்கின்றனை. அப்படிப்பட்ட நீ நாமரூபங்களுக்கிடமாகிப் புலப்படுகின்ற இந்த ஜகத்தையெல்லாம் படைக்க விரும்பி, ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் உன்னில் மிகவும் வேறுபட்டதும் உனக்குச்

சரீரமுமாகிய ப்ரக்ருதியைக் கொண்டு இந்த ப்ரபஞ்சத்தையெல்லாம் உன்னிடத்திலேயே படைக்கின்றனை. அதற்குள் புகுந்து அவற்றைப் பாதுகாக்கின்றனை; மீளவும், உன்னிடத்தில் ஸம்ஹரித்துக்கொள்கின்றனை. நூல்பூச்சி தன் சக்தியால் நூல்களை உண்டாக்கி மீளவும் அவற்றை உள்வாங்கிக் கொள்வதுபோல், நீயும் ப்ரக்ருதி புருஷ காலங்களென்கிற உன் சக்திகளாலும் [1] ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வாதிகளாலும் ப்ரபஞ்சத்தைப் படைப்பதும் அதை மீளவும் தன்னிடத்தில் ஸம்ஹரித்துக் கொள்வதுமாகி விளையாடுகின்றனை. ஆகையால் நீயே ஜகத்காரணன். ஆனதுபற்றி நான் எனக்கேற்ற மனைவியை மணம்புரிய விரும்பி அவ்விருப்பம் ஈடேறும்பொருட்டு உன் பாதாரவிந்தங்களைப் பற்றினேன். ஜகதீசனே! நீ உன் மாயையினால் அஹங்காரத்தையும் ஆகாயம் முதலிய பஞ்ச பூதங்களையும் அவற்றின் ஸூக்ஷ்மமான சப்தாதி விஷயங்களையும் ஸ்ருஷ்டிக்கின்றனை. அந்த அஹங்காரத்திற்குட்பட்டு மதிமயங்கி நாங்கள் சப்தாதி விஷயங்களில் கால் தாழ்ந்து உன் பாதங்களை விரும்பாதிருக்கின்றோம். ஆ! இதென்ன வருத்தம்! இப்படி நான் உன் பாதங்களை விரும்பாதிருப்பினும், திகழ்கின்ற துளஸி மாலையுடன் கூடின ஆச்சர்யமான திவ்யமங்கள விக்ரஹத்துடன் நீ எனக்குப் புலப்பட்டனையல்லவா? ஆனதுபற்றியே என்னை உன் பாதங்களில் சேர்ப்பித்துக்கொள்கையாகிற அநுக்ரஹத்தையும் செய்வாயென்று நிச்சயிக்கின்றேன். அங்ஙனம் எங்களை அநுக்ரஹிப்பதில் மிகவும் ஊக்கமுற்றிருக்கின்ற உன்னை யான் அடிக்கடி வணங்குகின்றேன். நீ ஜ்ஞானைகமயனை உன்னையே

---

1 எல்லாம் அறிந்திருக்கை எல்லாத் திறமைகளுமுடையவனாயிருக்கை முதலியவைகளாலும்.

அநுபவிப்பவனாகி மஹாநந்தத்தில் மூழ்கியிருப்பவன். ஆகையால் உலகச் செயல்களிலும் அவற்றின் ப்ரயோஜனங்களிலும் கண் வைப்பவனல்லை. ஆயினும் தன் ஸங்கல்பஜ்ஞானமாத்ரத்தினால் உலக வ்யாபாரங்களையெல்லாம் நடத்துகின்றனை. நீ, உன்னைச் சிறிது ஆராதிப்பவனுக்கும் அவன் விரும்பின விருப்பங்களையெல்லாம் நிறைவேற்றுந் தன்மையன். ஆனதுபற்றியே உன் பாதாரவிந்தங்கள் அனைவராலும் புகழத் தகுந்தவை. இத்தகையனான உனக்கு நமஸ்காரம்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் கர்த்தமரால் ஸத்யமாகத் துதி செய்யப்பெற்றவனும் கருத்மானுடைய பின்புறத்தில் வீற்றிருந்து விளங்குமவனும் ப்ரேமத்தினாலும் புன்னகையினாலும் அழகிய கண்ணோக்கத்தினாலும் திகழ்கின்ற புருவமுடையவனுமாகிய பகவான் பத்மநாபன் கர்த்தமரைப் பார்த்து அம்ருதம்போன்ற இனிய உரையுடன் மொழியத் தொடங்கினான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—உனது அபிப்ராயத்தை அறிந்து முன்னமே நான் அதற்குத் தகுந்தபடி ஏற்பாடு செய்திருக்கின்றேன். நீ எதற்காக யம நியமாதிகளால் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டு என்னை ஆராதித்தனையோ, அந்த விஷயம் எனக்கு முன்னமேதெரியும். வாராய் கர்த்தம ப்ரஜாபதீ! என்னை எவனேனும் ஒருவன் ஆராதிப்பானாயின், அது எக்காலத்திலும் வீணாகாது. என்னிடத்தில் நிலைநின்ற மனமுடைய உன்னைப்போன்றவர் என் விஷயத்தில் செய்த ஆராதனம் முதலே வீணாகாது. இவ்விஷயத்தில் ஸந்தேஹம் உண்டோ? ப்ரஹ்மாவின் புதல்வனும் ஸார்வபௌமனும் மங்களமான ஆசாரமுடையவனென்று புகழ்பெற்றவனுமாகிய மநு ப்ரஹ்மாவர்த்தமென்னும் தேசத்தில்

வாஸஞ் செய்துகொண்டு ஸப்தஸாகரங்களும் உள்ளடங்கப்பெற்ற பூமண்டலத்தைப் பரிபாலித்துக்கொண்டு வருகின்றான். இம்மனு உனக்குத் தெரிந்தவனல்லவா? அந்தணனே! ராஜர்ஷியாகிய அம்மனு சதரூபையென்னும் பார்யையுடன், என்னுடைய ஆராதன ரூபமான தர்மங்களை ஆசரிப்பதில் ஸமர்த்தனாகிய உன்னைப் பார்க்க விரும்பி நாளையின்றைத்தினம் இங்கு வரப்போகின்றான். 'அவன் வருவதனால் எனக்கு என்ன உபயோகம்?' என்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. வல்லனே! கறுத்த விழிகள் அமைந்த கண்களுடையவளும் (கறுத்த கடைக்கண்களுடையவளும்) வயது சீலம் நடத்தை குணம் இவை அமைந்தவளும் தனக்குத் தகுந்த பர்த்தாவைத் தேடுகின்றவளுமாகிய தேவஹூதியென்னும் பேர்கொண்ட தன் புதல்வியை வயது முதலியவைகளால் தகுந்திருக்கிற உனக்குக் கொடுக்கப் போகின்றான். நீ காமபோகங்களை விரும்பி எந்தக் கன்னிகையிடத்தில் இத்தனை வருஷங்களாக மனத்தை வைத்திருந்தாயோ, அத்தகையளான மனு கன்னிகையானவள், வாராய் அந்தணனே! அனேக வர்ஷங்கள் வரையிலும் ஒரு க்ஷணகாலம்போல் உன்னை அநுபவிக்கப் போகின்றாள். (உன்னோடு பலவாண்டுகள் வரையிலும் ஒரு க்ஷணகாலம்போல் காமஸுகங்களை அநுபவிக்கப் போகின்றாள்). இந்த மனுவின் புதல்வியாகிய தேவஹூதி உன் வீர்யத்தினால் ஒன்பது பெண்களை ப்ரஸவிக்கப் போகின்றாள். உன் வீர்யத்தினால் பிறந்த அந்த ஒன்பது பெண்களையும் மரீசி முதலிய மஹர்ஷிகள் மணம் புரிந்து சீக்ரத்தில் பிள்ளைகளைப் பிறப்பிக்கப் போகின்றார்கள். நீ இங்ஙனம் என்னுடைய ஆஜ்ஞையை நன்றாகப் பரிபாலனஞ் செய்து அழகியதான என்னுடைய ஆராதனத்தில் நிலைநின்று நீ செய்யும் செயல்களை

யும் அவற்றின் பலன்களையும் என்னிடத்தில் ஸமர்ப்பித்து என்னையே அடையப்போகின்றனை. மனம் போன வழியே போகாமல் அதை அடக்கி ஆளுந் திறமையுடைய நீ ஜங்கமஸ்தாவரமான பூதங்களில் தயைசெய்து அபயங் கொடுத்து அவற்றிற்கு அந்தராத்மாவாய் நின்று தரித்துக்கொண்டிருக்கிற என்னிடத்தில் ஜங்கமஸ்தாவரரூபமான ஜகத்தையெல்லாம் காண்பாய். நானும் என்னுடைய அம்சாம்சத்தினால் உன் வீர்யத்தின் மூலமாய் உன் பத்னியாகிய தேவஹூதியிடத்தில் அவதரித்து, ப்ரக்ருதி புருஷன் ஈஸ்வரன் ஆகிய இம்மூன்று தத்வங்களின் உண்மையை அறிவிக்கும்படியான தத்வஸம்ஹிதையை இயற்றப்போகின்றேன்.

ஸ்ரீ மைத்ரேயர் சொல்லுகிறார் :—இந்த்ரியங்களை உள்ளடக்கி மனத்தை நிலைநிறுத்தி த்யானிக்கும் யோகிகளின் ஜ்ஞானத்திற்கு விஷயமாகுந் தன்மையனான பகவான் அந்தக் கர்த்தம ப்ரஜாபதிக்கு இங்ஙனம் மொழிந்து உடனே ஸரஸ்வதி நதியினால் சுற்றிலும் சூழப்பட்ட பிந்து ஸரஸ்ஸின் கரையிலுள்ள அவரது ஆஸ்ரமத்தினின்று புறப்பட்டுப்போனான். ஸமஸ்த யோகீஸ்வரர்களாலும் புகழப்பெற்றதும் ஸ்வாபாவிகமுமாகிய கல்யாண குணகணங்களின் ப்ரகாரத்தையுடைய பகவான் அந்தக் கர்த்தம ப்ரஜாபதி பார்த்துக் கொண்டேயிருக்கையில், பக்ஷீந்த்ரனாகிய கருத்மானுடைய சிறையடிகளால் உச்சரிக்கப்பட்டதும் ப்ருஹத் ரதந்தரம் என்கிற ஸாமங்கள் தோன்றப்பெற்றதுமான ருக்ஸமுதாயமாகிற ஸ்தோமத்தைச் செவியுற்றுக்கொண்டு நடந்தான். பரிசுத்த ஸ்வரூபனாகிய பகவான் அங்ஙனம் கண் மறையச்சென்ற பின்பு, மஹானுபாவராகிய கர்த்தமரிஷி 'நான் பெயினன்றைக்கு மனு வரப்போகின்றான்' என்று பகவான் மொ

ழிந்த அந்தக் காலத்தை எதிர்பார்த்துக் கொண்டு பிந்து ஸரஸ்ஸின் கரையில் உட்கார்ந்தார். வீரராய் வில்லாளியாகிய விதுரனே! அப்பால் ஸ்வாயம்புவமனு ஸ்வர்ணமயமான அலங்காரங்கள் அமைக்கப்பெற்ற ரதத்தில் ஏறி அந்த ரதத்தில் தன் புதல்வியையும் ஏற்றிக்கொண்டு பார்யையுடன் தன்புதல்விக்கு வரனைத் தேடும்பொருட்டு பூமி முழுவதும் ஸஞ்சரிப்பவனாகி பகவான் என்றைத்தினம் மனு வருவானென்று மொழிந்தாரோ, அன்றைத்தினமே ஶாந்தியை வ்ரதமாகவுடைய அம்முனிவருடைய ஆஶ்ரமத்திற்கு வந்தான். அவரது ஆஶ்ரமம் பிந்துஸரஸ்ஸின் கரையில் இருக்கின்றது. அந்தபிந்து ஸரஸ்ஸு ஸரஸ்வதி நதியால் சூழப்பட்டிருக்கும். தன்னைச் சரணம் அடைந்த கர்த்தமரிடத்தில் மிகவும் இளகின்ற தயையுடையவனான பகவானுடைய நேத்ரங்களினின்று ஆநந்த நீர்த்துளிகள் பெருகி அந்த ஸரஸ்ஸில் விழுந்தன. அனது பற்றியே அந்த ஸரஸ்ஸுக்கு பிந்து ஸரஸ்ஸென்னும் பேர் விளைந்தது. (ஆநந்த ஜலபிந்துக்கள் விழுந்து அவ்விடத்தில் ஓர் ஸரஸ்ஸாகத் தோன்றின. அதற்கு பிந்து ஸரஸ்ஸென்று பேர் வழங்கி வந்தது). அந்த பிந்து ஸரஸ்ஸின் ஜலம் பார்த்தமாத்திரத்தில் புண்யத்தை விளைவிப்பதும் ரோகங்களைப் போக்குவதும் அம்ருதம் போல் மிகுந்தருசியுடையதுமாயிருக்கும். அந்த ஜலத்தில் மஹர்ஷிகள் தினந்தோறும் ஸ்னானஞ்செய்து கொண்டிருப்பார்கள். அதன் கரையில் அழகிய ம்ருகங்களும் பக்ஷிகளும் கூவப்பெற்று மிகவும் அழகாயிருக்கின்ற வ்ருக்ஷங்களும் கொடிகளும் நிரை நிரையாயிருக்கும். அதன்கரையிலுள்ள அரண்யங்களில், எல்லாருதுக்களிலும் எந்தெந்த பூவும் காயும் பழமும் உள்ளவோ அவையெல்லாம் மாறாதிருக்கும். அதனால் அந்த ஸரஸ்ஸு மிகுந்த சோலை

யுடன் விளக்கமுற்றிருக்கும். அங்குப் பக்ஷிகள் மதித்து கோஷித்துக்கொண்டிருக்கும். வண்டுகள் மதுபானத்தினுல் மதித்து முரலுகின்றமையால் அவ்விடம் விலாஸமுடையதாயிருக்கும். மயில்கள் மதங்கொண்டு நாட்யமாடுகிற நடர்கள்போல் நர்த்தனஞ் செய்வதில் பரபரப்புற்றிருக்கும். குயில்கள் மதித்து ஒன்றோடொன்று பொருமையினுல் கூவிக்கொண்டிருக்கும். கடம்பு நீர் வஞ்சி அசோகம் புங்கை மகிழ் வேங்கை குருந்தம் பாரிஜாதம் வெப்பாலை மா முதலிய பல வ்ருக்ஷங்களால் அலங்காரமுற்றதும் நீர்க்காகம் காரண்டவம் ப்லவம் ஹம்ஸம் குரரம் ஜலகுக்குடம் ஸாரஸம் சக்ரவாகம் சகோரம் முதலிய ஜலபக்ஷிகள் அழகாய்க் கூவப்பெற்றதும், மான் காட்டுப்பன்றி பன்றி கவயம் யானை கொண்டைமுயல் ஸிம்ஹம் குரங்கு கீரிப்பிள்ளை கஸ்தூரிம்ருகம் முதலிய ம்ருகங்களால் சூழப்பட்டதுமாயிருக்கும். ஆதிராஜனுகிய அந்த ஸ்வாயம்புவமனு பரிவாரங்களுடன் அத்தகைய புண்யதீர்த்தமாகிய அந்த பிந்து ஸரஸ்ஸைச் சேர்ந்து அங்கு அக்னிகார்யங்களை நிறைவேற்றி உட்கார்ந்திருக்கின்ற கர்த்தமமுனிவரைக் கண்டான். தவத்தில் நெடுநாள் தீவ்ரமானமுயற்சி கொண்டவடிவத்தினுல் ப்ரகாசிக்கின்றவரும், அவ்வளவு கடுந்தவம் செய்தும் ஸ்னேஹம் நிறைந்த பகவானுடைய கடைக்கண்ணேக்கத்தினுலும் அந்த பகவானுடைய பேச்சாகிற சந்த்ரகலையினின்று பெருகிவருகின்ற அம்ருதவெள்ளத்தினுலும் வருத்தமெல்லாம் நீங்கி அவ்வளவு இளைப்பில்லாதவரும் உயர்ந்த உருவமுடையவரும் தாமரை மலர் போன்ற கண்கள் விளங்கப் பெற்றவரும் ஜடைகள் தரித்து நார்த்துணி உடுத்து ஸ்னனம் முதலிய ஸம்ஸ்காரங்கள் எவையும் இல்லாமையால் அழுக்கடைந்திருப்பவரும் சாணை

பிடிப்பது முதலிய ஸம்ஸ்காரமில்லாமையால அழுக்கடைந்து அவ்வளவு ப்ரகாசமில்லாத ரத்னம்போன்றவருமாகிய அம்மஹர்ஷியைக் கிட்டி நமஸ்காரம் செய்தான். அனந்தரம் அந்தக் கர்த்தமப்ராஜாபதி, அங்ஙனம் ஆச்ரமத்திற்கு வந்து தன்னெதிரில் நமஸ்காரம் செய்து நிற்கின்ற மனுசக்ரவர்த்தியை ஆசீர்வாதங்களால் மனக்களிப்புறச் செய்து அவருடைய கௌரவத்திற்குத் தகுந்த பூஜை செய்து ஸத்கரித்தார். தான் செய்த பூஜையைப் பெற்று உட்கார்ந்து தன்னுடைய வார்த்தையைக் கேட்க முயன்று மனவூக்கமுற்றிருக்கின்ற அந்த மனு சக்ரவர்த்தியை இனிய உரைகளால் ஸந்தோஷப்படுத்திக் கொண்டு கர்த்தமப்ராஜாபதி இங்ஙனம் மொழிந்தார்.

கர்த்தமப்ரஜாபதி சொல்லுகிறார்:—வாராய் மனு சக்ரவர்த்தியே! நீ இங்ஙனம் உலாவுவது ஸத்துக்களை ரக்ஷிப்பதற்காகவும் அஸத்துக்களை அழிப்பதற்காகவுமேயன்றி வேறுகாரணத்தைப் பற்றியன்று. நீ பகவானிடத்திலுள்ள உலகங்களைப் பாதுகாக்கும் சக்தியே ஓர் வடிவங் கொண்டு வந்தாற்போல் தோற்றுகின்றனை. (உலகங்களைப் பாதுகாப்பது ஸ்ரீமஹாவிஷ்ணுபகவானுடைய கார்யமே. மற்ற எத்தகையனுடையதுமன்று. அந்த பகவான் தன்னுடைய சக்தியை உன்னிடத்தில் வைத்து உன்மூலமாய் உலகங்களைப் பாதுகார்த்து வருகின்றான். ஆகையால் நீ வெளியில் வந்து திரிவது ஸாதுக்களைப் பாதுகாப்பதற்கும் அஸாதுக்களை அழிபதற்குமே). எந்த பகவான் உலகங்களைப் பற்பலவகைகளால் பாதுகாக்கும் பொருட்டு ஸூர்யன் சந்த்ரன் அக்னி இந்த்ரன் வாயு யமன் தர்மம் வருணன் முதலிய சரீரங்களைக் கொள்கின்றானோ, அப்படிப்பட்ட ஸ்ரீவிஷ்ணுவே இப்பொழுது இங்ஙனம் மனுசக்ரவர்த்தியென்னும் சரீ

ரத்தைக் கொண்டு உலகங்களைப் பாதுகாக்கின்றான். ஆகையால் நீ பரிசுத்தனான ஸ்ரீவிஷ்ணுஸ்வரூபனேயன்றி வேறில்லை. அங்ஙனம் பகவத்ஸ்வரூபியான உனக்கு நமஸ்காரம். ஜயத்தைக் கொடுக்குந்தன்மையதும் ரத்னங்கள் நிரைநிரையாய் இழைக்கப் பெற்றதுமான ரதத்தின்மேல் ஏறிப் பிறர்க்கு பயங்கரமான தனுஸ்ஸை ஒலிப்பித்துக் கொண்டு ரதகோஷத்தினாலேயே தர்மவிரோதிகளை பயமுறுத்துமவனும் தனது ஸைன்யங்களின் காலடிகளால் பூமண்டலத்தை யெல்லாம் நடுங்கச் செய்பவனுமாகி மஹத்தான ஸேனையை அழைத்துக் கொண்டு ஸூர்யன் போல், நீ எப்பொழுது ஸஞ்சரியாதிருப்பாயோ, அப்பொழுது பகவான் ஏற்படுத்தின தர்மமர்யாதைகளெல்லாம் தர்மவிரோதிகளான துஷ்டர்களால் பாழாய்விடும். அப்படியாயின், அது மிகவும் வருத்தத்திற்கிடமாம். அன்றியும், நீ வெளிப் புறப்படாமல் வீட்டில் படுத்திருப்பாயாயின், அர்த்த காமங்களில் மனஊக்கமுற்ற மனிதர்கள் நம்மைக் கேட்பாரில்லையாகையால் நாம் நமதிஷ்டப்படி நடக்கலாமென்று துணிந்து பயமின்றி மனம் போன வழியெல்லாம் போகத் தொடங்குவார்கள். அவர்களால் அதர்மமும்[1] சாகோபசாகமாய் வளர்ந்துவரும். இங்ஙனம் நீ ஆங்காங்குத்திரிந்து எவரெவர் எங்ஙனம் நடக்கின்றார்களென்று ஆராய்ந்து அவரவர்க்கு உரியபடி தண்டனை விதிக்காமல் வெறுமனே வீட்டில் படுத்து உறங்குவாயாயின், இவ்வுலகமெல்லாம் திருடர்களால் ஆக்ரமிக்கப்பெற்றுப் பாழாய்விடும். ஆகையால் நீ இங்ஙனம் சுற்றித் திரிவதற்கு லோகரக்ஷணமே முக்யப்ரயோஜனம். வாராய் வீரனே! ஆயினும், நீ எந்த உத்தேசத்தினால் இங்கு எமதாச்ரமத்திற்கு வந்தனையோ, அதைச்

1. கப்புங் கிளையுமாய்.

சொல்வாயென்று உன்னை வினவுகின்றேன். நீ எந்த உத்தேசத்தைக் குறித்து வந்தனையோ, அதைச் சொல்வாயாயின், அந்த உத்தேசத்தை யாம் கபடமற்ற மனத்துடன் அப்படியே அங்கீகரிக்கின்றோம். இருபத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

மனு கர்த்தமருக்குத் தன் புதல்வியைக் கொடுத்து விவாஹஞ் செய்வித்துத் தான் திரும்பிப்போதல்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—மனுசக்ரவர்த்தியானவன், இங்ஙனம் தன் குணங்களின் பெருமையையும் செயல்களின் மேன்மையையும் அம்மஹர்ஷி [illegible] மொழியக்கேட்டு வெட்கித்தவன் போன்று [illegible] தர்மநிஷ்டராகிய அம்மஹர்ஷியைக் குறித்து இங்ஙனம் மொழிந்தான்.

மனு சொல்லுகிறான்:—வேதஸ்வரூபனாகிய ப்ரஹ்மதேவன், தவம் வித்யை (ஜ்ஞானயோகம்) ஆகிய [illegible]வை நிறைந்தவரும் சப்தாதிவிஷயங்களில் மனப்பற்றில்லாதவரும் அந்தணர்களில் சிறந்தவருமாகிய உம்மைத் தன்னுடைய ரக்ஷணத்தின் பொருட்டுத் தன்முகத்தினின்று ஸ்ருஷ்டித்தான். ப்ரஹ்மா வேதஸ்வரூபனாகிய தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்கையாவது வேதங்களைச் சிதறாமல் விளங்கச் செய்கையேயாம். அதற்காகவே ப்ராஹ்மணஸ்ரேஷ்டர்களாகிய உங்களைப் படைத்து உங்கள் மூலமாய் அவ்வேதங்களை முழுவதும் பரம்பச் செய்து அவற்றைப் பாதுகாத்து வருகின்றான். இச்செயலும் ப்ரஹ்மதேவனுக்கு அந்தர்யாமியான பரமபுருஷனுடையதே. ஆயிரம் பாதங்களையுடைய (நினைத்த இடங்களெல்லாவற்றிலும் கைகால்களால் நடக்கவேண்டிய காரியங்களையெல்

லாம் நிறைவேற்ற வல்லனாகிய) பகவான், அந்த ப்ராஹ்மணர்களைப் பாதுகாக்கும்பொருட்டுத் தன்புஜஸஹஸ்ரத்தினின்று க்ஷத்ரியனை ஸ்ருஷ்டித்தான். வாரீர் அந்தணர்தலைவரே! அந்த பகவானுக்கு ப்ராஹ்மண குலத்தை ஹ்ருதயமாகவும், க்ஷத்ரியகுலத்தை அங்கமாகவும் சொல்லுகிறார்கள். இங்ஙனம் வேதங்களைப் பாதுகாக்கும் பொருட்டு ப்ராஹ்மணர்களையும் அந்த ப்ராஹ்மணர்களைப் பாதுகாக்கும் பொருட்டு க்ஷத்ரியர்களையும் ஸ்ருஷ்டித்தானாகையால் ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் ஒருவருக்கொருவர் தம்மைப் பாதுகாத்துக் கொள்ளுகின்றார்கள். கார்யகாரணஸ்வரூபனும் கார்யங்களைச் சேர்ந்த விகாரங்களால் தீண்டப்பெறாதவனும் சேதநாசேதனங்களைச் சரீரமாகவுடையவனும் சரீரத்தைச் சேர்ந்தவிகாரங்களால் தீண்டப்பெறாதவனுமாகிய தேவன் அந்த ப்ராஹ்மண க்ஷத்ரியர்களிருவரையும் தான் பாதுகாக்கின்றான். உம்மைக் கண்டமாத்ரத்தினால் என்னுடைய ஸம்சயங்களெல்லாம் தீர்ந்தன. வாரீர் மஹானுபாவரே! கர்த்தம ப்ரஜாபதி! ஏனென்னில், ப்ரைஜகளைப் பாதுகாக்க விரும்புகின்ற எனக்கு நீர் தானாகவே தர்மத்தைக் கூறுகின்றீரல்லவா. நான் பணிந்து வினவித் தெரிந்து கொள்ள வேண்டிய தர்மத்தை என்மீது அருள் புரிந்து நீரே எனக்கு உபதேசிக்கிறீராகையால், என்னுடைய ஸம்ஶயங்களெல்லாம் தீருமென்பதில் ஸந்தேஹமென்? மஹானுபாவராகிய நீர் புண்யஞ்செய்யாத மற்றவர்க்குப் புலப்படுமவரல்லீர். அப்படிப்பட்ட நீர் என்னுடைய பாக்யத்தினால் எனக்குப் புலப்பட்டீர். மங்களத்தை விளைப்பதாகிய உமது பாததூளியை நான் என்சிரஸ்ஸினால் தரிக்கப்பெற்றேன். இதைக் காட்டிலும் மேலான மற்றொரு பாக்யம் உண்டோ? நீர் எனது பாக்யத்தினால் என

தர்மோபதேசஞ் செய்து என்னைச் சிக்ஷித்தீர். என் விஷயத்தில் நீர் மேலான அனுக்ரஹம் செய்தீர். அஹங்காராதிகளால் மறைக்கப்பெறாத காதுகளின் ரந்த்ரங்களால் உமது அழகான வார்த்தைகளைக் கேட்கப் பெற்றேன். இது என்பாக்யமே. பெண்ணிடத்தில் மிகுதியும் ஸ்னேஹம் உண்டாகப்பெற்று 'இவளுக்குத்தகுந்தவரனைத் தேடிப்பிடித்து நாம் எப்பொழுது மனக்கவலை தீரப்பெறுவோம்' என்று மனவருத்தமுற்று முகம் வாடி நிற்கிற நான் விண்ணப்பம் செய்வதை என்மேல் அருள் புரிந்து கேட்பீராக. இவள் தேவஹூதியென்னும் பேருடையவள்; ப்ரியவ்ரதன் உத்தானபாதன் இவர்களுக்கு உடன் பிறந்தவள்; என்னுடைய புதல்வி. இவள் வயது சீலம் குணம் இவை முதலியவற்றோடு கூடின பர்த்தாவைத் தேடிக் கொண்டு வருகின்றாள். இவள் உமது [illegible]னடத்தை சாஸ்த்ரஜ்ஞானம் ஸௌந்தர்யம் வயது குணம் இவைகளை ஒருக்கால் நாரதமுனிவர் சொல்லக்கேட்டாள். அதுமுதல் உமக்கே பார்யை யாகவேண்டுமென்று நிச்சயங்கொண்டிருக்கிறாள். வாரீர் ப்ராஹ்மணஸ்ரேஷ்டரே! இவளை ஸ்ரத்தையுடன் உமக்கு ஸமர்ப்பிக்கும் பொருட்டே நான் இவ்விடம் வந்தேன். ஆகையால் நீர் இக்கன்னிகையை அங்கீகரிப்பீராக. இவள் க்ருஹஸ்தாஸ்ரமத்திற்குரிய கர்மங்களில் உமக்கு அனுகூலையாயிருப்பாள். தெய்வாதீனமாய்த் தானே ஸமீபித்து வந்திருக்கிற ஆசைக்கிடமான வஸ்துவை, தான் எதிலும் மனப்பற்றில்லாதவனாயினும் வேண்டாமென்று தடுப்பது யுக்தமன்று. ஸப்தாதிவிஷயங்களில் மனப்பற்றுடையவன் அங்ஙனம் தான் வேண்டாமலே நேரிட்ட ஓர் வஸ்துவைத் தனக்கு வேண்டாமென்று தடுப்பது யுக்தமன்றென்பதைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? 'அங்ஙனம்

தடுத்தால் என்ன கெடுதி?' என்கிறீரோ; சொல்லுகிறேன், கேளும். எவன் தானாக நேரிட்ட காமத்தை அநாதரித்து அப்பால் தைன்யத்துடன் வேண்டுகிறானோ, அவனுடைய புகழ் அளவற்றதாயினும் சீக்ரத்தில் அழிந்து போய்விடும். தன்னிடம் தேடிக்கொண்டு வந்தவனைத் தான் அவமதித்தமையால் அவனுடைய மேன்மையும் பாழாய்விடும். 'நீ சொல்லுவதெல்லாம் வாஸ்தவமே. இதெல்லாம் மணம்புரியவேண்டுமென்னும் விருப்பமுடையவனுக்கன்றோ? நான் அத்தகையனல்லனே' என்கிறீரோ; சொல்லுகிறேன் கேளும். வாரீர் அறிஞரே! நீர் மணம் புரிவதற்காக முயற்சி செய்கிறீரென்று நான் கேள்விப்பட்டேன். ஆகையால் நீர் சில நாள்வரையில் ப்ரஹ்மசர்யத்திலிருந்து மணம் புரிகிறவரென்றும் நைஷ்டிகரன்றென்றும் தெரிந்தது. ஆனதுபற்றியே நான் என்புதல்வியை உமக்குக் கொடுத்து விவாஹஞ் செய்யும் பொருட்டு உம்மைத் தேடிக்கொண்டு இவ்விடம் வந்தேன். ஆதலால் நீர் என்னால் கொடுக்கப் பெற்ற இந்தக் கன்னிகையை அங்கீகரிப்பீராக.

ரிஷி சொல்லுகிறார்:—மன்னவர்தலைவனே! நீ மொழிந்தது வாஸ்தவமே. நான் விவாஹஞ்செய்துகொள்ள வேண்டுமென்னும் விருப்பமுடையவனே. உன்புதல்வியும் இதுவரையில் ஒருவனுக்கும் பார்யையாக ஏற்பட்டவளல்லள். நீ இவளை இதுவரையில் ஒருவனுக்கும் கொடுப்பதாக ப்ரதிஜ்ஞைசெய்யவில்லை. ஆகையால் எங்களிருவர்க்கும் முதன்மையான விவாஹம் நடக்குமாக. விவாஹங்களில் ப்ராஹ்மவிவாஹமே முதன்மையானது. இதுவே எங்களிருவர்க்கும் பொருந்தினது. அந்த ப்ராஹ்மவிதானத்தின்படி எங்களுக்கு விவாஹம் நடக்குமாக. வாராய் நரதேவனே! வேதசாஸ்த்ரத்தில் பெண்களுக்கு ஏற்பட்ட

விதியின்படி இந்த உன்புதல்வி ஆசைப்படுகிற விவாஹம் நடக்குமாக. நான் உன்னுடைய வேண்டுகோளுக்காக வே இவளை மணம் புரிகின்றேனல்லேன். இவளுடைய வயது ஸௌந்தர்யம் நடத்தை முதலியவற்றைக் கேள்விப்பட்டு நான் இவளையே மணம்புரியவேண்டுமென்று மனத்தில் நிச்சயித்திருக்கின்றேன். பகவானும் இவளை மணம்புரியும்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறான். ஆகையால் நான் இவளை அங்கீகரிக்கின்றேன்: மன்னவனே! ஸமஸ்தபூமண்டலத்திற்கும் நாதனாகிய உன்புதல்வியை எவன் விரும்பமாட்டான். இவள் ஆபரணங்களொன்றுமில்லாமல் கேவலம் தன்னுடைய தேஹஸௌந்தர்யத்தினாலேயே ஆபரணங்கள் பலவும் அணிந்து விளங்குகின்ற ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் திரஸ்கரிக்கின்றாள். இவள் ஆபரணங்களை அணிவது அவற்றின் சோபைக்காகவேயன்றித் தன் சோபைக்காகவன்று. ஆகையால் இவள் ஆபரணங்களுக்கும் ஆபரணம் போன்ற அழகான அங்கங்களுடையவள். அன்றியும், இந்த உன்புதல்வி ஒருக்கால் மித்தையின்மேல் அழகாக ஒலிக்கின்ற சிலம்புத்தண்டைகளை அணிந்து சப்திக்கின்ற பாதங்களால் திகழ்வுற்றுப் பந்தடித்துக்கொண்டு அந்தப் பந்தின்மேல்சென்ற சஞ்சலமான கண்களுடையவளாகி விளையாடிக் கொண்டிருக்கையில், விஶ்வாவஸுவென்ற கந்தர்வன் இவளைக் கண்டு இவளுடைய ஸௌந்தர்யத்தினால் மதிமயங்கி மனம் கலங்கப்பெற்றுத் தன்னுடைய விமானத்தினின்று மெய்ம்மறந்து விழுந்தானல்லவா. அப்படிப்பட்ட அழகியளும் மடந்தையர்களில் சிறந்தவளுமாகிய உன் புதல்வி ஒருவனை விரும்புவாளாயின், அவன் அவளை எங்ஙனம் அனுமதிக்கமாட்டான்? இவள் ஸ்ரீமஹா லக்ஷ்மியின் பாதாரவிந்தங்களில் பணிவிடைசெய்யாத பாக்யஹீனர்களுக்கும் புலப்

படவுமாட்டாள்; மனுசக்ரவர்த்தியென்று புகழ்பெற்ற மஹானுபாவனுகிய உனது புதல்வி; உத்தானபாதனுக்கு உடன்பிறந்தவள். இப்படிப்பட்ட இப்பெண்மணி தானே தேடிக்கொண்டு வந்திருக்கையில், அறிவுடையவன் எவன் தான் அங்கீகரிக்கமாட்டான்? ஆகையால் என்னுடைய வீர்யத்தை இவள் எது வரையில் தரிப்பாளோ (எது வரையில் பிள்ளைகளைப் பெறுவாளோ) அது வரையில் நான் இவளை அங்கீகரிக்கின்றேன். அதன் பிறகு பரமஹம்ஸாஶ்ரமத்திற்கு முக்யமாக ஏற்பட்டவைகளும் பரிசுத்த ஸ்வபாவனுகிய பகவானுல் கூறப்பட்டவைகளும் ஸத்வகுணத்திற்கிணங்கினவைகளும் ஸாத்விகர்களால் ஆதரிக்கப் பெற்றவைகளுமாகிய [1] விவேக விமோகாதி தர்மங்களை ப்ரேமத்துடன் அநுஷ்டிப்பேன். பிள்ளைகள் பிறந்தபின்பு நான் நிவ்ருத்தி தர்மத்தில் நிலைகின்றவனுகி இவளைத் துறப்பேன். இம்மார்க்கம் என்னுல் ஏற்படுத்தப் பட்டதன்று; ஈஶ்வரனுல் ஏற்படுத்தப்பட்டதே. தேவ திர்யக் மனுஷ்ய ஸ்தாவர பேதத்தினுலும் அவ்வவற்றினுள்ள அவாந்தர பேதத்தினுலும் பலவாறு பிரிந்திருக்கிற இந்த ஜகத்தெல்லாம் எவனிடத்தினின்று உண்டாயிற்றோ, எவனிடத்தில் ப்ரளயம் அடையப் போகின்றதோ, எவனி

1. விவேகமாவது எவ்வகையிலும் அசுசியில்லாத அன்னத்தினுல் விளையும் சரீரசுத்தி. விமோகமாவது காமஸுகங்களில் மனம் தாழப் பெறுதிருக்கை. இவை முதலியவை யென்கையால் அப்யாஸம் க்ரியை கல்யாணம் அனவஸாதம் அனுத்தர்ஷம் இவைகளை நினைக்கிறது. அப்யாஸமாவது சுபாஶ்ரயமான பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை அடிக்கடி த்யானிக்கை. க்ரியையாவது சக்திக்குப் பொருந்தின படி நித்ய நைமித்திக கர்மங்களை அனுஷ்டித்தல். கல்யாணமாவது ஸத்யம் கபடமில்லாமை தயை தானம் த்ரோஹசிந்தையில்லாமை என்னுமிவை. அனவஸாதமாவது எவ்வகை வருத்தங்களாலும் மனங் கலங்கப் பெறுமை. அனுத்தர்ஷமாவது-அதி ஸந்தோஷமில்லாமை.

டத்தில் நிலைபெற்றிருக்கின்றதோ, அப்படிப் பட்டவனும் ப்ரஜாபதிகளான ப்ரஹ்மாதிகளுக்கும் ப்ரபுவுமாகிய பரம புருஷனே நான் சொன்ன தர்ம மார்க்கத்திற்கு ப்ரமாணம். இது அந்த ஈஸ்வரனால் ஏற்படுத்தப்பட்டதேயன்றி, நான் புதிதாக ஏற்படுத்திச் சொல்லுகிறேனல்லேன்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார் :—வாராய் வீரனாகிய விதுரனே! அந்தக் கர்த்தம மஹர்ஷி இவ்வளவே மொழிந்து நின்றார். அப்பால் பத்மநாபனாகிய பகவானை மனத்தினால் சிந்தித்துக் கொண்டு வெறுமனே இருந்தார். அம் முனிவர் புன்னகையால் விளங்குகின்ற தன் முகசோபையால் தேவஹூதியின் புத்தியை மயங்கச்செய்தார். அப்பால் அந்த மனு சக்ரவர்த்தி தன் பார்யையுடைய அபிப்ராயத்தையும் தன் புதல்வியுடைய மனக்கருத்தையும் ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொண்டு மனக்களிப்புற்றவனாகி குணங்களெல்லாம் நிறைந்தவரான அம்மஹர்ஷிக்கு வயது சீலம் முதலியவற்றால் அனுரூபையான தன் புதல்வியைக் கொடுத்தான். மஹா ராஜனான மனுவின் பத்னி சதரூபையானவள் மகளுக்கும் மணவாளனுக்கும் பூஷணங்கள் வஸ்த்ரங்கள் விளையாட்டிற்கு வேண்டிய கருவிகள் இவைமுதலிய விலையுயர்ந்த பலவகைப் பரிசுகளையும் ப்ரீதியுடன் கொடுத்தாள். ஸார்வபௌமனாகிய அம்மனு தன் புதல்வியை நடத்தை முதலியவற்றால் தகுந்திருக்கிறவரானுக்குக் கொடுத்து மனக்கவலை தீரப்பெற்றவனாகிப் புதல்வியை புஜங்களால் வாரி அணைத்து அவளிடத்தில் மிகுதியும் ப்ரீதியுடையவனாகையால் இவளை எங்ஙனம் விட்டுப்பிரிந்து போவேனென்று மனங்கலங்கப் பெற்றான், ஆகையால் அவன் தனது புதல்வியின் பிரிவைப்பொறுக்க முடியாமல் நிரம்பவும் கண்ணீர்களைப் பொருக்கிக்கொண்டு 'அம்மே! குழந்தாய்!' என்று அழைத்துப் பெண்

ணின் முடியைக் கண்ணீர்களால் நனைத்து விட்டான். அம்மன்னவன் முனிவரிடத்தில் விடைபெற்றுக் கொண்டு பார்யையுடன் ரதத்தில் ஏறிக்கொண்டு பரிவாரங்களோடு தன் பட்டணத்திற்குப் புறப்பட்டுப் போனான். ரிஷிக்கூட்டங்கள் வாஸஞ் செய்வதற்குரியதாகிய ஸரஸ்வதி நதியின் அழகியதான இரண்டு கரைகளிலும் சமதமாதி குணங்கள் நிறைந்த மஹர்ஷிகளின் ஆஸ்ரமங்களில் அவர்கள் பகவதாராதனத்திற்காக ஸித்தப்படுத்திவைத்திருக்கிற துளஸி புஷ்பம் பழம் முதலியவற்றின் ஸம்ருத்திகளைப் பார்த்துக்கொண்டு அம்மன்னவன் மனக்களிப்புடன் சென்றான். அப்பொழுது ப்ரஜைகளெல்லோரும் தமது ப்ரபுவாகிய மனுசக்ரவர்த்தி அங்ஙனம் வருவதை அறிந்து ஸந்தோஷமுற்று ப்ரஹ்மாவர்த்த தேசத்தினின்று பாட்டு ஸ்தோத்ரம் வாத்யம் ஆகிய இவற்றுடன் அம்மனுவை எதிர்கொண்டார்கள். அம்மன்னவனுடைய பட்டணம் பர்ஹிஷ்மதி யென்னும் பேர் பூண்டு எங்கும் புகழ்பெற்றது; அந்நகரம் ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்திருக்கும். யஜ்ஞஸ்வரூபியாகிய ஆதிவராஹ பகவான் தன் சரீரத்தை உதறும்பொழுது அச்சரீரத்தினுள்ள ரோமங்கள் எவ்விடத்தில் உதிர்ந்தனவோ, அவ்விடத்தில் இந்த பர்ஹிஷ்மதியென்னும் பட்டணம் ஏற்பட்டது. அங்ஙனம் உதிர்ந்த ரோமங்களே பச்சைநிறமுடைய தர்ப்பங்களாகவும் நாணல்களாகவும் விளைந்தன. அந்த தர்ப்பங்களாலும் நாணல்களாலும் யஜ்ஞவிரோதிகளான ராக்ஷஸர்களைப் பரிபவித்து ரிஷிகள் யஜ்ஞங்களால் பகவானை ஆராதித்தார்கள். ஆனதுபற்றியே அவை பகவதாராதனத்திற்கு உபயோகப்படுகின்றன. மஹானுபாவனாகிய மனுசக்ரவர்த்தி இந்த பகவானிடத்தினின்று பூமியின் நிலைமையைப் பெற்றானகையால் (பாதாளத்தில்

மூழ்கிக்கிடந்த பூமியை இந்த ஆதிவராஹன் மேலுக்கெ
டுத்து அதைத் தன் சக்தியால் ஜலத்தின்மேல் நிலைநிற்கச்
செய்தானாகையால்) அந்த உபகாரத்தை நினைத்து பர்
ஹிஸ்ஸென்று கூறப்படுகிற தர்ப்பங்களையும் நாணல்களை
யும் பரப்பி அந்த யஜ்ஞபுருஷனை யாகங்களால் ஆராதித்
தான். ஆனதுபற்றியே அந்நகரம் பர்ஹிஷ்மதியென்று
பேர்பெற்றது. ஸமர்த்தனாகிய அம்மனு சக்ரவர்த்தி எந்த
பர்ஹிஷ்மதி யென்னும் பட்டணத்தில் ப்ரவேசித்து
முன்பு தான் வஸித்திருந்தானோ, அந்தப் பட்டணத்தில்
ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிகங்களென்று
மூன்று வகைப்பட்ட ஸம்ஸார தாபங்களுக்குச் சிறிதும்
இடமாகாதிருக்கின்ற தன் க்ருஹத்தில் பார்யையோடும்
புதல்வர்களோடும் ப்ரவேசித்து வர்ணாச்ரமங்களுக்கு
உரியபடி ஏற்பட்ட பகவதாராதன ரூபமான தர்மத்திற்கு
எவ்விதத்திலும் விரோதம் நேராதபடி காமஸுகங்களை
அனுபவித்துக் கொண்டு வந்தான். விடியற்காலங்களில்
தந்தமது பெண்மணிகளோடு கூடின தேவகாயகர்
களால் நன்கு பாடப்பெற்ற நிர்மலமான புகழுடைய அம்
மன்னவன் ப்ரீதி நிறைந்த ஹ்ருதயத்துடன் ஸ்ரீபகவானு
டைய கதைகளைக் கேட்டுக்கொண்டே காமஸுகங்களை
அனுபவித்துவந்தான். அம்மனு சக்ரவர்த்தி சுபாச்ரய
மான பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யா
னிப்பதில் மனவூக்கமுடையவன்; பகவானுடைய குணங்
களைச் சிந்திப்பதில் மனவிருப்பமுற்றவன். காமபோகங்
கள் பகவானுடைய ஆச்சர்ய சக்தி ரூபங்களாகையால்
அனைவரையும் மதிமயங்கச் செய்யவல்லவை. அந்த ஸ்வா
யம்புவமனு அத்தகைய காமபோகங்களை அனுபவித்துக்
கொண்டிருப்பினும், அவனை அவை தம்மில் கால்தாழ்ந்து
மதிமயங்கச் செய்யச் சிறிதும் வல்லவையாகவில்லை.

ஆகையால் அவன் பகவானுடைய கதைகளைக்கேட்பதும் கேட்பவர்களுக்குத் தான் சொல்லுவதும் பகவதாராதனம் செய்வதும் பகவானை த்யானிப்பதுமாயிருந்தான். ஆதலால் அம்மனுசக்ரவர்த்தியின் வாழ்நாளான மன்வந்தரகாலத்தைக் கழியச்செய்கின்ற நாட்களில் சேர்ந்த யாமங்களெல்லாம் பயன் பெற்றவைகளாகவே கழிந்தன. ஒரு யாமமாவது வீணாய்ச் செல்லவில்லை. அவன் ஒரு யாமகாலமாவது பகவதாராதன மில்லாதிருக்கவில்லை. அம்மன்னவன் இங்ஙனம் ஸமஸ்த லோகங்களுக்கும் தானே ஆதாரனும் தான் ஸமஸ்த வஸ்துக்களிலும் நிறைந்திருப்பவனுமாகிய ஸ்ரீவாஸுதேவனுடைய கதைகளைக் கேட்பதும் அவனை வாயார வாழ்த்துவதும் அவனை நெஞ்சார நினைப்பதும் கைகளாரத் தொழுவதுமாகிய அவனுடைய ப்ரஸங்கத்தினால் [1] மூன்று கதிகளையும் கடந்து எழுபத்தொரு யுகங்களடங்கின தனது வாழ்

1. ஊர்த்வகதி மத்யகதி அதோகதி என்ற மூன்று கதிகளையும் கடந்தென்று பொருள். ஸத்வ குணமுடையவர் ஊர்த்வ கதியையும் ரஜோகுண முடையவர் மத்ய கதியையும் தமோகுண முடையவர் அதோ கதியையும் பெறுவார்கள். ஊர்த்வ கதியாவது மோக்ஷம். மத்ய கதியாவது புண்ய கர்மங்களைச் செய்து ஸ்வர்க்காதி லோகங்களிற் சென்று அவற்றின் பலன்களை அனுபவித்து மீளவும் ஜனித்து அந்தக் கர்மங்களை அனுஷ்டித்துக்கொண்டு அங்கிருக்கையேயாம். அதோகதியாவது பாபகர்மங்களால் பசுபக்ஷிமுதலிய ஜன்மங்களையெடுக்கையாம். மத்யகதியையும் அதோகதியையும் கடப்பது பொருந்துமாயினும் ஊர்த்வ கதியைக் கடந்தானென்பது எங்ஙனம் பொருந்துமென்னில், பரமபதத்தில் போய் அனுபவிக்கவேண்டிய அனுபவங்களையெல்லாம் இவன் இந்த ஸம்ஸாரத்திலேயே அனுபவித்தானாகையால் அதையும் கடந்தானென்று கருத்துக் கொள்க.

அல்லது மூன்று கதிகளாவது ஆத்யாத்மிகாதி மூன்று தாபங்களைப்பற்றின மனக்கவலைகளே. அவைகளைக் கடந்ததென்று பொருள் கொள்க.

ாள் முழுவதையும் கடத்தினான். வாராய் விதுரனே! ீரத்திலுண்டாகிற வ்யாதிரூபமான வருத்தங்களும், ேனோவ்யாதிகளும், ஆகாயத்தினின்றுண்டாகிற இடி நளிர் காற்று மழை முதலியவற்றால் விளையக்கூடியவருத் ங்களும், பகைவர் புலி ஸிம்ஹம் காடி முதலிய பூதங்க ால் விளைகிற வருத்தங்களும் ஸாதாரணமாய் மனுஷ் ர்களால் அனுபவிக்கப்பெற்று வருகின்றனவை. இவை யெல்லாம், தன்னைப் பற்றினவருடைய வருத்தங்களைப் போக்குந் தன்மையுள்ள பகவானுடைய பாதங்களைப் ணியுமவனைச் சிறிதும் பாதிக்கமாட்டா. ஆகையால் கவானுடைய கதைகளைக்கேட்பதும் அவற்றைவாயால் ாடுவதும் அவனையே த்யானிப்பதுமாயிருக்கின்ற அம் னு சக்ரவர்த்தியை இவ்வருத்தங்கள் சிறிதும் மதிம ங்கச் செய்ய வல்லவையாகவில்லை. ஸமஸ்த பூதங்களுக் கும் ஹிதஞ்செய்பவனாகிய அம்மன்னவன் முனிவர்களால் வினவப்பெற்று மனிதர்களுக்கு அவரவருடைய வர்ணா ஶ்ரமங்களுக்குரியபடி ஏற்பட்டவைகளும் பலவாறு பிரிந் திருப்பவைகளும் ஸ்வர்க்கத்தையும் மோக்ஷத்தையும் ஸாதித்துக் கொடுக்க வல்லவையாகையால் சுபங்களு மான தர்மங்களை மொழிந்தான். அனைவராலும் வர்ணிக் கத்தகுந்த புகழுடையவனும் ஆதிராஜனுமாகிய மனுசக் ரவர்த்தியின் சரித்ரம் ஆச்சர்யமானது. இதை உனக்கு ன்றாக மொழிந்தேன். இனிமேல் அம்மனுவின் புதல் வியாகிய தேவஹூதியின் உற்பத்தியையும் அவளுடைய மேன்மையையும் சொல்லுகின்றேன், கேட்பாயாக.

இருபத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

## கர்த்தமப்ரஜாபதி தேவஹூதியுடன் காமஸுகங்களை அனுபவித்தல்.

ஸ்ரீ மைத்ரேயர் சொல்லுகிறார் :—தாய்தந்தைக ளாகிய மனுவும் சதரூபையும் புறப்பட்டுப்போனபின்பு, பதிவ்ரதையும் மனக்கருத்தை அறிவதில் வல்லவளுமாகிய தேவஹூதி, ப்ரபுவாகிய ருத்ரனைப் பார்வதி ஆராதித் தாற்போல், கர்த்தமரை ப்ரீதியுடன் ஆராதித்துக் கொண்டு வந்தாள். வாராய் வல்லமையுள்ள விதுரனே! அந்த மனுவின் புதல்வியாகிய தேவஹூதி மனவூக்கமற் றிருக்கையில்லாமல் அவருடைய கட்டளைப்படி நடப்பதில் முயன்றவளாகி, காமம் கபடம் த்வேஷம் லோபம் நிஷி த்த கார்யங்களைச் செய்கை கர்வம் இவை முதலான தோஷங்களை யெல்லாம் துறந்து, விஸ்வாஸம் மனத் தூய்மை கௌரவம் ஐம்புலன்களை அடக்கி யாள்கை யாகிற தமம் ஸுஸ்ரூஷை ஸ்னேஹம் இனிய உரை இவை களால் தேஜிஷ்டராகிய அம்முனிவரை மனமகிழச் செய் தாள். தேவர்ஷிஸ்ரேஷ்டராகிய அந்தக் கர்த்தமர் அங் ஙனம் தன்னைத் தொடர்ந்து பணிவிடை செய்கின்ற வளும் பர்த்தாவையே மேலான தெய்வமாக நினைத்து அவனிடத்தினின்று புதல்வர்களைப் பெறுகையாகிற நன் மையை விரும்புகின்றவளும் வ்ரதங்களை அனுஷ்டிப்பத னால் வருந்தி நெடுநாளாய் வ்ரதானுஷ்டானத்தில் ஆழ்ந் திருக்கின்றவளாகையால் இளைத்திருப்பவளுமாகிய அந்த மனுவின் புதல்வியை (தேவஹூதியைப்) பார்த்து ப்ரே மத்தினால் கண்டம் தழதழத்துச் சொல்ல நினைத்த வார் த்தை வெளி வராமல் வருத்தமுற்றவராகிக் கருணை கூர் ந்து இங்ஙனம் மொழிந்தார்.

கர்த்தமர் சொல்லுகிறார் :—வாராய் பெருந்தன்மை யுடையவளே! மேலான ஸுஸ்ரூஷையாலும் சிறந்த பக்தி

யாலும் நீ என்னை நன்கு வெகுமதித்தனை. உன்னுடைய சுஶ்ரூஷையாலும் பக்தியாலும் இப்பொழுது நான் ஸந்தோஷம் அடைந்தேன். ப்ராணிகளுக்கு தேஹம் மிகவும் அன்பிற்கிடமாயிருப்பது; அது யுக்தமே. அப்படிப்பட்ட தேஹத்தை நீ எனக்காகப் பொருள் செய்யாமல் வருத்தி உபேக்ஷித்தனை. தேஹம் மிகவும் ப்ரியமானதென்றும் இதை நான் எப்படி வருத்துவேனென்றும் அதைச் சிறிதும் பாராட்டாமல் என்னுடைய சுஶ்ரூஷையில் ஆழ்ந்து உபேக்ஷித்தனை. பெண்மணீ! நான் எனது வர்ணாஶ்ரமத்திற்குரிய தர்மங்களில் நிலைநின்று கர்மயோகம் ஸமாதி (மனவூக்கத்துடன் த்யானித்தல்) பகவதுபாஸனம் ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மஸ்வரூபத்தின் உண்மையை அறிகையாகிற ஆத்மயோகம் இவைகளால் பகவானுடைய அனுக்ரஹம் பெற்றவன். அந்த பகவானுடைய அனுக்ரஹத்தினால் போக்யவஸ்துக்களும் போகத்திற்கு வேண்டிய கருவிகளும் போகஸ்தானங்களும் நான் நினைத்தபடி விளையுமாறு எனக்கு ஸ்வாதீனமாயிருக்கின்றன. இத்தனை காலமாய் எனக்கு ஶுஶ்ரூஷை செய்தமையால் உனக்கும் அவை ஸ்வாதீனமாயின. அவற்றில் எவ்வகை பயமும் உண்டாகாது. ஆகையால் அவை சோகத்திற்கிடமல்லாதவை. உனக்கு திவ்ய த்ருஷ்டியைக் கொடுக்கின்றேன். நீ அவற்றைக் காண்பாயாக. உலகத்தில் எல்லோரும் அனுபவிக்கிற போக்யவஸ்துக்களைக் காட்டிலும் என் தவமஹிமையால் ஏற்பட்ட போக்ய வஸ்துக்கள் விலக்ஷணமாயிருப்பவை. உலகத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் அற்பங்களாயிருப்பவை. நீ நெடுநாள் என்னை ஆராதித்தமையால் ஸித்தி பெற்றனை. ஆனதுபற்றி என் தவமஹிமையால் ஏற்பட்ட அந்த போக விஸ்தாரங்களை நீ அனுபவிப்பா

யாக. அவை மஹா ராஜாக்களும் ஆசைப்படக்கூடிய ஸம்ருத்தியுடையவை. உலகத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் 'இவற்றைக்கொண்டு நாம் சில ப்ரயோஜனங்களைப் பெறுவோம்' என்று நினைக்கும்பொழுது பகவானுடைய புருவ நெரிப்பு நேர்ந்து உடனே பாழாகக்கூடியவை. ஆகையால் அவை உபயோகமற்றவை. என் தவமஹிமையால் ஏற்படுமவை யெல்லாம் பகவானுடைய கடாக்ஷத்திற் கிணங்கினவையாகையால் எவ்வகையிலும் அழியாதவை.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார் :—அந்தக் கர்த்தம முனிவர் ஆச்சர்ய சக்திகளெல்லாம் அமைந்தவர்; பேரறிவுடையவர். அம்முனிவர் இங்ஙனம் மொழியக் கேட்டு தேவஹூதி அவருடைய விசித்ரமான ஜ்ஞான சக்திகளை அறிந்து இவரால் நம் விருப்பம் ஈடேறுமென்று நினைத்து மனவருத்தமெல்லாம் தீரப்பெற்றாள். அப்பால் அப்பெண்மணி வணக்கத்தினாலும் ப்ரேமத்தினாலும் மொழி தழதழக்கப் பெற்றுச் சிறிது வெட்கம் நடையாடுகின்ற கண்ணோக்கத்தினால் விளங்கும் புன்னகை அமைந்த முகமுடையவளாகி அம்மஹானுபாவரைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தாள்.

தேவஹூதி சொல்லுகிறாள் :—வாரீர் அந்தணர் தலைவரே! வீணாகாத ஆச்சர்ய சக்திகளும் விசித்ரமான ஜ்ஞானங்களும் அமைந்த உம்மிடத்தில் நீர் சொல்லுவதெல்லாம் ஸித்தமே. இது எனக்குத் தெரியும். ஆ! இது என் பாக்யமே. வாரீர் பர்த்தாவே! நீர் முன்பு 'சில காலம் இவளுடன் கலந்திருப்பேன்' என்று மொழிந்தீரே, அக்காலம் எனக்கு இப்பொழுது நேருமாக. சிறப்புற்ற கணவனிடத்தில் புதல்வர்களைப் பெறுகையே பதிவ்ரதைகளான ஸ்த்ரீகளுக்கு மேலான லாபம். ஆகையால் நான்

அந்த ஸமயத்தை எதிர்பார்க்கின்றேன். 'பிள்ளை பிறக்கும் வரையில் சிலகாலம் நான் இவளுடன் கலந்து காம ஸுகங்களை அநுபவித்துப் பிள்ளைகள் பிறந்தபின்பு துறவறம் பெறுவேன்' என்று மொழிந்தீர். அந்தப்படி என்னுடன் நீர் கலந்திருக்குங் காலத்தை நான் எதிர்பார்க்கின்றேன். வாரீர் வல்லவரே! நீர் அங்ஙனம் காம ஸுகங்களை அநுபவிப்பதற்கு வேண்டிய ஸம்பாரங்களைக் காமதந்த்ரங்களிற் சொல்லிய ஏற்பாட்டின்படி ஸித்தப்படுத்துவீராக. நான் இதுவரையில் உம்முடைய அருளை எதிர்பார்த்துக்கொண்டு உமக்குச் சுஶ்ரூஷை செய்பவளாகி என் சரீரத்தைப் பாராட்டாமலே யிருந்தேன். அதனால் என் சரீரம் மிகவும் இளைத்திருக்கின்றது. இப்பொழுது நீர் என் மனோரதத்தை மேற்கிளப்பினீர். அதனால் நான் காமவிகாரம் உண்டாகப்பெற்று அவ்விகாரத்தின் மிகுதியால் வருந்துகின்றேன். நான் உம்முடன் காம ஸுகங்களை அநுபவிக்கவேண்டுமென்னும் விருப்பம் மேலெழப்பெற்று அது நேராமையால் சரீரம் இளைத்து வருந்துகின்றேன். அப்படிப்பட்ட என் சரீரம் எதனால் அவ்வருத்தங்களெல்லாம் தீர்ந்து ஸுகப்படுமோ, அப்படிப்பட்ட ஏற்பாடுகளை நடத்துவீராக. நாம் காமஸுகங்களை அநுபவிப்பதற்குரிய க்ருஹத்தை நிர்மிப்பீராக. அங்ஙனமே போக்யவஸ்துக்களையும் போகத்திற்கு வேண்டிய கருவிகளையும் படைப்பீராக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் விதுரனே! இங்ஙனம் தேவஹூதியால் வேண்டப் பெற்ற கர்த்தமர் அன்பிற்கிடமான அப்பெண்மணியின் ப்ரியத்தை நிறைவேற்ற விரும்பி அந்த க்ஷணமே நினைத்தபடி செல்லும்படியான ஓர் விமானத்தை உண்டாக்கினர். அவ்விமானம் விரும்பின வற்றையெல்லாம் கறக்குந்திறமை அமையப்

பெற்றது; மனுஷ்யர்களுக்குக் கிடைக்க அரியது; அதில் ஸமஸ்தரத்னங்களும் இழைத்திருந்தன. ஸமஸ்த ஸம்பத்துக்களும் எக்காலத்திலும் மாறாமல் ஸம்ருத்தமாயிருக்கும். அது ரத்னஸ்தம்பங்களால் அலங்கரிக்கப்பட்டது. அதில் திவ்யமான வஸ்துக்கள் நிறைந்திருக்கும். ஸர்வ காலங்களிலும் ஸுகத்தையே விளைவிக்கும். அது பட்டு வஸ்த்ரங்களால் இயற்றின சிறிய கொடிகளாலும் விசித்ரமான பெருப்பெரிய கொடிகளாலும் அலங்காரம் செய்யப் பெற்று அழகாயிருக்கும். விசித்ரமான புஷ்பங்களால் கோக்கப்பட்டவைகளும் மதுரமாய்க்கூவுகின்ற வண்டினங்கள் நிறைந்தவைகளுமான பூமாலைகளாலும் வெண்பட்டுக்களாலும் பூச்சிப்பட்டுக்களாலும் மற்றும் பலவகை வஸ்த்ரங்களாலும் அலங்காரமுற்று விளங்கும். அதில் ஒன்றின்மேல் ஒன்றாக அறைகள் ஏற்பட்டிருக்கும். அவ்விடங்களிலெல்லாம் தனித்தனியே படுக்கைகள் ஸித்தஞ் செய்யப் பெற்று அழகாயிருக்கும். அங்ஙனமே மஞ்சங்களும் விசிறிகளும் ஆஸனங்களும் ஆங்காங்குத் தனித்தனியே அமைக்கப்பெற்று ரமணீயமாயிருக்கும். மற்றும், அவ்வவ்விடங்களில் சுவறுகளில் எழுதின பலவகையான சித்ரங்களால் அவ்விமானம் சோபிக்கும். மற்றும். இந்த்ரநீலரத்னங்களால் பூமிகளைப் படுத்து அவற்றில் பவழங்களால் திண்ணைகள் ஏற்பட்டிருக்கும். த்வாரங்களின் இடைக்கட்டுகள் பவழங்களால் இயற்றினவைகளாக அழகாயிருக்கும். வாசற்கதவுகளில் வஜ்ரமணிகள் இழைத்திருக்கும். அவ்விமானத்தின் சிகரங்கள் இந்த்ரநீல ரத்னங்களால் இயற்றப் பெற்றவை. அந்தச் சிகரங்களின் நுனிகளில் ஸ்வர்ணமயமான கலசங்கள் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும். வஜ்ரமணிகளால் இயற்றின சுவறுகளில் கண்விழித்துக் கொண்டிருப்பவைபோல்

பளபளவென்று ஜ்வலிக்கின்ற பத்மராகரத்னங்கள் இழைக்கப்பட்டிருக்கும். விலையில்லாத விசித்ரமான மேற்கட்டுகளும், விலையில்லாத ஸ்வர்ணமயமான தோரணங்களும் அமைக்கப்பட்டிருக்கும். அவ்விமானத்தில் ஆங்காங்கு ஹம்ஸங்கள்போலும் • புறுக்கள்போலும் இயற்றி வைக்கப்பட்டிருக்கிற பொம்மைகளைத் தந்தமினமாக ப்ரமித்து உண்மையான ஹம்ஸங்களும் புறுக்களும் கூட்டங்கூட்டமாய் ஏறுவதும் இறங்குவதுமாய்க் கூவிக்கொண்டிருக்கும். அவ்விமானத்தில் விளையாடுமிடங்களும் ஸம்போகத்திற்குரிய இடங்களும் முற்றங்களும் வெளிவாசற்களும் ஸுகமாயிருக்கும்படி ஏற்படுத்தப்பட்டிருந்தன. அவ்வவ்விடங்களெல்லாம் மிகவும் அழகாயிருக்கின்றமையால் அதையியற்றின ஆச்சர்யசக்தியுடைய அம்முனிவர்க்கும் ஆச்சர்யத்தை விளைவிப்பனவாயிருந்தன. இங்ஙனம் மிகவும் ஆச்சர்யமான விமானத்தை அம்முனிவர் நிர்மித்துக்காட்ட, அதை அந்ததேவஹூதி அவ்வளவு ஸந்தோஷமில்லாத மனத்துடன் காண்பதை அறிந்து ஸமஸ்தப்ராணிகளுடைய மனக்கருத்தையும் எளிதில் அறியுந் திறமையுடைய கர்த்தமர் அவளைப் பார்த்து, தானே இங்ஙனம் மொழிந்தார்.

கர்த்தமர் சொல்லுகிறார்:—வாராய் பயப்படுந்தன்மையுடையவளே! இந்த ஸரஸ்ஸு பரிசுத்தஸ்வபாவனாகிய பகவானால் நிர்மிக்கப்பட்டது. இது புண்யதீர்த்தங்களில் சிறப்புற்றது; மானிடவர் ஆசைப்படும் விருப்பங்களையெல்லாம் கைகூடுவிக்குந்திறமையுடையது. இது பகவானுடைய ஆநந்தநீர்களால் உண்டாயிற்று. ஆகையால் இது பிந்துஸரஸ்ஸென்னும் பேர்பெற்றது. இந்த பிந்துஸரஸ்ஸில் ஸ்னானஞ் செய்வாயாக. ஸ்னானஞ்செய்து இந்த விமானத்தில் ஏறிக்கொள்வாயாக—என்றார்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—கருநெய்தல் போன்ற கண்களையுடைய அந்த தேவஹூதி பர்த்தாவான கர்த்தமருடைய வசனத்தை அங்ஙனமே அங்கீகரித்து அழுக்கடைந்த வஸ்த்ரத்தையும் ஒரே பின்னலாகப் பிணைத்த தலைமயிர்களையும் அழுக்கடைந்து நிறம் மாறின கொங்கைகள் அமைந்த அங்கத்தையும் தரித்தவளாகவே தெளிந்த ஜலமுடையதும் ஸரஸ்வதியால் சூழப்பட்டதுமாகிய அந்த பிந்துஸரஸ்ஸில் ஸ்நானஞ் செய்யும் பொருட்டு ப்ரவேசித்தாள். அங்ஙனம் ஜலத்தில் இறங்கி மூழ்கின அம்மடந்தையர்மணி அங்கு க்ருஹங்களில் திகழ்கின்ற ஆயிரம் கன்னிகைகளைக் கண்டாள். அந்தக் கன்னிகைகள் அனைவரும் இளம்பருவமுடையவர்கள்; எல்லோரும் கருநெய்தல் புஷ்பத்தின் கந்தம் போன்ற தேஹத்தின் கந்தமுடையவர். அவ்வாயிரம் பெண்களும் அந்த தேவஹூதியைக் கண்டவுடனே ஜலத்திலுள்ள க்ருஹத்தினின்று வெளிப்பட்டு வந்து கைகளைக் குவித்துக் கொண்டு 'நாங்கள் உனது வேலைக்காரிகள். எங்களை இஷ்டப்படி நியமிப்பாயாக. நாங்கள் உனக்கு என்ன ஊழியஞ் செய்யவேண்டும்?' என்றார்கள். இங்ஙனம் மொழிந்து உடனே ஸ்நானஞ் செய்வதற்குரிய நன்மணமுடைய எண்ணெய் முதலியவற்றால் அவளுக்கு ஸ்நானம் செய்வித்து கம்பீரமனமுடைய அந்த தேவஹூதிக்கு நிர்மலமான வெண்பட்டு வஸ்த்ரங்களைக் கொடுத்தார்கள். அங்ஙனமே விலையுயர்ந்து மிகுந்த ஒளியும் அமைந்து அவள் மனத்திற்கு மிகவும் இனியவைகளுமான ஆபரணங்களையும் அறுசுவையமைந்த மேலான அன்னத்தையும் அம்ருதம்போல் மதுரமான மத்யத்தையும் இவளுக்குக் கொடுத்தார்கள். இந்த தேவஹூதி பூமாலையைச் சூடி நிர்மலமான வஸ்த்ரத்தை உடுத்து

நிர்மலமாகி மங்களங்கள் நிரம்பியதும் கன்னிகைகளால் 'மிகவும் அழகாயிருக்கிறது' என்று வெகுமதிக்கப் பெற்றதுமான தன் தேஹத்தைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். அவளுடைய தேஹம் எண்ணெய் தேய்த்து அழுக்கெல்லாம் போகும்படி அரைப்பிட்டு அலம்பி ப்ரஸன்னம் செய்து ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து ரமணீயமாயிருந்தது. மற்றும், கழுத்தில் பதகங்களும் கால்களில் அழகாய் ஒலிக்கின்ற ஸ்வர்ணமயமான சிலம்புத்தண்டைகளும் தரித்து நிதம்பங்களில் பொன்னால் இயற்றினதும் பலவகை ரத்தனங்கள் இழைக்கப் பெற்றதுமான அரைநூல்மாலையும் இட்டுக் குங்குமம் முதலிய மங்களத்ரவ்யங்களைப் பூசி விலையுயர்ந்த ஹாரங்களால் 'விளக்கமுற்றிருந்தது; அழகான புருவங்களும் அழகான பற்களும் மனத்திற்கினிதாகி நிகுநிகுப்புற்ற கடைக்கண்கள் அமைந்து தாமரைமலரோடு சண்டை செய்பவைபோன்ற கண்களும் கறுத்த முன்னெற்றி மயிர்களும் ஆகிய இவைகளால் விளங்குகின்ற முகமுடையதுமாயிருந்தது. அத்தகைய தன் தேஹத்தை அவள் கண்ணாடிப்புறத்தில் கண்டு களித்தாள். இங்ஙனம் அழகியதான தேஹத்தைக் கண்டவுடன் ரிஷிஶ்ரேஷ்டரும் தனக்கன்பருமான பர்த்தாவை நினைத்தாள். நினைத்தவுடனே தன் பர்த்தாவான கர்த்தமப்ரஜாபதி எவ்விடத்தில் இருந்தாரோ அதே இடத்தில் தானும் ஸ்த்ரீகளோடுகூட உட்கார்ந்திருக்கக் கண்டாள். அவள் தான் நினைத்தமாத்ரத்தில் அங்ஙனம் அனேகமாயிரம் ஸ்த்ரீகளோடு தன் பர்த்தாவின் எதிரில் இருக்கக் கண்டு அவருடைய யோகப்ரபாவத்தைப்பற்றி 'இப்படியும் ஒருயோகப்ரபாவும் உண்டோ' என்று வியப்புற்றாள். தீரனாகிய விதுரனே! (காம க்ரோத லோப மத மோஹ மாத்ஸர்யங்க

ளென்கிற சத்ருக்களறுவரையும் வென்ற மஹாதீரனே!) அந்தக் கர்த்தமர், சரீரத்தின் அழுக்கெல்லாம் போகும் படி மங்களஸ்னானஞ் செய்து முன்பிருந்த உருவத்தை விடப் புதியதுபோல் மிகவும் அழகான உருவத்துடன் திகழ்கின்றவளும் அழகான வஸ்த்ரங்களை உடுத்துப் பருத்துருண்டு ஒன்றோடொன்று உறைந்து கொண்டு ரமணீயமாய்த்திகழ்கின்ற கொங்கைகளை வஸ்த்ரத்தின் நுனியால்அடிக்கடி மறைத்துக்கொண்டு அனேகமாயிரம் வித்யாதரப்பெண்களால் பணியப்பெற்று நிற்கின்ற அந்த தேவ்ஹூதியைப் பார்த்து மனவிருப்பமுற்றவராகி அவளை விமானத்தில் ஏற்றிக கொண்டார். சிறிதும் மாறுத் யோகப்ரபாவமுடைய அம்முனிவர் அன்பிற் கிடமான பார்யையுடன் கூடி வித்யாதரஸ்த்ரீகளால் தன் சரீரத்திற்கு வேண்டிய சுப்ரூஷைகள் செய் யப்பெற்று அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு, கண் ணுக்கினிய காட்சியுடையவனும் நக்ஷத்ரங்களால் சூழப்பட்டவனுமாகிய சந்த்ரன் ஆம்பல் புஷ்பங்களை மலரச் செய்துக்கொண்டு விளங்குவதுபோல் ப்ரகாசித்தார். நிரைநிரையாய்ப் பெண்கள் சூழப்பெற்ற அம்முனிவர் பார்யையுடன் அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு லோகபாலர்கள் எண்மரும் விளையாடும் இடமாகிய மேருபர்வதத்தில் திகழ்கின்றவைகளும் காமவிகாரத்தை விளைப்பதும் குளிர்ந்து நன்மணம் அமைந்து மெதுவாக வீசுவதுமாகிய காற்றினால் அழகாயிருப்பவைகளும் ஆகாசகங்கை விழுவதால் மங்களமான ஓசையுடையவைகளுமான குஹைகளில் குபேரன்போல் விளையாடிக் கொண்டிருந்தார். அன்றியும், அம்முனிவர் மனத்திற்கினியளாகிய பார்யையுடன் கூடி வைஸ்ரம்பகம் ஸ்வரஸனம் நந்தனம் புஷ்பபத்ரகம் சைத்ரரதம் முதலிய தேவோத்யா

னங்களிலும் மானஸ ஸரஸ்ஸிலும் மனவிருப்ப முற்றவ ராகி விளையாடினார். மிக்க ஒளியுடன் ப்ரகாசிப்பதும் மேன்மையுற்றதும் நினைத்தபடி செல்லுந்திறமையுடையதுமாகிய அவ்விமானத்தில் ஏறிக்கொண்டு அம்முனிவர் காற்று போல் ஸமஸ்த லோகங்களிலும் தடையின்றி ஸஞ்சரித்துக்கொண்டு விமானத்தில் ஏறித்திரிகின்ற தேவதைகளை அதிக்ரமித்து விளங்கினார். வாராய் விதுரனே! இம் முனிவருடைய மஹிமையைப் பற்றி ஆச்சர்யப் படவேண்டியதில்லை. ஏனென்னில் சொல்லுகிறேன், கேள். பகவான் கங்காதி புண்ய தீர்த்தங்களுக்கு இடமான பாதாரவிந்தங்களையுடையவன். அவனுடைய பாதங்கள் ஸம்ஸார தாபங்களையெல்லாம் போக்குந் திறமையுடையவை. யோகத்தினால் பரிசுத்தமான மனமுடையவராகி எவர் அத்தகையனான பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பற்றுகிறார்களோ, அப்படிப்பட்ட மஹானுபாவரான புருஷஸ்ரேஷ்டர்களுக்கு எது தான் பெறக்கூடாதது? அவர்கள் விரும்பமாட்டார்களேயன்றி, விரும்புவாராயின் அவர்க்குப் பெறக்கூடாதது எதுவுமே இல்லை. ஆச்சர்யமான யோக ப்ரபாவமுடைய அம்முனிவர், ஜம்பூத்வீபம் முதலிய தீவுகளும் பாரதவர்ஷம் முதலிய வர்ஷங்களும் அமைந்த தன்னிலைமையுடன் கூடி மிகவும் ஆச்சர்யப் படத்தகுந்த பூகோளம் எவ்வளவு உண்டோ, அவ்வளவையும் தன் பத்னிக்குக் காண்பித்து மீளவும் தனது இருப்பிடத்திற்குத் திரும்பி வந்தார். அம்முனிவர் அந்த மனுவின் புதல்வியாகிய தேவஹூதியிடத்தில் ஒன்பது பிள்ளைகளைப் பிறப்பிக்க வேண்டுமென்று ஸங்கல்பித்துத் தன் வீர்யத்தை ஒன்பது பாகமாகப் பிரித்து ஸம்போகத்தில் மிகுந்த உத்ஸாஹமுடைய அம்மடந்தையர் மணியான தேவஹூதியை மனங்களிக்கச் செய்பவ

ராகி, அநேக மாயிரவர்ஷ ஸமூஹம் வரையிலும் ஒரு முஹூர்த்த காலம்போல் அவளுடன் க்ரீடித்தார். அவ் விமானத்தில் மிகவும் ஸுகமான ஸ்பர்சமுடையதும் ஸம்போக விருப்பத்தை வளரச்செய்வதுமாகிய படுக்கையில் படுத்து அழகியனான பர்த்தாவுடன் சேர்ந்து ஸம்போக ஸுகத்தை அனுபவித்துக்கொண்டிருக்கையில், அநேக வர்ஷங்கள் அடங்கின அத்தனை காலம் சென்றும், இத்தனை காலம் கடந்ததென்று அவள் காமஸுகங்களில் ஆழ்ந்திருந்தமையால் அறியப்பெற்றிலள். இங்ஙனம் யோக ப்ரபாவத்தினால் காமஸுகங்களில் கால் தாழ்ந்த கர்த்தமரும் தேவஹூதியுமாகிய அந்த தம்பதிகள் இருவரும் ஸம்போக ஸுகத்தை அனுபவித்துக் கொண்டிருக்கையில், நூறு ஸம்வத்ஸரங்கள் ஸ்வல்பகாலம்போல் கடந்து சென்றன. ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிந்தவரும் ஸமர்த்தருமாகிய அக்கர்த்தமமுனிவர் அன்பிற்கிடமான அம்மடந்தையர் மணியைத் தன் தேஹத்தின் பாதியாக மனத்தால் பாவித்துப் பிறருடைய மனக்கருத்தையெல்லாம் அறிந்தவராகையால் அவளுக்குப் பல பிள்ளைகள் வேண்டுமென்கிற அபிப்ராயம் உண்டென்பதை அறிந்து தன் வீர்யத்தை ஒன்பது பாகங்களாகப் பிரித்து அந்த வீர்யத்தை அவளிடத்தில் வைத்தார். அனந்தரம் அந்த தேவஹூதி சீக்ரத்தில் ஒன்பது ஸ்த்ரீ ப்ரஜைகளைப் பெற்றாள். அவையெல்லாம் அழகான ஸமஸ்த அங்கங்களுமுடையவைகளாயிருந்தன. அவையெல்லாம் செங்கழுநீர்ப்பூவின் மணமுடையவைகளாயிருந்தன. அங்ஙனம் ப்ரஜைகள் பிறந்தபின்பு துறவறம் கொள்ளமுயன்ற பர்த்தாவைக் கண்டு அழகியளான அந்த தேவஹூதி வெளியில் புன்னகை செய்துக்கொண்டு உள்ளே வ்யாகுலப்பட்டுப் பரிதபிக்கின்ற மனமும் வணங்கின

முகமுமுடையவளாகி ரத்னங்கள்போல் திகழ்கின்ற நகங்கள் அமைந்து மிருந்தசோலையுடன் திகழ்கின்ற பாதத்தினால் பூமியைக் கீறிக்கொண்டு கண்ணீர்த் துளிகளை மெல்ல மெல்ல அடக்கி மருதுவாயிருப்பதும் அழகியதுமான வார்த்தையை இங்ஙனம் மொழிந்தாள்

தேவஹூதி சொல்லுகிறாள் :—வாரீர் மஹாநுபாவரே! எனக்கு நீர் ப்ரதிஜ்ஞை செய்தபடி நிறைவேற்றினீர். ஆயினும் உம்மைச் சரணம் அடைந்த எனக்கு அபயம் கொடுக்கவேண்டும். அபயம் கொடுப்பீராயின், என் மனக்கருத்தை விண்ணப்பம் செய்கின்றேன். வாரீர் அந்தணர் தலைவரே! வயது ஸ்வபாவம் குணம் முதலியவற்றால் உமது பெண்களுக்குத் தகுந்த பர்த்தாக்களை நீர் தேடிக் கொடுக்கவேண்டும். நீர் இல்லறத்தைத் துறந்து வனத்திற்குப் போகையில், நான் சோகமற்றிருப் பதற்கு ஏதேனும் ஓர் வழி உண்டோ? (நீர் துறவறம் பெற்று வனம் சென்றபின்பு, எனக்கு ப்ரஹ்மஜ்ஞானத்தை உபதேசித்து என் சோகத்தைப் போக்குவதற்கு ஓர் புதல்வன் உண்டாவனோ? வாரீர் எல்லாவற்றிலும் ஸமர்த்தரே! ஶப்தாதி விஷயங்களில் மிகுதியும் மனம் செல்லப்பெற்றுப் பரமாத்மாவை உபாஸிக்காத எனக்கு நூறு வர்ஷங்கள் அடங்கின இத்தனை காலமும் கடந்து சென்றது. கடந்த காலம் போதும். இனிமேலாவது பரமபுருஷனுடைய பாதாரவிந்தங்களில் எனக்கு மனவிருப்பம் விளையுமாக. சப்தாதி விஷயங்களில் மிகவும் மனப்பற்றுடையவளாகிய நான் 'நீர் ப்ரஹ்ம வித்து' என்பதை அறியாமலே உம்மிடத்தில் மனவிருப்பம் செய்தேன். நான் உம்முடைய உண்மையை அறியாமற் செய்த அம்மன விருப்பம் எனக்கு அபயத்தையே விளைவிப்பதாகும்படி அருள்புரிவீராக. அஜ்ஞானத்தினால் அஸத் புருஷர்களிடத்தில்

செய்த மனப்பற்றானது ஸம்ஸாரத்தின் பொருட்டாகும். ஸாதுக்களாகிய உம்மைப் போன்றவரிடத்தில் அங்ஙனம் அஜ்ஞானத்தினால் செய்த மனப்பற்றும் கடைசியில் வைராக்யத்தையே விளைப்பதாகும். இவ்வுலகத்தில் ஒருவன் செய்யும் செயல் கர்மயோக ரூபமான தர்மத்தையும், அந்த தர்மம் ஜ்ஞானயோகத்தையும், அந்த தர்மமும் ஜ்ஞானயோகமும் புண்யதீர்த்தங்களுக்கிடமான பரிசுத்த பாதங்களையுடையவனாகிய பகவானுடைய ஸேவையையும் விளைக்காதாயின், அவன் ஜீவித்துக் கொண்டிருப்பினும் செத்தாற்போலவே. ஒருவன் தன் ஸ்வபாவத்தினால் தூண்டப்பட்டவனாகி நடத்துகிற ஆஹாரம் விஹாரம் (விளையாடல்) சேஷ்டை நித்ரை முதலிய செயல்களெல்லாம் தேசகாலங்களுக்கிணங்கி அவ்வவற்றிற்கேற்பட்ட அளவுக்கு விஞ்சாமல் சாஸ்த்ரங்களுக்கும் அமைந்திருக்குமாயின், பாபத்திற் கிடமாகாதவையாகி பகவதாராதன ரூபமான கர்மயோகமென்கிற தர்மத்தை நிறைவேற்று மவைகளேயாம். அதனால் ஜ்ஞானயோகம் உண்டாகும். அதனால் பகவானுடைய பாதாரவிந்தங்களில் பணிவிடை செய்யப்பெறுவான். அப்படியின்றி ஒருவன் செய்யும் செயல்களெல்லாம் தேசகாலங்களுக் கிணங்காமல் அவ்வவற்றின் அளவுக்கு விஞ்சிச் சாஸ்த்ரங்களுக்கும் இணங்காதிருக்குமாயின், அவை பாபங்களுக் கிடமாம். அவனுக்குக் கர்மயோக ரூபமான தர்மத்திற்கு ப்ரஸக்தி இல்லை. ஆதலால் ஜ்ஞானயோகத்திற்கும் அவகாசமில்லை. ஆனது பற்றியே அவன் பகவானுடைய பாதாரவிந்தங்களில் பணிவிடை செய்யும் விருப்பம் உண்டாகப் பெறான். ஆகையால் அவன் ஜீவித்துக் கொண்டிருப்பினும் மரணம் அடைந்தாற் போலவே. உண்மை இதுவாகையால், சப்

தாதி விஷயங்களில் மனஞ்சென்ற நான் பகவானுடைய மாயையால் நன்கு வஞ்சிக்கப்பட்டேன். ஏனென்னில், மோக்ஷத்தை விளக்கும்படியான ஜ்ஞானத்தை உபதேசிக்குந் திறமையுடைய உம்மைப் பற்றியும் ஸம்ஸாரத்தினின்று விடுபடவேண்டுமென்கிற விருப்பம் உண்டாகப் பெற்றிலேன். இருபத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

—◆◆◆ { கபிலாவதாரமும், கர்த்தமர் துறவறம் பெறுதலும். } ◆◆◆—

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் மனவெறுப்பை உரைக்கின்றவளும் மனுவின் புதல்வியுமாகிய தன் மனைவியைப் பார்த்து தயாளுவாகிய அந்தக் கர்த்தம முனிவர் பகவானுடைய வசனத்தை (உன் பத்னியாகிய தேவஹூதியிடத்தில் நான் எனது அம்சத்தினால் அவதரிக்கப் போகிறேனென்று பகவான் மொழிந்த வசனத்தை) [1]ஸ்மரித்துக்கொண்டு இங்ஙனம் மறுமொழி கூறினார்.

கர்த்தம ரிஷி சொல்லுகிறார்:—வாராய் மனுசக்ரவர்த்தியின் புதலவீ! நிந்தைக் கிடமல்லாத நன்னடத்தையுடையவளே! நீ உன்னைப் பற்றி இங்ஙனம் வருத்தப்படவேண்டாம். ப்ராக்ருத குணங்கள் அற்றவனும் எல்லையில்லாத கல்யாண குணகணங்களுடையவனுமாகிய பகவான் சீக்ரத்தில் உன் கர்ப்பத்தில் பிறக்கப்போகிறான். மடந்தையர்மணீ! உனக்கு மங்களம் உண்டாகுக. நீ பகவதாராதன ரூபமான வ்ரதத்தில் நிலைநின்றவளாகி, செவி வாய் கண் மூக்கு உடல் என்கிற வெளியிந்த்ரியங்களைந்தையும் மனதாகிற உள்ளிந்த்ரியத்தையும் அடக்கிக்

1. நினைத்துக்கொண்டு.

கொண்டு பாதிவ்ரத்யத்திற்குரிய தவத்தினாலும் ஸ்வர்ணம் முதலிய தனங்களைக்கொடுப்பதனாலும் ஶ்ரத்தையினாலும் ஜகதீஶ்வரனான பகவானைப் பணிந்து வருவாயாக. சுத்த ஸ்வரூபனாகிய பகவான் அங்ஙனம் உன்னால் ஆராதிக்கப் பட்டவனாகி எனது புகழைப் பரவச்செய்து கொண்டு உன் வயிற்றில் பிறந்து உனக்கு ப்ரஹ்மஜ்ஞானத்தை உபதேசித்து உன்னுடைய அஜ்ஞானத்தைப் போக்குவான்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—தேவஹூதியும் இங்ஙனம் மொழிந்த கர்த்தமப்ரஜாபதியின் கட்டளையைக் கேட்டு அதைக் கௌரவத்துடன் நன்றாக விஶ்வஸித்து நிர்விகாரனும் அஜ்ஞானங்களைப் போக்குந்தன்மையனுமாகிய பரம புருஷனை ஆராதித்தாள். இங்ஙனம் வெகுகாலம் சென்ற பின்பு ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்த மதுஸூதனன் கர்த்தமருடைய வீர்யத்தில் புகுந்து கட்டையில் அக்னிபோல் தேவஹூதியிடத்தில் பிறந்தான். (கர்த்தமருடைய வீர்யத்தில் ஸம்பந்தித்த ஜீவனிடத்தில் ஆவேசித்து பகவான் தேவஹூதியிடத்தில் அவதரித்தான்). அங்ஙனம் பகவான் அவதரிக்கும் பொழுது ஆகாயத்தில் தேவதைகள் சங்கு துந்துபி ம்ருதங்கம் முதலிய வாத்யங்களை முழக்கினார்கள். மேகங்கள் மழை பெய்தன. கந்தர்வர்களும் கின்னராதிகளும் பாடினார்கள். அப்ஸரஸ்த்ரீகள் ஸந்தோஷத்துடன் நர்த்தனம் செய்தார்கள். ஆகாயத்தில் திரியும் தேவதைகள் பெய்த புஷ்பவர்ஷங்கள் விழுந்தன. ஸமஸ்த திக்குகளும் ஜலங்களும் ஸமஸ்த ப்ராணிகளின் மனமும் தெளிந்தன. அப்பொழுது ப்ரஹ்மதேவன் மரீசி முதலிய ரிஷிகளுடன் ஸரஸ்வதீநதியால்சூழப்பட்ட கர்த்தமருடைய ஆஶ்ரமத்திற்கு வந்தான். வாராய் சத்ருக்களை அழிக்குந்தன்மையுள்ள

விதுரனே! ஜ்ஞானுதி குணங்களாறும் நிறைந்த பரப்ரஹ்மமே ப்ரக்ருதி புருஷன் ஈஸ்வரன் என்கிற தத்வங்களின் உண்மையை அறிவிக்கும் பொருட்டு ஸ்வாபாவிகமாயிருப்பதும் என்றும் மாருததுமான ஜ்ஞானகுணத்துடன் கபிலராக அவதரித்தமையை அறிந்த ப்ரஹ்மதேவன், அங்ஙனம் அவதரித்த பகவானுடைய அபிப்ராயத்தைப் பரிசுத்தமான தன் மனத்தினல் கௌரவித்துக்கொண்டு இந்த்ரியங்களெல்லாம் களிக்கப்பெற்று (ஆநந்தநீர் மயிர்க்கூச்சல் தழதழத்தகுரல் முதலியவற்றோடு கூடின கண் உடல் வாய் முதலிய இந்த்ரியங்களுடையவனுகிக்) கர்த்தமரையும் தேவஹூதியையும் பார்த்து இங்ஙனம் மொழிந்தான்.

ப்ரஹ்மதேவன் சொல்லுகிருன்:— வாராய் அப்பனே! குழந்தாய்! நீ கபடமின்றி ப்ரேமாதிசயத்துடன் எனக்குப் பூஜை செய்தாய். பிறர்க்கு வெகுமதி கொடுக்குந்தன்மையனே! நீ என் வார்த்தையை வெகுமதியுடன் அங்கீகரித்தாயல்லவா. அதுவே நீ எனக்குச் செய்த பூஜையாம். தமப்பனுக்குப் புதல்வர் செய்யவேண்டிய சுஸ்ருஷை இவ்வளவே. அது வென்னென்னில் தமப்பனுடைய வார்த்தையை வெகுமதியுடன் அப்படியே ஆகட்டுமென்று அங்கீகரித்தலே. ப்ரஜைகளைப் படைப்பாயென்று என்னல் மொழியப்பெற்ற நீ அங்ஙனமே செய்தாய். ஆகையால் நீ என்னை நன்ருகப் பூஜித்தனை. குழந்தாய்! இடை முதலிய அங்கங்களெல்லாம் அழகாயிருக்கப்பெற்றவரும் நல்லியற்கையுடைவருமாகிய இந்த உன் புதல்விகள் தமது அம்சங்களால் (பிள்ளை பேரன் முதலிய பரம்பரைகளால்) ஸ்ருஷ்டியைப் பற்பலவாறு வ்ருத்தி செய்யப் போகின்ருர்கள். ஆகையால் ரிஷிஸ்ரேஷ்டர்களான மரீசி முதலியவர்க்கு உன் புதல்விகளைத் தகுந்தபடி கொடுத்து

விவாஹஞ் செய்விப்பாயாக. இப்பொழுது பூமியில் உன் புகழை வளர்த்துவாயாக. வாராய் முனிவனே! இப்பொழுது உனக்குப் பிறந்த பிள்ளையின் உண்மையைச் சொல்லுகிறேன், கேள். ஸாக்ஷாத் பரம புருஷனே இங்ஙனம் அவதரித்தான். ப்ராணிகளுக்கு நன்மை செய்யும் பொருட்டு நிதி போன்ற இந்த தேஹத்தை அங்கீகரித்தான். இக்கபிலன் ஜகத்காரணனான பரமபுருஷனே. இது எனக்குத் தெரியும். வாராய் மனுவின் புதல்வியே! கைடப சத்ருவாகிய பகவான் ஜீவாத்ம பரமாத்மாக்களின் ஜ்ஞானத்தை உபதேசித்து ப்ராணிகளுடையபுண்யபாபரூபமான கர்மங்களின் வேர்களை அறுக்கும் பொருட்டு உன் கர்ப்பத்தில் அவதரித்தான். இவன் ஸ்வர்ணம் போன்ற தலைமயிர்களுடையவன், செந்தாமரைமலர் போன்ற கண்களும் பத்மரேகை அமைந்த பாதாரவிந்தங்களும் உடையவன். இவன் அவித்யை (தேஹாத்மாபிமானம்) ஸம்சயம் (பரப்ரஹ்மத்திற்குட்படாத ஸ்வதந்த்ராத்மப்ரமம்)என்று இருவகைப்பட்ட உனது அஜ்ஞானமாகிற முடிச்சை அறுத்துப் பொகட்டு பூமியில் ஸஞ்சரிக்கப்போகின்றான். இந்த உன் புதல்வன் ஸித்திபெற்ற மஹாயோகி ஸமூஹங்களுக்குத் தலைவனாகி ஸாங்க்ய சாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிந்து அனுஷ்டித்துப் பிறர்க்கும் உபதேசிக்குந் திறமையுடைய பெரியோர்களால் வெகுமதிக்கப்பெற்று உலகத்தில் கபிலனென்னும் பேர்பெற்று உனக்குக் கீர்த்தியை வளர்க்கப்போகின்றான்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—ஜகத்ஸ்ருஷ்டி கர்த்தாவான ப்ரஹ்மதேவன் அந்தக் கர்த்தமருக்கும் தேவஹூதிக்கும் இங்ஙனம் நல் வார்த்தைகளை மொழிந்து ஸனக ஸனந்தனாதி குமாரர்களோடும் நாரதரோடும் ஹம்

ஸ்வாஹனத்தின்மேல் ஏறிக்கொண்டு ஸ்வர்க்க லோகத்திற்கு மேற்பட்டதாகிய ஸத்யலோகம் போய்ச் சேர்ந்தான். வாராய் விதுரனே! ப்ரஹ்மதேவன் புறப்பட்டுப் போனபின்பு, அவனால் தூண்டப்பெற்ற கர்த்தமர் உடனே தன் புதல்விகளை அவரவர் சீலத்தையும் விருப்பத்தையும் அனுஸரித்து ஜகத்ஸ்ருஷ்டி கர்த்தாக்களான மரீசி முதலியவர்க்குக் கொடுத்தான். அவர்களில் மரீசிக்குக் கலையென்பவளையும், அத்ரிக்கு அனஸூயையையும், அங்கிரஸ்ஸுக்கு ச்ரத்தையென்பவளையும், புலஸ்த்யருக்குஹவிர்ப்பூவென்பவளையும், புலஹருக்குக் கதியென்பவளையும், க்ரதுவுக்கு க்ரியை யென்பவளையும், ப்ருகுவுக்கு க்யாதியென்பவளையும், வஸிஷ்டருக்கு அருந்ததியையும், அதர்வருக்குச் சாந்தி யென்பவளையும் கொடுத்தார். இந்தச் சாந்தியென்பவள் யாகங்களை ஓயாமல் நடப்பிக்குந் தன்மையள். இவளை மணம்புரிந்த அதர்வர் இவளது மஹிமையினால் ஓயாமல் யாகங்களை நடத்திக்கொண்டிருந்தார். இவர்களெல்லோரும் விவாஹத்திற்குரிய வயதுடையவர்கள். எல்லோரும் பாதிவ்ரத்ய முடையவர். கர்த்தம மஹர்ஷி, விவாஹம் செய்யப்பெற்றுப் பத்னிகளுடன் கூடின அந்தணர் தலைவரான மரீசி முதலியவர்க்கு விவாஹத்தில் கொடுக்கவேண்டிய வஸ்த்ரம் ஆபரணம்முதலியவற்றைக் கொடுத்து அவர்களெல்லோரையும் மனங்களிக்கச் செய்தார். வாராய் விதுரனே! அப்பால் மரீசிமுதலிய மஹர்ஷிகள் தமது பார்யைகளை அழைத்துக்கொண்டு கபிலரிடம் விடைபெற்று ஸந்தோஷமுற்றவராகித் தந் தமது ஆஶ்ரமங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். வாராய் பரதஶ்ரேஷ்டனான விதுரனே! பிறகு அந்தக்கர்த்தமர் ஜ்ஞான பலங்கள் ஐஶ்வர்ய வீர்யங்கள் சக்தி தேஜஸ்ஸுக்கள் என்கிற மூன்று இரட்டைகளையுடைய பரமபுருஷனே கபில

ராக அவதரித்தானென்பதை அறிந்து ஏகாந்தத்தில் ஸமீபத்தில் சென்று ப்ரணாமம் செய்து நன்றாக மொழிந்தார்.

கர்த்தமர் சொல்லுகிறார்:—தமது பாபங்களால் ஸம்ஸாரமாகிய நரகத்தில் மிகவும் பரிதபிக்கப்படுகின்ற பூதங்களிடத்தில் நெடுநாள் சென்றபின்பு தேவதைகள் அருள் புரிகின்றன. இது நிச்சயம். ஆ! இது என்ன ஆச்சர்யம்! பல ஜன்மங்களால் பரிபாகதசை அடைந்ததும் நல்லபக்தி யோகம் அமைந்ததுமாகிய ஸமாதியினால் யோகிகள் ராகம் த்வேஷம் முதலிய தோஷங்களொன்றுமின்றிப் பரிசுத்தமான தமது ஹ்ருதயங்களாகிற கோயில்களில் உன் ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க யத்னம் செய்கின்றார்கள். அனேக மாயிரம் ஜன்மங்களில் கர்மயோகம் ஜ்ஞான யோகம் இவைகளை அனுஷ்டித்து அவற்றால் பகவானிடத்தில் மனவூக்கம் உண்டாகி அவ்வழியில் பக்தியோகம் தலையெடுக்கப்பெற்று ராக த்வேஷாதியான தோஷங்களெல்லாம் தொலைந்து பரிசுத்தமான மனமுடையவரான யோகிகள் உன் ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்க விரும்புகிறார்கள். அப்படிப்பட்ட மஹானுபாவனாகிய நீ 'ஸர்வஸ்மாத்பரனான நான் அற்பர்களான மானிடவர்களின் க்ருஹங்களில் எங்ஙனம் பிறப்பேன்?' என்று அவமதியை எண்ணாமல் க்ராம்யர்களான எமது க்ருஹத்தில் வந்து அவதரித்தாய் ஆனால் நீ பக்தர்களுக்கு ஸுலபனாகையால் உனக்கு இது யுக்தமே. நீ உன் பக்தர்களின் பக்ஷத்தை நிறைவேற்றுந் தன்மையனல்லவா. ஆகையால் இங்ஙனம் வந்தவதரித்தமை யுக்தமே. பரமபுருஷனே! 'நானும் எனது அம்சத்தினால் அவதரிக்கப் போகின்றேன்' என்றுமொழிந்த உன்வார்த்தையை ஸத்யம்செய்வதற்காக என் க்ருஹத்தில் அவதரித்தாய். இப்படி நீ ஸங்கல்பித்தபடியே நிறைவேற்றினமை எமது பாக்யமே. பக்தர்

களுக்கு வெகுமதியை வளர்ப்பவனாகிய நீ லோகோஜ்ஜீவனத்தின் பொருட்டு ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிவிப்பதாகிய ஸாங்க்யசாஸ்த்ரத்தை இயற்றி உலகத்தில் பரவச் செய்யும் பொருட்டு அவதரித்தாய். நீ கர்மத்தினால் விளையக்கூடிய தேவ மனுஷ்யாதி உருவங்களற்றவன். இப்படியிருக்க, உன் பக்தர்கள் [1]சதுர்புஜாதியான எந்தெந்த உருவங்களை உன்னிடத்தில் காண விரும்புகிறார்களோ, அந்தந்த உருவங்களே உனக்கும் அபிமதமாயிருக்கும். நீ கர்மத்தினால் விளையும் தேவாதி உருவங்களற்றவனாயினும் உன் பக்தர்களுடைய விருப்பங்களை நிறைவேற்றும்பொருட்டு அவரவர்விருப்பங்களுக்குப் பொருந்தும்படி தேவ மனுஷ்யாதி உருவங்கள்போன்ற திவ்ய ரூபங்களைத் தரிக்கின்றனை. பண்டிதர்கள் ப்ரக்ருதி புருஷ ஈஶ்வரர்களென்கிற தத்வங்களின் உண்மையை அறியவிரும்பி உன் பாத பீடத்தை வணங்குகிறார்கள். உன் பாதாரவிந்தங்களின் பெருமைக்கு இவர்கள் வணங்குவதும் தகும். நீ ஐஶ்வர்யம் வைராக்யம் யசஸ்ஸு ஜ்ஞானம் தேஜஸ்ஸு இவைகளால் பரிபூர்ணனாயிருப்பவன். இத்தகையனான உன்னை நான் சரணம் அடைகின்றேன். நீ ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணனாயிருப்பவன்; ப்ரக்ருதி புருஷன் (ஜீவன்) மஹத்து காலம் இவைகளைச் சரீரமாகவுடையவன்; கார்யாவஸ்தையை அடைந்து ஸத்வ ரஜஸ் தமோகுணங்களுக்கிடமான ஜீவனைச் சரீரமாகவுடையவன். கார்யமாயும் காரணமாயும் உள்ள சேதனாசேதனங்களுக்கு அந்த

1. நான்கு புஜங்களோடு காட்சி கொடுக்க வேண்டுமென்று விரும்புவார்களாயின், அங்ஙனமே நான்கு புஜங்களுடன் அவதரித்துக் காட்சி கொடுக்கின்றாய். இங்ஙனம் அவரவர் விருப்பத்தின்படி உருவங்களைக் கொள்கின்றாயென்று கருத்து.

ரத்மாவாயிருப்பவன்; எல்லாமறிந்தவன்; ஸர்வசக்திகளும் ஸ்வாதீனமாயிருக்கப்பெற்றவன்; சேதனுசேதனரூபமான ஜகத்தையெல்லாம் பாதுகாப்பவன்; ஸம்ஹார காலத்தில் தன்னுடைய ஜ்ஞானசக்தியால் ப்ரபஞ்சமெல்லாம் தன்னிடத்தில் மறையப்பெற்றவன்; கபிலனென்னும் பேருடையவன். அப்படிப்பட்ட உன்னைச் சரணம் அடைகின்றேன். ப்ரஜைகளுக்கு நாதனுகிய உன்னை நான் ஒன்று வினவுகின்றேன். நீ இங்ஙனம் எனக்குப் பிள்ளையாகப் பிறந்தனையாகையால் மூன்று ருணங்களையும் கடந்தேன். ஸாம்ஸாரிகபோகங்களையெல்லாம் அனுபவித்தேன். அப்படிப்பட்ட நான் இப்பொழுது உன்னையே மனத்தில் த்யானித்துக்கொண்டு ஸம்ஸாரதாபங்களால் விளையும் சோகங்களெல்லாம் தொலையப்பெற்றுத் துறவிகளின் பதவியாகிய ஸந்யாஸ தர்மத்தைக் கைப்பற்றி ஸஞ்சரிக்கலாமென்று நினைக்கின்றேன். இது உனக்கு ஸம்மதந்தானு? எனக்கு அனுமதி கொடுக்கின்றனையா?

ஸ்ரீபகவான் சொல்லுகிருன்:—உலகத்திலுள்ளவர் அனைவர்க்கும் வைதிகத்திலும் லௌகிகத்திலும் நான் சொன்னதே ப்ரமாணம். நான் சொல்லுவதெல்லாம் ஸத்யமாகவேயிருக்கும். எப்படியென்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக. வாராய்முனிவனே! நான் உனக்குப் பிள்ளையாகப் பிறக்கப் போகிறேனென்று மொழிந்தேனே, அதை ஸத்யஞ் செய்வதற்காக நான் அவதரித்தேன். துஷ்டமான அந்தக்கரணமுடையதும் ஆத்மாவென்று நினைக்கபபடுவதுமாகிய தேஹத்தினின்று விடுபடவேண்டுமென்று விரும்புகிறவர்களுக்கு ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறிவதற்கு உபயோகப்படுவதான ப்ரக்ருதி புருஷன் ஈஶ்வரன் என்கிற தத்வங்களின் உண்மையை

கத்திலுள்ளார் எல்லோரும் அறியும்படி விவேகித்துச் சொல்லும்பொருட்டே நான் அவதரித்தேன். இதுவே என்னுடைய ஜன்மத்திற்கு ப்ரயோஜனம். இந்த ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மை எளிதில் அறியமுடியாதது; வெகு ஸூக்ஷ்மமானது. இதை நான் முன்னமே உபதேசித்திருக்கின்றேன். ஆயினும் வெகு காலம் ஆனமையால் அவ்வாத்மஜ்ஞானமார்க்கம் பாழடைந்துபோயிற்று. அதையே மீளவும் நிலைநிறுத்தும் பொருட்டு நான் இந்த தேஹத்தைக் கொண்டேனென்று நீ அறிவாயாக. கர்த்தமமுனிவரே! நான் உனக்கு அநுமதி கொடுத்தேன். உன்விருப்பத்தின்படி நீ துறவியாய்ச் செல்வாயாக. நீ கர்மங்களைச் செய்து அவற்றின் பலன்களில் பற்றற்று அவற்றை என்னிடத்தில் ஸமர்ப்பணஞ்செய்து மற்ற உபாயங்களால் வெல்லமுடியாத ம்ருத்யுவை ஜயித்து மோக்ஷத்தின் பொருட்டு என்னைப் பணிந்து வருவாயாக. அங்ஙனம் பணிவதனால் என்னைத் தன்னிடத்தில் மனத்தினால் ஸாக்ஷாத்கரித்து என்னைப் பெறுவதற்குத் தடையான ப்ராசீனகர்மங்களெல்லாம் தொலையப்பெற்று ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருப்பவனும் ஸ்வயம் ப்ரகாசனும் ஸமஸ்தபூதங்களுடைய ஹ்ருதயங்களில் சயனித்திருப்பவனும் எவ்விதத்திலும் எத்தகைய பயங்களுக்கும் இடமல்லாதவனுமாகிய என்னைப் பெறுவாய். நான் என்தாயான தேவஹூதிக்கு ப்ரஹ்மவித்யையை உபதேசிக்கப் போகிறேன். ப்ரஹ்மவித்யை ஸமஸ்தகர்மங்களையும் போக்குந்திறமையுடையது. இவளும் அந்த ப்ரஹ்மவித்யோபதேசம் பெற்று ம்ருத்யுவைக் கடப்பாள்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—இங்ஙனம் அந்தக் கபிலரால் சொல்லப்பட்ட கர்த்தம ப்ராஜாபதி புதல்வரா

கிய அவரை ப்ரதக்ஷிணஞ் செய்து வனத்திற்கே போ னார்; ஆ! என்ன ஆச்சர்யம்! ஸர்வஸம்பத்துக்களும் நிறை ந்த க்ருஹத்தைத் துறந்து பொருள் செய்யாமல் வனத் திற்குப் போனார். அந்தக் கர்த்தமர் மௌனவ்ரதத்தில் நிலைநின்று பரமாத்மாவையொருவனையே சரணமாகக் கொண்டு சுபாஶ்ரயமான அவனுடைய திவ்யமங்களவிக் ரஹங்களை த்யானஞ் செய்பவராகிச் சப்தாதிவிஷயங் களில் விருப்பமின்றி ஸம்ஸாரிஜனங்களின் ஸங்கமற்று, க்ருஹஸ்தாஶ்ரமத்தைத் துறந்தவராகையால் ஆஹவனீ யம் முதலிய அக்னிகளும் நியதமான இருப்பிடமும் யின்றிப் பூமியில் ஸஞ்சரித்துக்கொண்டிருந்தார். சேதனு சேதனங்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பதும் மங் களகுணங்களால் விளங்குவதும் ஹேயகுணங்களற்றது மான பரப்ரஹ்மத்தினிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி தேஹாத்மாபிமானமற்றவரும் தேஹம் பிள்ளை பெண் டிர் முதலியவற்றில் தன்னுடையதென்னும் அபிமான மற்றவரும் சீதம் உஷ்ணம் முதலிய தேஹதர்மங்களால் மனம் கலங்கப்பெறாதவரும் ஸமஸ்தவஸ்துக்களிலும் ஆத் மாக்கள் ஒருபடிப்பட்டிருப்பவராகையால் எல்லாவற்றை யும் ஸமமாகப் பார்ப்பவரும் ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்டவனும் பரப்ரஹ்மஸ்வரூபனுமான ஆத்மாவை அறிந்தவரும் ப்ரஹ்மஸ்வரூபனான ஜீவாத்மாவினிடத்தில் மனம் செல்லப்பெற்று அத்தகைய ஆத்மானுபவத்தி னால் பசி தாஹம் சோகம் மோஹம் மூப்பு மரணம் முத லிய விகாரங்களெவையுமின்றி அலையில்லாமல் ஓய்ந்தி ருக்கிற ஸமுத்ரம் போன்றவருமாகி ஸர்வஜ்ஞனும் ஜீவனு க்குள் ப்ரவேசித்து நியமிப்பவனும் ஜ்ஞானசக்த்யாதி ஷாட்குண்யபரிபூர்ணனும் ஸமஸ்தபூதங்களுக்கும் தாரக னுமாகிய பரமபுருஷனிடத்தில் மேலான பக்தியோ

கத்தினால் நிலைநின்ற மதியுடையவருமாகி ஸமஸ்தபூதங்களிலும் பரமபுருஷன் இருக்கக் கண்டார். அங்ஙனம் ஜகத்திற்கெல்லாம் தாரகனான அந்தப் பரமாத்மாவினிடத்தில் ஸமஸ்தபூதங்களையும் கண்டார். அவர் ப்ராக்ருத குணங்களான ராகம் த்வேஷம் முதலியவைகளை அற்று, தேவ மனுஷ்யாதி தேஹங்களெல்லாம் அவரவர் கர்மங்களுக்கிணங்கப் பலவாறாயிருப்பினும் ப்ரக்ருதியின் பரிணாமங்களாகையால் ஒருபடிப்பட்டவையென்றும், சரீரங்கள் தோறும் ஜீவாத்மாக்கள் வெவ்வேறாயினும் எல்லோரும் ஜ்ஞானமே வடிவமாகப்பெற்றவராகையால் ஒருபடிப்பட்டவரென்றும், அந்தர்யாமியான ஸர்வேஶ்வரன் எல்லாவிடங்களிலும் ஒருபடிப்பட்டவனென்றும் நன்றாக அறிந்து ஸமஸ்தபூதங்களையும் ஸமமாகப் பார்க்கின்ற மனமுடையவராகி பகவானிடத்தில் பக்தியோகம் நிரம்பப்பெற்று பாகவதர்கள் பெறுங்கதியாகிய மோக்ஷத்தைப் பெற்றார். இருபத்து நான்காவது அத்யாயம் முற்றிற்று.

---

## கபிலர்க்கும் தேவஹூதிக்கும் ஸம்வாதம்

ஸ்ரீஶௌனகர் சொல்லுகிறார்:— கர்மத்தினால் விளையும் ஜன்மமில்லாதவனும் ஜ்ஞானாதிகுணங்கள் நிறைந்தவனுமாகிய ஸர்வேஶ்வரன் மனிதர்களுக்கு ஜீவாத்மபரமாத்மாக்களின் உண்மையை விசதமாக எடுத்துரைக்கும் பொருட்டுக் கபிலராக அவதாரம் செய்தான். புருஷஶ்ரேஷ்டரும் யோகிகளில் சிறந்தவருமாகிய இந்தக் கபிலருடைய புகழைக் கேட்பதில் என்னுடைய இந்த்ரியங்கள் நிரம்பவும் த்ருப்தி அடையாதிருக்கின்றன. இந்தக் கபிலருடைய வ்ருத்தாந்தத்தை நீர் சொல்லக் கேட்

டேன். ஆயினும் எனக்கு அவ்வளவாக த்ருப்தி உண்டாகவில்லை. தான் நினைத்தபடி வடிவங்கொள்ளுந் தன்மையுடைய பகவான் கபிலராக அவதாரஞ் செய்து எந்தெந்த நடத்தைகளைச் செய்தானோ, அவையெல்லாம் பரிசுத்தங்களாகையால் கீர்த்தனஞ் செய்யத் தகுந்தவை. எனக்கு அவற்றையெல்லாம் கேட்கவேண்டுமென்னும் ஶ்ரத்தை உண்டாயிருக்கின்றது. ஆகையால் அவற்றை எனக்கு மொழிவீராக.

ஸ்ரீஸூதர் சொல்லுகிறார்:—அப்பொழுது வ்யாஸருக்கு நண்பராகிய மைத்ரேயமஹர்ஷியைக் குறித்துத் தத்வநிர்ணயத்தைப்பற்றி இங்ஙனமே விதுரன் வினவினான். அங்ஙனம் வினவப்பெற்ற மைத்ரேயரும் ப்ரீதியுடன் இவ்வாறு விதுரனுக்கு மொழிந்தார்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—தந்தையாகிய கர்த்தமர் அரண்யம் போனபின்பு கபிலபகவான் தாயான தேவஹூதிக்கு ப்ரியம் செய்ய விரும்பி அந்த பிந்து ஸரஸ்ஸின்கரையிலேயே வஸித்திருந்தார். தத்வமார்க்கத்தின் கரையறிந்தவரும் கர்மபந்தமற்றவரும் (பெறவேண்டிய தொன்றுமில்லாதவராகையால் செயலற்றவரும்) ஆகிய கபிலர் உட்கார்ந்திருக்கையில், தேவஹூதி ப்ரஹ்மாவின் வசனத்தை (இவன் ஸாக்ஷாத் பரமபுருஷனே. இவன் உனக்குத் தத்வோபதேசஞ் செய்து உனது அஜ்ஞானத்தைப் போக்குவானென்ற ப்ரஹ்மாவின் வசனத்தை) நினைத்துத் தன் புதல்வராகிய அந்தக் கபிலரிடம் வந்து இங்ஙனம் மொழிந்தாள்.

தேவஹூதி சொல்லுகிறாள்:—வாராய் பெருமையுடைய ஜகதீசனே! நான் இத்தனைகாலமாய் அசேதனமான ப்ரக்ருதியின் பரிணாமங்களாகிய இந்த்ரியங்களுக்கு த்ருப்தியை விளைத்துக் கொண்டிருந்தமையால் மிகவும்

வெறுப்புற்றிருக்கின்றேன். 'இந்த்ரியங்களின் த்ருப்தியால் ஸந்தோஷமன்றோ உண்டாகவேண்டும். என் வருத்தம் உண்டாயிற்று?' என்கிறாயோ; சொல்லுகிறேன், கேள். ப்ரபூ! நான் இந்த்ரியங்களின் த்ருப்தியைத் தேடிக் கொண்டிருந்தமையால் காடாந்தகாரம்போன்ற பெரிய அஜ்ஞானத்தில் ஆழ்ந்தேன். அங்கு கரையில்லாத அஜ்ஞானமாகிற அந்த காடாந்தகாரத்தினின்று இப்பொழுது என்னைக் கரைபெற்றுவிப்பவன் நீயே. பல ஜன்மங்கள் கழிந்தபின்பு கடைசியில் உனது அனுக்ரஹத்தினால் எனக்குச் சிறந்த கண் கிடைத்தது. நான் இந்த்ரியங்களின் த்ருப்தியே புருஷார்த்த மென்றிருந்தேன். அந் நினைவு மாறி 'இது அஜ்ஞானம் இதைப் போக்கிக்கொள்ளவேண்டும்' என்னும் புத்தி உண்டாயிற்று. இதுவே எனக்கு உனது அனுக்ரஹத்தினால் கிடைத்தகண். எவன் ஜீவாத்மாக்களுக்கு நியாமகன்; ஜகத் காரணன்; ஜ்ஞாநாதி குணங்கள் நிறைந்தவன்; அவனே நீ. அஜ்ஞானமாகிற அந்தக் காரணத்தினால் கண் தெரியாமல் தடுமாறுகின்ற லோகத்தின் க்ஷேமத்திற்காகவே, சக்ஷுரிந்த்ரியத்திற்கு அதிஷ்டான தேவதையாகிய ஸூர்யன்போல், நீ இங்ஙனம் அவதரித்தனை. ஜகதீசா! இந்த தேஹத்தில் நானென்கிற அபிமானத்தையும் என்னுடைய தென்கிற அபிமானத்தையும் ஏற்படுத்தினாய். தேவனே! அந்த அஜ்ஞானத்தை நீயே போக்கவேண்டியவன். உன் ஸங்கல்பத்தினால் உண்டான மோஹம் உன்னால் போக்கத்தகுந்ததேயன்றி மற்றை எதனாலும் போக்கத் தக்கதன்று. அத்தகையனும் தன்னிடத்தில் பக்தி செய்பவருடைய ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்திற்குக் கோடாலி போன்றவனும் ரக்ஷிப்பதில் ஸமர்த்தனும் தர்மங்களில் சிறந்ததாகிய நிவ்ருத்தி தர்மத்தை அறிந்தவர்களில் மேன்மையுற்ற

வனுமாகிய உன்னை நான் ப்ரக்ருதி புருஷ ஈம்வர தத்வங்களின் உண்மையை அறிய விரும்பிச் சரணம் அடைந்தேன் என்றாள்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:— ப்ராணிகளுக்கு மோக்ஷ ருசியை விளைவிப்பதும் நிர்த்தோஷமுமான மாதாவின் அபிப்ராயத்தை இங்ஙனம் கேட்டு அதைத் தன் மனத்தினால் புகழ்ந்து மனத்தை அடக்கின ஜிதேந்த்ரியர்களான ஸத்புருஷர்களுக்கு மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுக்கும் உபாயமாகிய கபிலர் புன்னகையினால் திகழ்கின்ற முகமுடையவராகி அந்த தேவஹூதியைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்.

கபிலபகவான் சொல்லுகிறார்:—ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் உண்மையை அறிகையாகிற ஜ்ஞானயோகமே முமுக்ஷுக்களான (மோக்ஷத்தில் விருப்பமுடையவரான) புருஷர்களுக்கு மோக்ஷத்தை விளைப்பதாமென்பதே எனது அபிப்ராயம். 'இந்த ஆத்மஜ்ஞானயோகம் கைகூடுமாயின், சப்தாதி விஷயங்களால் விளையும் ஸுக துக்கங்களிரண்டும் அடியோடு தொலைந்து போம். ஆத்ம யோகத்தைக் கேட்க வேண்டுமென்று விரும்பின ரிஷிகளுக்கு நான் அதை முன்புமொழிந்தேன். இந்த ஆத்மயோகத்திற்குச் சமம் தமம் முதலிய பல வகை அங்கங்கள் உண்டு. அவற்றையெல்லாம் குறைவற அனுஷ்டிக்கில்தான் இவ்வாத்மயோகத்தில் வல்லமை உண்டாகும். அத்தகையதான இந்த ஆத்மயோகத்தை நான் உனக்குச் சொல்லுகிறேன். இந்த ஜீவாத்மாவினுடைய ஸம்ஸாரபந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் மனதே காரணமென்பது யாவர்க்கும் ஸம்மதமே. சப்தாதி விஷயங்களில் பற்றுடைய மனம் ஸம்ஸார பந்தத்தை விளைவிப்பதாம். பரமபுருஷனிடத்தில் பற்றுடைய மனம்

மோக்ஷத்தைவிளைவிப்பதாம். ஆத்மாவல்லாததேஹத்தில் ஆத்மாவென்னும் அபிமானம் அஹங்காரமெனப்படும். தன்னுடையதல்லாத வஸ்துவில் தன்னுடையதென்னும் அபிமானம் மமகாரமெனப்படும். இந்த அஹங்காரம் அஹமபிமானமென்றும், மமகாரம் மமாபிமானமென்றும் கூறப்படும். இவ்வஹங்கார மமகாரங்களால் காமக்ரோத லோப மத மோஹாதிகள் உண்டாகின்றன. அவற்றால் புண்ய பாப ரூபமான மலங்கள் (அழுக்குகள்) உண்டாம். அம் மலங்களெல்லாம் தீர்ந்துசுத்தமாகிச் சப்தாதி விஷயங்களால் விளையும் ஸுக துக்கங்களால் கலக்கமுறுகையின்றி மனம் எக்காலத்திலும் ஸமமாயிருக்குமாயின், இத்தகைய மனமுடைய புருஷன், ஆத்மஜ்ஞானம் சப்தாதி விஷயங்களில் ஆஸக்தியில்லாமையாகிற வைராக்யம் பக்தி இவைகளோடுகூடின மனத்தினால், ப்ரக்ருதியின் பரிணமங்களாகிய சரீரம் இந்த்ரியம் மனது ப்ராணன் இவை முதலியவற்றைக் காட்டிலும் ஸ்வரூப ஸ்வபாவங்களால் விலக்ஷணனா யிருப்பவனும் ஸத்வம் முதலிய குணங்கள் தீண்டப்பெறாதவனும் ப்ரக்ருதியின் பரிணமங்களிலுள்ள தேவத்வம் மனுஷ்யத்வம்முதலிய ஆகாரங்களற்றவனும் சரீரங்கள் தோறும் வேறுபட்டிருப்பினும் ஜ்ஞானமாகிற ஆகாரம் ஒத்திருக்கையால் வைஷம்யமில்லாதவனும் அணுவாயிருப்பவனும் கண்டிக்க முடியாதவனும் ஸ்வயம் ப்ரகாசனும் வ்யாபார மற்று உதாஸீனமாயிருப்பவனுமாகிய ஆத்மாவையும், ஸம்ஸார ஸம்பந்தத்தை விளைவிக்கையாகிற வீர்யம் தலை சாயப்பெற்று ஓய்ந்திருக்கின்ற ப்ரக்ருதியையும் காண்பான். ஸமஸ்த ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவான பகவானிடத்தில் விளையும் பக்தியே மோக்ஷம்பெறுதற்கு உபாயமன்றி அதைப்போல் அழகான மற்றொரு உபாயம் இல்லையென்று யோகிகள் கூறுகி

றார்கள். ஜீவாத்மாவுக்குச் சப்தாதி விஷயங்களில் மனப்பற்றும் அந்தசப்தாதிவிஷயங்களில் கால்தாழ்ந்தவரோடு ஸஹவாஸமும் அறுக்கமுடியாமல் உறுதியானபாசமென்று பண்டிதர்கள் நிர்ணயித்திருக்கின்றார்கள். அந்த மனப்பற்றே ஸாதுக்களிடத்தில் நேருமாயின், அது இடையூறின்றித் திறக்கப்பெற்ற மோக்ஷத்வாரமாம். அத்தகைய ஸாதுக்கள் எவரென்னில் சொல்லுகிறேன் கேள். மூர்க்கரிடத்திலும் கோபங்கொள்ளாமல் பூமியைப்போல் பொறுத்திருக்குந்தன்மையர்; பிறருடைய துக்கத்தைக் காணில் பொறுக்க முடியாமல் அவரோடொக்க வருந்தித் தம் ப்ரயோஜனத்தை எதிர் பாராமல் அவர் துக்கத்தைப் போக்க விரும்புமவர். ஆனது பற்றியே ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நண்பராயிருப்பவர்; ஆதலால் தமக்குச் சத்ருக்கள் எவரும் நேரப்பெறாதவர்; செவி வாய் கண் மூக்கு உடல் என்கிற வெளியிந்த்ரியங்களையும் உள்ளிந்த்ரியமான மனத்தையும் வென்றிருப்பவர்; நன்னடத்தையே பூஷணமாகவுடையவர். இத்தகையரே ஸாதுக்களாவார். மற்றும், ஈஶ்வரனான என்னிடத்தில் மாறாத மனத்துடன் எவர் திடமான பக்தியைச் செய்பவராகி, அந்த பக்திக்கு விரோதியான மற்ற ப்ரவ்ருத்தி தர்மங்களையெல்லாம் கைவிட்டு ஜ்ஞாதிகளையும் பந்துக்களையும் துறந்து, என்னையே ஸகலவித பந்துவாகவும் உபாயோபேயமாகவும் பற்றி என்னுடைய கதைகளை நினைத்து ஸந்தோஷமுற்று மீளவும் அந்தக்கதைகளையே கேட்பதும் சொல்லுவதுமாயிருக்கின்றார்களோ இவர்களே ஸாதுக்களாவார். என்னிடத்தில் நிலை நின்ற மனமுடைய இவர்களைப் பல வகையான ஸம்ஸார தாபங்கள் எவையும் வருந்தச் செய்கிறதில்லை. (மழையாலடியுண்ட மலைகள்போல், எப்படிப்பட்ட ஸம்ஸாரதாபங்கள் நேரிலும் மனம்கலங்கப்பெறாமல்

தீரமாயிருப்பார்கள்), வாராய் நல்லியற்கையுடையவளே! அத்தகையரான இந்த ஸாதுக்கள் ஸகலவிதமான ஸங்கங்களையும், (மனப்பற்றுகளையும்) துறந்தவர். நீ முதலில் இப்படிப்பட்ட ஸாதுக்களின் ஸஹவாஸத்தை ப்ரார்த்தித்துப் பெறவேண்டும். இவர்கள், சப்தாதி விஷயங்களில் மனப்பற்று உண்டாவதற்குக் காரணமான அநாதி புண்ய பாப ரூப தோஷங்களையெல்லாம் போக்குந்தன்மையர் இவர்களோடு ஸஹவாஸம் செய்யின், புண்ய பாப ரூபமான தோஷங்களெல்லாம் தாமே தொலையும். அவை தொலையின் வேராறுந்தமையால் சப்தாதி விஷயங்களில் மனப்பற்றுண்டாவதற்கு இடமே இல்லை. ஸாதுக்களோடு ஸஹவாஸம் செய்யில், என்னுடைய வீரச்செயல்களை அறிவிப்பவைகளும் ஹ்ருதயத்திற்கும் காதுகளுக்கும் அம்ருதம்போல் இனியவைகளுமான கதைகளைக் கேட்க நேரும். அங்ஙனம் என் கதைகளைக் கேட்டுக்கொண்டுவரின், சீக்ரமாகவே மோக்ஷமார்க்கத்தில் ச்ரத்தையும் என்னிடத்தில் ப்ரீதியும் பக்தியும் க்ரமக்ரமமாக உண்டாகும். நான் நடத்துகிற ஸ்ருஷ்டி முதலிய வ்யாபாரங்களின் சிந்தனை நடக்கப்பெற்ற அந்த பக்தியால் இஹலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள சப்தாதி விஷயங்களில் மனப்பற்றின்றிப் பலனை விரும்பாமல் செய்யப்படும் கர்மயோக ஜ்ஞானயோகங்களோடுகூடி மனத்தை ஒருவாறுயிருக்கச் செய்பவையாகையால் ருஜுவாயிருப்பவைகளான விவேகம் முதலிய பக்தியோகமார்க்கங்களால் மனத்தை அடக்குவதில் ஊக்கம் தவிர்தலின்றி யத்னம் செய்வான். ஜாதி ஆச்ரயம் நிமித்தம் இவைகளால் துஷ்டமான அன்னம் முதலியவை ஸத்வாதிகுணங்களின் பரிணாமங்கள். இவற்றில் ஜாதிதுஷ்டங்கள் கஞ்சா வெங்காயம் முதலியவை. சண்டாள பதிதாதிகளின் அன்னம்

ஆஶ்ரயதுஷ்டமாம். எச்சில் முதலியவற்ருல் கெடுதி அடைந்த அன்னம் நிமித்த துஷ்டமாம். இங்ஙனம் துஷ்டமான அன்னுதிகளை உபயோகப்படுத்தாமையாலும் வைராக்யத்தினுல் வளர்க்கப்பெற்ற ஜ்ஞானத்தினுலும் பலனை விரும்பாமற்செய்கிற கர்மயோகத்தினுலும் வேறு ப்ரயோஜனங்களை விரும்பாமல் என்னிடத்தில் நிஷ்காரணமாகச் செய்யும் பக்தியினுலும் ஜீவாத்மாவுக்கு அந்தராத்மாவான என்னை இந்த தேஹத்தின் முடிவில் பெறுகின்ருன்.

தேவஹூதி சொல்லுகிருள்:—மோக்ஷத்தை ஸாதித்துக்கொடுப்பதற்குரிய பக்தியோகம் எத்தகையது. அந்த பக்தியின் ஸ்வரூபம் யாது? எனக்குச் சொல்லும் பக்தி எப்படிப்பட்டது? ஸம்ஸார தாபங்களால்வருந்தியிருக்கின்ற நான் எந்த பக்தியால் நித்யானந்த ஸ்வரூபனுன உனது பாதாரவிந்தங்களை அனுயாஸமாகப் பெறுவேனே, அப்படிப்பட்ட பக்தியின் ஸ்வரூபத்தை எனக்கு விசதமாகச் சொல்லவேண்டும். எல்லையில்லாத மஹாநந்தஸ்வரூபனே! பகவானிடத்தில் பாணம்போல் ப்ரயோகிக்கப்பட்டு அவனைக் குறிப்பிடுவதாகிய யாதொரு யோகத்தை நீ மொழிந்தனேயோ, அந்த யோகத்தின் ப்ரகாரம் யாது? அதனுடைய அங்கங்கள் யாவை? எந்த அங்கங்களால் பரமாத்மாவினுடைய உண்மையை அறிவித்து அவனுடைய ஸாக்ஷாத்காரத்தை விளைவிப்பதாகிய உபாஸனம் நிறைவேறுமோ, அப்படிப்பட்ட யோகத்தை விரித்துச்சொல்வாயாக. தேவா! நீ சொன்ன பக்தியோகத்தின் ஸ்வரூபம் அறிஞர்க்கும் வருந்தி அறியக்கூடியதாயிருக்கின்றது. தன்னைப் பற்றினுருடைய பாபங்களைப் போக்குந் தன்மையுள்ள ஸ்ரீஹரியே! நான் பெண்பிள்ளை; ஆனது பற்றியே மந்தபுத்தியள். இப்படிப்பட்ட நான் அந்த பக்தி

யோகத்தின் ஸ்வரூபத்தை உனது அனுக்ரஹத்தினால் எப்படி அனாயாஸமாக அறிவேனோ, அங்ஙனம் அதை எனக்கு அறிவிப்பாயாக.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—கபிலர், மாதாவான தேவஹூதி பக்தி ஸ்வரூபத்தைக் கேட்க விரும்புவதை அறிந்து, தான் இந்த தேஹத்துடன் பிறந்ததற்குக் காரணமான அந்த தேவஹூதியினிடத்தில் ஸ்னேஹம் உண்டாகப்பெற்றவராகி, தத்வங்களை அறிவிக்கிற எந்த மாஸ்த்ரத்தை ஸாங்க்யமென்று சொல்லுகிறார்களோ, எது பக்தியை வளர்க்கும்படியான ஜ்ஞானயோகத்தை விஸ்தரித்துச் சொல்லுமோ, அப்படிப்பட்ட மாஸ்த்ரத்தை அவளுக்கு மொழிந்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—மப்தாதி விஷயங்களை அறிவிக்கின்றவைகளும் தந்தமக்கு ஏற்பட்ட தேவதைகளால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்றவைகளுமாகிய ஜ்ஞானேந்த்ரியங்கள், மாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டிப்பதில் நிலைநின்றகர்மேந்த்ரியங்கள் ஊக்கமுடைய மனது ஆகிய இவற்றைச் சுத்தஸத்வமயனான பகவானிடத்தில் எத்தகைய ப்ரயோஜனங்களையும் விரும்பாமல் நிஷ்காரணமாக உபயோகப் படுத்துகையே பகவானிடத்தில் செய்யும் பக்தியாம். இந்த பக்தி ஐம்வர்ய கைவல்யாதி ஸித்தியைக் காட்டிலும் மிகவும் சிறந்தது. புசிக்கப்பட்ட அன்ன பானாதிகளை ஜாடராக்னி ஜீர்ணஞ் செய்வதுபோல், இந்த பக்தி அனாதி கர்மவாஸனையை நாமஞ் செய்யும். என்னுடைய பாதாரவிந்தங்களைப் பணிவதில் மிக்க விருப்பமுடையவரும் தமது ஸர்வேந்த்ரிய சேஷ்டைகளும் என்னிடத்தில் நிலைநிற்கப் பெற்றவருமாகிய சில பாகவதர் ஒருவர்க்கொருவர் என்னுடைய கல்யாண குணங்களை வெளியிடுகிற எனது வீரச்

செயல்களை ப்ரஸங்கஞ் செய்து நன்கு மனக்களிப்புற்ற வராகி என்னோடொத்திருக்கையாகிற மோக்ஷத்தையும் விரும்புகிறதில்லை. தாயே! ஸத்புருஷர்கள் தெளிந்த முகமும் சிவந்த கண்களும் அமைந்து அழகாயிருப்பவைகளும் விரும்பினவற்றையெல்லாம் கொடுப்பவைகளுமாகிய என்னுடைய திவ்யமங்கள விக்ரஹங்களைக் கண் குளிரக் கண்டு மனத்தினால் த்யானிப்பவருமாகி அத்தகைய எனது திவ்யமங்கள விக்ரஹங்களை முன்னிட்டுச் செவிக்கும் மனத்திற்கும் இனிதான என்வாக்கை மொழிந்துகொண்டு பொழுது போக்குகிறார்கள். ப்ரேமத்துடன் காணத்தகுந்த ஒவ்வொரு அவயவமுடையவைகளும் கம்பீரமான விளையாடல்களும் புன்னகையும் கண்ணோக்கமும் மதுரமான மொழியும் அமைந்து மிகவும் திகழ்கின்றவைகளுமாகிய அந்த என் திவ்யரூபங்களால் மனதும் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் பறிக்கப் பெற்று அவர்கள் 'நமக்கு இவ்வனுபவமே போதும் என்று மோக்ஷத்தை விரும்பாதிருப்பினும், என்னிடத்தில் அவர்கள் செய்யும் பக்தியானது பிறர்க்கு இத்தகையதென்று அறியவும் முடியாத அர்ச்சிராதி மார்க்கத்தால் சென்று பெறக்கூடிய மோக்ஷத்தை அந்த தேஹத்தின் முடிவில் தானே விளைக்கின்றது. அப்பால் அவர்கள் அந்த சரீரத்தின் முடிவில் அர்ச்சிராதி மார்க்கத்தால் போகத்தொடங்கி என்னுடைய மாயையால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ப்ரஹ்மலோகம் வரையிலுள்ள புண்யலோகங்களையும் பக்தியின் மஹிமையால் அணிமாதி அஷ்டைஸ்வர்யங்களையும் விரும்பாது செல்வார்கள். பாகவதர்கள் அர்ச்சிராதி மார்க்கத்தால் பரமபதத்திற்குப் போகும்பொழுது ப்ரஹ்மாதி தேவதைகள் தந்தமது லோகங்களை அவர்க்கு வழங்கி 'நீங்கள் இவற்றை அங்கீகரித்து ஆளவேண்டும்' என்று

ப்ரார்த்திக்கினும், அவற்றை விரும்பாமல் போதும்போது மென்று அந்த ப்ராஹ்மாதிகளுக்கு நல்வார்த்தைகளால் ஸமாதானம் சொல்லி விடுவித்துக்கொண்டு செல்வார்கள். அவர்கள் மோக்ஷத்தையே விரும்பாதிருப்பின், ப்ராஹ்மாதி லோகங்களையும் அணிமாதி ஐச்வர்யங்களையும் விரும்பமாட்டார்களென்பதில் ஸந்தேஹம் உண்டோ? அங்ஙனம் அவர்கள் மற்ற எதிலும் கண் வைக்காமல் ஸர்வஸ்மாத் பரனான என்னுடைய லோகமாகிய நித்ய விபூதியைச் சேருகிறார்கள். சாந்த ஸ்வரூப முடையவளே! சுத்த ஸத்வ மயமான அந்த என்னுடைய லோகத்தில் என்னை அனுபவிப்பதில் மனவூக்க முற்றவராகி ஒருக்காலும் அவ்வனுபவத்தினின்று நழுவுகிறதில்லை. மற்றை லோகங்களைப்போல் என்னுடைய லோகத்திற்கு அழிவில்லை. ஆகையால் அங்கு விளைகிற ஆநந்தானுபவத்திற்கு எக்காலத்திலும் அழிவே இல்லை. என்னுடைய ஸங்கல்பரூபமான காலசக்ரமும் அவர்களைத் தீண்டுகிறதில்லை. என்னுடைய லோகமான பரமபதத்தில் காலத்தின் சக்தி ஓங்காது. இந்த மஹானுபாவர்களுக்கு மிகவும் ப்ரீதிக்கிடமான ஆத்மாவும் ஸ்னேஹத்திற்கிடமான புதல்வனும் விச்வாஸ பாத்ரமான ஸகாவும் ஹிதோபதேசஞ்செய்கிற குருவும் ஹிதஞ்செய்கிற ஸ்னேஹிதனும் பூஜிக்கத் தகுந்த இஷ்ட தேவதையும் நானே. இங்ஙனம் எல்லாவிதத்திலும் என்னையே உபாஸிக்கின்ற இவர்களுடைய பக்திக்கு நான் ஸந்தோஷம் அடைந்து எனது உண்மையை அனுபவிக்கையாகிற மஹாநந்தத்தை இவர்களுக்குக் கொடுத்து அதினின்று இவர்களை எக்காலத்திலும் நழுவ விடமாட்டேன். இந்த லோக ஸுகங்களையும் பரலோக ஸுகங்களையும் நச்வரங்களென்று நிச்சயித்து அவற்றைத் துறந்து, அந்த ஐஹிக ஸுகங்களையும்

ஆமுஷ்மிக ஸுகங்களையும் ஸாதித்துக் கொடுக்கவல்ல தேஹத்தையும் அந்த தேஹத்தைப் பற்றின பந்துக்களான புத்ர களத்ராதிகளையும் தனம் பசு க்ருஹம் இவைகளையும் மற்றுமுள்ளவைகளையும் ஸவாஸனமாகத் துறந்து, ஸர்வஜ்ஞனாகிய என்னை எல்லாவிதத்தாலும் மாறாத பக்தியுடன் எவர்கள் பஜிக்கின்றார்களோ, அவர்களை நான் ஸம்ஸாரத்தினின்று நன்கு கடக்கச் செய்கின்றேன். மீளவும் அவர்களுக்கு ஸம்ஸார ஸம்பந்த மில்லாதபடி மோக்ஷம் கொடுக்கின்றேன். ஸமஸ்த ஜீவாத்மாக்களுக்கும் அந்தராத்மாவாய் நின்று தரிக்கின்றவனும் ப்ரக்ருதிக்கும் புருஷனுக்கும் உள்ளேபுகுந்து நியமிப்பவனும் ஷாட்குண்ய பரிபூர்ணனுமாகிய என்னைக் காட்டிலும் வேறான ப்ரஹ்ம ருத்ராதிகளைப் பணியில், ஸஹிக்கமுடியாத ஸம்ஸாரபயம் நீங்காது. என்னை யொழிந்த மற்றவர் எல்லோரும் ஜீவாத்மாக்களேயாகையாலும் கர்மத்திற்கு உட்பட்டவராகையாலும் எனது ஆஜ்ஞையின்படி நடப்பவராகையாலும் அவர்களைப் பணிவதினால் மோக்ஷம் உண்டாகாது. கர்ப்பஜன்ம ஜரா மரணாதிரூபமான ஸாம்ஸாரிக பயத்தைப் போக்குமவன் நானொருவனே. இக்காற்று, 'நாம் நமது அதிகாரத்தை க்ரமப்படி நடத்தாது போவோமாயின் நம்மை ஈச்வரன் தண்டிப்பான்' என்னும் பயத்தினால் ஓயாமல் வீசுகையாகிற தன்னதிகாரத்தை நடத்திக் கொண்டிருக்கின்றான். இந்த ஸூர்யனும் அங்ஙனமே என்னிடத்தில் பயந்து வெயில் காய்கையாகிற தன்னதிகாரத்தைத் தவறாமல் நடத்துகின்றான். இந்த்ரனும் என்னிடத்தில் பயந்து மழை பெய்கையாகிற தன்னதிகாரத்தை ஊக்கத்துடன் நடத்துகின்றான். அக்னியும் என்னிடத்தில் பயந்தே கொளுத்துகையாகிற தன்னதிகாரத்தைச் சிறிதும் சோராமல் நடத்துகின்றான். இப்

படி இந்த்ராதியான ஸமஸ்த தேவதைகளும் என்னுடைய கட்டளைக்கு உட்பட்டு நடப்பவர்களே. ஆகையால் ஜ்ஞான யோகமும் வைராக்யமும் அமைந்த பக்தியோகத்தினால் மஹாநந்தரூபமான என்னை அனுபவிக்கையாகிற க்ஷேமத்தின் பொருட்டு எவ்விதத்திலும் பயமில்லாத என் பாதமூலத்தைப் பணிகின்றார்கள். இடையூறுகளால் தடைபடாதபடி தீவ்ரமான பக்தியோகத்தினால் மனத்தை என்னிடத்தில் ஸமர்ப்பித்து அதை என்னிடத்திலேயே நிலைநிறுத்துகையாகிய இவ்வளவே இந்த ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள பத்த ஜீவர்கள் மோக்ஷம் உண்டாவதற்குச் செய்யும் செயலாம். இருபத்தைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

---

ப்ரக்ருதி புருஷ தத்வ ஸ்வரூபத்தை விவரித்துக் கூறுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தாயே! மேல் ப்ரக்ருதி புருஷ காலாதி தத்வங்களின் ஸ்வரூபத்தை உனக்குத் தனித்தனியே விவரித்துச் சொல்லுகிறேன். இந்தத் தத்வங்களின் ஸ்வரூபத்தை அறிவானாயின், முமுக்ஷுவான புருஷன் ப்ராக்ருதகுணங்களான ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களினின்று விடுபடுவான். பரமபுருஷனுடைய ஸாக்ஷாத்காரத்திற்கு ஸாதனமான எந்த ஜ்ஞானம் மோக்ஷத்தை விளைவிக்குமென்று வேதாந்தங்களும் வேதாந்தங்களை அறிந்த பெரியோர்களும் சொல்லுகிறார்களோ, எந்த ஜ்ஞானம் அஜ்ஞானத்தைப் போக்குமோ, அப்படிப்பட்ட ஜ்ஞானத்தை உனக்கு நான் விவரித்துச் சொல்லுகிறேன். முதலில் ஆத்ம ஸ்வரூபத்தைச் சொல்லுகிறேன். கேட்பாயாக. ஜீவன் ஸ்வயம்ப்ரகாசன் (தனக்குத் தானே தோற்றும்படியான ஸ்வரூபமுடையவன்.

ஜ்ஞான ஸ்வரூபனும் ஜ்ஞானத்தையே குணமாக உடையவனுமாயிருப்பவன்);ப்ரக்ருதியின் பரிணமமாகிய சரீரம் இந்த்ரியங்கள் மனது ப்ராணன் இவற்றைக் காட்டிலும் வேறுபட்டிருப்பவன். இயற்கையில் ப்ராக்ருதமான ஸத்வாதி குணங்களற்றவன்; சரீரத்திற்குள் புகுந்து அதைத் தரித்துக் கொண்டிருப்பவன். இந்த ஆத்ம ஸ்வரூபத்தினால் ப்ரஹ்மா முதல் பூச்சிப் புழுவரையிலும் ஸ்தூலமாயும் ஸூக்ஷ்மமாயுமுள்ள ஜகத்தெல்லாம் வ்யாப்தமாயிருக்கின்றது. (இத்தகைய ஆத்மாக்களால் ஜகத்தெல்லாம் நிறைந்திருக்கின்றது. தேஹாதிகளுடைய தர்மங்களான உத்பத்தி விநாசங்களால் ஜீவன் பிறத்தல் சாதல் இவைகளுடையவனல்லன். ஆனால் நான் தேவன், நான் மனுஷ்யனென்றும், அவன் தேவன், அவன் மனுஷ்யனென்றும், நான் பருத்திருக்கிறேன், அவன் பருத்திருக்கிறானென்றும் தனக்கும் பிறர்க்கும் தேஹமும் ஆத்மாவும் ஒன்றாகத் தோற்றுகையால், தேஹாதிகளோடு ஆத்மாவுக்கு ஜன்ம மரணாதிகளில்லை யென்பது எப்படி பொருந்தும்?" என்னில், புண்யபாபரூப காரணங்களால் 'நான் தேவன், நான் பருத்திருக்கிறேன்' என்று தேஹ தர்மமான தேவத்வம் முதலியவைகளையும் பருமன் இளைப்பு முதலியவைகளையும் ஜீவன் தன்னிடத்தில் ஏறிட்டுக் கொள்ளுகிறான். ஆகையால் ஜீவனுக்கு தேஹாதிகளோடு ஜனன மரணாதிகள் இயற்கையில் ஏற்பட்டவையன்று. ஸ்வப்னம் காண்கிறவன் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்கள் நசிக்கினும் எப்படி நாசம் அடைகிறதில்லையோ, அங்ஙனமே ஜீவன் தேஹாதிகள் நாசம் அடையினும் தான் நாசம் அடைகிறதில்லை. இத்தகையனான அந்த ஜீவன் மிகவும் ஸூக்ஷ்மனாகையால் ஸமஸ்த வஸ்துக்களிலும் உள் புகுந்து வ்யாபித்திருக்கும் ஸாமர்த்ய

முடையவன். இவன் ஜகத்ஸ்ருஷ்டிக்கு முன்பு பேரும் உருவமுமாகிற பிரிவுகளின்றி மிகவும் ஸூக்ஷ்ம தசையை அடைந்திருப்பதும் பரம புருஷனுடைய விளையாட்டிற்குக் கருவியாயிருப்பதும் பகவானுக்கு லீலாரஸம் நிறைவேறுவதின் பொருட்டு ஆகஸ்மிகமாக நேரிட்டிருப்பதும் ஸத்வாதி குணங்கள் நிறைந்ததுமாகிய மாயையின் ஸம்பந்தத்தைப் பெறுகின்றான். அந்த ப்ரக்ருதி பகவானால் தூண்டப்பெற்று தேவ மனுஷ்யாதி ரூபத்தினால் பலவகைப்பட்டவைகளும் எல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமமாகையால் ஒரு படிப்பட்டவைகளுமாகிய ப்ரஜைகளைக் கார்யதசையில் ஸத்வாதி குணங்களால் படைக்குந்தன்மையது. மற்றும், அந்த ப்ரக்ருதி ஜ்ஞானத்தை மறைக்குந் தன்மையுள்ளது ஜீவன் ப்ரக்ருதியைக் கண்டு அதன் ஸம்பந்தத்தினால் அந்த க்ஷணத்தில் மதிமயங்கி அந்த ப்ரக்ருதியைத் தானாகவே நினைத்துக்கொள்கின்றான். இங்ஙனம் பரமபுருஷஸங்கல்பத்தினால் ப்ரக்ருதி ஸம்பந்தம் உண்டாகப்பெற்று அதனால் மறைக்கப்பட்ட தன்ஸ்வரூபத்தை மறந்து ஜீவன் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வாதிகளால் கர்மங்களைச் செய்பவனும் அவற்றைத் தானே செய்வதாகத் தன்னிடத்தில்ஏறிட்டுக்கொள்கின்றான். ஸாம்ஸாரிகப்ரவ்ருத்திகளில் ஜீவனுக்குள்ள முயற்சி ஸத்வ ரஜஸ் தமோகுண ஸம்ஸர்க்கத்தினால் வந்ததன்றி இயற்கையில் ஏற்பட்டதன்று அங்ஙனம் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் ஜீவன்தானே கர்மங்களைச் செய்வதாகத் தன்னிடத்தில் கர்த்ருத்வத்தை ஏறிட்டுக்கொள்வதனால் இவனுக்கு ஸம்ஸார பந்தம் உண்டாகின்றது; அதனாலேயே கர்மவஶ்யத்வமும் (கர்மத்திற்கு உட்பட்டிருக்கையும்) உண்டாகின்றது. ஜீவனுக்குப் போதல் வருதல் முதலிய

ஸாம்ஸாரிகப்ரவ்ருத்திகள் இயற்கைகள் கிடையாது. ஏனென்னில், அந்த ப்ரவ்ருத்திகளெல்லாம் புண்ய பாப ரூபகர்மத்தினால் விளைபவை. ஜீவன் இயற்கையில் கர்மத்திற்கு உட்பட்டவனல்லன். மற்றும், அவன் ஜ்ஞானத்தையே குணமாகவுடையவனும் ஜ்ஞானமே ஸ்வரூபமாகப்பெற்றவனுமாயிருப்பான். ஜீவாத்மாக்கள் இயற்கையில் அளவின்றி நிர்மலமான ஜ்ஞானமுடையவர். அவர்கள் கர்மமென்கிற அவித்யையால் தீண்டப்பெற்றவராகி அந்தந்தக் கர்மங்களுக்குத் தகுந்தபடி ஜ்ஞான ஸங்கோசம் உண்டாகப்பெற்று ப்ரஹ்மா முதல் பூச்சிப் புழு வரையிலுமுள்ள பலவகைப்பட்ட விசித்ரமான தேஹங்களில் ப்ரவேசித்து அந்தந்த தேஹங்களுக்குரிய ஜ்ஞானவிகாஸமுடையவராகி அந்தந்த தேஹங்களையே ஆத்மாவாக ப்ரமித்து அதற்குத் தகுந்த கர்மங்களைச் செய்து அவற்றிற்குரிய ஸுக துக்கங்களை அனுபவிக்கையாகிற ஸம்ஸாரத்தை அடைகின்றார்கள். பெரியோர்கள் சரீரசேஷ்டைகளிலும் இந்த்ரியவ்யாபாரங்களிலும் சரீரமாகப் பரிணமித்திருக்கிற ப்ரக்ருதியைக் காரணமாகச் சொல்லுகிறார்கள். போகஸாதனமான செயல்களெல்லாம் சரீராகாரமாகப் பரிணமித்திருப்பதும் ஜீவனால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்றதுமாகிய ப்ரக்ருதியைப் பற்றினவை. அந்த ப்ரக்ருதியின் பரிணாமமாகிய சரீரசேஷ்டைகளாலும் இந்த்ரியவ்யாபாரங்களாலும் விளைகிற ஸுக துக்கங்களை அனுபவிப்பதில் ப்ரக்ருதியைக்காட்டிலும் வேறுபட்டவனும் அதற்கு அதிஷ்டாதாவுமாகிய ஜீவாத்மாவைக் காரணமாகச் சொல்லுகிறார்கள். ஜீவன் சரீரத்தைத் தரிக்கும் ப்ரயத்னஞ் செய்கின்றானாகையால் அந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தினால் விளைகிற ஸுக துக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமாகின்றான்.

தேவஹூதி சொல்லுகிறாள்:—வாராய் புருஷோத்தமனே! கார்யதசைக்கு முன்பு நாமரூபவிபாகமின்றி ஸூக்ஷ்மதசையை அடைந்து பகவானுக்குச் சரீரமாயிருப்பவைகளும் ஜகத்திற்கெல்லாம் காரணங்களுமாகிய ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வரூபத்தை எனக்குச் சொல்வாயாக. உலகத்தில் தந்தை முதலிய காரணவஸ்துக்களும் புத்ரன்முதலிய கார்யவஸ்துக்களும் இந்த ப்ரக்ருதி புருஷஸ்வரூபங்களேயல்லவா? தந்தையென்றும் புதல்வனென்றும் இவைமுதலாக உலகத்தில் வழங்கும் வ்யவஹாரங்களெல்லாம் கேவலம் ப்ரக்ருதியைப் பற்றினவைகளுமல்ல; கேவலம் புருஷனைப் பற்றினவைகளுமல்லவே. ஜகத்தெல்லாம் இந்த ப்ரக்ருதி புருஷ ஸ்வரூபமேயல்லவா. அப்படிப்பட்ட ப்ரக்ருதி புருஷர்களின் ஸ்வரூபத்தை விசதமாகச் சொல்வாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—தாயே! ப்ரதானத்தையே ப்ரக்ருதியென்று சொல்லுகிறார்கள். அந்த ப்ரதானமாவது யாதென்னில், அது காரணதசையில் பூமி முதலிய விசேஷாகாரங்களற்றிருக்கும். ஆனதுபற்றியே நாமரூபங்களுக்கிடமல்லாமல் அவ்யக்தமென்று கூறப்படும்; ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு என்கிற மூன்று குணங்களையுடையது. மஹத்து முதலிய தத்வங்களைப்போல் அழியாமல் நித்யமாயிருக்கும். கார்யதசையில் பூமி முதலிய விசேஷாகாரங்களையுடையது; மஹத்து முதல் ப்ருதிவி வரையிலுமுள்ள காரணரூபத்திலும் ப்ரஹ்மா முதல் பூச்சிப் புழு வரையிலுமுள்ள கார்யரூபத்திலும் காரணமாயும் கார்யமாயுமிருக்கும். தாயே! ஐந்து பூதங்களும் ஐந்து தன்மாத்ரைகளும் மனதும் அஹங்காரம் மஹத்து அவ்யக்தம் இவை நான்கும் ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் இவை பத்தும் ஆக இருபத்துநான்கு தத்வங்க

எடங்கின இக்கூட்டத்தை ப்ரக்ருதியின் கார்யமென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். மஹாபூதங்கள் பூமி ஜலம் அக்னி காற்று ஆகாயம் என்னும் இவை ஐந்தே. தன்மாத்ரங்கள் கந்தம் ரஸம் ரூபம் ஸ்பர்ஸம் சப்தம் என்னும் இவை ஐந்தே. இவையே எனக்குத் தெரிந்தவை. இந்த க்ரமமே எனக்கு ஸம்மதமானது. காது த்வக்கு (தோல்) கண் நாக்கு மூக்கு இவை யைந்தும் ஜ்ஞானேந்த்ரியங்கள். வாக்கு கை கால் ஜலத்வாரம் மலத்வாரம் இவையைந்தும் கர்மேந்த்ரியங்கள். ஆக இந்த்ரியங்கள் பத்து. அந்தக்கரணமொன்றே தனக்கு அடையாளமாகிய ஸங்கல்பம் அத்யவஸாயம் அபிமானம் சிந்தை என்கிற நான்கு வ்யாபாரங்களால் மனது புத்தி அஹங்காரம் சித்தம்என்று நான்குவிதமாகத் தோன்றும். ஸத்வ ரஜஸ் தமோகுணங்களையுடைய ப்ரக்ருதியின் அவஸ்தாவிசேஷம் இத்தனையே. தத்வங்களை உணர்ந்த பெரியோர்கள் இங்ஙனம் இருபத்துநான்கு தத்வங்களென்றே கணக்கிடுகிறார்கள். காலம் இருபத்தைந்தாவது தத்வம். காலத்துடன் சேர்ந்து தத்வங்கள் இருபத்தைந்து. சிலர் பரம புருஷனுடைய ஸாமர்த்யத்தையே காலமென்கிறார்கள். இந்தக் காலமென்கிற பரமபுருஷனுடைய ஸாமர்த்யத்தினால் ஜகத்திற்கு ஸ்ருஷ்டி ஸம்ஹாராதிரூபமான ஸம்ஸாரபயம் உண்டாகின்றதென்றும் சொல்லுகிறார்கள். ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மாபிமானத்திற்கிடமான அஹங்காரத்தினால் மதி மயங்கித் தன் ஸ்வரூபம் மறையப்பெற்றவனும் தமஸ்ஸென்று சொல்லப் படுகிற ஸௌக்ஷ்மதசையை அடைந்த ப்ரக்ருதியில் ஸம்பந்திருப்பவனுமாகிய ஜீவனுக்கும் ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் ஸமமாயிருக்கப்பெற்றதும் நாம ரூபாதிவிசேஷங்களற்றதுமாகிய ப்ரக்ருதிக்கும் சேதனு சேதன

ஸ்வரூபமான ஜகத்தாகப் பரிணமிக்கும் வ்யாபாரம் எதனால் உண்டாகின்றதோ, அதுவே காலமென்று கூறப்படும். அது பகவானுக்குச் சரீரமாயிருக்கும். வாராய் மனுசக்ரவர்த்தியின் புதல்வியே! காலத்தின் ஸ்வரூபம் இதுவே உண்மையானதென்று என் அபிப்ராயம். இங்ஙனம் ப்ரக்ருதி புருஷன் காலம் ஆகிய இம் மூன்றையும் உனக்கு விவரித்துச் சொன்னேன். அம்மூன்றும் பகவத்ஸ்வரூபங்களே. அவற்றில் ப்ரக்ருதி ப்ருதிவி முதலிய ஸ்தூலரூபங்களாகப் பரிணமித்திருக்கையால் அதன் ஸ்வரூபம் ஸ்பஷ்டமாகத் தெரியக்கூடியதே. புருஷன் காலம் இவர்களுக்கு அங்ஙனம் ஸ்தூலரூபமில்லாமையால் அவர்களை யுக்தியால் கண்டறியவேண்டும். அவற்றின் ஸ்வரூபம் சாஸ்த்ரத்தினால் ஏற்படக்கூடியதேயன்றி மற்ற விதத்தினால் ஏற்படக்கூடியதன்று. பூமி முதலிய ஐந்து பூதங்களால் ஏற்பட்ட தேஹங்களுக்குள்ளே இருந்து ஒன்றை ஆசைப்படுவதும் ஒன்றை த்வேஷிப்பதும் ஸுகிப்பதும் துக்கிப்பதுமாக எவன் தோற்றுகிறானோ, அவனே புருஷனென்றும் ஜீவனென்றும் க்ஷேத்ரஜ்ஞனென்றும் ஆத்மாவென்றும் ஜீவாத்மாவென்றும் ப்ரத்யகாத்மாவென்றும் கூறப்படுகின்றான். இச்சை த்வேஷம் ஸுகம் துக்கம் இவை ஜ்ஞானஸ்வரூபங்களாகையால் இவை அசேதனமான ப்ரக்ருதியின் தர்மங்களாக மாட்டா. இவற்றால் ஜீவன் சரீரத்திற்குள்ளே இருக்கின்றானென்று அறியவேண்டும். தேஹங்களைப்பற்றி இருக்கிறதென்றும் இருந்ததென்றும் வரப்போகிறதென்றும் வழங்கிவரும் வ்யவஹாரங்கள் காலத்தைச் சேர்ந்தவைகளே. இந்த வ்யவஹாரங்களால் காலமென்பது உண்டென்று தெரியவருகின்றது. இந்த ஜீவனும் காலமும் பகவத்ஸ்வரூபர்களே. ப்ருதிவி முதலிய தத்வங்களின் ஸமுதாயத்

தினால் ஏற்பட்டவைகளான சரீரங்களுக்குள் இச்சை த்வேஷம் ஸுகம் துக்கம் ஆகிய இவை முதலியவற்றிற் கிடமான ஜீவாத்மஸ்வரூபத்தினாலும், அந்த சரீரங்களுக்கு வெளியில் காலஸ்வரூபத்தினாலும் எவன் தன் ஸங்கல்பத்தினால் தோற்றுகிறானோ, அவனே பரமபுருஷன். ஆனால் ஜீவாத்மாக்களும் காலமும் பகவானைக் காட்டிலும் வேறுபட்டவர்களன்றோ வென்னில், வேறுபட்டவர்களே. ஆயினும் அவனுக்கு உட்பட்டவர்களானது பற்றி அவனே இவரென்னும்படி தோற்றுகின்றனர். பரம புருஷன் தன் ஸங்கல்பத்தினால் சரீரங்களுக்குள்ளே யிருக்கின்ற ஜீவாத்மாக்களுக்கும் வெளியில் காலத்திற்கும் நியாமகனாயிருக்கின்றான். ஆகையால் ப்ரக்ருதி புருஷன் காலம் இம்மூவரும் பரமபுருஷனுக்குச் சரீரமாயிருப்பவர். பரமபுருஷன் தனக்குச் சரீரமாயிருப்பதும் தன்ஸங்கல்பத்தினால் ஸத்வாதிகுணங்கள் ஸமமாயிருக்கை தவிர்ந்து ஏற்றக்குறைவாகக் கலங்கப்பெற்றிருப்பதுமாகிய ப்ராக்ருதியில் மஹத்து முதலிய ப்ரபஞ்சத்தைப் படைக்கும் ஸாமர்த்யத்தை ஏறிட்டான். ப்ரபஞ்சமாகிற முளையை விளைவிக்குந்திறமையுடையவனும் (ஜகத்காரணனும்) நிர்விகாரனுமாகிய பகவான் தன் சரீரமாகிய ப்ரக்ருதியில் மறைந்திருக்கிற ஜகத்தை வெளியிட விரும்பித் தன் ஸங்கல்பரூப ஜ்ஞானத்தினால் ஜீவாத்மாக்களுக்கு ஜ்ஞான ஸங்கோசத்தை விளைவிப்பதாகிய தமோகுணத்தைப் பானஞ்செய்தான். (ப்ரளயத்தில் ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்களென்கிற ப்ரக்ருதியின் குணங்கள் மூன்றும் ஸமமாயிருக்கும். பரமபுருஷன் அந்த ப்ரக்ருதியைக் கொண்டு ஜகத்தைப் படைக்க விரும்பி அதன் குணங்கள் மூன்றில் தமோகுணத்தைத் தன் ஸங்கல்பத்தினால் தலைசாய்த்து ஸத்வகுணம் தலையெடுக்கச் செய்தான்).

ஸத்வகுணம் தலையெடுக்கப் பெற்றதும் தமோகுணம் தலைசாய்ந்திருப்பதும் நிர்மலமாகி ப்ரகாசத்தை விளைவிப்பதும் ஆனதுபற்றியே பகவானுடைய ஸாக்ஷாத்காரத்திற்கிடமாயிருப்பதும் வாஸுதேவனென்கிற பகவானுடைய வ்யூஹாவதாரத்தினால் அதிஷ்டானம் செய்யப்பெற்றதும் அந்தக்கரணத்தின் பிரிவாகிய சித்தத்திற்கு அனுக்ராஹகமும் (உதவிசெய்வதும்) மூலப்ரக்ருதியெனப்படுவதுமாகிய அவ்யக்தமானது மஹத்தத்வமாகப் பரிணமித்தது. அந்த மஹத்தத்வத்திற்கும் வாஸுதேவனே அதிஷ்டாதாவானுன். அவ்யக்தமென்கிற ப்ரக்ருதியினால் உதவி செய்யப்பெற்ற அந்தக்கரணம் சித்தமென்று பேர் பெறுகின்றது. அந்தக்கரணத்திற்கு அவ்யக்தம் செய்யும் உதவி எங்ஙனம் தெரியுமென்னில், சொல்லுகிறேன் கேள். பகவானுடைய திவ்யமங்களவிக்ரஹத்தைக் கண்டபடியே தரிக்குந் திறமையாகிற [1] ஸ்வச்சத்வமும் கலையற்றிருக்கையும் ரஜஸ்தமோகுணங்களால் தீண்டப்பெறுமையும் ஆகிய இவ்வடையாளங்களால் அந்தக்கரணத்திற்கு அவ்யக்தம் செய்யும் உதவியைக் கண்டறியலாம். அலை நுரைமுதலியவிகாரங்களைவையுமின்றி ஜலம் இயற்கையில் நிர்மலமாயிருப்பதுபோல், அந்தக் கரணம் எப்பொழுது வேறு விகாரங்களின்றிக் கீழ்ச்சொன்ன ஸ்வச்சத்வம் முதலிய குணங்கள் உண்டாகப்பெற்றிருக்குமோ, அப்பொழுது அவ்யக்தத்தினால் உதவி செய்யப்பெற்றதென்றறியலாம். இங்ஙனம் அவ்யக்தத்தினால் உதவி செய்யப்பெற்ற அந்தக்கரணமே சித்தமென்று கூறப்படும். அத்தகைய அவ்யக்தத்தினின்று மிகுந்த ஒளியுடைய மஹத்தத்வம் உண்டாயிற்று. அந்த மஹத்தத்வம் பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்று ஸ்ருஷ்

1 தெளிவும்.

டிக்க முயன்றது. அத்தகையதான அந்த மஹத்தத்வத்தினின்று அஹங்கார தத்வம் உண்டாயிற்று. இவ்வஹங்காரம் வைகாரிகமென்றும் தைஜஸமென்றும் தாமஸமென்றும் மூன்றுவகைப் பட்டிருக்கும்; செயல்களில் முயற்சியை விளைவிப்பதாகிய ரஜோகுணம் தலையெடுக்கப் பெற்ற இந்த அஹங்கார தத்வத்தினின்றே மனது ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் ஆகாயம் முதலிய பஞ்ச மஹாபூதங்கள் சப்தாதி விஷயங்கள் தன்மாத்ரங்கள் ஆகிய இவையெல்லாம் உண்டாயின. ஆயிரம் தலைகளையுடையவனும் அனந்தனென்று கூறப்படுமவனும் ஸாக்ஷாத் பரமபுருஷனுடைய வ்யூஹாவதாரமுமாகிய ஸங்கர்ஷணபகவான் இந்த அஹங்கார தத்வத்திற்கு அதிஷ்டாதாவென்று சொல்லுகிறார்கள். ஆத்மாவினிடத்தில் கர்த்ருத்வாபிமானம்(போதல் வருதல் முதலிய செயல்களுக்கிடமென்கிற அபிமானம்) இந்த்ரியாபிமானம் தேஹாபிமானம் ஆகிய இவை எப்பொழுது உண்டாகின்றனவோ, அப்பொழுது அந்தக்கரணம் அஹங்கார தத்வத்தினால் உதவிசெய்யப் பெற்றதென்றறியலாம். இந்த அஹங்கார தத்வத்தினால் உதவி செய்யப்பெற்ற அந்தக்கரணம் அஹங்காரமென்னும் பேர் பெறும். ப்ரகாசம் உண்டாயிருக்கை கலையுற்றிருக்கை மயங்கியிருக்கை இவையும் அஹங்காரத்திற்கு அடையாளங்களாம். ப்ரகாசம் உண்டாயிருக்கை ஸாத்விகாஹங்காரத்திற்குலக்ஷணம். கலையுற்றிருக்கை ராஜஸாஹங்காரத்திற்கு லக்ஷணம். மயங்கியிருக்கை தாமஸாஹங்காரத்திற்கு லக்ஷணம். ப்ரகாசமுண்டாயிருக்கை முதலிய குணங்கள் எப்பொழுது மனத்திற்கு உண்டாகின்றனவோ, அப்பொழுது மனம் அஹங்கார தத்வத்தினால் உதவிசெய்யப் பெற்றதென்று அந்தக்கரணத்திற்குஅஹங்காரம் செய்யும் உதவியை இக்குணங்

களாலும் அறியக்கூடும். மூன்று வகைப்பட்ட அவ்வஹங்காரத்தில் வைகாரிகமென்கிற அஹங்காரம் பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்று ஸ்ருஷ்டியில் முயற்சிகொண்டது. அத்தகைய அவ்வைகாரிகாஹங்காரத்தினின்று மனஸ்தத்வம் உண்டாயிற்று. அந்தக்கரணம் தைஜஸாஹங்காரத்தினால் உதவிசெய்யப்பெற்று ஸங்கல்ப விகல்பங்களைப் பெறுகின்றது. அத்தகைய அந்தக்கரணமே மனதென்று அறியவேண்டும். ஸங்கல்பமாவது தேஹாதிகளையும் ஆத்மாவையும் ஒன்றென்று நினைக்கை. விகல்பமாவது பல விஷயங்களைச் சிந்திக்கை. இவை தைஜஸாஹங்காரத்தினால் உதவிசெய்யப் பெற்ற அந்தக்கரணத்திற்கு அடையாளங்களாம். இந்த மனஸ்தத்வத்திற்குக் காரணமான வைகாரிகாஹங்காரத்திற்கு ப்ரத்யும்ன பகவான் அதிஷ்டாதா. தைஜஸாஹங்காரத்திற்கு அநிருத்த பகவான் அதிஷ்டாதா. தைஜஸாஹங்காரத்தின் கார்யமான இந்த்ரியங்களுக்கும் அவனே அதிபதி. அவன் சரத்காலத்தில் மலர்ந்த கருநெய்தல் போல் கறுத்த நிறமுடையவன்; ரிஷிகளால் மெல்லமெல்ல யோகமார்க்கத்தில் புகுந்து நனகு ஆராதிக்கத் தகுந்தவன். இத்தகையனான அநிருத்தனென்கிற வ்யூஹாவதாரத்தினால் தைஜஸாஹங்காரம் அதிஷ்டானஞ் செய்யப்பெற்றதென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். வாராய் பதிவ்ரதையே! அந்தத் தைஜஸாஹங்காரம் பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பெற்றுஸ்ருஷ்டிக்கமுயன்றது. அதினின்று புத்திதத்வம் உண்டாயிற்று. இந்த புத்திதத்வம் இந்த்ரியங்களுக்கு உதவிசெய்யுந் தன்மையது. ஸாமான்யமாய் வஸ்துக்களின் விசேஷம் தோற்றுமல் வஸ்துமாத்ரம் தோற்றுகையும் ஸம்சயமும் அந்யதா ஜ்ஞான விபரீத ஜ்ஞானங்களும் நிச்சயமும் ஸ்மரணமும்

(முன்பு ஒருக்கால் அனுபவித்த வஸ்துவைப் பற்றின அறிவும்) நித்ரையும் ஆகிய இவை தனித்தனியே புத்தியின் வ்யாபாரங்கள். இந்த இந்த்ரியங்கள் புத்தி தத்வத்தினுல் உதவிசெய்யப் பெற்று இந்த அறிவுகளை விளக்கின்றன. இவையே புத்தி தத்வத்தின் உதவிக்கு அடையாளங்கள். கர்மேந்த்ரியங்களென்றும் ஜ்ஞானேந்த்ரியங்களென்றும் இருவகைப்பட்ட இந்த்ரியங்களும் தைஜஸாஹங்காரத்தினுல் உதவிசெய்யப் பெற்ற வைகாரிகாஹங்காரத்தினின்றுண்டானவை. இவ்விருவகை இந்த்ரியங்களும் கேவலமான வைகாரிகத்தினின்றுண்டாயிருக்குமாயின், கர்மேந்த்ரியங்களுக்குள்ள க்ரியாசக்தியும் ஜ்ஞானேந்த்ரியங்களுக்குள்ள ஜ்ஞான சக்தியும் பொருந்தாது. ஆகையால் தைஜஸாஹங்காரத்தினுல் உதவிசெய்யப்பெற்ற வைகாரிகாஹங்காரத்தினின்றே இருவகை இந்த்ரியங்களும் உண்டாகின்றன. ஆனால் இரண்டிற்கும் இரண்டு சக்திகளும் உண்டாகவேண்டாவோ வென்னில், சொல்லுகிறேன் கேட்பாயாக. வைகாரிகத்தினின்று ஜ்ஞானேந்த்ரியங்கள் உண்டாகும் பொழுது, அவ்வைகாரிகத்தில் ஸத்வகுணம் தலையெடுத்து ரஜோகுணம் மறைந்திருக்கின்றது. கர்மேந்த்ரியங்கள் உண்டாகும் ஸமயத்தில் ரஜோகுணம் தலையெடுத்து ஸத்வகுணம் மறைந்திருக்கின்றது. ஆகையால் ரஜோகுணம் தலையெடுக்கப்பெற்ற வைகாரிகத்தினின்றுண்டான கர்மேந்த்ரியங்களில் க்ரியாசக்தியும், ஸத்வகுணம் தலையெடுத்த வைகாரிகத்தினின்றுண்டான ஜ்ஞானேந்த்ரியங்களில் ஜ்ஞான சக்தியும் நியதமாயிருக்கின்றன. தாமஸாஹங்காரம் பகவானுடைய ஸங்கல்பத்தினுல் தூண்டப்பெற்று ஸ்ருஷ்டிக்கமுயன்றது. அதினின்று ஶப்த தன்மாத்ரம் உண்டாயிற்று. அதினின்று ஆகாசமென்கிற மஹாபூதம்

உண்டாயிற்று. அந்த ஶப்தத்தை அறிவிப்பது ஶ்ரோத்ரேந்த்ரியம். அந்த ஶப்தம் அர்த்தத்தை மொழியுந் தன்மையது; ஸர்வஜ்ஞனான பகவானை அறிவதற்கு ப்ரமாணமாயிருக்கும். பகவான் ஶாஸ்த்ரங்களாலல்லது மற்ற எந்த ப்ரமாணங்களாலும் அறியக்கூடியவனல்லன். ஶாஸ்த்ரங்களெல்லாம் ஶப்தமயங்களே. அன்றியும் வஸ்துக்களைப் பார்க்கும் புருஷனுக்கு அவற்றின் நாமங்களான சப்தங்கள் தோற்றும். சப்தத்தைக் கேட்டபொழுதே அதன் பொருள் தோற்றும். அந்த ஶப்தம் ஆகாயத்தின் ஸூக்ஷ்ம ஸ்வரூபமாயிருக்கும். அன்றியும், அது ஆகாயத்திற்கு அஸாதாரணமான குணம். இவையே ஶப்த தன் மாத்ரத்தின் ஸ்வரூபமென்று பெரியோர்கள் நினைக்கின்றார்கள். ப்ரஹ்மதேவன் முதல் பூச்சிப்புழுவரையிலுமுள்ள ஸமஸ்த பூதங்களுக்கும் உள்ளும் புறமும் அவகாசம் கொடுக்கையும் இந்த்ரியங்களுக்கும் ஆத்மாவுக்கும் ஸ்தானமாயிருக்கையும் ஆகாயத்தின் ஸ்வரூபம். சப்த தன்மாத்ரத்தை அஸாதாரண தர்மமாகவுடையதும் காலத்தைச் சரீரமாகவுடைய பகவானுடைய ஸங்கல்பத்தினால் ஸ்ருஷ்டிக்க முயன்றிருப்பதுமாகிய ஆகாயத்தினின்று ஸ்பர்ச தன்மாத்ரம் உண்டாயிற்று. அதினின்று வாயுவென்னும் மஹாபூதம் உண்டாயிற்று. இந்த ஸ்பர்ச தன்மாமரத்தை அறிவிப்பது த்வகிந்த்ரியம். மெதுவாயிருத்தல் கடினமாயிருத்தல் குளிர்ச்சி வெப்பம் ஆகிய இவையும், வாயுவுக்கு அஸாரண குணமாயிருத்தலும் ஸ்பர்சத்திற்கு லக்ஷணம். வ்ருக்ஷத்தின் கிளைமுதலியவற்றை அசக்குதலும் சேர்ந்திருப்பவைகளைப் பிரித்தலும் அசையுமவைகளை ஒன்றோடொன்று சேர்த்தலும் கந்தமுள்ள வஸ்துவை க்ராணேந்த்ரியத்தில் சேர்ப்பிக்கையும் தூரத்திலுள்ள சப்தத்தை ஶ்ரோத்ரேந்த்ரியத்தில் சேர்ப்பிக்

கையும் ஸமஸ்த இந்த்ரியங்களுக்கும் தாரகமாயிருக்கையும் வாயுவின் கார்யங்கள். இவை வாயுவுக்கு லக்ஷணம். ஸ்பர்ச தன்மாத்ரத்தை அஸாதாரண தர்மமாகவுடையதும் பகவானுடைய ஸங்கல்பத்தினால் தூண்டப்பட்டதுமாகிய வாயுவினின்று ரூபதன்மாத்ரம் உண்டாயிற்று. அதினின்று தேஜஸ்ஸென்னும் மஹாபூதம் உண்டாயிற்று. வாராய் நல்லியற்கையுடையவளே! அந்த ரூபத்தை அறிவிப்பது சக்ஷுரிந்த்ரியம். தன்னைக் குணமாகவுடைய தேஜஸ்ஸு முதலிய பூதங்களை ஆகாசாதி பூதங்களைக் காட்டிலும் வேறுபட்டதாக்கித் தெரிவிக்கையும் என்றும் த்ரவ்யங்களை விட்டுப் பிரியாதிருக்கையும் ஒரு வஸ்துவை மற்றொரு வஸ்துவைக் காட்டிலும் வேறுபட்டதாக்கித் தோற்றுவிக்கையும் தேஜஸ்ஸுக்கு அஸாதாரணகுணமாயிருக்கையும் ரூப தன்மாத்ரத்தின் லக்ஷணங்களாம். வெளிச்சம் கொடுக்கையும் அரிசி முதலியவற்றைப் பக்வஞ் செய்கையும் பசி தாஹங்களை விளைக்கையும் தண்ணீர் குடிக்கச் செய்கையும் புசிக்கச் செய்கையும் குளிரைப் போக்குகையும் ஈரமானவற்றை உலர்த்துகையும் ஆகிய இவை தேஜஸ்ஸின் கார்யங்கள். பரமபுருஷனால் தூண்டப்பெற்றதும் ஸ்ருஷ்டிக்க முயன்றதுமாகிய அந்தத் தேஜஸ்ஸினின்று ரஸதன்மாத்ரம் உண்டாயிற்று. அதினின்று அப்பென்னும் மஹாபூதம் உண்டாயிற்று. அந்த ரஸத்தை அறிவிப்பது ரஸனேந்த்ரியம் (ரஸனேந்த்ரியமாவது நாக்கின் நுனியிலிருக்கும் ஓர் சக்தி விசேஷம்). ரஸம் ஒருவகைப்பட்டதாயினும் உடன் சேரும் வஸ்துக்களின் விகாரத்தினால் துவர்ப்பு தித்திப்பு கசப்பு புளிப்பு உவர்ப்பு என்று பலவாறு பிரிந்திருக்கும். நனைத்தலும் உருண்டையாகச் செய்தலும் த்ருப்தியை விளை

வித்தலும் ஜீவிக்கச் செய்தலும் பசிதாஹங்களால் விளையும் சோர்வைப் போக்குதலும் தாபத்தைப் போக்குதலும் மேன்மையை உண்டாக்குதலும் கிணறு முதலிய இடங்களில் எவ்வளவு இறைப்பினும் மேல் மேல் சுரந்து வளர்தலும் மற்ற பூதங்களைக் காட்டிலும் மிகுந்திருத்தலும் ஆகிய இவை ஜலத்தின் கார்யங்கள். பரமபுருஷனால் தூண்டப்பட்டதும் ஸ்ருஷ்டிக்க முயன்றதுமாகிய அந்த ஜலதத்வத்தினின்று கந்ததன்மாத்ரம் உண்டாயிற்று. அதினின்று ப்ருதிவி (பூமி) யென்னும் மஹாபூதம் உண்டாயிற்று. கந்தத்தை அறிவிப்பது க்ராணேந்த்ரியம். (க்ராணேந்த்ரியமாவது மூக்கின் நுனியிலுள்ள ஓர் சக்தி விசேஷம்.) கந்தம் ஒரு வகைப்பட்டதாயினும் உடன்சேரும் வஸ்துக்களின் வைஷம்யத்தினால் காம்பகந்தமென்றும் துர்க்கந்தமென்றும் நற்கந்தமென்றும் சாந்த கந்தமென்றும் உக்ரகந்தமென்றும் அம்லகந்தமென்றும் பலவகைப்படும். காம்பகந்தமாவது — வ்யஞ்ஜனம் முதலியவற்றிற்குப் பெருங்காயம் முதலியவற்றை யிட்டுச் செய்யும் ஸம்ஸ்காரத்தினால் விளையும் கந்தம். இதை மிஸ்ரகந்தமென்றும் சொல்லுவார்கள். மிஸ்ரகந்தமாவது பல வஸ்துக்களின் கலப்பினால் உண்டாகும் மணம். துர்க்கந்தம் அமேத்யாதிகளில் உள்ளது. கற்பூராதிகளின் கந்தம் நற்கந்தமாம். இதையே ஸுகந்தமென்றும் ஸுரபி கந்தமென்றும் நன்மணமென்றும் நல்லவாஸனை யென்றும் சொல்லுவார்கள். தாமரை மலர் முதலியவற்றின் கந்தம் சாந்த கந்தமாம். (கெடியில்லாத மணம்.) பூண்டு வெங்காயம் முதலியவற்றின் கந்தம் உக்ரகந்தமாம். (கெடியுள்ள மணம்). அம்லகந்தமாவது—புளிச்ச நாற்றம். இது பழய அன்னம் முதலியவற்றிலுள்ளது. குடம் முத

லிய வஸ்துக்களை உண்டாக்குகையும் ப்ரதிமாதி ரூபத்தினால் பரப்ரஹ்மத்தின் ஆகாரத்தைக் காட்டுகையும் மற்ற பூதங்களை எதிர் பாராமல் தானே நிலை நின்றிருக்கையும் ஜங்கமஸ்தாவரங்களுக்கு ஆதாரமா யிருக்கையும் செடி மரம் நெல்லு முதலிய வஸ்துக்களுக்கு தேசபேதத்தினால் விசேஷத்தை விளைவிக்கையும் ஸமஸ்த ப்ராணிகளுடைய ஆகார பேதத்தை வெளியிடுகையும் மற்ற பூதங்களிலுள்ள ஸப்தாதி குணங்க ளெல்லாம் அமைந்திருக்கையும் ஆகிய இவை ப்ருதிவியின் கார்யங்கள். ஆகாசத்தின் குண விசேஷமாகிய சப்தம் எதனால் அறியப்படுகின்றதோ, அதை ஶ்ரோத்ரேந்த்ரியமென்று சொல்லுவார்கள். (ஆகாசத்தின் அஸாதாரண குணமான சப்தத்தை க்ரஹிக்கையே ஶ்ரோத்ரேந்த்ரியத்திற்கு லக்ஷணம்). வாயுவின் அஸாதாரண குணமான ஸ்பர்சத்தை எது க்ரஹிக்கிறதோ, அது வாகிந்த்ரிய மென்று கூறப்படும். தேஜஸ்ஸின் அஸாதாரண குணமான ரூபத்தை எது க்ரஹிக்கின்றதோ, அது சக்ஷுரிந்த்ரியமென்று சொல்லப்படும். ஜலத்தின் அஸாரணகுணமான ரஸத்தை எது க்ரஹிக்கிறதோ, அதை ரஸனேந்த்ரியமென்று சொல்லுவார்கள். பூமியின் அஸாதாரண குணமான கந்தத்தை எது க்ரஹிக்கின்றதோ (அறிகிறதோ) அதை க்ராணேந்த்ரியமென்று சொல்லுவார்கள். காரணமான ஆகாசாதி பூதத்தின் குணமான சப்தாதிகள் அதன் கார்யமான வாயு முதலியவற்றில் தொடர்ந்து வருகின்றனவென்று தெரிகின்றது. ஆகையால் ஆகாசம் முதலிய நான்கு பூதங்களின் குணங்களும் பூமியில் தான் புலப்படுகின்றன. மஹத்தத்வம் முதலிய (மஹத்து அஹங்காரம் ஆகாசம் வாயு தேஜஸ்ஸு-

ஜலம் பூமி ஆகிய)[1] இவ்வேழு தத்வங்களும் ஒன்றோடொன்று சேராதிருக்கையில், (ஒன்றோடொன்று சேராமல் அண்டத்தை ஸ்ருஷ்டிக்க முடியாதிருக்கையில்) அதுகண்டு) ஜகதீச்வரன் காலம் கர்மம் ஸத்வாதி குணங்கள் ஆகிய இவற்றோடு கூடி அந்த மஹதாதி தத்வங்களில் ப்ரவேசித்தான். பின்பு அந்த பகவானுடைய அனுப்ரவேசத்தினால் அம்மஹதாதி தத்வங்களேழும் ஒன்றோடொன்று கலந்து பேதம் தெரியாதபடியும் பிரிக்க முடியாதபடியும் சேர்ந்தன. அவற்றினின்று அசேதனமான அண்டம் உண்டாயிற்று. எந்த அண்டத்தினின்று ப்ரஹ்மதேவன் உண்டானான், அத்தகையதும் உள்ளே சேதன ப்ரவேச மில்லாமையால் அசேதனமுமாகிய அண்டத்தை அம்மஹதாதி தத்வங்கள் உண்டாக்கின. இவ்வண்டம் விசேஷ மென்னும் பேருடையது. இது வெளியில் ப்ரக்ருதியால் சூழப்பட்டவைகளும் ஒன்றுக்கொன்று பத்து மடங்கு அதிகமாயிருப்பவைகளுமாகிய ஜலம் முதலிய தத்வங்களால் சுற்றிலும் மூடப்பெற்றிருக்கும். இவ்வண்டத்தில் பகவானுக்குச் சரீரமாகிய தேவ மனுஷ்யாதி லோகங்களின் விஸ்தார மெல்லாம் அடங்கியது. அத்தகையதான இவ்வண்டமும் அந்த பகவானுக்குச் சரீரமாயிருப்பதே. இங்ஙனம் மஹத்தத்வம் முதல் நான்முகன் வரையிலுமுள்ள வஸ்துக்களின் ஸ்ருஷ்டியைச் சொன்னேன். இனி தேவாதி ஸ்ருஷ்டியைச் சொல்லுகின்றேன், கேட்பாயாக. ஜலத்தில் மிதந்து கொண்டிருப்பதும் ஸ்வர்ணம்போல் பளபளவென்று மிகவும் ப்ரகாசிப்பதுமாகிய அந்த அண்டத்திற்குள் சயனித்துக் கொண்

1. தன்மாத்ரங்கள் பூதங்களிலும் இந்த்ரியங்கள் அஹங்காரத்திலும் அடங்கினதாகக் கருதி ஏழென்று கூறப்பட்டது.

டிருந்த அநிருத்த ரூபியான பகவான் அவ்வண்டத்தினின்று எழுந்து (ஸ்ருஷ்டிவ்யாபாரத்தில் முயன்று) ப்ரஹ்மாவினிடத்தில் ஆவேசித்து தேவர்களில் சிறந்த அம்மஹானுபாவன் ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மாவின் சரீரத்திலுள்ள இந்த்ரிய ஸமூஹத்தைப் பலவாருகப் பிரித்தான். இந்த ப்ரஹ்மதேவனிடத்தினின்று முதலில் முகம் உண்டாயிற்று. (ஸமஷ்டி புருஷனாகிய ப்ரஹ்மாவின் சரீரத்தினுடைய முகத்தினின்று தேவாதிகளின் வாகிந்த்ரியத்திற்கு அதிஷ்டானமான முகம் உண்டாயிற்று.) அப்பால் வாகிந்த்ரியத்தினின்று அதற்கு அதிஷ்டான தேவதையான அக்னி உண்டானன். பிறகு இந்த ப்ரஹ்மாவிடத்தினின்று க்ராணேந்த்ரியத்திற்கு அதிஷ்டானமாகிய நாஸிகைகள் (மூக்குரந்த்ரங்கள்) உண்டாயின. நாஸிகைகளினின்று க்ராணேந்த்ரியம் உண்டாயிற்று. இந்த க்ராணேந்த்ரியம் ப்ராணனுக்கு அதீனமாயிருப்பது. க்ராணேந்த்ரியமொன்று மாத்ரமேயல்லாமல் இந்த்ரியங்கள் அனைத்துமே ப்ராணனுக்கு அதீனமாயிருப்பவை. பிறகு அந்தக்ராணேந்த்ரியத்தினின்று அதற்கு அதிஷ்டான தேவதையான வாயு உண்டானன். பிறகு சக்ஷுரிந்த்ரியத்திற்கு அதிஷ்டானங்களாகிய கண்கள் உண்டாயின. அதினின்று சக்ஷுரிந்த்ரியம் உண்டாயிற்று. அந்தச் சக்ஷுரிந்த்ரியத்தினின்று அதற்கு அதிஷ்டான தேவதையான ஸூர்யன் உண்டானன். பிறகு ஸ்ரோத்ரேந்த்ரியத்திற்கு அதிஷ்டானங்களாகிய காதுகள் உண்டாயின. அந்தக் காதுகளினின்று ஸ்ரோத்ரேந்த்ரியமும், அந்த ஸ்ரோத்ரேந்த்ரியத்தினின்று அதற்கு அதிஷ்டான தேவதையான திக்குகளும் உண்டாயின. ப்ரஹ்மாவினிடத்தினின்று த்வகிந்த்ரியத்திற்கு அதிஷ்

டானமாகிய ரோமங்களும் மீசை முதலியவைகளும் உண்டாயின. பிறகு த்வகிந்த்ரியமும், அதற்கு அதிஷ்டான தேவதையாகிய ஓஷதிகளும் உண்டாயின. பிறகு உபஸ்தேந்த்ரியத்திற்கு அதிஷ்டானமான ஆண்குறி பெண்குறிகளும், அவற்றினின்று உபஸ்தேந்த்ரியமும், அதினின்று அதற்கு அதிஷ்டானதேவதையான அப்புக்களும் (ஜலமும்) உண்டாயின. பிறகு பாயு என்கிற இந்த்ரியத்திற்கு அதிஷ்டானமும் குதமென்று கூறப்படுவதுமாகிய மலத்வாரம் உண்டாயிற்று. அதினின்று அபானமென்று சொல்லப்படுவதாகி பாயுவென்கிற இந்த்ரியமும், அந்தப் பாயுவினின்று அதற்கு அதிஷ்டான தேவதையும் லோக ஸம்ஹாரகனுகையால் உலகங்களுக்கெல்லாம் பயங்கரனுமாகிய ம்ருத்யுவும் உண்டானுர்கள். பிறகு பாணி யென்கிற இந்த்ரியத்திற்கு அதிஷ்டானமாகிய ஹஸ்தங்களும், அந்த ஹஸ்தங்களினின்று பலமென்று கூறப்படுவதாகிய பாணி யென்கிற இந்த்ரியமும், அந்தப் பாணியினின்று அதற்கு அதிஷ்டான தேவதையான இந்த்ரனும் உண்டானுர்கள். இந்த ப்ரஹ்மாவினிடத்தினின்று ரக்தத்திற்கு அதிஷ்டானமாகிய நாடிகளும் (நரம்புகளும்) அவற்றினின்று பரிபூர்ணமான ரக்தமும், அதினின்று அதற்கு அதிஷ்டானதேவதையான நதிகளும் உண்டாயின. பசி தாஹங்களுக்கு அதிஷ்டானமாகிய உதரமும் (வயிறும்) அதினின்று பசி தாஹங்களும், அவற்றினின்று அவற்றிற்கு அதிஷ்டான தேவதையான ஸமுத்ரமும் உண்டாயின. பிறகு புண்டரீகம் (செந்தாமரை மலர்) போன்ற உருவமுடையதும் அந்தக்கரணமென்கிற இந்த்ரியத்திற்கு அதிஷ்டானமுமாகிய ஹ்ருதயம் உண்டாயிற்று. அந்த ஹ்ருதயத்தினின்று

மனமென்று சொல்லப்படுகிற அந்தக்கரணம் உண்டாயிற்று. அந்த மனத்தினின்று அதற்கு அதிஷ்டான தேவதையான சந்த்ரன் உண்டானான். மீளவும் கமலாகாரமான அந்த ஹ்ருதயத்தினின்றே புத்தியென்கிற இந்த்ரியம் உண்டாயிற்று. இது வ்யவஸாயமென்னும் வ்யாபாரத்தையுடையது. அதற்கு ப்ரஹ்மதேவனே அதிஷ்டானதேவதையானான். மீளவும் அந்த ஹ்ருதயத்தினின்று அஹங்காரமென்கிற இந்த்ரியம் உண்டாயிற்று. இது அபிமானமென்னும் வ்யாபாரத்தையுடையது. அதற்கு அதிஷ்டானதேவதை ருத்ரன். மீளவும் ஹ்ருதயத்தினின்று சித்தமென்கிற இந்த்ரியம் உண்டாயிற்று, அது சித்தமென்னும் வ்யாபாரத்தையுடையது. அதற்கு அதிஷ்டானதேவதையான சைத்யனென்னும் க்ஷேத்ரஜ்ஞன் உண்டானான். இந்த இந்த்ரியங்களும் அவற்றிற்கு அபிமானிதேவதைகளான அக்னி முதலிய தேவதைகளும் ஸமஷ்டிபுருஷனாகிய நான்முகனுடைய சரீரத்தினின்று உண்டானார்கள். இவர்கள் உண்டானபின்பும், தேவ மனுஷ்யாதி சரீரங்களை எழுப்பி ஸஞ்சரிக்கை முதலிய கார்யங்களில் உபயோகப்படும்படி செய்ய வல்லராகவில்லை. அந்தந்த தேவதைகளால் அதிஷ்டானஞ்செய்யப்பெற்ற இந்த்ரியங்கள் மீளவும் அந்த தேவ மனுஷ்யாதி சரீரங்களை எழுப்பிச் செயல்களில் மூட்டுவதற்கு முயன்று அவற்றில் ப்ரவேசித்தன. வாகிந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையான அக்னி வாகிந்த்ரியத்துடன் தேவ மனுஷ்யாதி சரீரங்களின் முகத்தில் ப்ரவேசித்தான். அப்பொழுது இந்த தேவ மனுஷ்யாதி சரீரங்கள் எழுந்து போதல் வருதல் முதலிய செயல்களில் முயற்சி கொள்ளவில்லை. க்ராணேந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையாகிய வாயு க்ராணேந்த்

ரியத்துடன் மூக்கில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்த தேவ மனுஷ்யாதிசரீரங்கள் எழுந்து செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப் பெறவில்லை. சக்ஷுரிந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையான ஆதித்யன் (ஸூர்யன்) சக்ஷுரிந்த்ரியத்துடன் கண்களில் ப்ரவேசித்தான். அப்பொழுதும் அந்த தேவ மனுஷ்யாதிசரீரங்கள் எழுந்து செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப் பெறவில்லை. ஸ்ரோத்ரேந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையாகிய திக்குகள் ஸ்ரோத்ரேந்த்ரியத்துடன் காதுகளில் ப்ரவேசித்தன. அப்பொழுதும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. ரோமங்களுக்கு அதிஷ்டானதேவதையான ஔஷதிகள் அந்த ரோமங்களுடன் த்வக்கில் (தோலில்) ப்ரவேசித்தன. அப்பொழுதும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. உபஸ்தேந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையாகிய அப்புக்கள் (ஜலம்) உபஸ்தேந்த்ரியத்துடன் ஆண்குறி பெண்குறி இவைகளில் ப்ரவேசித்தன. அதனாலும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. பாயுவென்கிற இந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையாகிய ம்ருத்யு அந்தப் பாயுவென்கிற இந்த்ரியத்துடன் குதத்தில் (மலத்வாறத்தில்) ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச்சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. பாதமென்கிற இந்த்ரியத்திற்கு அதிஷ்டான தேவதையான ஸ்ரீவிஷ்ணுதேவன் அந்தப் பாதமென்கிற இந்த்ரியத்துடன் பாதங்களில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச்சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. பல

மென்று சொல்லப்படுகிற பாணீந்த்ரியத்திற்கு அதிஷ்டானதேவதையான இந்த்ரன் அந்தப் பாணீந்த்ரியத்துடன் ஹஸ்தங்களில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. பசி தாஹங்களுக்கு அதிஷ்டான தேவதையான ஸமுத்ரன் அந்தப் பசி தாஹங்களோடு உதரத்தில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச்சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. மனஸ்ஸென்கிற அந்தக்கரணத்திற்கு அதிஷ்டானதேவதையாகிய சந்த்ரன் அந்த மனஸ்ஸுடன் ஹ்ருதயத்தில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப் பெறவில்லை. புத்தியென்கிற அந்தக்கரணத்திற்கு அதிஷ்டானதேவதையாகிய ப்ரஹ்மதேவன் அந்த புத்தியுடன் ஹ்ருதயத்தில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப்பெறவில்லை. அஹங்காரத்திற்கு அபிமானிதேவதையாகிய ருத்ரன் அந்த அஹங்காரத்துடன் ஹ்ருதயத்தில் ப்ரவேசித்தான். அதனாலும் அந்தச் சரீரங்கள் செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப் பெறவில்லை. சித்தமென்கிற இந்த்ரியத்திற்கு அபிமானியாகிய சைத்யனென்கிற க்ஷேத்ரஜ்ஞன் ஹ்ருதயத்தில் எப்பொழுது ப்ரவேசித்தானோ, அப்பொழுதுதான் தேவமனுஷ்யாதிசரீரங்கள் ஜலத்தில் (ஜலத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்டதாகிய அண்டத்திற்குள்) புகுந்து செயல்களில் முயற்சிகொள்ளும் வல்லமை உண்டாகப் பெற்றன. தூங்கிக் கொண்டிருக்கும் புருஷனுடைய சரீரத்தை அந்தச் சரீரத்திற்கு அபிமானியாகிய புருஷனுடைய இச்சையில்லாமல் ப்ராணன்கள் இந்த்ரியங்கள் மனது புத்தி ஆகிய

இவைகளெல்லாம் எப்படி தமது பலத்தினால் செயல்களில் முயற்சிகொள்ளும்படி செய்யவல்லவையல்லவோ, அங்ஙனமே அக்னி முதலிய அதிஷ்டானதேவதைகள் தமக்கு அதிஷ்டேயங்களான இந்த்ரியங்களுடன் தேவமனுஷ்யாதி சரீரங்களில் புகுந்தும் க்ஷேத்ரஜ்ஞனுடைய அனுப்ரவேசமில்லாமல் அந்தச் சரீரங்களைச் செயல்களில் தூண்டவல்லராகவில்லை. ஆகையால் க்ஷேத்ரஜ்ஞனென்றும் சைதன்யனென்றும் சொல்லப்படுகின்ற ஜீவனே தேவமனுஷ்யாதி சரீரங்களில் முக்யன்; மற்ற இந்த்ரியம் முதலியவைகளும் அவற்றின் அதிஷ்டானதேவதைகளும் அவனுக்கு உதவிசெய்பவரேயன்றி முக்யரல்லர். அந்த தேவமனுஷ்யாதி சரீரங்கள் மூலமாய், ஸுகதுக்கங்களை அனுபவிப்பவனாகையால் போக்தாவென்று சொல்லப்படுகிற ஜீவனே முக்யன். பரிசுத்த ஸ்வரூபனாகிய அந்த ப்ரத்யகாத்மாவை (ஜீவனை), யோகத்தில் புத்தியைச் செலுத்தி அந்த புத்தியால் சரீரம் இந்த்ரியங்கள் புத்தி ப்ராணன் இவை 'முதலியவற்றைக் காட்டிலும்' வேறுபட்டவனென்று விவேகித்தறிந்து பகவத்பக்தியாலும் வைராக்யத்தினாலும் 'இவன் ப்ரஹ்மஸ்வரூபன்' என்கிற தத்வஜ்ஞானத்தினாலும மனத்தில் சிந்திக்கவேண்டும். ஜீவாத்மாவை தேஹாதிகளைக் காட்டிலும் வேறுபட்டவனென்று யோக பரிசுத்தமான புத்தியால் கண்டறிந்து அந்த ஜீவனுக்கும் அந்தராத்மாவான பரமாத்மாவைக் கர்மயோகத்தினாலும் ஜ்ஞான யோகத்தினாலும் பக்தி யோகத்தினாலும் உபாஸிக்கவேண்டும். இருபத்தாறுவது அத்யாயம் முற்றிற்று.

---

பலவகை உபாயங்களால் ப்ரக்ருதிபுருஷர்களின் ஸ்வரூபத்தை நிர்ணயித்து மோக்ஷரீதியை நிரூபித்தல்.

வாராய் மாதாவே! ஜலத்தில் ப்ரதிபலிக்கின்ற ஸூர்யன் அந்த ஜலத்தினுடைய தர்மங்களால் எங்ஙனம் தீண்டப் பெறுகிறதில்லையோ, அங்ஙனமே ஜீவன் ப்ரக்ருதியின் பரிணாமமாகிய தேஹத்தில் இருப்பினும் ப்ரக்ருதியின் தர்மங்களான தேவத்வம் மனுஷ்யத்வம் முதலியவைகளாலும் ஸத்வாதி குணங்களால் விளையும் ஸுக துக்காதிகளாலும் தீண்டப் பெறுகிறதில்லை. ஏனென்னில், அவன் இயற்கையில் விகாரமற்றவன்; தேவ மனுஷ்யாதி உருவமாய்ப் பரிணமிக்குந்தன்மையனல்லன். அவனுக்கு இயற்கையில் ஸத்வாதிகுணங்களின் ஸம்பந்தமே கிடையாது. அவன் போதல் வருதல் முதலிய ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளுக்கு இயற்கையில் இருப்பிடமல்லன். ஸூர்யன் ஜலத்தில் ப்ரதிபலிப்பினும், அசைதல் குறைதல் வளர்தல் முதலிய அந்த ஜலத்தின் குணங்கள் எங்ஙனம் ஸூர்யனுக்கு உண்டாகிறதில்லையோ, அங்ஙனமே ஜீவனுக்கும் ப்ரக்ருதியின் குணங்களான ஸத்வாதிகளும் தேவத்வ மனுஷ்யத்வாதிகளும் ஸம்பந்திக்கிறதில்லை. சால் குடம் கலசம் முதலிய மண் பாத்ரங்களிலிருக்கும் ஆகாசத்திற்கு எங்ஙனம் அவற்றின் சிறுமை பெருமை முதலியவை ஸம்பந்திக்கிறதில்லையோ, அங்ஙனமே ஜீவனுக்கு ப்ரக்ருதியின் குணங்கள் ஸம்பந்திக்கிறதில்லை. 'ஜீவன் தேவ மனுஷ்யாதிசரீரங்களில் இருப்பினும் அவற்றின் தோஷங்கள் அவனைத் தீண்டுகிறதில்லையென்பது எங்ஙனம் பொருந்தும்?'' என்னில், அதற்குக் காரணம் ஜீவாத்மாவின் ஸ்வபாவமே. ஜீவன் இயற்கையில் எவ்வகையான தோஷங்களும் தீண்

டப்பெறுதவன். ஆனால், 'நான் தேவன், நான் மனுஷ்யன் நான் ஸுகிக்கிறேன், நான் துக்கிக்கிறேன்' என்று ஜீவன் தேஹத்தையே ஆத்மாவாக நினைப்பதும் ஸுகிப்பதும் துக்கிப்பதும் எங்ஙனம் பொருந்தும்?" என்னில், அது ப்ராந்தியே. ஆனால் 'இத்தகையனான ஜீவாத்மாவுக்கு தேவ மனுஷ்யாதி தேஹஸம்பந்தமும் ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளில் 'நான் செய்கின்றேன், நான் போகின்றேன், நான் வருகின்றேன்' என்கிற எண்ணமும் எப்படி பொருந்தும்?" என்னில், சொல்லுகிறேன் கேள். கீழ்ச் சொல்லப்பட்ட குணமுடைய இந்த ஜீவன் இயற்கையில் ப்ரக்ருதியைக்காட்டிலும் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவத்தினாலும் வேறுபட்டவனாயினும் ஆத்மாவல்லாத தேஹத்தை ஆத்மாவாக நினைக்கையாகிற அஹங்காரத்தினால் தன் ஸ்வரூபம் மறையப்பெற்று ப்ரக்ருதியின் குணங்களாகிய சப்தாதி விஷயங்களில் கால் தாழப் பெறுகின்றான்; 'நான் செய்கிறேன்' என்று தன்னை ஸ்வதந்த்ரனாகவும் நினைத்துக்கொள்கின்றான். தன்னைத் தான் ஸ்வதந்த்ரனென்று நினைத்துக் கொள்கையாகிற ஸ்வதந்த்ராத்மாபிமானமும் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாம். தேஹஸம்பந்தமே ஸம்ஸாரமென்று கூறப்படும். இருவகைப்பட்ட அந்த அபிமானத்தினால் (தேஹாத்மாபிமானத்தினாலும் ஸ்வதந்த்ராத்மாபிமானத்தினாலும்) ஸ்வாதீனமற்றுக் கர்மத்திற்கு உட்பட்டு அந்தக் கர்மாதீனமாய் விளையும் ஸுகதுக்கங்களை அனுபவித்துக்கொண்டு கேவலம் ஸுகத்தையே அனுபவிக்க நேரப்பெறுதவனாகி ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளையும் புண்ய பாபரூபமான தோஷங்களால் சிறப்புற்றதும் இகழத்தக்கதும் இருவகைப்பட்டதும் (உத்தமம் மத்யமம் அதமம் என்று மூன்று வகைப்

பட்டது) ஆகிய தேவர் திர்யக்கு மனுஷ்யர் முதலிய ஜன்மங்களில் பிறந்து ஸம்ஸாரபந்தத்தை அடைகின்றான். 'தேவ மனுஷ்யாதி உருவங்களெல்லாம் ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்ட ஆகாரங்களன்றென்று பலவாறு கூறப்பட்டது. அப்படிப்பட்ட அந்த தேவ மனுஷ்யாதி உருவங்களால் ஜீவனுக்கு என்ன கெடுதி உண்டாகக் கூடும்?' என்னில் சொல்லுகிறேன், கேள். தேவத்வம் மனுஷ்யத்வம் முதலிய ஆகாரங்கள் ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்டவைகளன்றாயினும், சப்தாதி விஷயங்களைச் சிந்தித்துக் கொண்டிருக்கிற இவ்வாத்மாவுக்கு ஸம்ஸார பந்தம் நிவர்த்திக்கிறதில்லை. ஸம்ஸாரமே பெரிய அனர்த்தமாகையால் அதை அவை விளைக்கின்றன. ஸ்வப்னத்தில் அனுபவிக்கிற சரீரங்கள் ஆத்மாவுக்கு இயற்கையில் ஏற்பட்ட ஆகாரங்களன்றாயினும் விஷயங்களைச் சிந்திப்பதின் மூலமாய் ஸுக துக்க ரூபமான அனர்த்தத்திற்கு எப்படி காரணமாகின்றனவோ; அப்படியே ஜாக்ரத்தசையிலும் (விழித்துக் கொண்டிருக்கும் பொழுதும்) தேவ மனுஷ்யாதி தேஹங்கள் ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமான ஆகாரங்களல்லவாயினும்' சப்தாதி விஷயங்களில் மனப்பற்றை விளைப்பதன் மூலமாய் அனர்த்த ரூபமான ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகின்றன. ஆகையால், ப்ரக்ருதியின் பரிணாமங்களாகிய இந்த்ரியங்களின் மார்க்கமான சப்தாதி விஷயங்களில் மிகுதியும் பற்றுடையதான மனத்தை, எவ்வகை இடையூறுகளாலும் தடை நேரப் பெறாத பக்தியோகத்தினாலும் வைராக்யத்தினாலும் மெல்ல மெல்ல ஸ்வாதீனப் படுத்திக்கொள்ள வேண்டும். வைராக்யமாவது ஆசைப்படத் தகுந்த வஸ்துக்களில் விருப்பின்மை. அந்த வைராக்யத்தினால் பகவானிடத்

தில் பக்தியை வளர்த்திக்கொண்டு பிறகு மனத்தை பகவானுடைய த்யானத்தில் ஊக்கமுற்றதாகச் செய்ய வேண்டும். இப்படி செய்வானாயின், இந்த ஸம்ஸார பந்தம் தானே நீங்கிப்போம். மனத்தை வேறு விஷயங்களில் போகவொட்டாமல் தடுக்கையில் உண்டாகும் த்வரையாகிற ச்ரத்தையோடு கூடி பக்தியோகத்திற்கு அங்கங்களாகிய சம தமாதிகளாலும் ஸர்வேச்வரனை என்னிடத்தில் 'இவனே நமக்குத் தாய் தந்தை முதலிய ஸமஸ்த பந்துக்களும் மற்றுமுள்ளவை எல்லாமும்' என்கிற மனோபாவத்தினாலும், உண்மையே பேசுந்தன்மையாலும், ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் ஸமத்வ புத்தியாலும் (ஸமஸ்த வஸ்துக்களிலும் 'இவையெல்லாம் சேதநாசேதநங்களைச் சரீரமாகவுடைய ஸர்வேச்வரனே' என்னும் நினைவு உண்டாகப் பெறுகையாலும்) ஸமஸ்த பூதங்களிடத்திலும் த்வேஷமில்லாதிருக்கையாலும், சப்தாதி விஷயங்களில் மனப்பற்றில்லாமையாலும், ஸ்த்ரீஸம்போகம் முதலியவற்றைத் துறந்திருக்கையாகிற ப்ரஹ்மசர்யத்தினாலும், அளவிட்டு மிதமாகப் பேசுகையாகிற மௌனத்தினாலும், பக்தியோகத்தை வளர்க்கும் உபாயங்களெல்லாவற்றிலும் சிறப்புற்றதான வர்ணாச்ரம தர்மானுஷ்டானத்தினாலும் பக்தியோகத்தை அப்யஸிக்கவேண்டும். தெய்வாதீனமாய்க் கிடைத்த அன்னாதிகளால் ஸந்தோஷமுற்று, அங்ஙனம் கிடைத்த அன்னாதிகளையும் மிதமாய் புசிப்பவனாகி போஜனாதி காலங்களிலும் சுபாச்ரயமான பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை மனனஞ்செய்கை தவறாமல் ஏகாந்தமான இடத்தில் வாஸஞ்செய்துகொண்டு பயாதிகளின்றி பயத்திற்கிடமான பூதங்களிடத்திலும் ஸ்னேஹத்தையே விரும்புகின்றவனும் அவற்றிலும் தயை செய்பவனும் எவ்

வகையிலும் கலக்கமுறாத ஆழ்ந்த மனமுடையவனுமாயி ருக்கவேண்டும். பிள்ளை பெண்டிர் முதலிய அனுபந்தங் களோடு கூடின இந்த தேஹத்தில் நானென்னும் அபிமா னத்தையும் என்னுடையதென்னும் அபிமானத்தையும் செய்யாமல் துறக்கவேண்டும். அத்தன்மையனாகி ப்ரக் ருதி புருஷர்களின் உண்மையைத் தெளிவாக அறிவிக் கின்ற தத்வஜ்ஞானத்தினால் ப்ரக்ருதி ஸம்பந்தம் துறக் கத்தக்கதென்றும் ஆத்ம ஸ்வரூபம் பற்றத்தக்கதென் றும் அறிந்து ஸங்கல்பம் விகல்பம் முதலிய மனஸ்ஸின் நிலைமைகளெல்லாம் தொலையப்பெற்று, பகவானை யொ ழிந்த மற்ற வஸ்துக்களெவையும் கண்ணிலும் தோற்றப் பெறாதவனாகி ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் உண்மையைத் தெரிந்துகொண்டு, ஸூர்ய னால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்ற சக்ஷுரிந்த்ரியத்தி னால் ஸூர்யனை ஸாக்ஷாத்கரிப்பதுபோல், ஒருவாறுமி ருக்குந் தன்மையதல்லாத தேஹத்தில் பரமாத்மாவினால் அதிஷ்டானஞ் செய்யப்பெற்ற ஜீவாத்மாவினால் அந்தப் பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிக்கவேண்டும். பிறகு ப்ரா ரப்தகர்மத்தின் முடிவில் தேவ மனுஷ்யாதி சரீரத்தைத் துறந்து, கர்மத்தினால் தேவ மனுஷ்யாதி சரீரங்களில் லாதவனும் தன் ஸங்கல்பத்தினால் தேவ மனுஷ்யாதி தேஹங்களைப் பரிக்ரஹிப்பவனும் என்றும் ஸங்கோச மடையாத ஜ்ஞானத்தையே ஸ்வபாவமாக வுடையவனும் ஜீவாத்மாவுக்கு ஸகலவித பந்துவாயிருப்பவனும் மாறுந் தன்மையதாகி நிலையற்றிருக்கையால் அஸத்தென்று கூறப்படுவதான தேஹாதிகளுக்கும் கண்போல்[1] ப்ர காசகனும் அனைத்திற்கும் அந்தர்யாமியும் ஈடுமெடுப்பு

1 எப்படி நாம் கண்ணால் வஸ்துக்களைக் கண்டறிகிறோமோ, அங்ஙனமே நாம் ஈஶ்வரனுடைய உதவியாலேயே கண்ணைக்

மில்லாதவனுமாகிய பரம புருஷனைப் பெறுவான். 'ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து அவ்வாத்மாவுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவை அடைகிறானென்றாய். ஆத்ம ஸ்வரூபம் இந்த்ரியங்களுக்கு விஷயமாகாததல்லவா. ஏனென்னில், அது மிகவும் ஸூக்ஷ்மமாயிருப்பது. ஆகையால் அதை எங்ஙனம் கண்டறிய முடியும்?' என்னில், சொல்லுகிறேன், கேள். நாம் பூமியிலுள்ள வஸ்துக்களை ப்ரகாசிப்பிக்கிற ஸூர்ய கிரணங்களைக் கொண்டே ஜலத்தில் ப்ரதிபலிக்கிற ஸூர்யனுடைய ப்ரதி பிம்பத்தைக் காண்கின்றோம். அங்ஙனம் ஜலத்தில் ப்ரதிபிம்பத்தை அறிவிக்கிற அந்த ஸூர்யகிரணத்தினாலேயே ஆகாயத்திலிருக்கிற வாஸ்தவமான ஸூர்யனையும் காண்கிறோம். வாஸ்தவத்தில் ஸூர்யனல்லாத ப்ரதிபிம்பத்தைக் காண்பதற்கும் அந்த ஸூர்யனுடைய கிரணங்களே நமக்கு ஸஹாயமாயிருக்கின்றன. இங்ஙனமே: பஞ்ச பூதங்கள் இந்த்ரியங்கள் மனது என்று மூன்று வகைப்பட்ட அஹங்கார தத்வத்தின் பரிணாமமாகிய தேஹம் இயற்கையில் ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டதாயினும் அந்த தேஹத்தையே ஆத்மாவென்று எந்த ஜ்ஞானத்தினால் அறிகின்றோமோ,

கொண்டு அந்தந்த வஸ்துக்களைக் காண்கிறோம். அவனில்லாமல் கண்ணுக்கும் தனியே சக்தியில்லை. எப்படி கண்ணால் வஸ்துக்களைக் காண்பதற்கு ஸூர்ய கிரணங்களும் விளக்கு முதலிய வெளிச்சங்களும் உதவி செய்கின்றனவோ, அங்ஙனமே ஈஸ்வரனுடைய உதவியால்தான் நாம் அந்தந்த வஸ்துக்களைக் காண்கிறோம். அந்த ஸூர்யாதிகளுக்கும் ப்ரகாசம் கொடுப்பவன் ஈஸ்வரனே யென்று "தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி"என்று ஸ்ருதி சொல்லுகிறது. ஆகையால் தேஹாதிகளை ப்ரகாசிப்பிக்கிறவன் ஈஸ்வரனே. ஆத்மாவுக்கு மிகவும் ஸமீபித்ததாகையால் முதலில் தேஹத்தைச் சொல்லிற்று. தேஹம் முதலிய வஸ்துக்களை யெல்லாம் கருதுகிறது.

அந்த ஜ்ஞானத்தினாலேயே நிர்விகாரஜ்ஞான ஸ்வரூபனான ஆத்மாவையும் அறிகின்றோம். ஸூர்யகிரணமே வாஸ்தவத்தில் ஸூர்யனல்லாத ஸூர்யப்ரதிபிம்பத்தைக் காண்பதற்கும் வாஸ்தவமான ஸூர்யனைக் காண்பதற்கும் காரணமாகிறாப் போல், ஆத்மாவல்லாத தேஹத்தையே ஆத்மாவென்று ப்ரமிப்பதற்கும் உண்மையான ஆத்மாவை அறிவதற்கும் அவ்வாத்மாவின் தர்மபூத ஜ்ஞானமே காரணமாகின்றது. பூத ஸூக்ஷ்மங்கள் இந்த்ரியங்கள் மனது புத்தி அஹங்காரம் ஆகிய இவையெல்லாம் நித்ரையால் தோற்றாதிருக்கும்பொழுது தூக்கமின்றி தேஹாத்மாபிமானமுமின்றி தேஹத்தில் எவன் தோற்றுகிறானோ அவனே ஜீவாத்மாவென்று கூறப்படுவான். தூக்கமில்லாத ஸமயத்தில் என்னுடையதென்று தேஹாதிகளைக் காண்பவனாகி ஸ்பஷ்டமாகத் தோற்றுகிற ஜீவாத்மாவானவன் தூங்கும்பொழுது தேஹாதிகள் தோற்றாமையால் அந்த தேஹாதிவிஷயமான அஹம்பாவம் நஷ்டமாகப் பெற்றுத் தான் நாசம் அடையாதிருப்பினும், கைப்பொருள் தொலையப்பெற்றவன்போல், தன்னை நாசம் அடைந்ததாக நினைத்துக்கொள்கின்றான். (தூங்கும் பொழுது ஒன்றும் தெரிகிறதில்லையே யென்னில், சொல்லுகிறேன். ஒன்றும் தெரிகிறதில்லை யென்பதில்லை. தேஹாதிகள் தோற்றுகிறதில்லையேயன்றி ஜீவன் மாத்ரம் தோற்றிக்கொண்டேயிருக்கிறான். அதற்கு அடையாளமென்னென்னில், சொல்லுகிறேன். தூங்கியெழுந்தவன் 'நான் ஸுகமாகத் தூங்கினேன்' என்றும், 'எனக்கு ஒன்றுமே தெரியவில்லை' என்றும் 'நான் என்னையும் அறியாதிருந்தேன்' என்றும் சொல்லுகிறான். தூக்கத்திலும் நானென்றும் எனக்கென்றும் தோற்றுகிறவனே ஜீவனாவான். 'நான் என்னையும் அறியாதிருந்தேன்,

என்கிருனேயென்னில், நானென்று தோற்றுகையாலே ஜீவன் உண்டென்பதில் ஸந்தேஹம் இல்லை. 'என்னையும் அறியாதிருந்தேன்' என்பதற்கு இங்ஙனம் கருத்துக் கொள்ளவேண்டும். எப்படியென்னில், 'நான் இன்னவன்' என்றும் 'இந்த இடத்தில் இருக்கின்றேன்' என்றும் 'இந்தக்காலம் இது' என்றும் எனக்குத் தெரியவில்லையென்பதே அதன் கருத்தாம். ஆகையால் தூக்கத்திலும் கேவலம் நானென்று ஜீவன் தோற்றுகிருனென்பதில் ஸந்தேஹமில்லை. ப்ரக்ருதியைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவனென்று அறிய விரும்புமவன் இங்ஙனம் ஜீவாத்மாவின் தோற்றத்தை நன்ருகப் பராமர்சித்து அந்த ஆத்மாவை ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவனுக அறியவேண்டும். பஞ்சபூதங்களின் ஸமுதாயரூபமான தேஹத்தை ஜீவனே தரித்துக்கொண்டிருக்கிருன். ஜீவனுடைய ஸம்பந்தம் அற்றதாயின், சரீரம் உடனே சிதறிப்போய்விடும். அந்தச் சரீரத்திற்கு நடையாட்டமும் ஜீவனுல்தான் உண்டாகின்றது. ஜீவனுடைய ஸம்பந்தமற்ற தேஹம் அசையாதல்லவா? இங்ஙனம் தேஹத்தைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து அவ்வாத்மாவுக்கு அந்தராத்மாவான பரமாத்மாவை உபாஸிக்கவேண்டும்.

தேஹூதி சொல்லுகிருள் :—வாராய் ப்ராஹ்மண ஶ்ரேஷ்டனே! ப்ரக்ருதி ஜீவனை ஒருக்காலும் விடாது போல் தோற்றுகிறது. ஏனென்னில், ப்ரபூ! இந்த ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஒருவர்க்கொருவருள்ள ஸம்பந்தம் மாருமல் திடமாயிருக்கின்றது. அன்றியும் அவ்விரண்டும் அழியாத வஸ்துக்களாயிருக்கின்றன. ஆகையால் இவ்விரண்டு வஸ்துக்களும் ஒன்றை விட்டொன்று

பிரிந்திருக்க மாட்டாததுபோல் தோற்றுகிறது. எப்படி பூமிக்கும் அதன் குணமான கந்தத்திற்கும் பிரிந்திருத்தல் உண்டாகாதோ, எப்படி ஜலத்திற்கும் அதன் குணமான ரஸத்திற்கும் பிரிந்திருத்தல் உண்டாகாதோ, அங்ஙனமே ப்ரக்ருதிக்கும் அதைக்காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவுக்கும் தனித்தனியே பிரிந்திருத்தல் உண்டாகாது. மற்றும், ஜீவன் ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளான போதல் வருதல் முதலிய செயல்களுக்கு இருப்பிடமல்லனே; அத்தகையனான ஜீவனுக்கு இந்தக் கர்மபந்தம் எதனால் உண்டாகிறதோ, அந்த ப்ரக்ருதியின் குணங்களாகிய ஸத்வ ரஜஸ் தமஸ்ஸுக்கள் நீங்காதிருக்கையில் ப்ரக்ருதி எங்ஙனம் நீங்கும்? ஆகையால் பூமியை விட்டு கந்தமும் கந்தத்தை விட்டு பூமியும், ஜலத்தை விட்டு ரஸமும் ரஸத்தை விட்டு ஜலமும் தனியே பிரிந்திருக்க முடியாததைப் போல், ஜீவனும் ப்ரக்ருதியை விட்டுப் பிரிந்திருக்க முடியாது. ப்ரக்ருதியும் ஜீவனை விட்டுப் பிரிந்திருக்க நேராது. 'தத்வஜ்ஞானம் உண்டாகையில் ப்ரக்ருதி ஆத்மாவை விட்டுப்போம்' என்னில், அதுவும் ஸரியன்று. ப்ரக்ருதியைக் காட்டிலும் ஜீவன் வேறுபட்டவனென்று நன்கு பராமர்சித்துத் தெரிந்துக் கொள்ளினும், அந்தத் தத்வஜ்ஞானத்தினால் ப்ரபலமான ஸம்ஸாரபயம் நீங்கக் கூடுமாயினும், அவ்வளவில் ப்ரக்ருதி நீங்குவதற்கு இடமில்லை. ப்ரக்ருதி நீங்காமல் தொடர்ந்து கொண்டேயிருக்கையில், ஒருக்கால் நீங்கின ஸம்ஸாரபயமும் அதன் காரணம் நீங்காமையால் மீண்டுவரும். ஆகையால் ப்ரக்ருதி ஸம்பந்தம் நீங்காதிருப்பின் மோக்ஷத்திற்கு இடமில்லை. ஆகவே ஆத்மஸ்வரூபத்தையும் அவ்வாத்மாவுக்கு அந்தர்யாமியான பரமாத்மாவையும் உபாஸிப்பதால் என்ன ப்ரயோஜனம்? அறிகிலேன்! இங்ஙனம் என்

மனது ஸந்தேஹத்தில் ஆழ்ந்து வருந்துகின்றது. இதைப் போக்குவாயாக.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:— தந்தமக்கு ஏற்பட்ட வர்ணாஶ்ரமதர்மங்களை ஒரு பலனையும் விரும்பாமல் அனுஷ்டித்துக்கொண்டு தூயமனத்தராகி, நெடுநாள் என்கதைகளைக் கேட்டுக்கொண்டு வருவார்களாயின், அவர்க்கு எவ்வகை விக்னங்களாலும் தடைபடாத பக்தி என்னிடத்தில் உண்டாகும். அங்ஙனம் என்னிடத்தில் திடமான பக்தி உண்டாகப் பெற்றவர்க்கு ப்ரக்ருதி ஸம்பந்தம் தானே தொலைந்துபோம். ப்ரக்ருதியும் புருஷனும் தனித்தனியே வேறுபட்ட வஸ்துக்களென்றும், ப்ரக்ருதிஸம்பந்தம் துறக்கத்தக்கதென்றும் ஆத்மஸ்வரூபம் பற்றத்தகுந்ததென்றும் நன்றாகத் தெரிந்துகொண்டு சிறந்த வைராக்யத்துடன் உபவாஸம் முதலிய தவங்களையும் தவறாமல் அனுஷ்டிப்பவராகி ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் உண்மையைச் சிந்தித்துக்கொண்டே மிகுந்த மனவூக்கத்துடனிருப்பார்களாயின், அவர்க்கு என்னிடத்தில் சிறந்த பக்தி உண்டாகும். ஆத்மாவுக்கு ஸம்ஸாரபந்தத்தை விளைக்கின்ற ப்ரக்ருதியானது, இங்ஙனம் என்னிடத்தில் பக்தி உண்டாகப் பெற்றவருடைய் தவம் முதலியவற்றால் தஹிக்கப்பெற்றதாகி அவர்க்கு மீளவும் ஸம்ஸாரபந்தத்தை விளைக்க வல்லமையற்று மறைந்துபோம். அக்னிக்கு உத்பத்திஸ்தானமாகிய அரணிக்கட்டை அக்னியால் தஹிக்கப்படுவதுபோல், தத்வஜ்ஞானத்திற்கு ஹேதுவான ப்ரக்ருதியானது அந்தத் தத்வஜ்ஞானத்தினாலேயே தஹிக்கப்பட்டு மறைகின்றது. ப்ரக்ருதி ஜ்ஞானத்தை அழிக்குமேயன்றி அதை விளைக்குமோவென்னில்; சொல்லுகிறேன், கேள். ஸாத்விகாஹாரங்களால் ஜ்ஞானபிவ்ருத்தி உண்டாகுமென்

பது யாவர்க்கும் தெரிந்த விஷயமே. அவை யெல்லாம் ப்ரக்ருதியின் பரிணாமங்களே. பகவானுடைய கதைகளைக் கேட்பதாலும் பகவானுடைய ஸந்நிதானங்களுக்குப் போய்ப் பணிவதனாலும் ஜ்ஞானுபிவ்ருத்தி உண்டாகின்றது. அன்றியும் சாஸ்த்ராப்யாஸாதிகளால் ஜ்ஞானம் உண்டாவது வெளிச்சமே. இவை யெல்லாவற்றிற்கும் தேஹமே காரணம். தேஹம் ப்ரக்ருதியின் கார்யமேயன்றி வேறன்று. ஆகையால் ப்ரக்ருதி ஜ்ஞானத்தை மறைப்பதுபோல் அதை விளையவும் செய்கின்றது. அஸத் கர்மங்களால் ஜ்ஞானம் நசிப்பதுபோல், ஸத்கர்மங்களால் ஜ்ஞானம் வளர்ந்துவரு மென்பதில் ஸந்தேஹமில்லை. கர்மங்கள் ப்ரக்ருதியின் பரிணாமங்களேயன்றி வேறன்று. ஆகையால் ப்ரக்ருதியே ஜ்ஞானத்தை விளைக்கின்றது. அங்ஙனம் ஜ்ஞானேத்பத்திக்கு ஹேதுவான ப்ரக்ருதி அந்த ஜ்ஞானத்தினாலேயே அழிக்கப்படுகின்றது; பக்தியாவது பகவானிடத்திலுண்டான ஓர் ஜ்ஞானமே. அத்தகைய பக்தி உண்டாகப் பெற்றவனுக்கு இந்த ப்ரக்ருதி ஸம்பந்தம் தானே பறந்துபோம். ஜீவன் ப்ரக்ருதியால் விளையும் போகங்களை அனுபவித்து இவை அஸாரங்களென்றும் அற்பங்களென்றும் நஶ்வரங்களென்றும் கண்டு என்றும் புலப்படுகின்ற அதன் தோஷங்களை அறிந்து துறந்துவிடுகின்றான். அங்ஙனம் துறக்கப்பெற்ற ப்ரக்ருதியானது இயற்கையில் கர்மத்திற்கு உட்படாதவனும் இடையில் வந்த கர்ம ஸம்பந்தமும் பகவத் பக்தியின் மஹிமையால் கழியப்பெற்றுத் தனக்கு இயற்கையில் ஏற்பட்ட அபஹதபாப்மத்வம் (பாபங்களற்றிருக்கை) முதலிய எட்டு குணங்களாகிற தன் மஹிமையில் நிலை நின்றவனுமாகிய ஆத்மாவுக்கும் அமங்களமான ஸம்ஸார பந்தத்தை மீளவும் விளைவிக்க வல்லதன்று. அஜ்ஞானம்

உள்ளவரையிலுமே ப்ரக்ருதி ஸம்பந்தம் நடையாடு மன்றி ஜ்ஞானம் பிறந்தபின்பு ப்ரக்ருதி ஸம்பந்தம் நடையாடாது. தூங்குகிறவனுக்கு ஸ்வப்னம் பலவகை அனர்த்தங்களை விளைக்கின்றது. ஸ்வப்னத்தில் தலையறுப்புண்பதாகவும் பிள்ளை பெண்டிர் முதலியவர் மரணம் அடைவதாகவும் மற்றும் பலவகை அனர்த்தங்கள் விளைவதாகவும் அனுபவிக்கின்றானல்லவா? அங்ஙனம் பலவகை அனர்த்தங்களுக்கு இடமான ஸ்வப்னம் உறங்குகிறவனுக்கன்றோ உண்டாகின்றது. விழித்துக் கொண்டிருப்பவனுக்கு அத்தகைய ஸ்வப்னமே உண்டாகிறதில்லை. ஆனதுபற்றியே அந்த ஸ்வப்னத்தினால் விளையும் அனர்த்தங்களை அவன் அனுபவிக்கிறதில்லை. ஆகையால் அங்ஙனம் விழித்துக் கொண்டிருப்பவனுக்கு ஸ்வப்னம் மதிமயக்கத்தின் பொருட்டு வல்லதாகிறதில்லை. இங்ஙனமே ப்ரக்ருதி புருஷன் ஈச்வரன் என்கிற மூன்று தத்வங்களின் உண்மையை அறிந்து என்னிடத்தில் மனத்தை நிலைநிறுத்தி ஆத்மானுபவத்தினால் மனக்களிப் புற்றிருக்கின்ற புருஷனுக்கு ப்ரக்ருதி ஸம்ஸார பந்தத்தை விளைவிக்க வல்லதாகிறதில்லை. ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்ம பரமாத்மாக்களின் அனுபவத்தில் நிலைநின்றவனுக்கு ஒருக்காலும் ப்ரக்ருதி ஸம்ஸாரபந்தத்தை விளைவிக்காது. இங்ஙனம் ஆத்ம ஸ்வரூபத்தை அறிய முயன்று அதில் மனவூக்கமுடையவன் பல ஜன்மங்களை அனுபவித்து வெகுகாலம் கழிந்தபின்பு தத்வங்களை அறிந்து தனக்கு ஹிதமான புருஷார்த்தம் இன்னதென்று தெரிந்து ஸத்யலோகம் வரையிலுமுள்ள ஸமஸ்த லோகங்களிலும் 'இவை நச்வரங்கள், அற்பங்கள்' என்று விருப்பமற்றவனும் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுமாகி என்னால் மிகவும் அருள்புரியப்பெற்று, ஸமஸ்த

புருஷர்களாலும் ப்ரார்த்திக்கக்கூடிய சிறந்த புருஷார்த்தமாயிருப்பதும் என்னால் தரிக்கப் பெற்றதுமாகிய ஆத்ம ஸ்வரூபத்தை ஸாக்ஷாத் கரிப்பான். அங்ஙனம் பகவானுக்கு உட்பட்டு அவனேயென்னும்படி அவனிட்ட வழக்காயிருப்பதாகிய ஆத்மாவினுடைய ஸாக்ஷாத்காரத்தினால் ஸம்சயங்களெல்லாம் தீரப்பெற்று தேஹாத்மாபிமானத்தையும் துறந்து என்னிடத்தில் நிலைநின்ற பக்தியோகமுடையவனாகி ப்ராரப்த கர்மத்தின்முடிவில், எங்குப் போனவர்கள் திரும்பமாட்டார்களோ, அப்படிப்பட்ட எனது ஸ்தானமாகிய பரமபதம் போய்ச்சேருவான். வாராய் மாதாவே! பக்தியோகம கைபுகுந்தவனுக்கு யோகத்தினால் வருந்தி ஸாதிக்கக் கூடியவைகளும் மற்ற எந்தக் காரணங்களாலும் கிடைக்கமுடியாதவைகளுமாகிய அணிமாதி ஐஸ்வர்யங்கள் தானே கைகூடும். அவை மிகவும் ஆச்சர்யங்களாயிருப்பவை. ஆகையால் அவை மனத்தை இழுக்கும். ஆயினும் அவை ஸம்ஸாரபந்தத்திற்கு இடமாயிருப்பவைகளேயன்றி ஸம்ஸாரத்தை முடிப்பவையன்று. அவற்றில் கால் தாழ்ந்தவனுக்கு ஸம்ஸார பந்தம் எந்நாளும் தீராது. பக்தியோகம் கைபுகுந்தவன் தனக்குத்தானே நேர்ந்த அந்த அணிமாதிஸித்திகளில் மனம் செல்லப் பெறாதிருப்பானாயின், அவன் ஸம்ஸாரத்தைப் பற்றறத் துறந்து சரீர ஸம்பந்தமற்று மஹாநந்த ஸ்வரூபனாகிய என்னைப் பெறுவான். இருபத்தேழாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ பக்தியோகத்தையும் அதற்கு அங்கமான மற்றவைகளையும் விரிவாகக் கூறுதல். }

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—வாராய் மனுசக்ரவர்த்தியின் புதல்வியே! பக்தியோகத்தின் ப்ரகாரத்தையும் அதன் அங்கங்களுடையஸ்வரூபத்தையும் மேல் விரிவாகச் சொல்லுகிறேன், கேட்பாயாக. இந்த பக்தியோகத்தை அனுஷ்டித்துக்கொண்டு வருவானாயின், அவனுடைய மனது ராகம் த்வேஷம் முதலிய கல்மஷங்களெல்லாம் தீர்ந்து தெளிந்து நல்வழியில் சென்று சுபாஸ்ரயமான பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் நிலைபெறும். அந்த பக்தியோகத்திற்கு அஷ்டாங்கயோகம் அங்கமாயிருக்கும். யமம் நியமம் ஆஸனம் ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம் தாரணம் த்யானம் ஸமாதி த்யாஸனம் என்னும் இவையே அஷ்டாங்க யோகமாம். தன் சக்திக்குத் தகுந்தபடி தனது வர்ணாஸ்ரமங்களுக்குரிய தர்மங்களை அனுஷ்டிக்கையும், தன் வர்ணாஸ்ரமங்களுக்கு இணங்காத விபரீத தர்மங்களினின்று மீளுகையும் (அவற்றைச் செய்யாமையும்), தெய்வாதீனமாய்க் கிடைத்த அன்னாதிகளால் ஸந்தோஷம் அடைகையும் பாகவத ஸமாராதனமும் அவரவர்கள் ஆதரிக்கும்படியான தர்ம அர்த்த காமங்களென்கிற புருஷார்த்தங்களில் கண்வையாமையும், மோக்ஷதர்மங்களில் மனவிருப்பமும், ஜாதிதுஷ்டம் ஆஸ்ரயதுஷ்டம் நிமித்ததுஷ்டம் என்று மூன்றுவகைப்பட்ட துஷ்ட ஆஹாரங்களைத் தவிர்ந்து ஸாத்விகமான அன்னாதிகளைப் புசிக்கையும், அந்த சுத்தமான ஸாத்விகாஹாரங்களையும் மிதமாகப் புசிக்கையும் எப்பொழுதும் ஜன ஸங்கமின்றி ஏகாந்தமாய் க்ஷேமத்திற்கிடமான தேசத்தில் இருக்கையும், அஹிம்ஸையும் (ஒருவர்க்கும் ஹிம்ஸை செய்யாமையும்), ஸத்யம் பேசுகையும் திருட்டுத் தனமில்லாமையும்,

எவ்வளவால் தேஹயாத்ரை நிறைவேறுமோ அவ்வளவு பொருள் கொண்டு த்ருப்தி உண்டாகப் பெறுகையும், இந்த்ரியங்களை வென்று ப்ரஹ்மசர்யம் தவறுதிருக்கையும், சாந்த்ராயணம் முதலிய வ்ரதங்களை அனுஷ்டிக்கையாகிற தவமும், சுத்தியுடனிருக்கையாகிற ஆசாரமும், வேதாத்யயனம் முதலியவைகளும், பகவானை ஆராதித்தலும், மிதமாகப் பேசுகையாகிற மௌனமும், எவ்வளவு நேரம் உட்கார்ந்திருப்பினும் வருத்தம் உண்டாகாதபடி உட்கார்ந்திருக்கும் நிலைமையும், மெல்லமெல்ல ப்ராணவாயுவை ஸ்வாதீனப் படுத்திக்கொள்கையும், இந்த்ரியங்களை மனத்தினால் சப்தாதி விஷயங்களினின்று திருப்பி ஹ்ருதயத்தில் அடக்குகையும், ப்ராணன் அபானம் முதலிய பஞ்ச ப்ராணன்களையும் மனத்தையும் அவற்றிற்கு ஸ்தானங்களாகிய ஹ்ருதயம் குதம் முதலிய இடங்களுக்குள் ஏதேனுமொன்றில் நிலைநிறுத்துகையும், பரமபுருஷனுடைய லீலைகளான ஸ்ருஷ்டி ஸ்திதிஸம் ஹாரங்களை த்யானிக்கையும், மனத்தை ஒன்றிலேயே நெடுநேரம் நிலைநிற்கச் செய்கையும் ஆகிய இவ்வுபாயங்களாலும் மற்றுமுள்ள வ்ரதங்களாலும் தானாதிகளாலும் சப்தாதி விஷயங்களில் ஆழ்ந்திருப்பதும் ஆனதுபற்றியே "கல்மஷமுடையதுமாகிய மனத்தை, புத்தியைக்கொண்டு மெல்லமெல்ல சுபாஸ்ரயத்தில் (சுபாஸ்ரயமான பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தில்) படியச்செய்ய வேண்டும். பக்தியோகத்தை விரும்புமவன் கீழ்ச்சொன்ன வர்ணாஸ்ரம தர்மங்களை அனுஷ்டிக்கை முதலிய உபாயங்களாலும் மற்றும் பலவகை வ்ரதானுஷ்டானங்களாலும், தானாதி தர்மங்களாலும், சப்தாதி விஷயங்களில் ஓடுகின்ற துஷ்டமான மனஸ்ஸை மெல்ல மெல்ல புத்தியினால் சுபாஸ்ரய மெனப்படுவதான பகவானுடைய

திவ்யமங்கள விக்ரஹத்தில் பற்றச் செய்யவேண்டும். சோம்பலின்றி முதலில் ப்ராணவாயுவை ஸ்வாதீனப் படும்படி ஜயிப்பானாயின், அவன் மனத்தை அநாயாஸமாகவே ஸ்வாதீனப் படுத்திக் கொள்வான். 'ப்ராணவாயுவை எங்ஙனம் ஸ்வாதீனப் படுத்திக் கொள்ள முடியும்?' என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. நெடுநேரம் உட்கார்ந்திருப்பினும் இளைப்பு உண்டாகாதிருக்குமாறு ஆஸனத்தை ஜயித்துப் பரிசுத்தமான இடத்தில் பீடத்தை ஏற்படுத்திக்கொண்டு அதின்மேல் தர்ப்பங்களையும் அவற்றின்மேல் மான்தோலையும் அதன்மேல் வஸ்த்ரத்தையும் பரப்பி அதன்மேல் ஸ்வஸ்திகாஸனத்தில் சரீரம் நேராயிருக்கும்படி உட்கார்ந்து ப்ராணயத்தை அப்யஸிக்கவேண்டும். பூரகம் கும்பகம் ரேசகம் என்கிற க்ரமத்திலாவது ரேசகம் பூரகம் கும்பகம் என்கிற க்ரமத்திலாவது ப்ராணவாயுவின் மார்க்கத்தைச் சுத்தி செய்யவேண்டும். இப்படி ப்ராணவாயுவின் மார்க்கம் சுத்தமாயின், மனம் நிலைநின்று மீளவும் சலிக்காதிருக்கும். (பூரகமாவது வெளிக்காற்றை உள்ளே இழுக்கை. கும்பகமாவது அதை உள்ளே நிறுத்திக்கொள்கை. ரேசகமாவது உள்ளேயிருக்கும் காற்றைவெளிவிடுகை. (வெளிக்காற்றை உள்ளே இழுத்து அதைச் சிறிது நேரம் உள்ளே நிறுத்திக்கொண்டிருந்து அதை வெளிவிடுகையாகிற இந்த க்ரமத்திலாவது உள்காற்றைவெளியே விடுத்து வெளிக்காற்றை உள்ளே இழுத்து அதை உள்ளே சிறிதுநேரம் நிறுத்திக்கொள்கையாகிற இந்த க்ரமத்திலாவது ப்ராணவாயுவின் மார்க்கத்தைச் சுத்தி செய்யின், ப்ராணவாயுஸ்வாதீனமாம். ப்ராணவாயு ஸ்வாதீனப்படின் மனது ஸ்வாதீனமாம்) இங்ஙனம் ப்ராணவாயுவை வென்று ஸ்வாதீனப் படுத்திக்கொண்ட யோகியின் மனது,

காற்று அக்னி இவைகளால் காச்சப்பட்ட ஸ்வர்ணம் முதலிய லோஹமானது அழுக்கெல்லாம் போய் நிர்மல மாயிருப்பதுபோல், விரைவில் ரஜோகுணம் தொலைந்து அதன் மூலமாய் விளையும் தோஷங்களெல்லாம் தீர்ந்து நிர்மலமாயிருக்கும். ப்ராணாயாமங்களால் வாதம் பித்தம் ச்லேஷ்மம் என்கிற தாதுக்களின் வைஷம்யத்தினால் விளையும் உபத்ரவங்களையும், தாரணையால் பாபத்தையும், ப்ரத்யாஹாரத்தினால் சப்தாதி விஷயங்களில் விளையும் விருப்பங்களையும், த்யானத்தினால் க்லேசாதிகளையும்போக் கடித்துக் கொள்ளலாம். மனத்தைச் சுபாச்ரயத்தில் நிலை நிறுத்துகையே தாரணையாம். சப்தாதி விஷயங் களினின்று இந்த்ரியங்களுடன் மனத்தை இழுக்குகை யே ப்ரத்யாஹாரமாம். சுபாச்ரயத்தில் நிலைநின்ற மனம் மாறாதிருக்கை த்யானமாம். அந்த த்யானமே வேறு விஷ யங்களைப் பற்றின அறிவுகளால் மறையாதிருக்கை ஸமா தியாம். தன் மனது ப்ராணாயாமம் முதலிய யோகத்தினால் நிர்மலமாகிச் சுபாச்ரயத்தில் எப்பொழுது நிலையுற்றிருக் குமோ, அப்பொழுது கண்களை மூக்கு நுனியில் வைத்து பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானிக்க வேண்டும். தெளிந்த தாமரை மலர்போன்ற முகமும் தாமரை யிதழ்போல் மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டு அழகிய கண்களும் அமைந்து கருநெய்தலின் இதழ்போல் கறுத்துச் சங்கம் சக்ரம் கதை இவைகளைத் தரித்து தா மரைத் தாதுபோல் பொன் நிறமுடையதான பீதாம்பரம் உடுத்து மார்பில் ஸ்ரீவத்ஸமென்னும் அடையாளமும் கழு த்தில் ஸ்ரீகௌஸ்துப மணியும் அணிந்து மதித்த வண்டு கள் கூட்டங்கூடி மொய்த்துக் கொண்டிருக்கிற அழகிய வனமாலையோடு கூடி விலையுயர்ந்த முத்து மாலைகளும் கைவளைகளும் கிரீடமும் தோள்வளைகளும் சிலம்புத் தண்

டைகளும் பூண்டு, அரை நூல் மாலையால் திகழ்கின்ற இடையின் பின்புற முடையவனும் ஹ்ருதய கமலத்தையே ஆஸனமாகக் கொண்டிருப்பவனும் பார்க்கப் பதினாயிரம் கண்கள் வேண்டும்படி அழகியனும் சாந்தமாயிருப்பவனும் பக்தர்களின் மனத்தையும் கண்களையும் களிப்புறச் செய்பவனும் அதிஸுந்தராகையால் கண்டவுடனே பக்தியை விளைக்கும் படியான காட்சியுடையவனும் ஸமஸ்த லோகங்களாலும் எப்பொழுதும் நமஸ்காரம்செய்யப்பெற்றவனும் இளம்பருவத்தில் இருப்பவனும் ப்ருத்யர்களுக்கு அனுக்ரஹம் செய்வதில் ஊக்கமுடையவனும் அனைவராலும் புகழத்தகுந்த பரிசுத்தமான யசஸ்ஸையுடையவனும் புண்ய ஶ்லோகர்களான பலி பீஷ்மன் முதலியவர்களுக்கும் யசஸ்ஸை விளைவிப்பவனுமாகிய ஸ்ரீபகவானை ஸமஸ்த அவயவங்களோடும், மனது ஸ்வாதீனமாயிருக்கும் வரையில் த்யானிக்கவேண்டும். பகவானை த்யானிப்பவன் அவனை நிற்பதாகவும், போவதாகவும், உட்கார்ந்திருப்பதாகவும், சயனித்திருப்பதாகவும், ஹ்ருதய குஹையில் இருப்பதாகவும், இன்னம் எந்தெந்த சேஷ்டைகள் தன் மனத்திற்கு இனியவைகளாகத் தோற்றுகின்றனவோ அத்தகைய சேஷ்டைகளுடையவனாகவும், சுத்த ப்ாவத்தையுடைய (ராகம் த்வேஷம் முதலிய தோஷங்கள் தீண்டப்பெறாமல் பரிசுத்தமான பாவத்தையுடைய) மனத்தினால் த்யானிக்கலாம். தன்மனது அந்த பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் காலூன்றப்பெற்று அந்தத் திருமேனியின் ஸமஸ்த அவயவங்களிலும் படிந்திருப்பதை அறிந்து, அதை பகவானுடைய அவயவங்களில் ஏதேனுமொன்றில் பற்றச் செய்யவேண்டும். வஜ்ராயுதம் மாவெட்டி த்வஜம் தாமரை மலர் இவைகள் போன்ற ரேகைகளாகிற அடையாளங்களால் நிறைந்தி

ருப்பதும் உயர்ந்து சிவந்து விளங்குகின்ற நகங்களின் வரிசையினின்று கிளம்புகின்ற காந்திகளால் த்யானஞ்செய்யும் மஹான்களுடைய ஹ்ருதயத்திலுள்ள அந்தகாரத்தையெல்லாம் போக்குவதுமாகிய பகவானுடைய சரணாரவிந்தத்தை முதலில் த்யானஞ் செய்யவேண்டும். ஸ்ரீபகவான் த்ரிவிக்ரமாவதாரத்தில் தன் ஸ்ரீபாதத்தை உயரத் தூக்கி அளக்கும்பொழுது நான்முகன் அந்த பகவானுடைய பாதாரவிந்தத்தைத் தன் கமண்டலு ஜலத்தினால் விளக்குந் தருணத்தில் அதினின்று பெருகின ஜலம் நதிகளில் சிறந்து கங்கை யென்று பேர் பெற்றது. அந்த கங்கா நதியின் புண்ய தீர்த்தத்தை ருத்ரன் தன் தலையில் தாங்குகையில் அவன் தன் பாபங்களெல்லாம் தீர்ந்து மங்களனாகிச் சிவனென்று பேர் பெற்றான். இங்ஙனம் பரிசுத்தமாகிய கங்கா நதிக்கு உற்பத்தி ஸ்தானமாயிருப்பதும் த்யானிப்பவர்களின் மனமலங்களாகிற பர்வதங்களுக்கு வஜ்ராயுதம் போன்றதும் (மலைபோன்ற மனமலங்களை யெல்லாம் பனிபோல் பறக்கும்படி செய்வதும்) ஆகிய பகவானுடைய பாதாரவிந்தத்தை நெடுநேரம் த்யானிக்க வேண்டும். ஸமஸ்த லோகங்களுக்கும் தாயாயிருப்பவளும் ப்ரஹ்மதேவன் முதலிய ஸமஸ்த தேவதைகளாலும் வணங்கப் பெற்றவளும் தாமரையிதழ் போன்ற கண்களுடையவளுமாகிய ஸ்ரீமஹாலக்ஷ்மியால் தன் துடைகளில் வைத்துத் தளிர்போல் மிகவும் மென்மைக் கிடமான ஹஸ்தங்களால் பிடித்து [1] உபலாலனஞ் செய்யப் பெற்றவைகளான பகவானுடைய முழந்தாள்களை த்யானிக்கவேண்டும். அந்த பகவான் உலங்களைப் படைப்பவன்; கர்மத்தினால் விளையும் ஜன்மாதிகளற்றவன்; ஸமஸ்த லோகங்களுக்கும் ப்ரபு. அத்தகை

1 ஆவலுடன் ஆதரிக்கப் பெற்றவைகளான

யனுன பகவானுடைய முழந்தாள்களை ஹ்ருதயத்தில் கொண்டு த்யானிக்கவேண்டும். கருத்மானுடைய தோள்களில் ப்ரகாசிப்பவைகளும் தேஜஸ்ஸுக்கு நிதி போன்றவைகளும் காயாமலர்போல் அழகிய ஒளியுடன் திகழ்பவைகளுமான பகவானுடைய துடைகளை ஹ்ருதயத்தில் த்யானிக்க வேண்டும். அங்ஙனமே, குதிகால் வரையில் தொங்குவதும் பொன்நிறமுடையதுமான பீதாம்பரத்தின் மேல் தங்கி விளங்குகின்ற அரைநூல்மாலை அமைந்து அழகியதான அந்த பகவானுடைய நிதம்பஸ்தானத்தை (இடையின் பின் புறத்தை) த்யானிக்கவேண்டும். உலகங்களாகிற பொக்கஷத்திற்கு இருப்பிடமான உதரத்தில் விளங்குவதும், ப்ரஹ்மதேவனுக்கு வாஸஸ்தானமாகி ஸமஸ்த ஜகத்ரூபமான தாமரைமலருக்கு விளைநிலமுமாகிய பகவானுடைய நாபியையும், வெளுத்த முத்துமாலைகளின் காந்தியால் வெளுத்திருப்பவைகளும் சிறந்த மரகத மணிகள்போல் ப்ரகாசிப்பவைகளுமான ஸ்தனங்களையும் த்யானிக்க வேண்டும். ஸ்ரீமஹாலக்ஷ்மிக்கு வாஸஸ்தானமும் த்யானம் செய்யும் புருஷர்களுடைய மனத்திற்கும் கண்களுக்கும் ஆநந்தத்தைக் கொடுப்பதுமான பகவானுடைய வக்ஷஸ்தலத்தையும் (மார்பையும்), ஆபரணமாக அணிந்த கௌஸ்துபமணியை அலங்கரிப்பதற்காகவே ஏற்பட்டது போன்ற அவனுடைய கண்டத்தையும் (கழுத்தையும்) த்யானிக்க வேண்டும். அந்த பகவான் ஸமஸ்த லோகங்களாலும் நமஸ்காரம் செய்யப்பெற்ற மஹானுபாவன். ஆகையால் அவனுடைய அவயவங்களை த்யானிக்கையே ப்ராணிகள் ஜன்மம் எடுத்ததற்கு ப்ரயோஜனமாம். மந்தரபர்வத்தைக் கொண்டு கடல் கடையும் பொழுது அதன்உறைதலால் சாணை பிடித்தாற்போல் பளபள

வென்று விளங்குகின்ற வளைகள் அமையப்பெற்றவை களும் தன் நீழலில் ஒதுங்கி வாழ்கின்ற லோகபாலர்களை யுடையவைகளுமான அவனுடைய புஜங்களை த்யானிக்க வேண்டும். பிறர்க்குப் பொறுக்க முடியாமல் கிளர்கின்ற தேஜஸ்ஸையுடையதாகி அந்த பகவானுடைய கைமேல் திகழ்கின்ற சக்ராயுதத்தையும், தாமரை மலர்போன்ற அவனுடைய கைத்தலத்தில் ராஜஹம்ஸம் போன்ற பாஞ் சஜன்ய மென்கிற சங்கத்தையும் த்யானிக்க வேண்டும். பகவானுக்கு ப்ரியமாயிருப்பதும் சத்ருக்களின் ரக்தமா கிற சேறு படிந்திருப்பதுமாகிய கௌமோதகியென்னும் கதையை த்யானிக்க வேண்டும்; வண்டுகளின் ஜங்கார சப்தங்களோடுகூடின அழகிய வனமாலையையும், இந்த பகவானுடைய கண்டத்தில் ப்ரகாசிப்பதும் ஜீவாத் மாக்களுக்கு அதிஷ்டான தேவதையுமாகிய கௌஸ் துபமணியையும் த்யானிக்கவேண்டும். பகவான் பக் தர்களை அனுக்ரஹிப்பதற்காகவே தன் ஸங்கல்பத்தி னால் அந்தந்த அவதாரங்களைச் செய்கின்றான். ஆகை யால் அவனை த்யானிக்கையே ப்ராணிகளுக்கு க்ஷேம த்தைக் கொடுப்பதாம். காதுகளில் அணியப்பெற்று விளங்குகின்ற மகர குண்டலங்கள் தொங்கிக் கொண் டிருக்கையால் திகழ்கின்ற அழகிய கபோலங்களும் உயர்ந்து ரமணீயமான மூக்கும் அமைந்து தாமரை மலர்போல் ப்ரகாசிக்கின்ற அந்த பகவானுடைய திரு முகத்தை த்யானிக்க வேண்டும். வரிசை வரிசையாய்த் தொங்குகின்ற சுரி குழல்களோடு கூடினதும் தாமரை யிதழ்போன்ற கண்களுடையதும் யோகத்தினால் பரி சுத்தமான மனத்திற்கு விஷயமாகக் கூடியதும் திகழ் கின்ற புருவங்களுடையதும் வண்டுகளோடு கூடி இரண்டு மீன்கள் அமைந்ததுமான தாமரைமலரைத் தன்சோபை

யால் திரஸ்கரிப்பதுமாகிய பகவானுடைய வதனார விந்தத்தை (அரவிந்தம் போன்ற முகத்தைச்) சிறிதும் சோம்பலின்றி த்யானிக்க வேண்டும். மிகுந்த கருணையால் மிகவும் பயங்கரமான மூன்று வகைப்பட்ட ஸம்ஸார தாபங்களை யெல்லாம் தீர்க்கும்பொருட்டுக் கண்களினின்று வழிந்து வருவதும் ஸ்னேஹம் நிறைந்ததும் புன்னகை பொருந்தினதும் மஹத்தான அனுக்ரஹத்தை யுடையதுமாகிய பகவானுடைய கண்ணோக்கத்தைத் தன் ஹ்ருதயத்தில் நெடுநேரம் நீண்ட பாவனையுடன் த்யானிக்க வேண்டும். சோக ஸாகரத்தில் மூழ்கிக் கண்ணும் கண்ணீருமாய் வேறு கதி யொன்றுமின்றித் தன் பாதங்களில் விழுந்த ஸமஸ்த லோகங்களுக்கும் தீவ்ரமான சோக வேகத்தினால் ஸமுத்ரம் போல் பொங்கி வளர்ந்து வழிகின்ற கண்ணீரை வற்றச் செய்வதும் எத்தகைய விருப்பங்களையும் நிறை வேற்றிக் கொடுக்கும்படியான மிகுந்த ஔதார்ய முடையதுமான பகவானுடைய புன்னகயை த்யானிக்க வேண்டும். அவன் தன்னைப்பற்றினருடைய பாபங்களைப் போக்கி வருத்தங்களைத் தீர்க்குந்தன்மையனாகையால் ஹரியென்னும் பேருடையவன். தன்னை த்யானிக்கிற யோகிகளின் மனத்தை மயக்கும் பொருட்டு முயன்ற மன்மதன் மதி மயங்கி நிற்கும்படி தன் ஸங்கல்பத்தினால் செய்யப்பட்டதும் மிக்க அழகாயிருப்பதுமாகிய பகவானுடைய புன்னகையை த்யானிக்கவேண்டும். மிகவும் அழகாயிருக்கையால் வருத்தமின்றி த்யானிக்கக் கூடியதும் கீழுதட்டின் ஒளிப்பெருக்கினால் சிவந்து நுண்ணியவைகளும் [1] குந்தமுகுளம் போன்றவைகளுமான பற்களின் வரிசை வெளித் தோன்றப்பெற்றதுமாகிய பகவானுடைய அட்

1. குருந்தமொக்கு

டஹாஸத்தை த்யானிக்க வேண்டும். இங்ஙனம் ஸமஸ்த அவயவங்களோடும் த்யானிக்கப்பட்ட பகவானிடத்தில் மிகுந்த ப்ரேம ரஸம் நிறைந்த பக்தியுடன் மனத்தை அவனிடத்திலேயே நிலை நிறுத்தி பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹம் தவிர மற்றெதையும் பார்க்க விருப்பமுறாதிருக்க வேண்டும். இங்ஙனம் ப்ரேமரஸம் நிறைந்த பக்தியினால் மனம் உருகவும் மயிர்க்கூச்சல் உண்டாகவும் பெற்று ப்ரேமாவேசத்தினால் விளைந்த கண்ணீரினால் அடிக்கடி வருத்தமுற்று ஆநந்த ஸாகரத்தில் மூழ்கி எத்தகையர்க்கும் க்ரஹிக்க முடியாத பகவானை க்ரஹிக்கும் பொருட்டு முயன்ற மனதாகிற தூண்டுமுள்ளும் அவனை க்ரஹிக்க முடியாமல் அவனிடத்தினின்று மீண்டுவரும். (மீனைப்பிடிக்கும் பொருட்டுத் தூண்டு முள்ளை ஜலத்தில் போடுகையில், அது ஒருக்கால் மீனைப் பிடிப்பதும் உண்டு; ஒருக்கால் தவறிப் போவதும் உண்டு. அங்ஙனமே, எவர்க்கும் பிடிகொடாத பகவானை யோக பரிசுத்தமான மனத்தினால் க்ரஹிக்கவேண்டும். அவன் அதற்கும் ஒருக்கால் பிடிகொடாமற் போவான்). இங்ஙனம் த்யானித்துக்கொண்டு வருவானாயின், பகவானுடைய வடிவழகு யோகியின் மனத்தை, தூண்டுமுள்ளு மீனை இழுப்பது போல், இழுக்கும். அப்படி இழுக்கப்பட்டு நெடுந்தூரம் சென்றும் அவனை க்ரஹிக்க முடியாமல் மீண்டுவரும். அப்பால், புகையில்லாத அக்னி ஜ்வாலைபோல் சப்தாதி விஷயங்களில் விருப்பமின்றிச் சப்தாதி விஷயங்களோடு ஸம்பந்த மற்றதாகி பகவானுடைய திருமேனியை த்யானிப்பதினின்று மீண்டு வருகின்ற மனது பாஹ்ய வ்யாபாரங்களில் செல்லாமல் ஓய்ந்திருக்குந் தருணத்தில், இங்ஙனம் த்யானிக்கப் பட்ட பரமாத்மாவிடத்தில் நேரே ஸம்பந்தித்திருப்பதும்

தேவாதி தேஹங்களற்றதும் பரிசுத்தமுமாகிய ஆத்ம ஸ்வரூபத்தை, தேஹாத்மாபிமானமும் ஸ்வதந்த்ராத்மாபிமானமும் தொலையப் பெற்றுக் கண்டனுபவிப்பான். இங்ஙனம் பகவானுடைய அவயவங்களை த்யானிக்கையால் கடைசியாக நிலைநின்றிருக்குமாறு விளைந்ததும் சரீரத்தின் அவஸானம் வரையில் தொடர்ந்து வருவதுமாகிய இந்த பக்தியால் சப்தாதி விஷயங்களில் மனப்பற்றின்றிப் பரமாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்து கர்மத்தினால் உண்டாகக் கூடிய ஸுக துக்கங்களைக் கடந்த அபஹத பாப்மத்வம் முதலிய குணாஷ்டகமாகிற (பாபமற்றிருக்கை முதலிய எட்டு குணங்களாகிற) தன்மஹிமையில் நின்று (பரமாத்மாவை அடைந்து ஸ்வரூபம் ஆவிர்ப்பவிக்கப் பெற்றவனாகி) முன்பு தான் அனுபவித்துக் கொண்டிருந்த ஸுகதுக்கங்களுக்குக் காரணமான தேஹாத்மாபிமானம் ஸ்வதந்த்ராத்மாபிமானம் முதலியவை யெல்லாம் தேஹஸம்பந்தத்தினால் விளைந்தவை யென்றும், போதல் வருதல் முதலிய ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகள் தேஹத்தைச் சேர்ந்தவை யென்றும், தேஹம் பொய்யென்றும் (ஒரு நிலைப்படாமல் பலவாறு மாறுந் தன்மையுடைய ப்ரக்ருதியின் பரிணாமமென்றும், ஆத்மஸ்வரூபம் மாறுமல் என்றும் ஜ்ஞாநாநந்தமயமாகி மாறாதிருக்குந் தன்மையதென்றும் அறிந்து அந்த தேஹாத்மாபிமானாதிகள் மீளவும் நீண்டப்பெறாதவனாகி ஸுகமாயிருப்பான். மத்யபானம் செய்து அந்த மதத்தினால் மதி மயங்கினவன் மேல் போட்டுக் கொண்டிருக்கும் துணியை அறியாதிருப்பதுபோல், இங்ஙனம் அனுஷ்டித்த பக்தியோகத்தினால் பரமாத்மாவை அடைந்து ஸ்வஸ்வரூபம் கைபுகுந்த யோகியமானவன், ஈச்வரஸங்கல்பத்தினால் தனக்குச் சரீரஸம்பந்தம் நேர்ந்

தைதயும், அது அவன் ஸங்கல்பத்தினால் நீங்கிப் போன தையும், அங்ஙனம் நீங்கின சரீரம் கீழ் விழுந்து பந்துக்களால் சூழப்பட்டிருப்பதையும், பிறகு ஸம்ஸ்காரம் செய்யப் பெற்று பஸ்மமானதையும் அறியமாட்டான். என்றும் மாறாமல் எல்லையில்லாததுமான ஆநந்தமே வடிவான பரப்ரஹ்மஸ்வரூபமும் அவனுக்குச் சரீரமான தன் ஸ்வரூபமும் அபஹதபாப்மத்வம் (பாபமற்றிருக்கை) முதலிய குணங்களும் தோன்றப்பெற்று ஆநந்த ஸாகரத்தில் மூழ்கிக் கிடப்பவனாகையால் முன்னிருந்த தேஹம் முதலியவற்றை நினைக்கமாட்டான். ஈஶ்வரஸங்கல்ப'ரூபமான புண்ய பாபங்களுக்கு உட்பட்டதேஹமும் தானிருப்பதற்குக் காரணமான கர்மம் தீராதிருக்கும் வரையில் இந்த்ரியங்களோடும் ப்ராணன்களோடும் கூடி அழியாதிருக்கும். தேஹம் தன்முடிவுக்குக் கர்மத்தையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றது. பக்தியோகம் நிறைவேறி அபஹதபாப்மத்வம் முதலிய எட்டுக் குணங்களையுடைய ஆத்மஸ்வரூபம் கைபுகுந்து ப்ராரப்தகர்மமும் முடிந்து முக்தியை அடைந்தவன், ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துவைப்போல் நிலை நில்லாததும் புத்ர களத்ராதிகளோடு கூடினதுமாகிய தேஹத்தை, மீளவும் பெறுகிறதில்லை. (மோக்ஷம் அடைந்தவன் மீளவும் ஸம்ஸாரத்திற்குத் திரும்பி வரமாட்டான்). மிகவும் ப்ரீதிக்கிடமான பிள்ளை பெண்டிர் பணம் முதலியவற்றைக் காட்டிலும் தேஹம் வேறுபட்டதென்று எங்ஙனம் ஸ்பஷ்டமாகத் தெரியவருகின்றதோ, அங்ஙனமே 'இதுவே ஆத்மா' என்று நாம் அபிமானித்துக்கொண்டிருக்கிற தேஹாதிகளைக் காட்டிலும் ஜீவாத்மா வேறுபட்டிருப்பான். அக்னியினின்று உண்டானவைகளும், அவிவேகிகள் 'இவையெல்லாம் அக்னியே' என்று நினைத்

திருப்பவைகளுமான குறைக்கொள்ளி நெருப்புத் துணுக்கை புகை இவற்றைக் காட்டிலும் அக்னி வாஸ்தவத்தில் எங்ஙனம் வேறுபட்டதோ, அங்ஙனமே பஞ்ச பூதங்கள் இந்த்ரியங்கள் மனது இவையாகப் பரிணமித்த ப்ரக்ருதி ஜீவனென்று சொல்லப்படுகிற க்ஷேத்ரஜ்ஞன் ஆகிய இவர்களைக் காட்டிலும் ஸர்வஜ்ஞனும் ஜ்ஞானம் சக்தி முதலிய குணங்கள் நிறைந்தவனும் பரப்ரஹ்மமென்று கூறப்படுகிறவனுமாகிய பரமாத்மா வேறுபட்டவன். தேவாதி சரீரங்கள் எல்லாவற்றிலும் உட்புகுந்து அவற்றிற்கு தாரகராயிருக்கும் ஆத்மாக்கள் அனைவரும் ஜ்ஞானஸ்வரூபராகையால் ஒருவரோடொருவர் ஒத்திருப்பார்கள். ஆகையால் தேவாதிசரீரங்கள் பேதித்திருப்பதைக் கண்டு ஆத்மாக்களும் வெவ்வேறுயிருப்பவரென்று நினைக்கலாகாது. ஜீவாத்மாக்களால் தரிக்கப்பட்டிருக்கிற தேவாதிசரீரங்கள் அந்தந்தக் கர்மங்களால் வெவ்வேறுயிருப்பினும் ப்ரக்ருதியின் பரிணமங்களாகையால் ஒருவகைப்பட்டவைகளென்றே நினைக்கவேண்டும். அக்னி தான்பற்றி எரிவதற்குக் காரணமான புல் கட்டைமுதலியவற்றில் பற்றி, தான் ஒருவாறுயிருப்பதாயினும், அந்தப் புல் முதலியவற்றின் குணங்கள் வெவ்வேறுயிருக்கையால் தானும் பலவாறுகத் தோற்றுகின்றது. அங்ஙனமே, ப்ரக்ருதியின் பரிணமமாகிய தேவாதிசரீரங்களில் இருக்கின்ற ஜீவாத்மாவும் அந்தச் சரீரங்கள் வெவ்வேறுயிருக்கையால் தானும் வேறுபட்டவன்போல் தோற்றுகிறுன். வாஸ்தவத்தில் ஸமஸ்த தேஹங்களிலிருக்கிற ஜீவாத்மாக்களும் ஜ்ஞானமே வடிவாயிருக்கப் பெற்றவராகையால் ஒருபடிப்பட்டவர்களே. ஜகத்தைப் படைப்பதும் அதை வளர்ப்பதும் அதை அழிப்பதுமாகி விளை

யாடுந்தன்மையுள்ள பகவானுக்கு உட்பட்டிருப்பதும் கார்யமாயும் காரணமாயு மிருப்பதாகையால் ஸத்தென்றும் அஸத்தென்றும் இருவகைப் பட்டிருப்பதும் எப்படிப்பட்ட மஹாஜ்ஞானிகளுக்கும் கடக்கமுடியாததும் தன்னை அணைந்திருப்பதுமாகிய ப்ரக்ருதியைக் கீழ்ச் சொன்ன பக்தியோகத்தினால் திரஸ்கரித்து அபஹதபாப்மத்வம் முதலிய குணங்கள் அமைந்த ஸ்வரூபம்தோன்றப் பெற்றிருப்பான்; மீளவும் ஸம்ஸாரத்தை அடையமாட்டான். இருபத்தெட்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

{கீழ்ச் சொன்ன பக்தியோகத்தின் பிரிவுகளையும் காலஸ்வரூபத்தையும் கூறுதல்.}

தேவஹூதி சொல்லுகிறாள்:—வாராய் பகவானே! மூலப்ரக்ருதி அதன் கார்யமான மஹத்து முதலிய தத்வங்கள் ஜீவாத்மா பரமாத்மா இவர்களின் உண்மையான ஸ்வரூபத்தை அறிவிக்கும்படியான லக்ஷணத்தை நீ எனக்கு மொழிந்தனை. ஸித்தாந்தங்களில் இந்த ப்ரக்ருதி முதலியவற்றின் உண்மையை அறிவது எந்த பக்தியோகத்திற்கு மூலமென்று சொல்லுகிறார்களோ, அந்த பக்தியோகத்தின் பிரிவுகளை எனக்கு விவரித்து மொழிவாயாக. நீ இதை யெல்லாம் மொழிய வல்லனல்லவா? மோக்ஷத்தை விரும்பும் புருஷன் இஹபரலோகங்களிரண்டிலும் எதைக் கேட்டமாத்ரத்தில் வைராக்யம் உண்டாகப் பெறுவானோ, அத்தகைய ஜீவலோகத்தின் ஸம்ஸாரகதிகளை எனக்கு மொழிவாயாக. அவை பற்பல வகைப் பட்டிருக்குமல்லவா? பகவானுக்குச் சரீரமாயிருப்பதும் மேன்மையுள்ள ப்ரஹ்மாதிகளையும் தன்வசப்படுத்தி ஆள்வதுமாகிய காலத்தின் ஸ்வரூபத்தை எனக்கு மொழிவாயாக. இந்தக் காலத்தினால் விளையும் ஜன்ம ஜரா மரணாதிரூபமான ஸாம்ஸாரிக தர்மங்களைக் கடக்கும்

பொருட்டல்லவா எவ்விதத்திலும் கெடுதியில்லாத நிவ்ருத்தி தர்மத்தைப் பெரியோர்கள் ஆசரிக்கின்றார்கள். அத்தகைய காலத்தின் ஸ்வரூபத்தை எனக்குச் சொல்ல வேண்டும். தேஹமே ஆத்மாவென்றும் தானே ஸ்வதந்த்ரன் யென்றும் ப்ரமித்து ஆத்ம பரமாத்மாக்களின் உண்மையை அறியாமல் ஸ்வர்க்க நரகாதிகளை ஸாதித்துக் கொடுப்பவைகளான புண்ய பாப ரூப கர்மங்களில் தொடர்ந்த புத்தியால் இழுக்கப்பட்டு வருந்தி எல்லையற்றதாகிய ஸம்ஸாரமாகிற காடாந்தகாரத்தில் உறங்குகின்ற உலகத்தை எழுப்பும் பொருட்டு ஜ்ஞானயோகாதிகளை உபதேசிக்கின்ற நீ பாஸ்கரன் (ஸூர்யன்) போல் அவதரித்தாயல்லவா?

மைத்ரேயர் சொல்லுகிறார்:—வாராய் விதுரனே! இங்ஙனம் மதுரமாய் மொழிந்த மாதாவின் வசனத்தைக் கேட்டு அபிநந்தித்து மாமுனிவராகிய கபிலர் கேள்விகள் அழகாயிருந்தமையால் ஸந்தோஷம் அடைந்து தாயிடத்தில் நிரம்பவும் மனயிரக்கம் உண்டாகப் பெற்று அவளைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தார்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறார் :—வாராய் மடந்தையர் மணியே! பக்தியோகத்தின் வழிகள் பலவாயிருக்கையாலே பக்தியோகமும் பலவாறாயிருக்கும். ஸத்வாதி குணங்களின் வ்யாபாரபேதத்தினால் புருஷர்களின் [1]மனோவ்ருத்தியும்பேதித்திருக்கும்.அந்த மனோவ்ருத்தி பேதத்தினால் பக்தியோகம் பலபிரிவுகளைப் பெறுகின்றது. புருஷர்களின் மனோவ்ருத்தி தாமஸமென்றும் ராஜஸமென்றும் ஸாத்விகமென்றும் மூன்றுவகைப் பட்டிருக்கும். பக்தியோகமும் அங்ஙனம் பேதித்திருக்கும். ஹிம்ஸை ஜம்பம் மாத்ஸர்யம் இவற்றில் ஏதேனுமொன்றையாவது இரண்

1. மனக்கருத்து.

டையாவது மூன்றையுமாவது மனத்தில் ஸங்கல்பித்துக் கொண்டு மனத்தில் கோபமுடையவனும் ப்ரஹ்மஸ்வரூப மல்லாத ஸ்வதந்த்ரவஸ்து உண்டென்று நினைப்பவனு மாகி ஸர்வேஸ்வரனான என்னிடத்தில் பக்தி செய்வானா யின், அம்மூன்று வகைப்பட்ட பக்தியும் தாமஸபக்தி யோகமென்று கூறப்படும். (அவற்றில் ஹிம்ஸையை உத் தேசித்து நடத்தும்பக்தி யோகம் அதமமாம், (உபயோக மற்றதாம்). ஐம்பத்திற்காகச் செய்யும் பக்தியோகம் மத் யமம். மாத்ஸர்யத்தினால் செய்யும் பக்தியோகம் உத்தம மென்றுணர்க). ஶப்தாதிவிஷயங்கள் யசஸ்ஸு ஐஶ்வர் யம் இவற்றில் ஒவ்வொன்றையாவது இரண்டையாவது மூன்றையுமாவது விரும்பி என்னைப் பரமாத்மாவென்றும் தனக்கு அந்தராத்மாவாய்த் தன்னைச் சரீரமாகவுடைய வனென்றும் அறியாமல் கேவலம் ஒரு தேவதையாக நினைத்து எவன் என்னை அர்ச்சாதிகளில் பூஜிக்கிறானோ, அவனுடைய பக்தியோகம் ராஜஸமென்று கூறப்படும். தன் பாபங்கள் கழியவேண்டு மென்றாவது, பரமபுருஷ னிடத்தில் கர்மஸமர்ப்பணம் செய்து அதனால் விளையக் கூடிய அவனுடைய முகமலர்த்தியை உத்தேசித்தாவது, ஸர்வேஶ்வரனுடைய ஆஜ்ஞையாகையால் நாம் இதை அவஶ்யம் செய்யவேண்டும், செய்யாவிடின் பகவானு டைய நிக்ரஹத்திற்குப் பாத்ரமாவோமென்றாவது, தான் ஈஶ்வரனுக்குச் சரீரமென்றும் ஈஶ்வரன் தனக்கு அந் தர்யாமியென்றும் அவனைத் தவிரத் தனக்கு நிலை மையில்லை யென்றும் தெரிந்து கொண்டு என்னைப் பூஜிப்பானாயின், அந்த பக்தியோகம் ஸாத்விகமென்று கூறப்படும். இந்த ஸாத்விக பக்தியோகமும் உத்தமம் மத்யமம் அதமம் என்று மூன்றுவகைப் பட்டிருக்கும். பகவானுடைய ஆஜ்ஞையாகையால் நாம் இதை அவஶ்யம்

செய்யவேண்டுமென்று நடத்தும் பக்தியோகம் உத்தமமாம். பகவானிடத்தில் தான்செய்யும் கர்மங்களை அர்ப்பணம் செய்து அதனால் அவன் திருவுள்ளம் உகந்து அவ்வழியால் தன் விருப்பம் நிறைவேற வேண்டுமென்று நினைத்துச் செய்யும் பக்தியோகம் மத்யமமாம். தன் பாபங்கள் தீரவேண்டுமென்று நடத்தும் பக்தியோகம் அதமமாம். ஸமஸ்த ப்ராணிகளின் ஹ்ருதயத்திலும் வாஸம் செய்கின்ற புருஷோத்தமனான என்னிடத்தில், என் குணங்களைக் கேட்ட மாத்ரத்தினால், கங்காஜலம் இடையில் எங்கும் தங்காமல் ஸமுத்ரம்போய்ச் சேருவதுபோல், வேறு நினைவுகளால் மறைக்கப் படாமல் எவ்வகைப் பயன்களையும் விரும்பாமல் வேறு உபாயங்களின் ஸம்பந்தமின்றி ப்ரீதி செய்கையே பக்தியோகத்திற்கு முக்ய லக்ஷணம். இது ஸத்வாதி குணங்களால் வரும் தோஷங்களைப் போக்கி மோக்ஷத்தை நிறைவேற்றிக் கொடுக்கும். இத்தகைய பக்தியோகத்தை ஆசரிப்பவர் என்னைப் பணிந்திருக்கை யொழிய, ஸாலோக்யம் ஸார்ஷ்டி ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் இவைகளை நான் வேண்டிக் கொடுக்கினும் விரும்பமாட்டார்கள். இனி ஸம்ஸாரிக பலன்களை விரும்பமாட்டார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ. எதனால் ஸத்வ ரஜஸ் தமோ குணங்களை (ப்ரக்ருதி ஸம்பந்தத்தை)க் கடந்து என்னோடொத்த திருக்கையாகிய மோக்ஷத்தை அடைவானோ, அதுவே சிறந்த பக்தியோகமென்று கூறுகின்றார்கள். அந்த பக்தி யோகத்தின் அங்கங்களைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. ஒரு பலனையும் விரும்பாமல் தனதுவர்ணாஸ்ரமங்களுக்கு உரியதர்மத்தை அனுஷ்டிக்கையும், பக்தியின் அங்கங்களெல்லாவற்றிலும் சிறந்ததும் அதிக ஹிம்ஸையில்லாமல் நடத்தப் படுவதும்

பஞ்சராத்ர சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதுமாகிய பக வதாராதனமும், என்னுடைய அர்ச்சா விக்ரஹங்கள் எழுந்தருளியிருக்கிற இடங்களைக் காண்கையும் அவ்வி டங்களைக் கோமயத்தினால் மெழுகிச் சுத்திசெய்கை முத லியதும், அவற்றைப் பூஜிக்கையும், துதிசெய்கையும், வணங்குகையும், ஸமஸ்த பூதங்களிலும் நான் உள்ளும் புறமும் நிறைந்திருக்கையால் எல்லாம் பகவத் ஸ்வரூபங் களே யென்கிற நினைவும், மனக்கலக்கம் உண்டாகக் கூடிய காரணங்கள் பல உண்டாயிருப்பினும் மனக்கலக்க முறாதிருக்கையும், வைராக்யமும், தனக்கு மேற்பட்ட பெரியோர்களை வெகுமதிக்கையும், தனக்குக் கீழ்ப்பட்ட தீனர்களிடத்தில் மன இரக்க முற்றிருக்கையும், தன்னோ டொத்தவரிடத்தில் ஸ்னேஹித்திருக்கையும், யமநியமாதி களும், வேதாந்த சாஸ்த்ரங்களைக் கேட்கையும், என்னு டைய நாம ஸங்கீர்த்தனம் செய்கையும், மனோவாக்கா யங்கள் ஒத்திருக்கையும் (மனத்தினால் நினைப்பதும் வா யால் சொல்லுவதும் சரீரத்தினால் செய்வதும் ஆகிய மூன்றும் ஒன்றோடொன்று வேறுபடாமல் ஒத்திருக்கை யும்), ஸத்புருஷர்களோடு ஸஹவாஸமும், அஹங்கார மற்றிருக்கையும் (தேஹாத்மாபிமானம் முதலியவையில் லாதிருக்கையும்) ஆகிய இவை பக்தியோகத்திற்கு அங் கங்களாம். என்னிடத்தில் பக்தியோகம் செய்பவன் இந்த குணங்களைக் கைப்பற்றி வருவானாயின், அவனுடைய மனம் பரிசுத்தமாகி என் குணங்களைக் கேட்டமாத்ரத்தி னால் என்னிடத்தில் பற்றுடையதாகும். வாயுவை ரதமாக வுடைய (காற்றுபோன வழியெல்லாம் போய்ப் பரவுந் தன்மையதான) கந்தமானது புஷ்பம் முதலிய தன் ஸ்தா னத்தினின்று க்ராணேந்த்ரியத்தினிடம் ப்ரயத்னமில்லா மல் வருவதுபோல், யோகத்தையே ரதமாகவுடையதும்

சப்தாதி விஷயங்களால் விகாரம் அடையாததுமாகிய மனது என்னிடம் ப்ரயத்னமில்லாமலே வந்து சேரும் நான் ஸமஸ்த பூதங்களிலும் ஜீவாத்மாக்களுக்கு அந்தர் யாமியாய் எப்பொழுதும் இருக்கின்றேன். அப்படிப்பட்ட என்னுடைய தன்மையை அறியாமல் ஸம்ஸாரி ஜனங்கள் என்னுடைய அர்ச்சா விக்ரஹத்தைப் பூஜிப்பதாக அனு கரிக்கின்றார்கள். (எங்கும் நிறைந்திருக்கிற என்னுடைய உண்மையை அறிந்த பெரியோர்கள் என்னை அர்ச்சா விக்ரஹத்தில் பூஜிப்பதைக் கண்டு, என் ஸ்வரூபம் தெரி யாத ஸம்ஸாரிகளும் அங்ஙனம் என்னைப் பூஜிக்கின்றார் கள். அது அறிஞரான பெரியோர்களைப் பரிஹஸிப்ப தாமேயன்றிப் பூஜையாகாது. நான் அர்ச்சா விக்ரஹங் களில் நிறைந்திருப்பதில் ஐயமில்லை. அதை ஆராதிக்க வேண்டியதும் அவஸ்யமே. ஆனதுபற்றியே மஹாயோகி களும் என்னுடைய அர்ச்சாவதாரங்களில் பெரிய ஆவலு டன் ஆழ்ந்து ஈடுபடுகின்றார்கள். ஆயினும் என் ஸ்வரூப த்தை அறியாமல் என்னை அர்ச்சாவிக்ரஹங்களில் ஆரா திப்பது அவ்வளவு நலமன்று. ஸமஸ்த பூதங்களிலும் அந்தராத்மாவாயிருக்கின்ற என்னை அறியாமல் எவன் அர்ச்சாவிக்ரஹத்தை ஆராதிக்கிறானோ, அவன் பஸ் மத்தில் ஹோமம் செய்பவனாவான். அர்ச்சா விக்ரஹத் தில் நான் நிறைந்திருப்பதை அறியாமல் செய்யும் பூஜை பஸ்மாஹுதிபோல் பயனற்றதேயாம். ஆகையால் அர்ச் சாவதாரத்தின் மேன்மையை அறிந்து அதை ஆரா திக்கவேண்டும். தேஹாத்மாபிமானமுடையவனும் பிறர் சரீரத்தில் நான் இருப்பதை அறியாமல் அவரைப் பகைப் பவனும் அர்ச்சாவதாரங்களை என்னைக் காட்டிலும் வேறு பட்டதாகப் பார்ப்பவனும் ப்ராணிகளிடத்தில் அழியாத வைரமுடையவனுமாகிய ஸம்ஸாரியின் மனது

சாந்தி உண்டாகப் பெருது. வாராய் பாபமற்றவளே! ஸமஸ்த பூதங்களிலும் நான் அந்தராத்மாவாயிருப்பதை அறியாமல் அந்த ப்ராணி ஸமூஹங்களை த்வேஷிப்பவன் சிறப்புடைய பலவகை உபசார வஸ்துக்களைக் கொண்டு என்னை அர்ச்சாவிக்ரஹத்தில் எவ்வளவு ஆராதிப்பானு யினும், அவனுடைய ஆராதனத்திற்கு நான் ஸந்தோஷம் அடையமாட்டேன். ஆகையால், தன்னுடைய ஹ்ருதயத் திலும் ஸமஸ்தபூதங்களிலும் நிறைந்து நிலைநின்றிருக்கிற என்னை அறியாதிருக்கும் வரையில், தனக்கு ஏற்பட்ட வர்ணாஶ்ரம தர்மங்களைத் தவருமல் ஆசரித்துக்கொண்டு ஸர்வேஶ்வரனுன என்னை அர்ச்சாதிகளில் ஆராதிக்க வேண்டும். அங்ஙனம் ஆராதித்துக்கொண்டு வருவானு யின், ஹ்ருதய கமலத்தில் இருக்கின்ற என்னை ஸாக்ஷாத் கரிப்பான். ஆகையால் அந்த ஸாக்ஷாத்காரம் உண்டா கும் வரையில் என்னை அர்ச்சாதிகளில் ஆராதித்துவர வேண்டும். ஜீவாத்மாக்கள் அனைவரும் பரமபுருஷன் அந்தராத்மாவாயிருக்கப் பெற்று அவனுக்குச் சரீர மாகி ஜ்ஞானமாகிற வடிவம் ஒத்திருக்கப் பெற்றவரென் றும், கர்மாதீனமாய் விளைகிற தேவாதி சரீரங்களால் வரும் பேதம் ஆத்மாக்களுக்கு இல்லையென்றும் அறியா மல் சரீரபேதத்தினுல் ஆத்மாக்களும் வெவ்வேருயிருப் பவரென்று நினைத்து, தன்னைக் காட்டிலும் பிறன் வேறு பட்டவனென்று எவன் சிறிதாயினும் பேதம் நினைக்கின் ருனே, பேதத்ருஷ்டியுடைய அவனுக்கு யமன் பெரும் பயத்தை விளைக்கின்ருன். (அவன் யமலோகம் போய்ச் சேர்ந்து நரகங்களை அனுபவிப்பான்). ஆகையால், ஜீவாத் மாக்களுக்கு அந்தர்யாமியாயிருப்பவனும் ஸமஸ்த பூதங் களிலும் வாஸம் செய்கின்றவனுமாகிய என்னை ஸம த்ருஷ்டியாலும் ஸ்னேஹத்தினுலும் தானத்தினுலும்

ஸத்காரங்களாலும் பூஜிக்கவேண்டும். (தனக்கு மேற்பட்டவரிடத்தில் வெகுமதியும், தன்னோடொத்தவரிடத்தில் ஸ்னேஹமும், தனக்குத்தாழ்ந்தவரிடத்தில் தானமும் செய்யவேண்டும். 'எல்லோரும் ஜ்ஞான ஸ்வரூபராகையாலும் பரப்ரஹ்ம ஸ்வரூபராகையாலும் பேதமற்றவர்களே' என்னும் நினைவு மாறாதிருக்கவேண்டும். பிறர்க்கு தான மானாதிகளைச் செய்யும்பொழுது இவர்கள் பரப்ரஹ்ம ஸ்வரூபர்களாகையால் நாம் இவர்க்குச் செய்வதெல்லாம் பரமாத்ம ஸமாராதனமே யென்னும் புத்தியுடன் செய்யில், அந்த தான மானாதிகள் எனக்கு மிகுந்த ஸந்தோஷத்தைவிளைப்பனவாம்). ஜீவனில்லாத வஸ்துக்களைக் காட்டிலும் ஜீவனுள்ள வஸ்துக்கள் சிறந்தவை. அவற்றைக் காட்டிலும் ப்ராணனுடையவை மேற்பட்டவை. மங்கள ஸ்வபாவமுடையவளே! அவற்றைக் காட்டிலும் ஜ்ஞானமுடையவை மேற்பட்டவை. அவற்றைக் காட்டிலும் இந்த்ரிய வ்யாபாரமுடையவை மேற்பட்டவை. (இந்த்ரிய வ்யாபாரமாவது பார்வைகேள்வி முதலியவை) இவை வ்ருக்ஷங்களுக்கும் உண்டென்கிறார்கள். ஆனால் அவற்றிற்கு த்வக்கிந்த்ரிய வ்யாபாரமே பெரும்பாலும் உள்ளதாம். அதாவது தொட்டால் தெரிந்துகொள்ளுந் தன்மை). அங்ஙனம் ஸ்பர்சத்தை அறியுந் தன்மையுள்ள அவற்றைக் காட்டிலும் ரஸத்தை அறிபவை (ரஸனேந்த்ரியத்தின் வ்யாபார முடையவை) மேற்பட்டவை. (அவற்றைக் காட்டிலும் ரஸத்தை அறியுந் தன்மையுடைய மத்ஸ்யாதிகள் மேற்பட்டவை). அவற்றைக் காட்டிலும் கந்தத்தை அறியுந் தன்மையுடைய வண்டு முதலியவை மேற்பட்டவை. சப்தத்தை அறியுந் தன்மையுடைய ஸர்ப்பாதிகள் அவற்றைக் காட்டிலும் மேற்பட்டவை. ரூபத்தை அறியுந் தன்மையுடைய காக்கை முதலியவை அவற்

றைக் காட்டிலும் மேற்பட்டவை. அவற்றைக் காட்டிலும் இரண்டு பக்கத்திலும் பல்லுடைய ஜந்துக்கள் மேற்பட்டவை. அவற்றைக் காட்டிலும் பலகால்களையுடைய ஜந்துக்கள் சிறந்தவை. அவற்றைக் காட்டிலும் நாற்கால் ஜந்துக்கள் சிறந்தவை. அவற்றைக் காட்டிலும் இரண்டு கால்களையுடைய மனிதர்கள் மேற்பட்டவர். அம்மனிதர்களிலும் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்ரர்கள் என்கிற நான்கு வர்ணத்தவர்கள் மேற்பட்டவர். அந்நான்கு வர்ணத்தவர்களில் ப்ராஹ்மணர் ஶ்ரேஷ்டர்கள். ப்ராஹ்மணர்களிலும் வேதாத்யயனம் செய்தவர் மேற்பட்டவர். அவர்களைக் காட்டிலும் வேதார்த்தம் அறிந்தவர் மேற்பட்டவர். அவர்களைக் காட்டிலும் அவ்வர்த்தங்களில் விளையும் ஸம்சயங்களைத் தீர்க்குந் திறமையுடைய மீமாம்ஸகர் மேற்பட்டவர். அவர்களைக் காட்டிலும் தமது வர்ணாஶ்ரமத் தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டித்துக் கொண்டிருப்பவர் மேற்பட்டவர். அவர்களைக் காட்டிலும் ஸம்ஸாரத்தில் பற்றற்றவர் மேற் பட்டவர். இவர் தாம் செய்யும் கர்மங்களுக்கு பகவானுடைய அனுக்ரஹம் தவிர மற்றொரு பலனையும் எதிர் பாராதிருப்பவர். அவர்களைக் காட்டிலும், ஸமஸ்த கர்மங்களையும் கர்ம பலன்களையும் தேஹத்தையும் ஆத்மாவையும் என்னிடத்தில் அர்ப்பணம் செய்து எல்லாம் பரப்ரஹ்ம ஸ்வரூபங்களே யென்றுணர்ந்து சிறிதும் பேத புத்தியற்றிருப்பவர் மேற்பட்டவர். சேஷியும் ரக்ஷகனும் அந்தர்யாமியுமாகிய என்னிடத்தில் [1] ஆத்மரக்ஷாபரத்தை வைத்துக் கர்மங்களைச் செய்விப்பவனும் கர்ம பலன்களைக் கொடுப்பவனுமாகிய என்னிடத்தில் தான் செய்யும் கர்மங்களை அர்ப்பணம் செய்து 'கர்மங்களைச் செய்பவன் நானே' என்ற

---

1. தன்னைத் தான் பாதுகாத்துக் கொள்ளும் பாரத்தை.

ஸ்வதந்த்ர புத்தியில்லாதவனும் சேதனுசேதன ரூபமான ஜகத்தெல்லாம் பரப்ஹ்ம ஸ்வரூபமே யென்ற ஜ்ஞான முடையவனுமாகிய இந்த ஜ்ஞானியைக் காட்டிலும் மேற்பட்ட ஜந்து எதுவுமே இருப்பதாக நான் காண்கிலேன்' 'இவற்றில் ஜீவன் மூலமாய் பகவான் உள் புகுந்திருக்கிறுன்' என்று நினைத்துக் கீழ்ச்சொன்ன ஜங்கமஸ்தாவர ரூபமான பூதங்களை மனத்தினுல் வெகுமதித்து வணங்கவேண்டும். வாராய் மனுசக்ரவர்த்தியின் புதல்வீ! பகவானை ப்ரீதியுடன் பணிகையாகிற பக்தி யோகத்தையும், ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டதும் பரப்ரஹ்ம ஸ்வரூபமுமாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை உணர்கையாகிற ஜ்ஞான யோகத்தையும் உனக்குச் சொன்னேன். இந்த ஜ்ஞானயோக பக்தியோகங்களிரண்டில் ஒன்றை அனுஷ்டிக்கினும் ஜீவன் பரமபுருஷனைப் பெறுவான். ப்ரக்ருதி ஜீவன் தெய்வம் புண்யபாப ரூப கர்மம் செயல்கள் இவற்றைக் காட்டிலும் மேற்பட்ட வஸ்து காலமென்று கூறப்படும். இது பகவானுக்கு உட்பட்டதாகி அவனுக்குச் சரீரமாயிருக்கும்; மற்றும், மஹத்து முதலிய ஸமஸ்த பூதங்களின் பரிணமங்களுக்கு (ஒன்று ஒன்றுக மாறுந்தன்மைகளுக்கு)க் காரணமாயிருக்கும். ஸமஸ்த பூதங்களிலும் ஆத்மாக்கள் ஜ்ஞான ஸ்வரூபர்களாகி ஒத்திருப்பினும் தேவ மனுஷ்யாதி பேதத்தை ஆத்மாக்களில் ஏறிட்டுப் பார்க்கும் பேத புத்தியுடையவர்களுக்கு (தேஹாத்மாபிமானிகளுக்கு) இந்தக் காலஸ்வரூபனுன பகவானிடத்தினின்றுமே ஜன்ம ஜரா மரணுதி ரூபமான பயம் உண்டாகின்றது. இந்தக் காலஸ்வரூபியான பகவான் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் உள்ளே புகுந்து ப்ராணிகளைக் கொண்டே ப்ராணிகளை ஸம்ஹரிக்கின்றுன். இந்தக் கால

மாவது ஸமஸ்தஜகத்திற்கும் ஆதாரமான விஷ்ணுவென்கிற பகவானே. (இந்தக் காலம் பகவானுக்குச் சரீரமாகையால் பகவானே யென்று சொல்லும்படி அவனுக்கு உட்பட்டிருக்கும்). இந்தக்காலமே யாகாதி ஸகல கர்மங்களும். (காலத்தில் செய்யவேண்டு மென்று சாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகின்றனவாகையால் யஜ்ஞாதி கர்மங்களெல்லாம் காலஸ்வரூபங்களே யென்று கூறப்படுகின்றன). இந்தக் காலம் எல்லாவற்றையும் தம் வசப்படுத்திக் கொண்டிருக்கின்ற ப்ரஹ்மாதிகளுக்கும் ப்ரபுவாயிருக்கும். (ப்ரஹ்மாதிகளையும் தன் வசத்தில் நடத்துந் திறமையுடையது). இந்தக் காலஸ்வரூபியான பகவானுக்கு ப்ரியனாவது த்வேஷிக்கத் தகுந்தவனாவது பந்துவாவது எவனும் கிடையாது. இந்த பகவான் அனவதானமின்றி மிகுந்த ஊக்கத்துடன் இருந்து ஊக்கமற்ற ஜனங்களை ஸம்ஹரிப்பவனாகி அவரிடத்தில் ரோகாதிரூபமாய் ப்ரிவேசிக்கின்றான். இந்தக் காலஸ்வரூபியான பகவானிடத்தினின்று பயந்தே காற்று இங்ஙனம் வீசுகின்றது; இந்த ஸூர்யனும் காய்கின்றான்; மேகமும் மழை பெய்கின்றது; நக்ஷத்ரக் கூட்டமும் விளங்குகின்றது. இக்தக் காலரூபியான பகவானிடத்தினின்று பயந்தே வ்ருக்ஷங்களும் செடி கொடிகளும் தந்தமக்கு ஏற்பட்ட காலங்களில் புஷ்பங்களையும் பழங்களையும் ஏற்றுக்கொள்கின்றன. நதிகளும் இவனிடத்தில் பயந்தே பெருகுகின்றன. ஸமுத்ரமும் தன் கரையைக் கடந்து பூமியின்மேல் பாயாதிருக்கின்றது; அக்னி எரிகின்றது; பர்வதங்களோடு கூடின பூமியும் ஜலத்தில் மூழ்காமல் மிதந்து கொண்டிருக்கின்றது. இந்த பகவானுடைய நியமனத்தினால் ஆகாசமும் ப்ராணிகளுக்கு அவகாசம் கொடுக்கின்றது. பெருமையுள்ள

வஸ்துக்களைக் காட்டிலும் மேலான பெருமையுடைய இந்தக் காலஸ்வரூபியான பகவான் பூமி முதலிய ஏழு ஆவரணங்களால் சூழப்பட்டதும் தனக்குச் சரீரமுமாகிய ப்ரஹ்மாண்டத்தைப் படைக்கின்றான். இந்தக் காலஸ்வரூபியான பகவானால் தூண்டப்பட்டதாகிய மஹத்தத்வம், ப்ருதிவி அப்பு தேஜஸ்ஸு வாயு ஆகாசம் அஹங்காரம் இந்த்ரியங்கள் இவைகளால் சூழப்பட்டதும் தனது மாறுருவமுமாகிய ஜகத்தைப் பரவச் செய்கின்றது. ரஜஸ் தமோ குணங்களை முக்யமாகவுடைய ப்ரஹ்மாதியான தேவர்கள் இவ்வுலகைப் படைக்கை முதலிய வ்யாபாரங்களில் யுகந்தோறும் முயற்சி கொண்டு அவற்றை நடத்துகிறார்கள். ஜங்கம ஸ்தாவர ரூபமான ஜகத்தெல்லாம் எந்த ப்ரஹ்மாதி தேவதைகளுக்கு உட்பட்டிருக்கின்றதோ, அத்தகையரான அந்த தேவர்களும் காலஸ்வரூபியான இந்த பகவானிடத்தில் பயந்து தந்தமது செயல்களில் ஊக்கமுற்றிருக்கின்றார்கள். அத்தகைய காலஸ்வரூபியான பகவான் மற்றொன்றால் அளவிடக் கூடாதவன். தந்தை முதலிய ஜனங்களைக் கொண்டு பிள்ளை முதலிய ஜனங்களைப் படைக்கின்றவன் அவனே. அவன் தானே ம்ருத்யுவுக்கும் மரணங் கொடுக்குந் திறமையன். ஆனதுபற்றியே அவன் ம்ருத்யுவுக்கும் ம்ருத்யுவென்று கூறப்படுகிறான். அவனே ஆதிகர்த்தா. அவனுக்கு ஆதியும் இல்லை, அந்தமும் இல்லை. எவ்வகையிலும் அழிவில்லாதவன். இருபத்தொன்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

{ வைராக்யத்தை விளைவிக்கும் பொருட்டு ஸம்ஸாரத்தின் கொடுமையை நிரூபித்தல். }

கபிலர் சொல்லுகிறார்:— வாராய் மாதாவே! இங்ஙனம் காலம் பகவத் ஸ்வரூபமாயிருக்குமென்றும், மிகுந்த வலிவுடையதென்றும் உனக்கு மொழிந்தேன். மேல், ஸம்ஸாரிகளின் கதிகளைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. உலகத்திலுள்ள ஜனங்கள், இங்ஙனம் சொல்லப்பட்ட காலத்தினால் தூண்டப்பெற்று நடப்பவராயினும், மேகங்களின் வரிசை காற்றினால் தள்ளுண்டு சிதறிப் போகின்றதாயினும் அந்த வாயுவின் வலிமையை அறியாதிருப்பதுபோல், அத்தகைய காலத்தின் பராக்ரமத்தை அறிகிறதில்லை. இந்த ஜீவாத்மாவானவன் ஸுகத்தின் பொருட்டு மிகவும் ப்ரயாஸப்பட்டு எந்தெந்தப் பொருளை ஸம்பாதிக்கிறானோ, அவற்றையெல்லாம் காலஸ்வரூபியான பகவான் பாழ் செய்கின்றான். தான் ப்ரயத்னப்பட்டு ஸம்பாதித்த பொருளெல்லாம் பாழானமை கண்டு ஜீவன் சோகிக்கின்றான். அங்ஙனம் சோகிப்பதற்குக் காரணம் என்னென்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. கெடுமதியனாகிய இந்த ஜீவன் பிள்ளை பெண்டிர் முதலிய அனுபந்தங்களோடு கூடினதும் நிலைநில்லாததுமாகிய தேஹத்தைச் சேர்ந்த வீடு நிலம் பணம் முதலியவற்றை நிலைநிற்பதாக நினைக்கின்றான். அதற்குக் காரணம் அஜ்ஞானமே. ஆகையால் அவை தெய்வாதீனமாய்ப் பாழாகையில் வருந்துகிறான். இந்த ஸம்ஸாரத்தில் ஜீவன் தேவ மனுஷ்யாதி ஜன்மங்களில் எந்தெந்த ஜன்மங்களைப் பெறுகின்றானோ, அந்தந்த ஜன்மங்களில் எதிலும் ஸுகத்தை அனுபவிக்கிறதில்லை. ஆயினும், அவன் அந்த ஸம்ஸாரத்தில் வைராக்யம் உண்டாகப் பெறுகிறதில்லை. ஆ! இதென்ன ஆச்சர்யம். இந்த

ஜீவன் நரகத்திலிருப்பினும், பகவானுடைய மாயையி ஞல் மதிமயங்கி நரகத்தில் கிடைக்கக் கூடிய ஆஹாரம் முதலியவற்றால் ஸுகம் அடைந்து நரகானுபவத்திற் காக ஏற்பட்ட பாபிஷ்ட தேஹத்தையும் விட விரும்புகிற தில்லை. தேஹம் பார்யை புதல்வன் க்ருஹம் பசு பணம் பந்துக்கள் ஆகிய இவற்றில் வேரூன்றின மனமுடையவ ஞகித் தன்னை ஸ்லாகித்துக் கொள்கிறான். இந்த தேஹம் முதலியவற்றைப் போஷிப்பதிலும் பாதுகாப்பதிலும் சிந்தையுற்று அதனால் ஸமஸ்த அங்கங்களும் பரிதபிக்கப் பெற்றுச் செய்ய வேண்டிய செயல் இன்னதென்று தெரி யாமல் மனம் கலங்கி எப்பொழுதும் பாபங்களையே செய் கின்றான். க்ருஹஸ்தாஸ்ரமத்திலிருப்பவன், பரபுருஷ னைப் புணர விரும்புகின்ற அஸத்துக்களான மாதர் கள் ஏகாந்தத்தில் செய்யும் ஸம்போகாதி ரூபமான மாயையாலும் மழலைச் சொற்களைப் பேசுகின்ற சிசுக்க ளின் பேச்சுக்களாலும் மனம் முதலிய இந்த்ரியங்க ளெல்லாம் பறியுண்டு, எவ்விதத்திலும் போக்க முடி யாத பலவகைத் துயரங்கள் நிறைந்த க்ருஹத்தில் சிறி தும் சோம்பலின்றி அவ்வப்பொழுது நேரும் துக்கங்க ளுக்குத் தடை செய்வதாக நினைத்து ஏதோ சில செயல் களைச் 'செய்துகொண்டு ஸுகம் அனுபவிப்பதாக நினைக்கின்றான். இங்கும் அங்கும் திரிந்து பெரும்பாலும் ப்ராணிகளை ஹிம்ஸித்து அவ்வழியால் பணம் முதலிய வற்றை ஸம்பாதித்து அவற்றால் பிள்ளை பெண்டிர் முதலா னவர்களைப் போஷித்துக்கொண்டிருக்கின்றான். அவர்கள் அனுபவித்து ஏதேனும் சிறிது மிகுதியாயின், அதைத் தான் அனுபவித்துக் கொண்டிருந்து கடைசியில் நரகத் தில் போய் விழுகின்றான். ஜீவனத்திற்காக அடிக்கடி ஏதேனும் ஒரு வ்யாபாரத்தை ஆரம்பிக்கையில், அது

தெய்வதோஷத்தினால் வீணாகக் கண்டு வருந்தி லோபம் மிகுந்து மேல் வ்யாபாரம் செய்யச் சக்தியற்றவனாகிப் பிறருடைய ஸொத்தில் விருப்பம் கொள்கின்றான். குடும்பத்தைப் போஷிக்க வல்லமையற்று, பாக்யஹானியால் அதற்காகத் தான் செய்யும் ப்ரயத்னமெல்லாம் வீணாகப் பெற்று நற்கார்யம் ஏதும் செய்யாமல் தீனனாகி வீண் சிந்தைகள் நிறைந்து மதி மயங்கி வஸிக்கின்றான். இங்ஙனம் அவன் தன்னைத் தான் ரக்ஷிக்கவும் வல்லமையற்றிருக்கையில், பயிர்வேலைக்கு உபயோகப்படாத கிழஎருதை உழவர் உபேக்ஷிப்பதுபோல், அவனை அவனுடைய பார்யை முதலியவர் முன்போல், ஆதரிக்கிறதில்லை. அவர்கள் அங்ஙனம் அனாதரிக்கினும், மனவெருப்பு சிறிதும் உண்டாகப் பெறுகிறதில்லை. தான் முன் போஷித்துக் கொண்டிருந்த பார்யை முதலியவர்களால் போஷிக்கப் பெற்றுக் கிழத்தனத்தினால் உடம்பெல்லாம் சதை சுருங்கவும் மயிர் நரைக்கவும் பெற்று விரூபமுடையவனாகியும் மனத்தில் பரிதாபம் உண்டாகப் பெறுகிறதில்லை. மற்றும், கிழத்தனத்தினால் சரீரம் தளர்ந்து வெளியில் எங்கும் நடந்து போக முடியாதவனாகி வீட்டிலேயே இருக்கின்றான். பசி எடுத்து ஆஹாரம் வேண்டினும் பார்யை முதலியவர் அவமதித்து 'நீ ஸம்பாதித்ததற்குச் சோறும் இடவேண்டுமோ? இதற்குள் என்ன பசி? நீ சாகாயா? உன் தொந்தரவு தீராதா?'' என்று பல பருஷங்களைப் பேசிக் கடைசியில் அன்னம் இடுகையில், அதை நாய்போல் தின்பான். கிழத்தனம் வந்தவுடனே பற்பல ரோகங்களும் தலைகாட்டும். வயிற்றில் அக்னி புஷ்டியும் தொலையும். ஆகையால் ஆஹாரம் சிறிதே உட்கொள்வான். வ்யாபாரங்களெல்லாம் ஒடுங்கிப்போம். நாடிகளில் ஶ்லேஷ்மம் வந்தடைத்துக் கொள்ளும்.

அதனால் தேஹத்தில் வாயுஸஞ்சாரம் தடைபடுகையில் அவ்வருத்தத்தினால் கண்விழிகள் புதுங்கிப்போம். இருமலாலும் ஶ்வாஸத்தினாலும் ஆயாஸமுற்றுக் கண்டத்தில் கருகுருவென்று சப்தம் செய்வான். எழுந்திருக்கவும் உட்காரவும் சக்தியில்லாமல் தன்னுடைய துர்த்தசையைப் பார்த்து வருந்துகின்ற பந்துக்களால் சூழப்பட்டவனாகி ம்ருத்யுபாசத்திற்குட் பட்டு 'அண்ணா' என்று அழைக்கப் பெறினும் ஏதும் பேசமுடியாதிருப்பான். இப்படி யௌவனத்தில் பல வருத்தங்களும் கிழத்தனத்தில் பல வருத்தங்களும் உண்டாகுமென்பதை மொழிந்தேன். இனி மரணதுக்கத்தைச் சொல்லுகிறேன், கேட்பாயாக. இங்ஙனம் குடும்பத்தைப் போஷிப்பதில் தேஹத்தையும் இந்த்ரியங்களையும் உபயோகப் படுத்தி அவற்றை வெல்லாமல் அவை போனவழியே விட்டுத் திரிந்த ஜீவன் கடைசியில் மஹத்தான மரணவேதனையால் மதிமயங்கப் பெற்றுத் தன் பந்துக்கள் அழுதுகொண்டிருக்கும்பொழுது மரணம் அடைகின்றான். அந்த மரணஸமயத்தில் கோபம் நிறைந்த காட்சியுடையவரும் பயங்கரர்களுமான இரண்டு யமதூதர்கள் வரக் கண்டு அந்த ஜீவன் பயந்து மலமூத்ரங்களை விடுவான். மரணம் அடைந்தவன் பரலோகத்திற்குப் போகும் வழிகள் இரண்டு. அவற்றில் புண்யம் செய்தவன் போகும் வழி ஒன்று; பாபம் செய்தவன் போகும் வழி மற்றொன்று. முதலில் பாபஞ்செய்தவன் போகும் வழியைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. அங்ஙனம் மரணம் அடைந்த ஜீவனை அந்த யமதூதர்கள் யாதனாசரீரத்தில் அடைத்துக் கழுத்தில் பலாத்காரமாகப் பாசங்களால் கட்டி, தப்புசெய்தமையால் தண்டிக்கவேண்டிய புருஷனை ராஜபடர்கள் கட்டி யிழுத்துக் கொண்டுபோவதுபோல், நெடுந்தூரம் இழுத்

துக் கொண்டுபோவார்கள். அந்த யமதூதர்கள் இவனை வழியில் விரட்டிக்கொண்டு செல்லுவார்கள். அவற்றைக் கேட்டு இந்தப் பாபிஷ்டனாகிய ஜீவன் பயந்து ஹ்ருதயம் பிளவுண்டவன் போன்று சரீரம் நடுங்கப் பெற்று வழியில் நாய்களால் கடியுண்டு வருந்தித் தான் செய்த பாபத்தை நினைத்துக் கொண்டே நடப்பான். மற்றும், பசி தாஹங்கள் நிறைந்து வருந்துவான். அன்றியும், வழியில் கால் பாவமுடியாமல் மணல் கொதித்துக் கொண்டிருக்கும். ஸூர்யன் பொறுக்கமுடியாமல் வெயில் காய்வான். வழியெல்லாம் காட்டுத்தீ எரியும். காற்று நெருப்புபோல் மிக்க வெப்பத்துடன் வீசும். இவைகளால் பரிதபிக்கப் பெற்று, பின்புறத்தில் வாரால் இயற்றின சாட்டையால் அடிக்கப்படுவான். இங்ஙனம் வருந்தி ஒரு அடி எடுத்து வைக்கவும் முடியாதிருப்பான். அவ்வழியில் சிறிதும் ஒதுங்க நிழல் அகப்படாது. சிறிது இளைப்பார இடமும் புலப்படாது. குடிக்கத் தண்ணீர் சிறிதும் அகப்படாது. இத்தகைய வழியில் மிக்க ப்ரயாஸத்துடன் நடந்து செல்வான். இருள் மூடப் பெற்றிருப்பதும் தாமஸகர்மங்களைச் செய்பவர்க்குக் கிடைக்கக் கூடியதுமாகிய பாபிஷ்ட மார்க்கத்தினால் இந்த ஜீவனை வெகு வேகத்துடன் யமனுடைய ஸந்நிதானத்திற்கு இழுத்துக்கொண்டுபோவார்கள். வழியில் ஆங்காங்கு வருந்தி நடக்கமுடியாமல் கீழே விழுவான்; இளைப்புறுவான்; மூர்ச்சை அடைவான்; மீளவும் மூர்ச்சை தெளிந்து எழுந்திருப்பான். தொண்ணூற்றொன்பது யோஜனை தூரமுள்ள வழியை மூன்று முஹூர்த்தங்களுக்குள் கடக்குமாறு வேகத்துடன் இவனை இழுத்துக்கொண்டு போவார்கள். பாபம் அதிகமாயிருந்தால் இரண்டு முஹூர்த்தங்களுக்குள் மிக்கவேகத்துடன் இழுத்துக் கொண்டுபோவார்கள். இங்ஙனம் யமலோகத்

திற்குப் போனபின்பு பலவகை நரக பீடைகளை அனுப விப்பான். நெருப்புத் தணல்களை உடம்பு முழுவதும் நிறைத்துக் கொளுத்தப் பெறுவான். ஒரு ஸமயம் தன் சரீரமாம்ஸத்தைத் தானே அறுத்துச் சாப்பிடுவதும், பிறர் அறுத்துக்கொடுக்கச் சாப்பிடுவதும் செய்வான். அந்த யமலோகத்தில் இவன் ஜீவனோடிருக்கும்பொழுதே இவன் குடலை நாய்களாலும் கழுக்களாலும் பிடுங்கச் செய்வார்கள். ஸர்ப்பங்களை விட்டுக் கடிக்கச் செய்வார் கள். இவற்றால் மஹத்தான வேதனையை அனுபவிப்பான். மற்றும் கைவேறு கால் வேறு தலைவேறென்று அவயவங் களையெல்லாம் தனித்தனியே சேதிப்பார்கள். யானை முதலிய வலிய ஜந்துக்களைக்கொண்டு இவனை இரண்டா கக் கிழிக்கச் செய்வார்கள். மலைச் சிகரங்களினின்று கீழ் விழத் தள்ளுவார்கள். ஜலத்தில் அமிழ்த்துவார் கள். பள்ளம் வெட்டிப் புதைப்பார்கள். இப்படிப் பட்ட நரகபர்தைகளை அனுபவிப்பான். மற்றும், தாமிஸ்ரம் அந்ததாமிஸ்ரம் ரௌரவம் முதலிய பலவகை நரகங்கள் உண்டு. ஸ்த்ரீயாவது புருஷனாவது ஒருவர்மேல் ஒருவர் வழி கெட்டு மோஹம் கொண்டு புணர்ந்த பாபத்தின் பலனாக அத்தகைய நரகங்களை அனுபவிக்கப் பெறுவார் கள். தாயே! ‘இப்படிப்பட்ட நரகங்களும் உண்டோ?’ என்று ஸந்தேஹிக்க வேண்டாம். ஸ்வர்க்கமும் நரகமும் இவ்வுலகத்திலேயே உண்டென்று சொல்லுகிறார்கள். நர கத்திலுள்ள பாதைகள் எவ்வெவை உண்டோ, அவை இவ்விடத்திலும் புலப்படுகின்றனவல்லவா? தெய்வ மொன்றுளதென்று தெரிந்துகொள்ளாமல் குடும்பத் தைப் போஷிக்கையே புருஷார்த்தமென்று குடும்ப போஷணம் செய்கின்றவனும் தன் வயிற்றை மாத்ரமே நிறைத்துக்கொண்டு ஜீவிப்பவனும் அங்ஙனம் தாம்

போஷித்துக்கொண்டு வந்தகுடும்பத்தையும் தன்தேஹத்தையும் துறந்து பரலோகம் சேர்ந்து இங்ஙனம் தான் செய்தபாபங்களுக்குப் பலனாக ஏற்பட்டவைகளும் கீழ்ச் சொன்னவைகளுமான நரகதுக்கங்களை அனுபவிப்பார்கள். ப்ராணிகளை ஹிம்ஸித்து ஸம்பாதித்த பணத்தினால் எவன் தன் தேஹத்தைப் போஷித்துக்கொண்டு வருவானோ, அவன் அங்ஙனம் தான் போஷித்து வந்த தன் தேஹத்தை இவ்விடத்திலேயே துறந்து புண்யத்தைக் காட்டிலும் வேறுபட்ட பாபத்தையே [1] பாதேயமாய் வழியிற் கொண்டு தானொருவனாகவே நரகமார்க்கத்தை அடைகின்றான். தான் பிறர்க்கு த்ரோஹம் செய்து பணம் ஸம்பாதித்துப் பிள்ளை பெண்டிர் முதலிய குடும்பத்தையும் தேஹத்தையும் போஷிப்பவன் மரணம் அடைந்து நரகத்திற்குப் போகும் பொழுது அவன் செய்த பாபம் ஒன்றுமாத்ரமே அவனைப் பின்றொடர்ந்து போமன்றி அவன் போஷித்து வந்த பிள்ளை பெண்டிர் முதலிய குடும்பமாவது தேஹமாவது அவனைப் பின்றொடரமாட்டா. ஒருவன் பாபம் செய்து ஸம்பாதித்த பணத்தினால் பலர் ஜீவிப்பினும், அந்தப் பாபத்தின் பலனை அவன் ஒருவன் மாத்ரமே அனுபவிக்க வேண்டுமன்றி அவனை அடுத்து ஜீவித்தவர் அதற்காக அவனுடன் நரகம் செல்லமாட்டார்கள். பிறர்க்கு த்ரோஹம்செய்து குடும்ப போஷணம் செய்தவன் மரணம் அடைந்து நரகம் போகையில், அவனுடையபாபத்தை ஈஶ்வரன் அவனிடம் கொண்டுபோய்ச் சேர்க்கின்றான். அந்தப் பாபத்தை அவன், பணத்தை இழந்தவன் வருந்துவதுபோல், மிக்க வருத்தத்துடன் அனுபவிக்கின்றான். ‘குடும்பத்தைப் போஷிக்கவேண்டு

1. வழி நடக்கிறவன் வழியில் உட்கொள்வதற்காகக் கொண்டு போகும் ஆஹாரம்.

மென்று சாஸ்த்ரம் சொல்லுகின்றதே. ஆகையால் அது எப்படி பாபமாகும்' என்னில் சொல்லுகிறேன், கேள். சிறிதும் தர்மம் கலக்காமல் வேகலம் அதர்மத்தினால் குடும்பபோஷணம் செய்கிற ஜீவன் நரகத்தில் கடைசிஸ்தானமாகிய அந்ததாமிஸ்ரமென்னும் நரகத்தை அடைகின்றான். (ஆகையால் தர்மம் தவறாமல் குடும்ப போஷணம் செய்வது அவஶ்யமே). கேவலம் அதர்மத்தினால் குடும்ப போஷணம் செய்பவன் நரகமே சேருவான். யமலோகத்தில் எத்தனை நரகங்கள் உண்டோ, அவற்றையெல்லாம் க்ரமத்தில் அனுபவித்துப் பாபங்களெல்லாம் கழிந்தமையால் பரிசுத்தனாகி இவ்வுலகத்தில் மீளவும் மனுஷ்ய ஜன்மம் பெறுவான். முப்பதாவது அத்யாயம் முற்றிற்று.

---

ஜீவன் கர்ப்பவாஸத்தினால் துக்கங்களை அனுபவித்தலும், கர்ப்பத்திலிருக்கும்பொழுது பரமாத்மாவை ஸ்தோத்ரம்செய்தலும், கர்ப்பத்தினின்று வெளிவந்த பின்பு அஜ்ஞானத்தினால் மீளவும் ஸம்ஸார துக்கங்களை அனுபவித்தலும்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—வாராய் மாதாவே! ஜீவன் ஜன்மாந்தரத்தில் தான் செய்த கர்மத்திற்குத் தகுந்தபடி ஈஶ்வரனால் தூண்டப்பட்டவனாகி நரகானுபவம் முடிந்தபின்பு, இவ்வுலகத்தில் மீளவும் தேஹத்தை அடையும்பொருட்டு ஒரு புருஷனுடைய ரேதஸ்ஸின் பிந்துமூலமாய் ஸ்த்ரீயினுடைய வயிற்றில் ப்ரவேசிக்கின்றான். 'கர்மங்களையெல்லாம் அனுபவித்துப் பரிசுத்தனாகித் திரும்பிவருகின்றானென்றாய். ஜன்மாந்தரத்தில் தான் செய்த கர்மத்திற்குத் தகுந்தபடி ஈஶ்வரனால் தூண்டப்பட்டு தேஹம் பெறுதற்காக ஸ்த்ரீயுடைய உதரத்தில் ப்ரவேசிக்கிறானென்கிறாய். கர்மங்கள் கழிந்தனவென்பதும் கர்மத்தினால் மீளவும் தேஹம் பெறுகிறானென்பதும்

எப்படி பொருந்தும் ?" என்னில், சொல்லுகிறேன், கேட்பாயாக. நரகானுபவம் பண்ணவேண்டிய கர்மங்களெல்லாம் க்ஷீணித்தன வென்றும், அதனால் பரிசுத்தனாய்த் திரும்பி வருகிறானென்றும் சொன்னேனன்றிக் கர்மங்கள் யாவும் க்ஷீணித்தனவென்று சொல்லவில்லை. மீளவும் தேஹத்தை அடைவதற்குவேண்டிய கர்மம் தேஹத்தை அடைவதனால் க்ஷீணிக்குமேயன்றி நரகானுபவத்தினால் க்ஷீணிக்காது. ஆகையால் ஒன்றோடொன்று விரோதிக்காது. அங்ஙனம் ஜீவனால் தொடரப்பெற்ற புருஷனுடைய ரேதஸ்ஸானது ஸ்த்ரீயின் வயிற்றில் ப்ரவேசித்து ஒரு ராத்ரியில் ரக்தத்துடன் கலக்கின்றது. ஐந்து ராத்ரிகளில் நீர்க்குமிழ்போல் குண்டாகின்றது. பத்து நாள் கழிகையில் இலந்தம் பழம்போன்ற உருவமுடையதாகின்றது. பிறகு சில நாள் கடக்கையில் மாம்ஸபிண்டமாகிக் கோழிமுட்டை போன்ற உருவம் பெறுகின்றது. (கோழி முட்டையின் உருவம் பெறுவது திர்யக்ஜாதிகளின் கர்ப்பத்திற்கே யென்றுணர்க). ஒரு மாதத்தில் சிரஸ்ஸும், இரண்டு மாதங்களில் கை கால் முதலிய அங்கங்களின் பிரிவும், மூன்று மாதங்களில் நகம் ரோமம் எலும்பு தோல் இவைகளும் ஆண்குறி பெண்குறிகளும் கண் காது மூக்கு முதலிய ரந்த்ரங்களும் உண்டாகின்றன. நான்கு மாதங்களில் ஸப்த தாதுக்களும், ஐந்து மாதங்களில் பசி தாஹங்களும் உண்டாகின்றன. ஆறுமாதங்களில் கர்ப்பக்கொடியினால் சுற்றப்பெற்று வயிற்றில் வலது பார்ஶ்வத்தில் சுழன்று கொண்டிருப்பான். அந்த கர்ப்பத்திலிருக்கும் ஜீவன் தாய் உட்கொள்ளுகிற அன்னபானாதிகளால் ரக்தம் மாம்ஸம் முதலிய தாதுக்கள் வளரப்பெற்று பூச்சிப் புழு முதலிய ஜந்துக்கள் உண்டாகக் கூடியதும் தனக்கு ஸம்மத மல்லாததுமாகிய கர்ப்பக்

குழியில் விழுந்து கிடப்பான். ஆங்குள்ள புழு முதலிய ஜந்துக்கள் பசி உண்டாகப்பெற்று அந்த ஜீவனுடைய அவயவங்களையெல்லாம் கடித்துத் தின்னும். அவனுடை அங்கம் மிக்க மென்மையுடையதாயிருக்குமாகையால் அந்தப் புழு முதலியவை கடிப்பதனுலுண்டாகும் வேதனையைப் பொறுக்க முடியாமல் மிகவும் வருந்தி மூர்ச்சிப்பான். மற்றும், மாதாவினுல் உட்கொள்ளப்படுகிற மிளகுகாரம் கடுகுகாரம் சுடுகை உவர்ப்பு க்ஷாரம் புளிப்பு முதலிய ரஸங்கள் அமைந்த அதிக்ரூரமான ஆஹாரங்கள் தன்மேல் படப்பெற்று மிகவும் மென்மையான சரீரமுடையவனுகையாலும் அந்த ரஸங்கள் பொறுக்கமுடியாமையாலும் ஸமஸ்த அவயவங்களிலும் பெரிய வேதனை உண்டாகப் பெற்றிருப்பான். அந்த கர்ப்பக் குழியில் கர்ப்பக் கொடிகளாலும் வெளியில் மாதாவின் குடல்முதலிய நரம்புகளாலும் சுற்றப்பட்டு முதுகும் கழுத்தும் வணங்கப் பெற்றுத் தலையை மாதாவின் குக்ஷியில் வைத்துக் கொண்டு, கூண்டில் அடைப்புண்ட பக்ஷிபோல், தனது அங்கங்களை ஸ்வாதீனமாய் நீட்டவும் மடக்கவும் வல்லமையற்றிருப்பான். அந்த கர்ப்பத்திலிருக்கும்பொழுது தெய்வாதீனமாய் நினைவு நேரப்பெற்று முன்பு தான் பல ஜன்மங்களில் செய்த கர்மத்தை நினைத்து நீட்டி மூச்சு விடவும் முடியாமல் அதில் இருந்துகொண்டு என்ன ஸுகம் பெறுவான்? ஏழாவது மாதம் முதற் கொண்டு ஸுக துக்கங்களைப்பற்றின அறிவுடையவனுகி ஸூதிவாயுக்களால் மிகவும் வருந்தி அந்த வயிற்றிலுண்டான புழுபோல் ஓரிடத்திலில்லாமல் சுழன்று கொண்டிருப்பான். ஜன்மாந்தரங்களில் தான் செய்த பாபங்களெல்லாம் நினைவுக்கு வருகையால் 'ஐயோ! நாம் என் செய்தோம்? புத்திகெட்டுப் போனேமே? ஆ! என்ன

வருத்தம்? இனி என்னென்னவோ அனுபவிக்கவேண்டு மே?' என்று மேல்வரும் துக்கங்களெல்லாம் ஸ்பஷ்ட மாய்த் தோன்றப்பெற்று பயந்து 'அப்பனே! என்னைப் பொறுத்தருள்வாய்' என்று வேண்டிக் கொள்பவனாகி கர்ப்பத்திலுள்ள ஏழு நாம்புகளால் கட்டுண்டும் தழதழ த்த உரையுடன் அஞ்சலி ஹஸ்தனாகி, எவனால் தான் இந்த கர்ப்பத்தில் அடைப்புண்டானோ அப்படிப்பட்ட பகவானை ஸ்தோத்ரம் செய்வான்.

ஜீவன் சொல்லுகிறான்:—ஸர்வேஶ்வரன் தான் படைத்த இவ்வுலகத்தை ரக்ஷிக்கும் பொருட்டுத் தன் ஸங்கல்பத்தினால் ராமக்ருஷ்ணாதி பலவகை திவ்யமங்கள விக்ரஹங்களைக் கொள்கின்றான். பூமியில் நடந்து செல் கின்றவையான அந்த பகவானுடைய சரணாரவிந்தங்களை நான் சரணம் அடைகின்றேன். அவற்றைச் சரணம் அடைந்தவர்கள் எவ்விதத்திலும் பயம் உண்டாகப்பெற மாட்டார்களல்லவா? மற்றும், கீழ்நாள்களெல்லாம் பரம புருஷனைச் சிறிதும் உணராமல் பற்பல பாபகர்மங்களைச் செய்து பொழுது போக்கின அஸத்தாகிய எனக்குத் தகுந்த இந்த துர்க்கதியை எவன் காட்டினானோ அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களைப் [1] பணிகின்றேன்.

இந்த மாதாவின் தேஹத்தில், பஞ்ச பூதங்கள் கர்மேந்த்ரியங்கள் ஜ்ஞானேந்த்ரியங்கள் மனது ஆகிய இவையாய்ப் பரிணமித்திருக்கும் (தேஹமாய்ப் பரிணமித் திருக்கும்) ப்ரக்ருதியைத் தரித்துக்கொண்டு ஜன்மாந்தர கர்மத்தினால் தன் ஸ்வரூபம் மறைக்கப்பட்ட பந்த ஜீவன்

1 ஆனால் இப்படி சரணம் அடைந்தவனை ஏன் பகவான் உபேக்ஷிக் கிறானென்று சங்கிக்கவேண்டாம். ஸதாசார்யானுக்ரஹம் இல்லா மையாலும் புருஷகாரம் செய்பவளான பிராட்டியின் ஸந்நிதியில்லா மையாலும் பகவான் அருள் புரிகிறதில்லை.

போல் எவன் தானும் அவனுடன் வஸிக்கின்றானோ; இப்படி ஜீவனுடன் தேஹத்திலிருப்பினும் எவன் ப்ரக்ருதியின் தோஷங்களால் தீண்டப்படாமல் பரிசுத்தனும் ஜரை மரணம் சோகம் மோஹம் பசி தாஹம் என்கிற விகாரங்களற்றவனும் ஜ்ஞானம் முதலிய கல்யாண குணங்கள் சிறிதும் குறையாதவனுமாயிருக்கின்றானோ; அத்தகையனும் ஜீவனுடன் ஸம்ஸார தாபங்களால் பரிதபிக்கின்ற ஹ்ருதயத்தில் தாபங்கள் எவையுமின்றி ஸுகமாயிருக்கின்றவனுமாகிய அந்தப் பரமபுருஷனை நான் வணங்குகின்றேன். பஞ்ச பூதங்களால் ஏற்பட்ட சரீரத்தில் நான் எப்படி இதனால் மறைக்கப் பட்டிருக்கின்றேனோ, இங்ஙனம் பகவான் தானும் இந்தச் சரீரத்திற்குள் புகுந்து இதனால் மறைந்திருப்பினும் அந்தச் சரீரத்தின் ஸம்பந்தத்தினால் விளையக்கூடிய தோஷங்களால் தீண்டப்பெறாமலே விளங்குகின்றான். அதற்குக் காரணம் என்னென்னில், அவன் ஜ்ஞானேந்த்ரிய கர்மேந்த்ரியங்களும் ஸத்வாதி குணங்களும் சப்தாதி விஷயங்களும் ஜீவனுமாகிய இவற்றை (சேதன அசேதனங்களை)ச் சரீரமாகவுடையவனும் இவற்றிற்கு நியாமகனுமாயிருப்பவன். என்னைப் போல் கர்மத்தினால் ஜ்ஞான ஸங்கோசம் உண்டாகப் பெறுமவனல்லன். நான் ப்ரக்ருதிக்கு உட்பட்டிருப்பவன். அவன் அதை அடக்கியாள்பவன். ஆகையால் அவனுக்குச் சரீர ஸம்பந்தத்தினால் விளையக்கூடிய தோஷங்கள் எவையும் உண்டாகிறதில்லை. நான் சப்தாதி விஷயங்களில் 'இவை போக்யங்கள்' என்னும் புத்தியுடையவன். அவன் சப்தாதி விஷயங்களில் கால் தாழுந் தன்மையனல்லன். (நான் சப்தாதி விஷயங்களை போக்யமாக நினைத்து அவற்றில் கால்தாழ்ந்து பற்பல பாபகர்மங்களைச் செய்தேனாகையால் ஜ்ஞான ஸங்கோ

சம் அடைந்து ப்ரக்ருதி ஸம்பந்தத்தினால் விளையும் தோஷங்களை அனுபவிக்கின்றேன். ஈஶ்வரன் அத்தகையனல்லாமல் பரிசுத்தனுகையால் ப்ரக்ருதி ஸம்பந்தத்தினுல் தோஷங்கள் உண்டாகப் பெறுகிறதில்லை). இப்படி தடைபடாத மஹிமையுடையவனும் (ஜ்ஞான ஸங்கோசமில்லாதவனும்) ஆனதுபற்றியே எல்லாமறிந்தவனும் ப்ரக்ருதி புருஷர்களைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனும் நியாமகனுமாகிய அந்தப் பரமபுருஷனை நான் ஸம்ஸாரம் கழியவேண்டுமென்னும் விருப்பத்தினுல் சரணம் அடைகின்றேன். பகவானைச் சரணம் அடைந்தால் ஸம்ஸாரம் எப்படி கழியுமென்று நினைக்கவேண்டாம். கட்டினவனே விடுவிக்க வல்லவனென்கிற ந்யாயத்தின்படி இந்த ஸம்ஸாரத்தில் நம்மைக் கட்டுண்ணப் பண்ணின அப்பெருமானே நம்மை இதினின்று விடுவிக்க வல்லவனுவான். இந்த ஜீவன் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் மூலமாய் விளைபவைகளும் ஸம்ஸாரத்தில் மேன்மேலும் அழுந்தக் கட்டுபவைகளுமாகிய பெருப்பெரிய கர்மங்கள் பலவும் நிறைந்த ஸம்ஸார மார்க்கத்தில் (ப்ரவ்ருத்தி மார்க்கத்தில்) திரிந்துகொண்டு அங்ஙனம் திரிவதனுல் இளைப்புற்று பகவானுடைய ஸங்கல்பத்தினுல் ஜீவாத்மபரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின அறிவு தொலையப் பெறுகின்றுன். அந்த ஜீவன் மீளவும் அந்த மஹானுபாவனுடைய அனுக்ரஹமில்லாமல் மற்றை எந்த உபாயத்தினுல் அந்த ஜீவாத்ம பரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின அறிவு உண்டாகப் பெறுவான்? (பகவானுடைய மாயையினுல் ஸம்ஸாரத்தில் கட்டுண்ட ஜீவன் அவனுடைய அனுக்ரஹத்தினுல் அதினின்று விடுபடவேண்டுமன்றி வேறுகதி இல்லை.) பூத பவிஷ்யத் வர்த்தமானங்களென்கிற மூன்று காலங்களிலும் ஸங்கோசமில்லாமல்

ஜீவாத்மபரமாத்மாக்களின் உண்மையைப் பற்றின அறிவு அந்தப் பரமபுருஷனுடைய அனுக்ரஹமின்றி எந்த ஜீவனுக்குத்தான் உண்டாகும்? எவனுக்கும் உண்டாகாது. மூன்று காலங்களிலும் தடைபடாத அறிவுடையவன் அந்த ஸர்வேச்வரன் ஒருவனே. மற்ற ஜீவாத்மாக்களுக்கு அவ்வறிவு அவனுடைய அனுக்ரஹத்தினால்தான் உண்டாகவேண்டும். 'உனக்கு அவ்வறிவு நேராமற்போயினும் உன்னைக் காட்டிலும் மேற்பட்ட மற்றொரு ஜீவனுக்கு உண்டாகலாமே' என்னில், அப்படி இல்லை. ப்ராணிகளில் தலைவனான ப்ரஹ்மதேவன் முதலிய நாங்கள் அனைவரும், ஜீவாத்மாக்களுக்கு ஸம்ஸாரத்தை வளர்க்கும்படியான கர்மங்களின் பதவியை அனுஸரித்திருப்பவர்களே. (நாங்களெல்லோரும் கர்மமென்கிற அவித்யையால் ஜ்ஞானம் மறையப் பெற்றவர்களே). ஆகையால் உன்னைத் தவிர மற்றெவனும் இந்த ஸம்ஸாரத்தைப் போக்கவல்லவனல்லன். விலங்கில் அகப்பட்ட ஒருவன் அத்தகைய மற்றொருவனை எங்ஙனம் அந்த விலங்கினின்று விடுவிக்க வல்லனாவான்? ஈச்வரனைத் தவிர மற்ற ப்ரஹ்ம ருத்ராதிகள் அனைவரும் ஸம்ஸாரத்தில் அகப்பட்டவர்களே; அத்தகைய அவர் மற்றவர்களை ஸம்ஸாரத்தினின்று எங்ஙனம் விடுவிக்க வல்லராவார். ஜங்கம ஸ்தாவர ரூபமான சரீரங்களில் இருக்கின்ற ஜீவாத்மாக்களிடத்தில் அந்தராத்மாவாய்த் தொடர்ந்திருக்கின்றனை. அந்த ஜீவாத்மாக்கள் உன்னுடைய அம்சங்களே. சரீரஸம்பந்தத்தினால் ஜ்ஞான ஸங்கோசம் உண்டாகப்பெற்ற ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவாயிருப்பினும் நீ ஜ்ஞான ஸ்வரூபமும் ஜ்ஞானகுணமும் என்றும் மாறாதிருக்கப் பெற்றவன். அப்படிப்பட்ட அந்த பகவானை நமஸ்கரிக்கின்றேன். ஜீவாத்மாக்களுக்கு

அந்தராத்மாவாயிருந்தும் ஸர்வஜ்ஞத்வம் முதலிய குணங்கள் மாறுதிருக்கப்பெற்று நமக்கு ஜ்ஞான ப்ரதானம் செய்து ஸம்ஸாரத்தினின்று விடுவித்து மஹோபகாரம் செய்த ஸர்வேச்வரனொருவனே பணியத் தகுந்தவனன்றி மற்றெவரும் அல்லர். பகவானே! பிறருடைய (மாதாவினுடைய) தேஹத்திலுள்ள உதரமாகிற பள்ளத்தில் ரக்த மல மூத்ரக் குழியில் விழுந்து அங்கு ஜாடராக்னியால் சரீரம் மிகவும் தபிக்கப்பெற்று மனம் கலங்கி இந்த உதரத்தினின்று வெளிப்பட்டு வர விரும்பித் தன் மாதங்களைக் கணக்கிட்டுக் கொண்டிருக்கிற இந்த ஜீவன் எப்பொழுது வெளிப்படப் போகின்றான்? இந்த ஜீவனை கர்ப்பத்தினின்று எப்பொழுது வெளிப்படுத்தப் போகின்றாய்? ஜகதீசனே! உன்னைப்போன்ற தயாளுவாகிய எவன் கர்ப்பத்தில் புகுந்து பத்து மாதங்கள் சென்ற இந்த ஜீவனுக்கு இப்படிப்பட்ட விவேகத்தைக்கொடுத்தானே, தீனர்களுக்கு நாதனாகிய அவன் தான் செய்த அந்த உபகாரத்தினாலேயே ஸந்தோஷம் அடைவானாக. அதற்கு அஞ்சலி செய்கை தவிர மற்ற எவ்விதத்திலும் ப்ரத்யுபகாரஞ் செய்ய முடியாது. அதற்கு எவன்தான் பதில் செய்ய வல்லனாவான்? பரமாத்மாவுக்கு வாஸஸ்தானமாகி ப்ரஹ்மபுரமென்று கூறப்படுவதும் ஜீவனுடைய கர்மத்திற்குத் தகுந்தபடி ஏற்பட்டிருப்பதுமான இந்த சரீரத்தில் இதைக் காட்டிலும் வேறுபட்டவனும் கர்ப்பத்திலுள்ள ஏழு நரம்புகளால் கட்டுண்ட சரீரமுடையவனும் சம தமாதி குணங்கள் அமைந்தவனுமாகிய ஜீவன் பரமபுருஷன் கொடுத்த புத்தியால் அவனை ஸாக்ஷாத்கரிக்கின்றான். அந்தப் பரமபுருஷன் யோக பரிசுத்தமான மனத்தினால் அறியக்கூடியவன். அப்படிப்பட்ட அந்தப் பரமபுருஷனை நானும் அவன்கொடுத்த

அறிவினால் ஸாக்ஷாத் கரிக்கின்றேன். அவன் ஹ்ருதயத்திலும் வெளியிலும் தோற்றுமவன். வாராய் ப்ரபுவான ஸர்வேஸ்வரனே! நான் இப்பொழுது பலவகை துக்கங்களுக்கிடமான கர்ப்பத்தில் வாஸஞ் செய்யினும் இந்த கர்ப்பத்தினின்று வெளிப்பட விரும்பமாட்டேன். ஏனென்னில், இந்த கர்ப்பத்திற்கு வெளியிலுள்ள பாழுங்கிணறு போன்ற ஸம்ஸாரத்தில் விழுவேனாயின், உடனே என்னை பகவானுடைய மாயை பிடித்துக்கொள்ளும். அது தேஹாத்மாபிமானத்தையும் ஸ்வதந்த்ராத்மாபிமானத்தையும் விளைக்குந் தன்மையது, அந்த மாயையால் பிடியுண்டவுடனே தேஹாத்மாபிமானம் முதலிய பொய் நின்ற ஞானமும் பொல்லா வொழுக்கமும் அதன் மூலமாய் பற்பல துக்கங்களும் மீளவும் கர்ப்ப வாஸமும் ஆகிய ஸம்ஸார சக்ரமானது (சக்ரம்போல் மாறி மாறிச் சுழல்கின்ற ஸம்ஸாரமானது) ஜீவனை விடாது. ஆகையால் தைர்யமற்றிருக்கிற நான் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் நண்பனாகிய உன்னைப் பணிந்து உனது பாதாரவிந்தங்களையே உபாயமாகப் பற்றி உனது அருள்பெற்று, பலவகை துக்கங்களுக் கிடமான இந்த கர்ப்பவாஸமாகிற வ்யஸனம் மீளவும் உண்டாகாதிருக்கும்படி என்னைச் சீக்ரத்தில் கரையேற்றப் போகின்றேன்.

ஸ்ரீகபிலர் சொல்லுகிறார் — இங்ஙனம் கர்ப்பத்தில் நிச்சயித்துக் கொண்டிருப்பவனும் அப்பொழுதே பத்து மாதங்கள் நிரம்பப் பெற்றவனுமாகிய ஜீவனை அந்த க்ஷணத்திலேயே ஸூதிவாயுவானது தலை கீழாக்கி ப்ரஸவத்தின் பொருட்டு வெளிப்படும்படி தூண்டுகின்றது. அந்த ஸூதிவாயுவினால் தனது இருப்பிடத்தினின்று அசைக்கப்பட்டுத் தலைகீழாகி வருந்தி மூச்சுவிட முடியாமல் கர்ப்பத்திலிருக்கும்பொழுது உண்டாயிருந்த

நிலைவெல்லாம் மாறி மிகுந்த ஸங்கடத்துடன் வெளிப் படுவான். ரக்தத்தினால் உடம்பு முழுவதும் பூசப்பட்டு பூமியில் விழுந்து புழுபோல் துடிப்பான். கர்ப்பவாஸ காலத்திலிருந்த விவேகம், தலைகீழாய் வெளிப்படும் பொழுதே தொலைந்துபோம். அதற்கு நேரே விபரீத மான புத்தி உண்டாகப் பெற்று மிகவும் ரோதனம் செய்வான். எவ்விதத்திலும் ஸூசனை செய்யாத பிற ருடைய அபிப்ராயத்தை ஜனங்களுக்கு அறிய முடியா தாகையால் சிசுவின் அபிப்ராயத்தை அறியாத மாதா முதலிய ஜனங்களால் போஷிக்கப் படுமவனாகி விபரீத மான உபசாரங்கள் நேரப்பெற்று வருந்துவான். பசி யால் அழுகையில் ஜனங்கள் அதன் அபிப்ராயத்தை அறி யாமல் வயிற்று நோவால் அழுகிறதென்று வேப்பிலைக் கஷாயம் கொட்டுவார்கள். வயிற்று நோவுக்காக அழு மாயின், பசியால் அழுகிறதென்று முலைப்பால் யூட்டுவார் கள். இப்படி விபரீதங்கள் பலவும் நேரப்பெற்று வருந்து வான். அதை வேண்டாமென்று தடுக்கவல்லமை யற் றிருப்பான். கொசு ஈ முதலிய ஜந்துக்களும் பூச்சி புழு முதலியவைகளும் நிறைந்து அசுத்தமான படுக்கை யில் படுக்கவிடப்பெற்று தினவெடுக்கில் சொறிந்து போக்கடித்துக் கொள்ளவும் எழுந்து உட்காருவதற்கும் ஸாமர்த்யமின்றி வருந்தி அழுதுகொண்டிருப்பான். உடம்பில் தோல் முத்தாமல் மிகவும் மென்மைக் கிடமா யிருக்கையால் கடிக்குந்தன்மையுள்ள எறும்பு மூட்டைப் பூச்சி முதலியவைகளும் கொசு முதலியவைகளும் ஒரு புழு மற்றொரு புழுவைக் கடிப்பது போல், இவனைக் கடி த்து வருந்தச்செய்யும். இவன் அவற்றை ஓட்டமுடியாமல் ரோதனம் செய்வான். கர்ப்ப தசையிலிருந்த விவேகம் இவனுக்குச் சிறிதும் இருக்காது. இங்ஙனம் ஜந்து

வயதுவரையிலுமுள்ள சைசவப் பருவத்தை மிக்க வருத்தத்துடன் அனுபவித்து, அதன் பிறகு யௌவனத்திற்குக் கீழுள்ள பௌகண்டமென்னும் பருவம் உண்டாகப் பெற்று அதிலும் பலவகை துக்கங்களை அனுபவிப்பான். தான் விரும்பினவை கிடைக்கப் பெறாமல் அஜ்ஞானத்தினால் கோபம் வளர்ந்து வரப்பெற்றுச் சோகிப்பான். பிறகு யௌவனப் பருவம் நேர்ந்து அதிலும் பல வருத்தங்களை அனுபவிப்பான். அந்த யௌவனப் பருவத்தில் இந்த ஜீவனுக்கு தேஹம் வளர்ந்து வருவதுபோல் துரபிமானமும் கோபமும் வளர்ந்து வருகின்றன. யௌவனப் பருவமுடையவன் அழிந்து போவதற்காகவே சப்தாதி விஷயங்களில் மனம் செல்லப்பெற்றுத் தான் காமுகனாகித் தனக்கு விரோதம் செய்கின்ற பிறரோடு கலஹம் செய்வான். ஜீவன் பிறந்தவுடனே கர்ப்பவாஸ காலத்திலுள்ள விவேகம் தொலையப் பெறுவது மாத்ரமேயன்றி துர்ப்புத்தியும் வீண் பிடிவாதமும் உண்டாகப் பெற்றுப் பஞ்சபூதங்களால் ஏற்பட்டதாகிய தேஹத்தில் 'நான்' என்றும் 'என்னுடையது' என்றும் விபரீதபுத்தி எப்பொழுதும் மாறாதிருப்பான். அந்த தேஹ போஷணத்திற்காகப் பல கர்மங்களைச் செய்கின்றான். அவற்றால் கட்டுண்டு மீளவும் ஸம்ஸாரத்தை அடைகின்றான். புண்ய பாபரூபமான கர்மங்களைச்செய்தால் அவற்றின் பலனை அனுபவிக்கும் பொருட்டுச் சரீரம் உண்டாகப் பெறுவான். சரீரம் உண்டாகையில் அதைப் போஷணம் செய்வதற்காக மீளவும் கர்மங்களைச் செய்வான். இங்ஙனம் புண்ய பாபரூப கர்மங்கள் ஜீவனுக்குச் சரீரஸம்பந்தத்தை விளைத்து அதில் அவனை பந்திக்கின்றன. (எவன் அவித்யையென்று கூறப்படுவதாகிய கர்மத்திற்கு உட்பட்டு க்லேசத்திற்கிடமான வருத்தங்களை விளைப்பதாகிய) தேஹத்தை அடிக்

கடி அநுஸரிக்கின்றானோ, அவன் ஸம்ஸாரத்தினின்று விடுபடமாட்டான். அஸத்துக்களான பார்யைமுதலியவர்களால் தொடரப்பெற்றவனாகி அவர்களுக்கு இஷ்டமானவைகளை நிறைவேற்றிக் கொடுக்கும் பொருட்டுக் கெட்ட வழியில் நின்று பிஸ்ன உதரங்களுக்காக (வயிற்றை நிறைப்பதற்காகவும் ஸ்த்ரீ ஸம்போகத்திற்காகவும்) முயன்று சப்தாதி விஷய ஸுகங்களில் மனக்களிப்புற்றிருப்பானாயின், முன் சொன்னபடி நரகத்தில் போய் விழுவான், அஸத்துக்களோடு ஸஹவாஸம் செய்வானாயின், பொய் பேசாமையும் ஆசாரமும் தயையும் மிதமாகப் பேசுகையாகிற மௌனமும் புத்தியும் வெட்கமும் ஸம்பத்தும் யசஸ்ஸும் பொறுமையும் சம தமங்களும் ஸௌபாக்யமும் ஆகிய இவையெல்லாம் பாழாய் விடும். சப்தாதி விஷயங்களில் விருப்பம் மாறப்பெறாதவர்களும் தேஹத்தையே ஆத்மாவாக ப்ரமித்தவர்களும் மூடர்களும் ஸ்த்ரீகளுக்கு விளையாட்டு ம்ருகம்போல் சொன்னபடி கேட்பவர்களும் 'ஐயோ! இப்படியும் அழிந்து போவாருண்டோ?' என்று விவேகிகளால் சோகிக்கத் தகுந்தவர்களுமாகிய அஸத்துக்களோடு ஸஹவாஸம் செய்யலாகாது. ஸ்த்ரீகளிடத்தில் மனப்பற்று வைப்பதனாலும், அங்ஙனம் மனப்பற்றுடையவரோடு ஸஹவாஸம் செய்வதனாலும் புருஷனுக்கு மதிமயக்கமும் ஸம்ஸார பந்தமும் எப்படி உண்டாகுமோ, அப்படி மற்ற எதனாலும் உண்டாகாது. ஸ்த்ரீகளிடத்தில் மனப்பற்று வைப்பது அனர்த்தத்தையே விளைக்குமன்றி ஒருக்காலும் நன்மையை விளைக்காது. எப்படிப்பட்ட மஹாஜ்ஞானிகளுக்கும் ஸ்த்ரீமோஹத்தைக் கடக்கமுடியாது. நான்முகனைக் காட்டிலும் மேற்பட்ட அறிஞன் மற்றொருவன் இல்லை. அவன் தன் புதல்வியாகிய ஸரஸ்வதியைப் பார்த்து அவ,

ளுடைய ஸௌந்தர்யத்திற்கு மோஹித்து அவளைப் புணர விரும்பினான். அவள் மானுருவம் தரித்துப் போகையில், தானும் ஓர் மானுருவம் தரித்து வெட்கமின்றி அவளைப் பின்தொடர்ந்து க்ரீடித்தான். அந்த ப்ரஹ்மாவால் மரீசி முதலியவர்களும், அவர்களால் கஶ்யப ப்ரஜாபதி முதலியவர்களும், அவர்களால் தேவ மனுஷ்யாதிகளும் ஸ்ருஷ்டிக்கப்பட்டார்கள். அவர்களில் ரிஷியாகிய நாராயணனைத் தவிர மற்ற எந்தப் புருஷன்தான் ஸ்த்ரீரூபமான மாயையால் இழுக்கப்படாத மனமுடையவன்? அவர்கள் எல்லோரும் அம்மாயையால் மதிமயங்கப் பெற்றவர்களே. ஜ்ஞானநிதியாகிய நாராயணனொருவனே அம்மாயையால் மதி மயங்கப் பெறாதவன். ஸ்த்ரீயென்று சொல்லப் படுகிற என்மாயையின் ப்ரபாவத்தைக் காண்பாயாக. இந்த ஸ்த்ரீயானவள் புருவ நெரிப்புமாத்ரத்தினால் திக்குகளையெல்லாம் ஜயித்த ஶூரர்களையும் ஸ்வாதீனம் பண்ணிக் கொள்கிறாள். ஆகையால் பக்தியோகத்திற்குப் பலனான என் ஸ்தானத்திற்கு வர விரும்புவன் என்னைப் பணிந்து ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்ட ஆத்மாவின் உண்மையை அறிந்து ஸ்த்ரீகளிடத்தில் ஒருக்காலும் மனப்பற்று செய்யலாகாது. மோக்ஷத்தில் இச்சையுடையவனுக்கு ஸ்த்ரீகளை நரகத்வாரமென்று சொல்லுகிறார்கள். ஆகையால் ஸ்த்ரீகளிடத்தில் மனப்பற்று செய்யலாகாது. ஶுஶ்ரூஷை முதலிய வ்யாஜத்தினால் எல்லோரும் மதிமயங்கும்படி தேவனால் நிர்மிக்கப்பட்ட ஸ்த்ரீயென்னும் மாயை அணுகுமாயின், அதைத் தனக்கு ம்ருத்யுவென்று நினைக்கவேண்டும். ஸ்த்ரீயைப் பார்த்து 'இவளால் நாம் ஶுஶ்ரூஷை பெறலாம்; ஸம்போகம் பெறலாம்' என்று மதி மயங்கலாகாது. புற்களால் மறைக்கப்பட்ட கிணறுபோல் ஸ்திரீகள் தெரியா

மலே அனர்த்தத்தை விளைப்பார்களென்று நினைத்து அவர்களிடத்தில் மனப்பற்று கொள்ளாதிருக்கவேண்டும். கிணறு புல்மூடப் பெற்றிருக்குமாயின், இது கிண றென்று தெரிந்துகொள்ள முடியாமையால் ஸாதாரண பூமியென்று ப்ரமித்து நடந்து செல்வானாயின், அதில் விழுந்து அனர்த்தப் படுவானல்லவா? அங்ஙனமே ஸ்த் ரீகளைப் பார்க்கும் பொழுது 'இவர்களால் அனர்த்தம் விளையும்' என்று தெரியாமல் 'நாம் இவர்களை மணம் புரிந்தால் ஸுகப்படலாம்' என்று ப்ரமித்து அவர்களி டத்தில் மனப்பற்று செய்வார்களாயின், கடைசியில் நர கத்தில் விழுந்து அனர்த்தப் படுவார்கள். ஆகையால் ஸ்த்ரீகள் புல்மூடின கிணறுபோல் அனர்த்தம் விளைப்பவ ரென்று நினைந்து ஜாக்ரதையுடன் பிழைக்கவேண்டும். இங்ஙனம் மோக்ஷத்தில் விருப்பமுடைய புருஷன் ஸ்த்ரீ களிடத்தில் மனப்பற்று செய்யலாகாதென்று மொழிந் தேன். அங்ஙனமே ஸ்த்ரீகளும் மோக்ஷத்தை விரும்பு வார்களாயின், புருஷர்களிடத்தில் மனப்பற்று செய்யலா காதென்பதை விவரித்துச் சொல்லுகிறேன் கேட்பாயாக. இந்த ஜீவாத்மாவானவன் ஸ்த்ரீகளிடத்தில் மனப்பற்று டையவனாகி மரணகாலத்தில் ஸ்த்ரீகளையே த்யானித்துக் கொண்டிருக்கையால் அடுத்த ஜன்மத்தில் ஸ்த்ரீயாக வே பிறப்பான். தன்னை ஸ்த்ரீயென்று நினைத்துக் கொள் வான். அந்த ஜீவன் புருஷனென்று கூறப்படுவதாகிய என்மாயையைப் பார்த்து மோஹங்கொண்டு 'இவனை நாம் மணம்புரிவோமாயின், இவன் நமக்கு பர்த்தாவா கிப் பணங்களையும் ஆடையாபரணங்களையும் போகத்தை யும் கொடுப்பான்' என்று நினைப்பான். காட்டில் புகுந்து வேட்டையாடுகிறவன் பாடும் பாட்டு மானுக்கு எப்படி அனர்த்தத்தை விளைக்குமோ, அங்ஙனமே அந்தப் புரு

ஷணுகிற மாயையால் தனக்கு அனர்த்தமே விளையுமாகை யால், அதை ம்ருத்யுவாகவே நினைக்கவேண்டும். இங்ஙனம் கர்ப்பத்தில் வஸிப்பது ஜன்மிப்பது முதலாக யௌவனம் வரையிலுள்ள வருத்தங்களையெல்லாம் சொன்னேன். கிழத்தனம் மரணம் முதலிய வருத்தங்களை முன்னமே மொழிந்தேன். இனிமேல் சில ஸந்தேஹங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறேன் கேட்பாயாக. அந்த ஸந்தேஹங்கள் எவை யென்னில், நித்யவஸ்துவாகிய ஆத்மாவுக்கு ஜன்ம மரணங்கள் எப்படி ஸம்பவிக்கு மென்றும், ஸம்பவிக்கில், அந்த ஜன்ம மரணங்களின் ஸ்வரூபம் யாதென்றும், ஸர்வகர்மங்களும் அனுபவத்தினாலேயே க்ஷீணித்துப் போகின்றனவாகையால் ஜீவன் ஒரு சரீரத்தினின்று மற்றொரு சரீரத்திற்கு எங்ஙனம் போவானென்றும், அப்படி வேறு சரீரத்திற்குப் போகும் பொழுது முன்புள்ள பூதஸூக்ஷ்மங்களோடு கூடவே போகின்றானா? அல்லது அவற்றை விட்டுத் தனியே போகின்றானா? என்றும் சில ஸந்தேஹங்கள் உண்டாகக்கூடும். அவற்றிற்கு ஸமாதானம் கூறுகிறேன். முதலில் தேஹத்தைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டவனென்பதைப் பற்றி விவரிக்கிறேன் கேட்பாயாக. ஜீவன், இதுவே ஆத்மாவென்று அபிமானித்திருப்பதும் ஐந்து பூதங்கள் இந்த்ரியங்கள் மனது ஆகிய இவை அடங்கினதுமாகிய ஸூக்ஷ்மசரீரத்துடன் ஒரு ஸ்தூலசரீரத்தினின்று மற்றொரு ஸ்தூலசரீரத்தை அடைந்து, முன்புள்ள ஸ்தூல சரீரத்திலிருக்கும்பொழுது செய்த கர்மங்களின் பலனை அனுபவித்துக் கொண்டே மற்றொருசரீரத்தை விளைவிக்கும்படியான கர்மங்களை இடைவிடாமல் நடத்திக் கொண்டேயிருக்கின்றான்: பஞ்சபூதங்கள் இந்த்ரியங்கள் மனது ஆகிய இவை அடங்கின ஸூக்ஷ்ம தேஹத்தோடு கூடவே

ஜீவன் இந்தச் சரீரத்தைவிட்டுப்போகின்றான். நித்யனான ஆத்மாவுக்கு ஜன்மமும் மரணமும் எப்படி உண்டாகுமென்பதற்கு ஸமாதானம் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஜீவன் ஸ்தூலசரீரத்தை விட்டு ஸூக்ஷ்மசரீரத்தைப் பெறுகையே மரணமாவது. மீளவும் அந்த ஸூக்ஷ்மசரீரத்தை விட்டு ஸ்தூல சரீரத்தைப் பெறுகையே ஜன்மமாவது. ஜீவனுக்கு ஜன்ம மரணங்கள் தேஹத்தைப் பற்றியேயன்றி இயற்கையில் கிடையாது. ப்ருதிவிமுதலிய பூதங்கள் ஸ்பஷ்டமாகத் தோற்றும்படியான ஸ்தூலதேஹம், அவை கண்ணுக்குத் தோற்றாதபடி ஸூக்ஷ்மதசையை அடையுமாயின், அதுவே மரணமென்று கூறப்படும். தேஹத்திற்கு ஸூக்ஷ்மாவஸ்தை உண்டாயின் அதை ஆத்மாவுக்கு மரணமென்று எப்படி சொல்லக்கூடுமென்னில், ஜீவன் அஜ்ஞானத்தினால் அந்த தேஹத்தையே ஆத்மாவென்று அபிமானித்திருக்கிறானாகையால் அதையே ஆத்மாவின் மரணமென்று கூறுகிறார்கள். மீளவும் அந்த ப்ருதிவி முதலிய பூதங்கள் ஸ்தூலதசையை அடைந்து நானென்னும் அபிமானத்துடன் கண்ணுக்குப் புலப்படுமாயின், அதையே ஆத்மாவுக்கு ஜன்மமென்று கூறுகிறார்கள். இங்ஙனம் ஜன்ம மரணங்களின் ஸ்வரூபத்தை விவரித்துச் சொன்னேன். ஜன்ம மரணங்களுக்கு நேரே விஷயமாகிய தேஹத்தைப் பற்றிச் சிறிது சொல்லுகிறேன், கேட்பாயாக. தேஹத்தில் சக்ஷுரிந்த்ரியத்திற்கு ஸ்தானமாகிய ரந்த்ரங்களைக் கண்களென்று சொல்லுகிறோம். அந்தக் கண்களுக்கு வஸ்துக்களைப் பார்க்கும் படியான சக்தி எப்படி இல்லையோ, அப்படியே கேவலமான சக்ஷுரிந்த்ரியத்திற்கும் வஸ்துக்களைப் பார்க்கும்படியான சக்தி இல்லை. ஆத்மாவோடு ஸம்பந்தம் உண்டானால்தான் அவ்விந்த்ரியத்திற்கு அந்தச் சக்தி

உண்டாகும். ஆகையால் பார்க்கிறவன் ஆத்மாவேயன்றி இந்த்ரியமன்று. இங்ஙனம் தானே ஸ்வதந்த்ரமாய்ப் பார்க்குந் திறமையற்றதாகிய சக்ஷுரிந்த்ரியத்தை ஆத்மாவென்று எப்படி நினைக்கலாகாதோ, அங்ஙனமே அசேதனமான தேஹத்தையும் ஆத்மாவென்று நினைக்கலாகாது. தேஹம் ஸ்தூலஸூக்ஷ்மதசைகளை அடைவதாகையால் மாறுந்தன்மையது. ஆத்மா என்றும் மாறாதிருக்குந்தன்மையன். உத்பத்தியும் மரணமும் தேஹத்திற்கு நேராகவே ஸம்பவிக்கின்றன. ஆத்மாவுக்கு தேஹத்தின் மூலமாய் உண்டாகின்றன. ஆகையால் தேஹத்தின் ஜன்மமரணாதிகளைப் பற்றி பயப்படலாகாது. புத்ரமரணாதிகளைப் பற்றி வருத்தமும் கொள்ளலாகாது. ஆனால் எப்படி இருக்கவேண்டுமென்னில், ஸுக துக்கங்களிரண்டையும் ஸமமாக நினைத்துப் பரப்ரஹ்மத்திற்கு உட்பட்டிருப்பவனும் ப்ரக்ருதியைக் காட்டிலும் வேறுபட்டவனுமாகிய ஆத்மாவின் ஸ்வரூபத்தை அறிந்து தேஹத்திலும் பிள்ளைபெண்டிர் முதலிய மற்றவரிடத்திலும் க்ருஹம் க்ஷேத்ரம் முதலியவற்றிலும் பற்றின்றி இவ்வுலகத்தில் தர்மத்தை அனுஷ்டிக்கவேண்டும். ஆத்மாவின் உண்மையைப் பற்றின அறிவும் பரமபுருஷன் தவிர மற்ற எவ்விஷயத்திலும் ப்ரீதியில்லாமையாகிற வைராக்யமும் அமைந்து சாஸ்த்ரங்களை ஆராய்ந்தறிவதால் கலக்கமற்றிருக்கின்ற புத்தியுடன், பகவானுடைய மாயையினால் மேற்பட்டதாகிய இவ்வுலகத்தில் தேஹத்தில் ஆஸக்தியின்றி நிவ்ருத்தி தர்மத்தை ஆசரிக்கவேண்டும். இவ்வுலகம் பகவானுடைய மாயையினால் ஸ்ருஷ்டிக்கப் பட்டதாகையால் இதிலுள்ள ஒவ்வொருவஸ்துவும் மதிமயக்கத்தை விளைவித்துக் கெட்டவழியில் மூட்டி ஆத்மாவை அழித்து விடும். ஆகையால் எதிலும் பற்றின்றி மனவூக்

கத்துடன் பகவானுடைய சரணாரவிந்தங்களே நமக்குச் சரணமென்று பாவித்திருக்கவேண்டும். தேஹத்திலும் மனப்பற்று செய்யலாகாதென்னில், மற்ற பிள்ளைபெண்டிர் முதலியவரிடத்திலும் க்ருஹ க்ஷேத்ராதி விஷயத்திலும் மனப்பற்று கூடாதென்று தனியே சொல்லவேண்டுமோ? ஆகையால் எதிலும் பற்றின்றி பகவானுடைய பாதாரவிந்தங்களையே த்யானித்துக்கொண்டு என்று சரீரம் கழியுமோவென்று மரணகாலத்தையே எதிர்பார்த்துக் கொண்டு நிவ்ருத்தி தர்மத்தினின்று நிலைமாறாதிருக்கவேண்டும். முப்பத்தொன்றாவது அத்யாயம் முற்றிற்று.

---

புண்யம் செய்பவருக்கும் பாப்ரஹ்மோபாஸகர்களுக்கும் நேரும் கதியைச் சொல்லுதல்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான்:—வாராய் மாதாவே! க்ருஹஸ்தாஸ்ரமத்தில் இருந்துகொண்டு அந்த க்ருஹஸ்தாஸ்ரமத்திற்கு ஏற்பட்ட தர்மங்களையே முக்யமாக ஆசரிப்பவனாகி அந்த ஆஸ்ரமதர்மங்களையும் அர்த்த காமங்களையும் மேன்மேலும் வளர்த்துக் கொண்டு வருகிறவன் மீளவும் அந்த தர்மங்களையே பாதுகாக்கப் பெறுவான். அங்ஙனம் கேவலக்ருஹஸ்தாஸ்ரம தர்மங்களையே ஆசரிக்கிறவன் சப்தாதிவிஷயங்களில் மனப்பற்றுடையவனாகி அதனால் மதிமயங்கி பகவானைப் பணிகையாகிற முக்யதர்மத்தினின்று நழுவி ஸ்ரத்தையுடன் (ப்ரவ்ருத்தி தர்மங்களை அனுஷ்டிக்கும் த்வரையுடன்) கூடி யாகங்களால் தேவதைகளையும் பித்ருக்களையும் ஆராதிப்பான். அங்ஙனம் பித்ருக்களையும் இந்த்ராதியான ப்ராக்ருத தேவதைகளையும் ஆராதிப்பதில் ஸ்ரத்தை தலையெடுக்கப்

பெற்று அதனால் பகவத் தர்மத்தில் மதி செல்லப் பெறாத வனாகி அந்தப் பித்ருதேவதைகளுக்காகவும் இந்த்ராதி தேவதைகளுக்காகவும் வ்ரதங்களை ஆசரித்துக்கொண்டு ஸோமயாகம் செய்த புருஷன் (தூமம் ராத்ரி அபர பக்ஷம் தக்ஷிணாயனம் பித்ருலோகம் ஆகாசம் சந்த்ரன் என்னும் க்ரமத்தில்) சந்த்ரலோகத்தை அடைந்து மீளவும் (ஆகாசம் வாயு தூமம் மேகம் என்னும் க்ரமத்தில்) இறங்கி பூமிக்கு வந்து சேருவான். இங்ஙனம் க்ருஹஸ்த தர்மங்களை அனுஷ்டித்துச் சந்த்ராதி லோகங்களை அடைபவன் அந்த லோகங்களில் ஶாஶ்வதமாயிருக்க நேராமல் அங்கிருந்து நழுவி பூலோகத்திற்கு வருவானாயின், அந்தப் புண்யலோகங்களைப் பெறுதற்காக எவன் ப்ரயத்னம் செய்வான்? மற்றும், ஆதிசேஷனை ஆஸனமாகக் கொண்டு வீற்றிற்கும் பகவான் அந்த ஆதிசேஷனாகிற படுக்கையில் சயனித்துக்கொள்ளும்பொழுது கேவல க்ருஹஸ்ததர்மத்தையே ஆசரிப்பவர் அடையும்படியான புண்ய லோகங்களெல்லாம் நாசம் அடைகின்றன. புண்யலோகங்கள் கல்பம் முடியும் வரையிலுமே நிலையாயிருக்கும். கல்பாவஸானத்தில் பகவான் உலகங்களையெல்லாம் ஸம்ஹரிக்கும் போது அந்தப் புண்யலோகங்களும் நாசம் அடைகின்றன. கேவல தர்மத்தை அனுஷ்டிக்கிறவர்கள், அக்காலம் வரையிலுங்கூட அவ்வுலகங்களில் நிலைநிற்பவரல்லர். இனி மேல் பரப்ரஹ்மோபாஸனம் செய்பவர்க்கு நேரும் கதியைச்சொல்லுகிறேன் கேட்பாயாக. எவர்கள் தீரர்களாகி இந்த்ரியங்களை வென்று காமத்திற்கும் அர்த்தத்திற்கும் காரணமான வர்ணாஶ்ரம தர்மங்களையே முக்யமாக அனுஷ்டிக்காமல் அஸத்துக்களோடு ஸஹவாஸமின்றித்தான் செய்யும் கர்மங்களையெல்லாம் பகவானிடத்தில் ஸமர்ப்பித்து சமதமாதி குணங்கள் நிறைந்தவரும் தமக்கு ஏற்

பட்ட தர்மங்களை அனுஷ்டிப்பதனால் மனத்தூய்மையு டையவரும் பகவானுடைய குணங்களைக்கேட்பதும்அவற் றைக் கீர்த்தனஞ் செய்வதுமாகிய நிவ்ருத்தி தர்மத்தில் ஊக்க முடையவரும் பஞ்சமஹாயஜ்ஞாதி கர்மபலன் களை பகவானிடத்தில் அர்ப்பணம் செய்திருப்பவரும் (ஸாத்விக த்யாகத்தோடு கர்மங்களைச் செய்பவரும்) தமக்கு ஏற்பட்ட தர்மங்களைத் தவறாமல் அனுஷ்டிப்பத னால் ஸத்வம் தலையெடுக்கப் பெற்றவரும் பகவானிடத்தில் பக்தி மாறாமையால் பரிசுத்தமான மனமுடையவரும் அஹங்கார மமகாரங்களற்றவருமா யிருப்பார்களோ, அவர்கள் ஸூர்ய மண்டலத்தின் வழியாய் (அர்ச்சிஸ்ஸு அஹஸ்ஸு சுக்லபக்ஷம் உத்தராயணம் ஸம்வத்ஸரம் வாயு ஸூர்யன் சந்த்ரன் வித்யுத்து வருணன் இந்த்ரன் ப்ரஹ்மா என்னும் க்ரமத்தையுடைய அர்ச்சிராதி மார்க் கத்தினால்) பரமபுருஷனைப் பெறுகின்றார்கள். எவன் ஸர் வஜ்ஞனென்று வேதங்களால் ஓதப்படுகிறானோ, எவன் இந்த உலகத்தின் பந்த மோக்ஷங்களுக்குக் காரணமாயி ருக்கின்றானோ (இவ்வுலகத்திலுள்ளவர் அனைவர்க்கும் ஸம்ஸார பந்தமும் அதினின்று விடுபடுதலாகிற மோக்ஷ மும் எவனால் உண்டாகின்றனவோ); எவன் உலகத் தில் எல்லோரிலும் மேற்பட்டவனென்று புகழப்பெற்ற ப்ரஹ்மாதிகளும் தனக்குத் தாழ நிற்கும்படி ஸர்வேஸ்வ ரனாயிருக்கின்றானோ; எவன் இவ்வுலகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நடத்துகிறானோ; அப்படிப்பட்ட பரமபுருஷனைப் பெறுகின்றார்கள். பரமபுருஷனை உபாஸிப்பவர்களான யோகிகள் இரண்டு பரார்த்தங்களோடு முடியும்படியான ப்ரஹ்மாவின் ப்ரளய காலம் வரையில் ப்ரஹ்மலோகத்தில் வாஸஞ் செய் கின்றார்கள். பூமி ஜலம் அக்னி வாயு ஆகாசம் மனது

இந்த்ரியங்கள் சப்தாதி விஷயங்கள் தாமஸாஹங்காரம் இவை முதலியவற்ருல் சூழப்பட்ட ப்ரஹ்மாண்டத்தை ஸம்ஹரிக்க விரும்பி ஸ்தூல தசையை அடைந்த சேதனு சேதனங்கள் அடங்கின ஜகத்தைச் சரீரமாகவுடைய பகவான் நாமரூபங்களுக்கு இடமல்லாமல் ஸூக்ஷ்மாவஸ்தையை அடைந்த சேதனு சேதனங்களைச் சரீரமாகவுடைத்தாயிருக்குந் தசையை எப்பொழுது அடைகின்ருனே, அப்பொழுது ப்ரஹ்மதேவன் இரண்டு பரார்த்தங்கள் அடங்கின தனது வாழ்நாளை அனுபவித்து அந்தப் பரமபுருஷனை அடைகின்ருன். அங்ஙனமே, தந்தமது புண்யகர்மங்களால் ப்ரஹ்மலோகத்தை அடைந்த யோகிகள் எவரெவர் உண்டோ, அவர்களும் ப்ராணன்கள் இந்த்ரியங்கள் இவற்றை ஸ்வாதீனப்படுத்திக் கொண்டு தமக்கு ப்ராப்யமான (அடையத் தகுந்ததாகிய) பரப்ரஹ்மத்தைத் தவிர மற்ற அணிமாதி அஷ்டைச்வர்யங்களில் விருப்பமற்று தேஹத்தையே ஆத்மாவென்று நினைக்கையாகிற தேஹாத்மாபிமானமும் தம்மைத் தாம் ஸ்வதந்த்ரர்களென்று நினைக்கையாகிற ஸ்வதந்த்ராத்மாபிமானமும் தொலையப்பெற்று அந்த ப்ரஹ்மதேவனோடு கூடவே பரமபுருஷனைப் பெறுவார்கள். அவன் எல்லோரிலும் மேற்பட்டவனும் ஸ்வரூபத்தாலும் குணங்களாலும் மிகுந்த பெருமையுடையவனும் புராண புருஷனுமாயிருப்பவன். இப்படிப்பட்ட பரமபுருஷனை உபாஸிப்பவர் அவனுடைய ஸ்தானமாகிய பரம பதத்திற்கே நேரில் போய்ச் சேரவேண்டுமென்றி ப்ரஹ்ம லோகத்திற்குப் போய் அங்கு ப்ரளயம் வரையிருந்து அந்த ப்ரஹ்மாவுடன் பரமபுருஷனைப் பெறுவதற்குக் காரணமென்னெனில், சொல்லுகிறேன் கேட்பாயாக. இங்கு பகவானை உபாஸிக்கத் தொடங்கினவர் அந்த உபாஸனம் நிறைவேறுதற்கு முன்

னமே இடையில் மரணம் அடைவார்களாயின், அவர்கள் பகவானை உபாஸிக்கத் தொடங்கின மஹிமையால் ப்ரஹ்மலோகம் போய்ச் சேர்ந்து அங்கு ப்ரஹ்மோபாஸனம் நிறைவேறப் பெற்று ப்ரளயம் வரையில் அங்கேயே இருந்து ப்ரஹ்மதேவனுடன் பரமபதம்போய்ச் சேருவார்கள். இங்கு பக்தியோகம் நிறைவேறப் பெற்றவர் காலவிளம்பமில்லாமல் அர்ச்சிராதி மார்க்கத்தினால் பகவானை அடைகின்றார்கள். வாராய் மடந்தையர் மணியே! ஆகையால் ஸமஸ்த பூதங்களின் ஹ்ருதய கமலத்திலும் வாஸஞ்செய்பவனாகிய அந்த பகவானையே நீயும் ஸர்வ ப்ரகாரத்தாலும் சரணம் அடைவாயாக. அவனுடைய ப்ரபாவங்களையெல்லாம் நான் சொல்லக் கேட்டாயல்லவா? அத்தகைய வைபவங்களையுடைய அந்தப் புருஷனை 'இவனே நமக்கு மாதாவும் பிதாவும் ப்ராதாவும் புத்ரனும் நண்பனும் ரக்ஷகனும்' என்று நினைத்துச் சரணம் அடைவாயாக. ப்ரஹ்ம லோகவாஸிகளும், தேஹாத்மாபிமானமும் ஸ்வதந்த்ராத்மாபிமானமும் தொலையப் பெறுவார்களாயின், அப்பொழுதே அவர்கள் பகவானைப் பெறுவார்கள். இவ்வுலகத்திலுள்ளவர் ஏதேனுமொரு புண்ய விசேஷத்தினால் ப்ரஹ்மலோகம் போய்ச் சேர்ந்து, பலன்களை விரும்பாமல் கர்மத்தை அனுஷ்டித்துக் கொண்டிருப்பினும் தேஹாத்மாபிமானம் முதலியவை மாறாதிருப்பார்களாயின், அவர்கள் மீளவும் ஸம்ஸாரத்தில் வந்து விழுவார்களேயன்றிப் பரமபுருஷனைப் பெறமாட்டார்கள். மற்ற தேஹாத்மாபிமானிகள் ஸம்ஸாரம் நீங்கப்பெறமாட்டார்களென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? ஸ்தாவர ஜங்கமங்கள் அடங்கின ஜகத்தையெல்லாம் படைக்கின்றவனும் வேதங்களையெல்லாம் ஓதியுணர்ந்தவனுமாகிய ப்ரஹ்மதேவனும் மரீசிமுதலிய மஹர்ஷிகளும்

யோகேஶ்வரர்களான ஸனத்குமாராதிகளும் யோகப்ரவர்த்தகர்களான மற்றுமுள்ள ஸித்தர்களும் பலன்களில் விருப்பமின்றிக் கர்மங்களை அனுஷ்டித்துக் கொண்டிருப்பார்களாயினும், நாம் பரப்ரஹ்மத்திற்கு உட்படாமல் ஸ்வதந்த்ரமாயிருப்பவரென்கிற ஸ்வதந்த்ராத்மாபிமானமும் தேஹமே ஆத்மாவென்கிற தேஹாத்மாபிமானமும் மாறுதிருப்பார்களாயின் ஸூக்ஷ்ம சேதநு சேதனங்களைச் சரீரமாகவுடைய பரப்ரஹ்மத்தினிடத்தில் மறைந்திருப்பார்களன்றிப் பரமபதம் சென்று அங்குப் பரமபுருஷனை அனுபவிக்கையாகிற மோக்ஷத்தைப் பெறமாட்டார்கள். அந்த ப்ரஹ்மதேவன் ஸூக்ஷ்ம சேதநு சேதனங்களோடு கூடின பரமபுருஷனிடத்தில் மறைந்திருந்து அந்தப் பரமபுருஷன் மீளவும் உலகங்களைப் படைக்க வேண்டுமென்று ஸங்கல்பிக்கும் பொழுது ஈஶ்வர ஸ்வரூபமாகிய காலத்தினுல் ஸத்வ ரஜஸ் தமோகுணங்களுக்கு வைஷம்யம் உண்டாகையில் முன்போலவே பிறக்கின்றுன். ப்ரஹ்மாவாயிருக்கையாகிய மேன்மையும் புண்ய கர்மங்களால் விளையக்கூடியதாகையால் கர்மாதீனமாய் வருவதே. அதை அனுபவித்த பின்பு பரம புருஷனிடத்தில் மற்றை உலகங்களைப்போல் தானும் லயத்தை அடைந்து மீளவும் ஸ்ருஷ்டி காலத்தில் வருகின்றுன். இங்ஙனம் பலன்களில் அபிஸந்தியில்லாமல் கர்மங்களை அனுஷ்டிப்பவர்களும் தேஹாத்மாபிமானுதிகள் உடையவராயிருப்பின், ஸம்ஸாரத்தை அடைவார்களேயன்றி மோக்ஷம் பெறமாட்டார்கள். இப்படியிருக்க, ஸாம்ஸாரிக பலன்களை விரும்பிக் கர்மங்களைச் செய்கிற தேஹாத்மாபிமானிகள் ஸம்ஸாரத்தினின்று விடுபடமாட்டார்களென்பதில் ஸந்தேஹம் உண்டோ? ஐஶ்வர்யங்களில் ப்ரஹ்மாவாயிருக்கையே மேலானது. அந்தப்ப்ரஹ்ம பதம்

வரையிலுமுள்ள ஐஶ்வர்யங்களில் மனவிருப்பமுடைய வராகி அவற்றை நிறைவேற்றிக் கொடுக்கும் கர்மங்களை அனுஷ்டிப்பதில் ஶ்ரத்தையுடன், சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்படாத காம்ய கர்மங்களையும் நித்ய கர்மங்களையும் ஸ்வர்க்காதி பலன்களுக்காகச் செய்கின்றார்கள். ரஜோ குணத்தினால் மனம் கலங்கப் பெற்றவராகி அந்தந்த பலன்களை விரும்பி இந்த்ரியங்களை அவற்றில் போக வொட்டாமல் தடுக்க வல்லமையின்றி க்ருஹஸ்த தர்மங்களில் மனம் செல்லப் பெற்றுப் பிறகு தேவதைகளை ஆராதிக்கின்றார்கள். ஈஶ்வரனுடைய வீரச் செயல்கள் எத்தனை காலம் சொல்லினும் அவை முடிபவையல்ல. சொல்பவனுக்குச் சொன்னது போதுமென்று த்ருப்தியும் உண்டாகாது. அப்படிப்பட்ட வீரச்செயல்கள் பலவும் உண்டு. அவன் ஸங்கல்பித்த மாத்ரத்தில் அவனைப் பற்றினருடைய பாபங்களெல்லாம் பறந்துபோம். அவனைப் பணிபவர் ஸம்ஸாரம் வேரோடு தீரப் பெறுவார்கள். அவன் மதுவென்னும் அஸுரனைக் கொன்றாற்போல் தன்னைப் பற்றினருடைய விரோதிகளை யெல்லாம் போக்கும் திறமையுடையவன். இப்படிப்பட்ட மஹானுபாவனான பரம புருஷனுடைய கதையில் விமுகராகி (மனம் செல்லப் பெறாதவராகி) தர்ம அர்த்த காமங்களையே முக்யமாகக் கொண்டு திரிகின்றார்கள். மற்றும். தன்னைப் பற்றினவர்களைக் கைவிடாத பகவானுடைய அம்ருதம் போன்ற கதையைத் துறந்து, பன்றி முதலியவை அமேத்யத்தை ஆவலுடன் ஆராய்வதுபோல அஸத்துக்களின் பாடல்களைக் கேட்கின்றார்கள். இவர்களெல்லோரும் தெய்வத்தினால் வஞ்சிக்கப் பெற்றவர்கள். (இவர்கள் பாழாகட்டும் என்று தெய்வத்தினால் விபரீதத்தில் புத்தி செல்லும்படி தூண்டப் பெற்றவர்கள்.

ஆகையால் அவர்கள் எல்லாரும் தெய்வத்தினால் அடியுண்டவர்களென்றே கூறலாம்). 'அவர்களுக்கு விளையும் கதி என்?' என்னில் சொல்லுகிறேன். அவர்கள் ஸூர்யனுக்குத் தென்புறத்திலுள்ள மார்க்கத்தினால் (தூமாதி மார்க்கத்தினால்) பித்ருலோகம் போய்ச் சேருகின்றார்கள். அவ்விடத்தினின்று மீளவும் தமது புத்ராதிகளிடத்தில் பிறக்கின்றார்கள். பிறகு கர்ப்பாதானம் முதல் ஶ்மஶானம் வரையிலுள்ள ஸம்ஸ்காரங்களைப் பெற்று மீளவும் பரலோகம் சென்று அங்கு ஸுகங்களை அனுபவித்துப் புண்யம் க்ஷீணிக்கப்பெற்று அங்குள்ள தேவதைகளால் அந்த க்ஷணமே போகத்தினின்று தள்ளுண்டவராகி மேன்மையெல்லாம் தொலைந்து ஜன்மாந்தர கர்மத்திற்கு உட்பட்டு மீளவும் இந்த லோகத்தில் வந்து விழுகின்றார்கள். இங்ஙனம் காம்யகர்மங்களை அனுஷ்டிப்பவர்க்கு விளையும் கதியைச் சொன்னேன். இவர்கள் போவதும் வருவதுமாகி ஸுகதுக்கங்களை அனுபவித்துக் கொண்டிருப்பார்களேயன்றி ஸம்ஸாரத்தினின்று விடுபடமாட்டார்கள். ஆகையால், மாதாவே! நீ ஈஶ்வரனே எல்லாவுறவு முறையுமென்று நினைத்துப் பரமபதத்தில் வாஸஞ் செய்பவனும் நித்ய முக்தர்களால் ஆராதிக்கப்படுகின்ற பாதாரவிந்தங்களை யுடையவனுமாகிய அந்த ஸர்வேஶ்வரனையே பக்தியுடன் பஜிப்பாயாக. அவனுடைய கல்யாண குணங்களை நான் சொல்லக் கேட்டாயல்லவா? அவற்றை மனத்தில் நினைத்துக் கொண்டிருப்பாயாயின் அவனிடத்தில் பக்தி தானே உண்டாகும், பக்தியோகத்திற்கு வைராக்யமன்றோ முக்யமாயிருக்க வேண்டும். அது இல்லாமல் எனக்கு பக்தியோகம் எப்படி உண்டாகும்?' என்று நீ சிந்திக்க வேண்டாம். ஸ்ரீவாஸுதேவனுடைய குணங்களை நினைத்து அவ

னிடத்தில் ப்ரீதி செய்கையாகிற பக்தியோகத்தைச் செய்யத் தொடங்குவாயாயின், அது வைராக்யத்தை விளைவிக்கும். அந்த வைராக்யத்தினால் பக்தியோகம் நிறைவேறும். அதனால் பகவானுடைய ஸாக்ஷாத்காரம் உண்டாகும். 'பக்தியோகஞ் செய்யத் தொடங்கினவன் எப்பொழுது பாப்ரஹ்மத்தை ஸாக்ஷாத் கரிப்பான்?' என்னில், சொல்லுகிறேன். இந்த பக்தியோகம் செய்கிறவனுடைய மனம் அனுகூலமாயும் ப்ரதிகூலமாயுமுள்ள சப்தாதி விஷயங்களைப் பெற்றுக் கண் காது முதலிய இந்த்ரியங்களுடைய வ்யாபாரத்தின் மூலமாய் அனுகூல விஷயங்களை இவை ப்ரியமென்றும், ப்ரதிகூல விஷயங்களை இவை அப்ரியமென்றும் நினைத்து வைஷம்யத்தை அடையும் நிலை நீங்கி இரண்டிலும் ஸமமாயிருக்கும் நிலைமை எப்பொழுது உண்டாகப் பெறுமோ; மற்றும், இவனுடைய மனது சப்தாதி விஷயங்களில் பற்றின்றி இவை நமக்கு வேண்டாமென்றும் இவை நமக்கு வேண்டுமென்றும் நினைக்காமல் எல்லாம் பாப்ரஹ்மஸ்வரூபமேயாகையால் ஒருவகைப்பட்டதேயென்று நினைத்து ஒன்றிலும் பேதம் பாராட்டாமல் சுபாஸ்ரயமான பரம புருஷனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தை த்யானிப்பதில் நிலைபெறுமோ, அப்பொழுது அத்தகைய மனத்தினால் ஈஸ்வரனுடைய ஸாக்ஷாத்காரம் உண்டாகப் பெறுவான். ஜகத்தையெல்லாம் பாப்ரஹ்மமாக நினைப்பது எங்ஙனம் சேருமென்னில், ஜ்ஞானமே வடிவமாயிருக்கப் பெற்றவனும் பரப்ரஹ்மம் பரமாத்மா ஈஸ்வரன் புருஷன் என்று கூறப்படுபவனுமாகிய பகவானொருவனே ஒன்றொடொன்று விலக்ஷணமான ப்ருதிவி முதலிய தத்வங்களாகத் தோற்றுகிறான். பகவானை யொழிந்த வஸ்து எதுவுமே

இல்லை. தேவமனுஷ்யாதியான ஸமஸ்த வஸ்துக்களுக்கும் அந்தராத்மாவாயிருப்பவன். அவன் அவற்றின் நாமங்களால் அவனே கூறப்படுகின்றான். ஆகையால் ஜகத்தெல்லாம் பரப்ரஹ்மமேயென்று நினைப்பது நன்றாகப் பொருந்தும். யோகிகளுக்கு வைராக்யம் முதலிய அங்கங்களோடு கூடின பக்தியோகத்தினால் விளையும் பலன் யாதெனில், எல்லையில்லாத ஆநந்த ரூபமாயிருப்பதும் பரமபுருஷார்த்தமென்று கூறப்படுவதுமாகிய அபஹத பாப்மத்வம் (பாபமற்றிருக்கை) முதலிய குணங்கள் அமைந்த தன் ஸ்வரூபம் தோற்றப் பெறுகையும், ப்ரக்ருதி ஸம்பந்தம் முழுவதும் நீங்கப் பெறுகையுமாகிற இவ்வளவே பக்தியோகத்தினால் உண்டாகும் பலன். ஜீவன் இயற்கையில் ஸத்வாதி குணங்களில்லாதவன்; ஜ்ஞானஸ்வரூபன்; ஒருபடிப்பட்டவன். அவன் பிறர்க்கு விஷயங்களை அறிவிக்குந் தன்மையுள்ள இந்த்ரியங்களால், சப்தாதிகளை குணமாகவுடைய ப்ருதிவி முதலிய பஞ்ச பூதங்களால் ஏற்பட்ட தேவ மனுஷ்யாதி சரீரமாகவே தன்னை ப்ரமிக்கின்றான். மஹத்தத்வமும் வைகாரிகம் தைஜஸம் பூதாதி என்று மூன்றுவகைப்பட்ட அஹங்காரமும் அதினின்றுண்டான பஞ்ச மஹா பூதங்களும் ஜ்ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் மனது ஆகிய பதினொரு இந்த்ரியங்களும் இந்தத் தத்வங்களாலேற்பட்டதான ப்ரஹ்மாண்டமும் ப்ரஹ்ம தேவனும் ஆகிய இவை யெல்லாம் எவனிடத்தினின்று உண்டாயினவோ, அந்தப் பரம புருஷனுக்கே சரீரமா யிருப்பவை. இதுவே இவற்றினுடைய உண்மையான ஸ்வரூபம். ஜீவன் ஶ்ரத்தையும் பக்தியும் வைராக்யமும் ஆகிய இவைகளால் மனவூக்கம் உண்டாகப் பெற்று வேறு விஷயங்களில் மனப்பற்றின்றி விரக்தனாயிருப்பானாயின், இந்த ஜகத்தெல்லாம் 'பரப்ரஹ்மமே

யென்னும் புத்தி உண்டாகப் பெறுவான். வாராய் மாதாவே! மேன்மைக்கிடமாயிருப்பவளே! ப்ரக்ருதி ஜீவன் ஈச்வரன் ஆகிய இம்மூன்று தத்வங்களின் உண்மையை அறிவிப்பதும் பரப்ரஹ்மத்தினுடைய ஸாக்ஷாத்காரத்தை விளைவிப்பதுமாகிய ஜ்ஞானத்தை உனக்கு இங்ஙனம் மொழிந்தேன். ஜ்ஞானயோகத்தையும் (ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணமாயிருப்பவனும் பரப்ரஹ்மத்திற்குச் சரீரமாகி அதற்கு உட்பட்டவனுமாகிய ப்ரத்யகாத்மாவின் ஸ்வரூபத்தை உபாஸிக்கையாகிற ஜ்ஞானயோகத்தையும்) ஸத்வாதி குணங்களின் ஸம்பந்தத்தைப் போக்குவதும் என்னைப் பற்றினதுமாகிய பக்தியோகத்தையும், இந்த ஜ்ஞானயோக பக்தியோகங்களிரண்டிக்கும் பகவானைப் பெறுகையே பலனென்பதையும் உனக்குச் சொன்னேன். ஜ்ஞானயோகம் பக்தியோகம் இரண்டுகளாலும் பகவானையே பெறுவது எப்படியென்னில், ரூபம் ரஸம் முதலிய வெவ்வேறு விஷயங்களையுடைய கண் நாக்கு முதலிய இந்த்ரியங்களால் அந்த ரூபம் ரஸம் முதலிய பல குணங்களுக்கு இடமான பால் முதலிய வஸ்துவானது பலவாறாக அறியப்படுகின்றது. பாலெனப் படுகிற ஒரு வஸ்துவே ரூபத்தை அறியுந் தன்மையுடைய சக்ஷுரிந்த்ரியத்தினால் (கண்ணால்) வெளுப்பு குணமுடையதாகவும், ரஸத்தை அறியுந் தன்மையுடைய ரஸனேந்த்ரியத்தினால் (நாக்கினால்) தித்திப்பு குணமுடையதாகவும், ஸ்பர்சத்தை அறியுந் தன்மையுடைய த்வகிந்த்ரியத்தினால்(தோலால்)குளிர்மை சூடுகை முதலிய குணங்களுடையதாகவும் எங்ஙனம் அறியப்படுகின்றதோ, அங்ஙனம் பகவானொருவனே சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட அந்தந்த மார்க்கங்களால் ஆராத்யனாகவும் (ஆராதிக்கத் தகுந்தவனாகவும்) ப்ராப்யனாக

வும் (அடையத் தகுந்தவனாகவும்) அறியப்படுகின்றான். சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட மார்க்கங்கள் தான் எவை யென்னில் சொல்லுகிறேன், கேட்பாயாக., பஞ்ச ராத்ர சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட பூஜாவிதானமும் வேதத்தின் பூர்வபாகத்தில் சொன்ன யஜ்ஞங்களும் ஸ்ம்ருதிகளில் விதித்த தானமும் சாந்த்ராயணம் முதலிய வ்ரதங்களை அனுஷ்டிக்கையாகிற தவமும், வேதாத்ய யனம் செய்வதும், வேதத்தின் அர்த்தங்களை ஆராய்வ தும், மனத்தை அடக்குகையும், மற்ற இந்த்ரியங்களை அடக்குகையும், பலன்களை விரும்பாமல் கர்மங்களை அனுஷ்டிக்கையும், பலவகை அங்கங்களோடு கூடின பக்தியோகமும், அங்ஙனமே பலவகை அங்கங்களோடு கூடின ஜ்ஞானயோகமும், பலன்களை விரும்பிச் செய்யுந் தர்மமாகிய ப்ரவ்ருத்தி தர்மமும், பலன்களை விரும்பா மல் செய்யுந் தர்மமாகிய நிவ்ருத்தி தர்மமும், ஆத்மா மாவின் உண்மையை அறிகையாகிற ஜ்ஞானயோகமும், திடமான வைராக்யமும் ஆகிய இவைகளால், நற்குணங் களுக்கெல்லாம் இருப்பிடமும் துர்க்குணங்கள் தீண்டப் பெறாதவனும் ஸ்வயம்ப்ரகாசனுமாகிய பகவானொருவனே அடையப்படுகின்றான். யாகாதிகர்மங்களால் இந்த்ராதி தேவதைகளை ஆராதித்து ஸ்வர்க்காதி பலன்களைப் பெறுகின்றார்களாயினும், அவ்விந்த்ராதி தேவதை களுக்கு அந்தராத்மாவாயிருந்து யாகாதிகளால் ஆரா திக்கப்பெற்று ஸ்வர்க்காதிபலன்களைக் கொடுக்கிறவன் பகவானே. யாகாதிகர்மங்களும் ஸ்வர்க்காதிபலன் களும் அவனே. அவனை நேரே ஆராதிப்பவர் மோக்ஷ மென்கிற அழியாத பலனையும், இந்த்ராதி தேவதைகள் மூலமாய் அவனை ஆராதிப்பவர் அழியுந்தன்மையுள்ள ஸ்வர்க்காதி பலன்களையும் பெறுகின்றார்கள். ஆகையால்

ஜ்ஞானயோக பக்தியோகாதிகளெல்லாம் அந்தப் பரம புருஷனைப் பற்றினவைகளே. ஸாத்விகம் ராஜஸம் தாமஸமென்று பக்தியோகம் மூன்று வகைப் பட்டிருக்கும். அவற்றில் ஸாத்விகபக்தியோகம் இரண்டு விதமாயிருக்கும். அவற்றில் ஒன்று பலனை விரும்பிச் செய்யப்படுவதாம். மற்றொன்று பலனை விரும்பாமல் செய்யப்படுவதாம். பலனை விரும்பாமல் செய்யப்படும் பக்தியோகத்தையே நைர்க்குண்யபக்தியோகமென்று மொழிவார்கள். இந்த பக்தியோகத்தை அனுஷ்டிக்கும் ஜீவன் ஸத்வாதி குணங்களின் ஸம்பந்தம் நீங்கி ஸம்ஸாரமற்றுப் பரமபுருஷனைப் பெறுவான். இங்ஙனம் நான்குவகைப்பட்ட பக்தியோகத்தின் ஸ்வரூபத்தையும் உனக்கு மொழிந்தேன். வஸ்துக்களில் புகுந்து 'இன்னின்ன வஸ்துவுக்கு இவ்வளவே நிலைமை என்று பரிச்சேதிப்பதும் ஸ்பஷ்டமாகத் தோற்றுகின்ற கண் காது முதலிய இந்த்ரியங்களால் அறியக் கூடாத கதியுடையதுமாகிய காலத்தின் ஸ்வரூபத்தையும் கூறினேன். வாராய் மாதாவே! ஜீவன் எந்த ஸம்ஸார ஸம்பந்தத்தினால் தன் ஸ்வரூபம் தனக்குத் தெரியாமல் மதிமயங்கித் தடுமாற்ற முறுகின்றானோ, மற்றும் எவை ஜீவனுடைய கர்மத்தினால் ஏற்படுகின்றனவோ; அப்படிப்பட்ட பலவாறான ஸம்ஸாரகதிகளையும் உனக்கு மொழிந்தேன். நான் சொன்ன இது ஸமஸ்த வேதாந்தப் பொருள்களும் அமைந்திருக்கின்றதாகையால் இதை மிகவும் பத்ரமாகப் பாதுகாத்து வரவேண்டும். பிறர்க்கு உபத்ரவஞ் செய்யும் துஷ்டர்களுக்கு இதை உபதேசிக்கலாகாது. வணக்கமில்லாதவனுக்கும் மூர்க்கனுக்கும் துராசாரனுக்கும் தாம்பிகனுக்கும் வைராக்ய மின்றிச் சப்தாதி விஷயங்களில் மனவிருப்ப முடையவனுக்கும், கேவலம் க்ருஹஸ்த தர்மங்களில் மனவூக்க முடையவனுக்

கும், என்னிடத்தில் பக்தியில்லாதவனுக்கும், என்னிடத்தில் பக்தி செய்பவர்களை த்வேஷிக்கிறவர்களுக்கும் இதை எவ்விதத்திலும் எக்காலத்திலும் உபதேசிக்கலாகாது. ஆனால் எவர்க்கு உபதேசிக்கலாமென்னில், இதைக் கேட்கவேண்டுமென்னும் ஶ்ரத்தையும் வணக்கமும் அஸூயையில்லாமையும் ப்ராணிகளிடத்தில் மைத்ரியும் குருஶுஶ்ரூஷையில் ஆவலும் வெளியிந்த்ரியங்களை அடக்குகையாகிற தமமும் உள்ளிந்த்ரியமான மனத்தை அடக்குகையாகிற ஶமமும் பிறர்நன்மையைப் பொறாமையாகிற மாத்ஸர்யமில்லாமையும் ஸதாசாரநிலைமையும் ஆகிய இவையெல்லாம் அமைந்தவனுக்கும், எவன் ப்ரீதிக்கிடமான வஸ்துக்களெல்லாவற்றிலும் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனோ, அவனுக்கும் இதை உபதேசிக்கலாம். அன்றி மற்றவனுக்கு இதை உபதேசிக்கலாகாது. வாராய் மாதாவே! இங்ஙனம் நான் மொழிந்த இந்தத் தத்வோபதேசத்தை எவன் ஶ்ரத்தையுடன் ஒருக்காலாவது கேட்பனோ, எவன் என்னிடத்தில் மனநிலைமையுடையவனாகி இதை ஒருவனுக்கு மொழிவானோ; அவர்களிருவரும் ஜ்ஞான பக்தி வைராக்யங்கள் உண்டாகப் பெற்று என் பதவியாகிய மோக்ஷத்தைப் பெறுவார்கள். முப்பத்திரண்டாவது அத்யாயம் முற்றிற்று.

---

தேவஹூதி கபிலரை ஸ்தோத்ரம் செய்தலும், அவள் யோகமார்க்கத்தினால் பரப்ரஹ்மத்தை அடைதலும், கபிலர் அந்தர்த்தானம் ஆதலும்.

மைத்ரேயர் சொல்லுகிறார்:— கர்த்தம ப்ரஜாபதியின் பார்யையும் கபிலருடைய மாதாவுமாகிய தேவஹூதியானவள் இங்ஙனம் கபிலர் மொழிந்த வசனத்தைக் கேட்டு அஜ்ஞானமாகிற திரை நீங்கப்பெற்று, ப்ரக்ருதி

புருஷன் ஈஶ்வரன் என்கிற மூன்று தத்வங்களின் உண்மையை அறிந்த யோகிகளுக்குப் புகலிடமான அந்தக் கபிலரை நமஸ்கரித்து மேல் வருமாறு ஸ்தோத்ரம் செய்தாள்.

தேவஹூதி சொல்லுகிறாள்:—வாராய் பகவானே! உன்னுடைய நாபீகமலத்தினின்றுண்டான ப்ரஹ்மதேவனும் உன் திருமேனியை நேரே காணப்பெறாமல் த்யானம் செய்து ஸாக்ஷாத்கரித்தான். நீ முதலில் மஹாஜலத்தின்மேல் சயனித்துக் கொண்டிருந்தனை. ப்ருதிவி முதலிய பஞ்சபூதங்களும் பதினொரு இந்த்ரியங்களும் சப்தாதி விஷயங்களுமாகப் பிரிந்த ப்ரக்ருதியும் ஜீவாத்மாக்களும் உன் சரீரத்தில் அடங்கியிருப்பவை. இந்த ஜகத்தெல்லாம் உனது சரீரமான ப்ரக்ருதியினின்று உண்டானது. உன் சரீரம் ஸத்வாதி குணங்களின் ப்ரவ்ருத்திக்குக் காரணமாயிருக்கும். நீயே ப்ரஹ்மாதிகளைப் படைத்து அவர்களுக்கு ரஜஸ்ஸு முதலிய குணங்கள் தலையெடுக்கச் செய்து அவர்களுக்கு அந்தராத்மாவாயிருந்து அந்தந்த குணங்களுக்குத் தகுந்தபடி ஜகத்ஸ்ருஷ்டி முதலிய சக்திகளை அவர்களுக்கு விளைவிக்கின்றனை. (ப்ரஹ்மதேவனுக்கு ரஜோகுணம் தலையெடுக்கச் செய்து அவனுக்கு அந்தராத்மாவாய் உள்ளே புகுந்து ஸ்ருஷ்டிகார்யத்தை நடத்துகிறவன் நீயே. அங்ஙனமே ருத்ரனைப் படைத்து அவனுக்குத் தமோகுணம் தலையெடுக்கச் செய்து அவனுக்கு அந்தராத்மாவாய் உள்ளே புகுந்து ஸம்ஹார கார்யத்தை நடத்துகிறவனும் நீயே. நீ நேரே ஸத்வகுணம் தலையெடுத்த விஷ்ணுவாய் அவதரித்து உலகங்களைப் பாதுகாக்கையாகிற கார்யத்தை நடத்துகின்றனை). நீ இயற்கையில் எவ்வகை வ்யாபாரங்களுமில்லாதவனே. ஆயினும், ஸத்யஸங்கல்பனாகி (நினைத்·

தனை நினைத்தபடியே நிறைவேற்றுந் திறமையுடையவனாகி) அந்த ஸங்கல்பத்தினாலேயே உலகங்களைப் படைப்பது முதலிய செயல்களையெல்லாம் நிறைவேற்றுகின்றனை. உனக்கு நீயே ப்ரபு. உனக்கு மேற்பட்டவன் மற்றொருவனும் கிடையாது. உன்சக்தி இத்தகையதென்று நினைக்கமுடியாதது. அத்தகைய சக்திகள் பலவாயிரமுடையவன். ஆகையால் நீ ஸங்கல்பத்தினாலேயே ஸ்ருஷ்டி முதலிய கார்யங்களை நடத்துகின்றனை. கல்பாவஸானத்தில் இந்த ஜகத்தெல்லாம் உன்னுடைய உதரத்தில் அடங்கியிருந்தது. அப்பொழுது நீ உன்னுடைய ஸங்கல்பத்தினால் சிறிய குழவியாய்த் தோன்றி நீயொருவனே மிகவும் இளையதான ஓர் ஆலந்தளிரில் சயனித்துக் கொண்டிருந்தாய். அப்படிப்பட்ட நீ என்கர்ப்பத்தில் எப்படி இருந்தாய்? இதற்குக் காரணம் என்னவோ எங்களுக்குத் தெரியவில்லை. (எங்கள் பாக்யமேயன்றி மற்றொன்றும் காரணமன்று) அன்றியே ஸமஸ்த அவதாரங்களுக்கும் பொதுவான காரணம் ஒன்றுண்டு. யாதெனில்; சொல்லுகிறேன். துஷ்டர்களை அழிப்பதற்சாகவும் உனது ஆஜ்ஞையைப் பின்செல்லுகிற உன் பக்தர்களைப் பாதுகாப்பதற்காகவும் நீ திருவுருவங்களைக் கொள்கின்றனை. வராஹாதியான மற்ற அவதாரங்களைப்போல், இந்த அவதாரமும் ஸாதுக்களுக்கு உனது உண்மையை அறிவிப்பதற்காகவே யென்று நாங்கள் அறிகின்றோமன்றி மற்றொரு காரணமும் எங்களுக்குப் புலப்படவில்லை. உன்னுடைய அவதாரத்திற்குக் காரணம் எதுவேனும் ஆகட்டும். நாங்கள் உன்னுடைய தர்சனத்தினால் ப்ரயோஜனம் கைகூடப்பெற்றோம். தர்சனமாத்ரத்தினால் பரயோஜனம் கைகூடுமோவென்று ஸந்தேஹிக்கவேண்டாம். எங்கேனும் உன் பேரைக் கேட்பினும், அதை

வாயால் சொல்லினும், உன்னை வணங்கினும், உன்னை நினைக்கினும், நாயைத் தின்னும் நீஹீனஜாதியில் பிறந்த சண்டாளனும் அந்த க்ஷணமே யாகம் செய்வதற்கு யோக்யனாவான். பகவானே! இப்படியிருக்க, உன்னுடைய தர்சனத்தினால் நாங்கள் க்ருதார்த்தர்களானோமென்பதில் ஸந்தேஹமுண்டோ? ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஸ்யர்களென்கிற மூன்று வர்ணத்தவர்களுக்கு மாத்ரமே யாகத்தில் அதிகாரம் உண்டு. நான்காவதான சூத்ர வர்ணத்தவர்களுக்கு யாகத்தில அதிகாரம் இல்லை. அதிலும் ஹீனஜாதியாகிய சண்டாளனுக்கு யாகத்தில் அதிகாரத்திற்கு ப்ரஸக்தியே இல்லை. அதற்குக் காரணம் துர்ஜாதியே. அந்த துர்ஜாதிக்குக் காரணம் ஜன்மாந்தரபாபமே. அப்படிப்பட்ட பாபிஷ்டனும், பகவானை ப்ரீதியுடன் நெஞ்சினால் நினைப்பது, அவனை வணங்குவது அவன் பேரைச் சொல்லுவது, அவன் பேரைப் பிறர் சொல்லக் கேட்பது ஆகிய இவற்றில் ஏதேனுமொன்று நேரப் பெறுவானாயின், அந்த க்ஷணமே பாபமெல்லாம் துலைந்து யாகம் செய்வதற்கு உரியவனாவான். (பகவானுடைய அங்கீகாரத்திற்கு யோக்யனாவான்). இப்படியிருக்க உன் காட்சியின் மஹிமையைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? எவனுடைய நாக்கு நுனியில் உனது நாமம் இருக்கின்றதோ, அவன் சண்டாளனாயினும் மேன்மையுடையவனே. ஏனெனில், உன் நாமத்தை எவர்கள் சொல்லுகிறார்களோ, அவர்கள் பல தவம் செய்தவர்களும், பல ஹோமங்களை நடத்தினவர்களும், பற்பல புண்யதீர்த்த ஸ்னானம் செய்தவர்களும் வேதாத்யயனம் செய்தவர்களும் ஆனதுபற்றியே பெரியோர்களுமாகின்றார்கள். நீ தனக்குத்தான் தோற்றுந் தன்மையுள்ள ஜீவாத்மாவினிடத்தில் அந்தராத்மாவாய் த்யானிக்கத் தகுந்தவன்; பெரு

மை அமைந்தவன்; தன்னைப்பற்றினவர்க்கு அப்பெருமை யை விளைவிப்பவன்; ஜீவாத்மாக்களுக்கு அந்தராத்மாவா யிருப்பினும் தன் ஜ்ஞான ப்ரகாசத்தினால் ஸம்ஸாரம் தீண் டப்பெறாதவன். ஜீவாத்மாக்களுக்கு ப்ரக்ருதி ஸம்பந் தத்தினால் ஜ்ஞான ஸங்கோசம் உண்டாவதுபோல் உன க்கு உண்டாகிறதில்லை. நீ வேதங்களால் ஓதப்படுமவன்; ஆகையால் வேதஸ்வரூபன். நீ எங்கும் நிறைந்தவனாகை யால் விஷ்ணுவென்று கூறப்படுகின்றாய். நீ கபிலரென் னும் பேர் பூண்டு தத்வோபதேசத்தினால் உலகங்களை வாழ்விக்கும் பொருட்டு என்னிடத்தில் அவதரித்தனை. நீயே பரமபுருஷன். அத்தகையனான உன்னை வணங்கு கின்றேன்.

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—கபிலரென்னும் பே ருடைய பரமபுருஷன் இங்ஙனம் தேவஹூதியால் ஸ்தோ த்ரம் செய்யப்பெற்று, தாய் தந்தைகளிடத்தில் மிகுதி யும் ப்ரீதியுடையவனாகையால் மாதாவைப் பார்த்து கம் பீரமான மொழியுடன் இங்ஙனம் உரைத்தான்.

ஸ்ரீபகவான் சொல்லுகிறான் :—வாராய் மாதாவே! நான் சொன்ன வழி ஸுகமாகவே ஆசரிக்கத் தக்கதா யிருக்கும். இவ்வழியில் இழிந்து நடப்பாயாயின், சீக்ரத் தில் மோக்ஷம் பெறுவாய். இதுவே என்னுடைய ஸித் தாந்தம் (மோக்ஷ மார்க்கம் இதுவே யென்று நான் நிச்ச யித்திருக்கின்றேன்). இந்த என் மதத்தில் ஶ்ரத்தை செய் வாயாக. ப்ரஹ்மோபதேசம் செய்கின்ற பெரியோர்கள் அடிக்கடி ஆராய்ந்து நிச்சயித்த மார்க்கமும் இதுவே. இம்மார்க்கத்தினால் எவ்விதத்திலும் பயத்திற்கிடமில் லாத என்னைப் பெறுவாய். இந்த என் மதத்தை அறியாத வர்கள் ஸம்ஸாரத்தையே அடைவார்கள். (அதினின்று விடுபட மாட்டார்கள்).

ஸ்ரீமைத்ரேயர் சொல்லுகிறார்:—பகவானாகிய கபிலர் இங்ஙனம் அழகான தன் ஜ்ஞான மார்க்கத்தை மாதாவுக்கு உபதேசித்து, ப்ரஹ்மோபதேசம் செய்யுந்திறமையுடைய அம்மாதாவால் அனுமதி செய்யப் பெற்றுப் புறப்பட்டுப் போனார். அந்த தேவஹூதியும் புதல்வராகிய கபிலர் உபதேசித்த யோகசாஸ்த்ரத்தின்படி அந்த ஸரஸ்வதி நதிக்கரைக்கு அலங்காரமான அவ்வாஸ்ரமத்திலேயே மனவூக்கத்துடன் யோகாப்யாஸம் செய்துகொண்டிருந்தாள். அவள் மூன்று காலங்களிலும் ஸ்னானம் செய்து வந்தாள். அதனால் அவளுடைய சுரும்பார் குழல்கள் பொன்னிறமாயின. அவளுடைய தேஹம் கடுந்தவத்தினால் இளைத்தது. அவள் மரவுரி உடுத்திருந்தாள். மற்றும் அவள் கர்த்தமருடைய தவத்தினாலும் யோக மஹிமையாலும் மிகுந்த மேன்மையுடைய தன் க்ருஹத்தைத் துறந்து அவ்வாஸ்ரமத்திலேயே நித்யவாஸம் செய்தாள். அந்த க்ருஹத்திற்கு என்ன மேன்மையென்னில், அது கர்த்தமருடைய தவமஹிமையால் ஏற்பட்டது. அதற்கு நிகரான மாளிகை எங்குமே அகப்படாது. அது எல்லா ஐஶ்வர்யங்களும் அமையப்பெற்றது. விமானத்தில் ஸஞ்சரிக்கின்ற தேவதைகளும் அதைக் கண்டு ஆசைப்படுவார்கள். அம்மாளிகையில் பால்நுரைபோல் மென்மையமைந்து நிர்மலமாயிருப்பவைகளும் தந்தத்தினால் இயற்றப்பெற்றவைகளும் ஸ்வர்ணத்தினால் அலங்காரம் செய்து அழகாயிருப்பவைகளுமான படுக்கைகளும் ஸ்வர்ணமயமான ஆஸனங்களும் ஸுகஸ்பர்சங்களான ரத்னகம்பளம் முதலிய ஆஸ்தரணங்களும் அமைந்திருக்கும். அங்கு மிகவும் நிர்மலமான ஸ்படிகரத்னங்களாலும் சிறந்த மரகத ரத்னங்களாலும் சுவர்கள் இயற்றப் பெற்றிருக்கும். அந்தச் சுவர்களில் சிறந்த மாதரார்மணிகள் ப்ரதிபலிப்

பார்கள். அத்தகைய அம்மாளிகையின் ப்ரதேசங்கள் அழியாமல் எரிகின்ற ரத்னங்களாகிற தீபங்களின் ஒளிகளால் எப்பொழுதும் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும். அம்மாளிகையின் பின்புறத்திலுள்ள உத்யானம், பாரிஜாதம் முதலிய பலவகைக் கல்ப வ்ருக்ஷங்கள் பூத்திருக்கப் பெற்று ரமணீயமாயிருக்கும். அந்த உத்யானத்தில் பக்ஷிகள் ஆணும் பெண்ணுமாகக் குலாவிக்கொண்டிருக்கும். வண்டுகள் புஷ்பங்களிலுள்ள தேன்களைப் பருகி மதித்துப் பாடிக்கொண்டிருக்கும். அவ்வுத்யானத்தில் தேவஹூதி நுழைந்து விளையாடுங் காலத்தில் தேவதைகளுக்குப் பணிவிடை செய்பவரான கின்னராதிகள் அவளைப் பாடுவார்கள். நெய்தல்கள் மலர்ந்து மணம் கமழ்கின்ற நடைவாவியில் அவள் கர்த்தமரால் உபலாலனம் செய்யப் பெற்று விளையாடிக் கொண்டிருப்பாள். அவ்வுத்யானத்தைக் கண்டு தேவேந்த்ர போகத்தை அனுபவிக்கிற அப்ஸரஸ்த்ரீகளும் ஆசைப் படுவார்கள். அங்ஙனம் அழகிய தான மாளிகையையும் அவ்வுத்யானத்தையும் அந்தந்த போகங்களையும் துறந்து அஹங்கார மமகாரங்களையும் அறுத்துக்கொண்டு அவ்வாஸ்ரமத்திலேயே இருந்து எதைப்பற்றியும் சிறிதும் கலக்கமின்றி மிகுந்த மன ஊக்கத்துடன யோகாப்யாஸம் செய்துவந்தாள். ஆனால் புதல்வனைப் பிரிந்தமையால் வருந்திச்சிறிது முகம்வாடப் பெற்றாள். கர்த்தம ப்ரஜாபதி இல்லறத்தைத் துறந்து துறவியாய் வனத்திற்குப் போனமையாலும், புதல்வனைப் பிரிய நேர்ந்தமையாலும் மிகவும் வருந்தி, ப்ரக்ருதி புருஷன் ஈஸ்வரன் என்கிற தத்வங்களின் உண்மையை அறிந்தவளாயினும், கன்றைப் பிரிந்த பசுபோன்றிருந்தாள். குழந்தாய்! விதுரனே! தன் புதல்வனாகிய அந்தக் கபிலரென்னும் பேருடைய ஸ்ரீவிஷ்ணுவையே த்யானித்துக்

கொண்டு வருகையில், சீக்ரகாலத்திலேயே அங்ஙனம் அழகியதான மாளிகை முதலியவற்றில் சிறிதும் விருப்பமில்லாதவளானாள். தன் புதல்வனாகிய கபில பகவான், பகவானுடைய உருவத்தை எங்ஙனம் த்யானிக்கவேண்டுமென்று தனக்கு மொழிந்தாரோ, அங்ஙனமே தெளிந்த முகம் முதலிய அவயவங்கள் அமைந்த பகவானுடைய உருவத்தை முழுவதும் ஒரே தடவையில் சிந்திப்பதும் அவயவங்களைத் தனித்தனியே சிந்திப்பதுமாகிற க்ரமத்தின்படி த்யானித்துக் கொண்டு வந்தாள். அவள் எவ்வகையிலும் தடைபடாத வைராக்யம் உண்டாகப்பெற்றாள். பகவானைப் பூஜிப்பது முதலிய கர்மங்களைத் தவறாமல் அனுஷ்டித்துக் கொண்டு வந்தாள். அதனால் அவளுக்கு ஆத்மாவின் உண்மையைப் பற்றின அறிவு வளர்ந்தது. இந்தஜ்ஞான வைராக்யாதிகளால் பரப்ரஹ்மத்தை அடைவதற்கு ஹேதுவான பக்தியோகம் ப்ரவாஹம்போல் தடையின்றி மேன்மேலும் வளரப்பெற்றாள். அதனால் அவளுடைய மனம் பரிசுத்தமாயிற்று. அவள் அப்பொழுது அத்தகைய மனத்தினால் ஸர்வஜ்ஞனும் ஸ்வப்ரகாசத்தினால் ஸத்வாதி குணங்களின் கார்யமான சோக மோஹாதிகளற்றவனும் பசி தாஹம் முதலிய ஊர்மிகளில்லாதவனுமாகிய பரம புருஷனை அனாயாஸமாக த்யானம் செய்தாள். அவள் அந்த த்யானத்தின் மஹிமையால், ஜீவாத்மாக்களுக்கு ஆதாரமாயிருப்பவனும் ஜ்ஞானாதி குணங்கள் நிறைந்தவனுமாகிய பரம புருஷனிடத்தில் நிலைநின்ற மதியுடையவளானாள். ஜீவனுக்கு வருத்தங்களை விளைக்குந் தன்மையுள்ள ப்ரக்ருதியின் ஸம்பந்தம் பெரும்பாலும் நீங்கப் பெற்றமையால் குளிர் வெப்பம் முதலிய வருத்தங்களெல்லாம் நீங்கப் பெற்றாள். பரமாத்மாவை அனுபவிக்கை யாகிற

மஹாநந்தத்தையும் பெற்றாள். தினந்தோறும் பக்தி யோகம் வளர்ந்து வருகின்றமையாலும் ப்ரக்ருதியைக் காட்டிலும் விலக்ஷணமான ஜீவனைச் சரீரமாகவுடைய பரமாத்மாவினிடத்தில் தினந்தோறும் மனம் சூழ்ந்து பதியப் பெறுகையாலும் தமஸ்ஸு முதலிய ப்ரக்ருதியின் குணங்களால் விளையக்கூடிய தேஹாத்மாபிமானம் முதலிய ப்ரமங்களெல்லாம் நாளடைவில் துலைந்து, ஸ்வப்னத்தினின்று எழுந்தவன் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களைப்போல், தேஹத்தை நினைக்காமலேயிருந்தாள். (ஸ்வப்னங் கண்டவன் ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களெல்லாம் அநித்யமென்று நிச்சயித்து அந்த ஸ்வப்னத்தில் கண்ட வஸ்துக்களைப் பற்றின ஸுகதுக்கங்களால் எங்ஙனம் மனம் கலங்கப் பெறமாட்டானோ, அங்ஙனமே தேவஹூதியும் தேஹத்தைப் பற்றினதெல்லாம் கர்மாதீனமென்றும் அநித்யமென்றும் நினைத்து அவற்றைப் பற்றின ஸுகதுக்கங்களால் மனம் கலங்கப் பெறாமல் தேஹம் பெருத்திருக்கிறதென்றும் இளைத்திருக்கிறதென்றும் நினைக்காமலே யிருந்தாள்; தேஹம் போஷிக்கப்பட்டு வருமாயின் அப்பொழுதே இளைக்காமலிருக்கும். இதுவே அதன் ஸ்வபாவம். இப்படியிருக்க, அவளுடைய தேஹம் தன்னாலும் பிறராலும் போஷிக்கப் பெறாதிருப்பினும் இளைக்காமலே இருந்தது. ஏனென்னில், அவள் தேஹத்திற்குப் போஷணம் செய்யாதிருக்கிறோமே யென்கிற மனவருத்தம் சிறிதும் நேரப்பெறாமலே யிருந்தாள். அவளுக்கு அதைப்பற்றின சிந்தை எதுவுமே இல்லாமையால் அது இருந்தபடியே இருந்தது. மற்றும் அவள் தேஹம், எண்ணெய் தேய்த்து அரப்பிட்டு அலம்புவது முதலிய ஸம்ஸ்காரங்கள் எவையுமில்லாமையால் அழுக்கடைந்திருந்தது. ஆயினும் அது புகை மூடின

அக்னிபோல் ப்ரகாசித்தது. வாஸுதேவனிடத்தில் நிலை நின்ற மதியுடைய அவளுடைய சரீரம் தபஸ்ஸும் யோகமும் நிறைந்து தலைமயிர்கள் அவிழ்ந்து விரிந்து அரையில் ஆடையுமில்லாதிருந்தது. அத்தகைய சரீரத்தை அவள் சிறிதும் நினைக்காமலே யிருந்தாள். ஆயினும் அவளது சரீரம் தெய்வத்தினால் பாதுகாக்கப் பெற்று ஒருவித கெடுதியுமில்லாதிருந்தது. இங்ஙனம் அவள் கபிலர் உபதேசித்த யோக மார்க்கத்தினால் சீக்ரத்தில், மஹாநந்தஸ்வரூபனான பரம புருஷனை அடைந்தாள். ஆ! இதென்ன ஆச்சர்யம்? ஸாதாரணமாகவே ஸ்த்ரீகள் அவிவேக முடையவர்கள். அதிலும் அந்த தேவஹூதி மஹத்தான போகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தவள். அவள் அதை யெல்லாம் துறந்து யோகமார்க்கத்தினால் பரப்ரஹ்மத்தை அடைந்தாளென்னில், இதைக் காட்டிலும் மேலான ஆச்சர்யம் என்னிருக்கின்றது? வாராய் வீரனாகிய விதுரனே! அந்த தேவஹூதி எந்த இடத்தில் மோக்ஷஸித்தியைப் பெற்றாளோ, மிகவும் பரிசுத்தமான அந்த க்ஷேத்ரம் ஸித்தாஸ்ரமமென்னும் பேரால் மூன்று லோகங்களிலும் ப்ரஸித்தி அடைந்தது. வாராய் நல்லியற்கை யுடையவனே! அந்த தேவஹூதியின் சரீரம் அவள் அனுஷ்டித்த யோகத்தின் மஹிமையால் மயிர் நரைத்தல் தோல் சுருங்குதல் முதலிய விகாரங்கள் எவையுமின்றி அவளால் துறக்கப் பெற்று ஓர் நதியாய்த் தோற்றிப் பெருகிக் கொண்டிருந்தது. அந்நதி நதிகளெல்லாவற்றிலும் சிறப்புடையதும் அவரவர் விரும்பும் ஸித்திகளை யெல்லாம் கொடுக்க வல்லதும் ஸித்தர்களால் சூழப்பட்டது மாயிருந்தது. வாராய் விதுரனே! மஹாயோகியாகிய கபில பகவான் மாதாவிடம் அனுமதி பெற்றுக்கொண்டு தந்தையின்

ஆஶ்ரமத்தினின்று வடகிழக்கு மூலையாகப் புறப்பட்டுப் போனார். அங்கு ஸித்தர்களும் சாரணர்களும் கந்தர்வர்களும் முனிவர்களும் அப்ஸரஸ்த்ரீகளும் கூட்டங் கூட்டமாய் வந்து அந்தக் கபிலபகவானை ஸ்தோத்ரம் பண்ணிக்கொண்டு பின் சென்றார்கள். அம்மஹானுபாவன் அங்ஙனமே ஸமுத்ரம் சேர்ந்து அங்கு ஸமுத்ர ராஜனால் பூஜித்து இருப்பிடமும் கொடுக்கப் பெற்று, தான் மொழிந்த ஸாங்க்ய சாஸ்த்ரத்திற்கு ப்ரவர்த்தகர்களான யோகிகள் துதி செய்ய, லோகங்களின் க்ஷேமத்திற்காக மனவூக்கத்துடன் தானும் யோகாப்யாஸம் செய்துகொண்டு அவ்விடத்திலேயே இருக்கின்றான். அப்பா! பாபமற்றவனே! நீ எதைக் குறித்து என்னை வினவினையோ அந்த ஸ்வாயம்புவமனுவின் சரித்ரத்தையெல்லாம் உனக்கு மொழிந்தேன். அந்த ப்ரஸ்தாவத்தினால் கபிலருக்கும் தேவஹூதிக்கும் நடந்த ஸம்வாதத்தையும் மொழிந்தேன். இது உலகங்களை யெல்லாம் பாவனஞ்செய்யும். இந்தக் கபிலருடைய மதம் மிக்க ரஹஸ்யமானது. ஆத்ம யோகத்தைப் பற்றினது. இதை எவன் கேட்கிறானோ, எவன் சொல்லுகிறானோ, அவர்கள் இருவரும் கருடத்வஜனாகிய பகவானிடத்தில் பக்தி யோகம் உண்டாகப் பெற்று அந்த பகவானுடைய பாதாரவிந்தங்களைப் பெறுவார்கள். முப்பத்து மூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

மூன்றாவது ஸ்கந்தமும் முற்றுப் பெற்றது.

ஸ்ரீக்ருஷ்ணாய நம: